# நம்மாழ்வார் திருவிருத்தமும் மாணிக்கவாசகர் திருக்கோவையாரும் —ஒப்பாய்வு





பேராசிரியர். டாக்டர்.

**இ. பா. வேணுகோபால்**

கொண்டல் வண்ணனைக் கோவலனாய் வெண்ணெய்
உண்ட வாயன்என் உள்ளம் கவர்ந்தானை
அண்டர் கோனணி யரங்கன்என் அமுதினைக்
கண்ட கண்கள்மற் றொன்றினைக் காணாவே.

—திருப்பாணாழ்வார்

கண்ணன் கழலிணை நண்ணும் மனமுடையீர்
எண்ணும் திருநாமம் திண்ணம் நாரணமே.

—நம்மாழ்வார்

பூசுவதும் வெண்ணீறு பூண்பதுவும் கைங்கரவம்
பேசுவதும் திருவாயான் மறைபோலும் காணேடி
பூசுவதும் பேசுவதும் பூண்பதுவும் கொண்டென்னை
ஈசன் அவன் எவ்வுயிர்க்கும் இயல்பானான் சாழேலோ.

—மாணிக்கவாசகர்

நரியைக் குதிரைசெய் வானும் நரகரைத் தேவு செய்வானும்
விரதம்கொண் டாட வல்லானும் விச்சின்றி நாறுசெய் வானும்
முரசதிர்த் தானை முன்னோட முன்பணிந் தன்பர்க ளேத்த
வரவரைச் சாத்திநின் றானும் ஆரூர் அமர்ந்த அம்மானே.

—திருநாவுக்கரசர்

# நம்மாழ்வார் திருவிருத்தமும் மாணிக்கவாசகர் திருக்கோவையாரும் —ஒப்பாய்வு


ஆக்கியோன் :

டாக்டர் நல்லாசிரியர்

இ. பா. வேணுகோபால் எம்.ஏ., எம்.எட்., பிஎச்.டி.,

முன்னாள் முதல்வர்




முதல் பதிப்பு
உரிமை : ஆசிரியர்க்கே
விலை : ரூ. 35-00

அடியேனைப் பெற்று வளர்த்து ஆளாக்கிய என் அன்னை திருமதி நாகரத்தினம்மாள் அவர்கள் பாதமலர்களுக்கு இந்நூல் சமர்ப்பணம்.

இவ்வாசிரியர் எழுதி இதுவரை
வெளிவந்த நூல்கள்

| | | ரூபாய் காசு |
|---|---|---|
| 1. | பைந்தமிழ் கற்பிக்கும் முறைகள் | 40 – 00 |
| 2. | சிறப்புத் தமிழ் கற்பிக்கும் முறைகள் | 35 – 50 |
| 3. | நம்மாழ்வார் திருவிருத்தமும் மாணிக்கவாசகர் திருக்கோவையாரும் ஒப்பாய்வு | 35 – 00 |
| 4. | கல்வி உளவியல் | அச்சில் |

புரோகிரசிவ் பிரிண்டர்ஸ், வேலூர்-6. போன் : 22646.

# அணிந்துரை

டாக்டர். வி.மு. பழநி

எம் ஏ , எம் பில் , பிஎச்.டி.

அரசு கல்லூரி முதல்வர் (ஓய்வு)

என் இனிய நண்பர் வித்துவான் டாக்டர். இ.பா. வேணுகோபால் எம்.ஏ; எம்.எட்; பிஎச்.டி. அவர்கள் எழுதிய "நம்மாழ்வார் திருவிருத்தமும் மாணிக்கவாசகர் திருக்கோவையாரும் — ஒப்பாய்வு" எனும் அரிய நூலைப் படிக்கும் வாய்ப்பு ஏற்பட்டது.

அவர் கருத்துக்களை வெளிப்படுத்துகின்ற முறை யாவரும் புரிந்து கொள்ளக் கூடிய எளிய நற்றமிழ் நடையாகவும், யாற்றுத் தீஞ்சுவைத் தண்ணீர் ஓடுவது போலத் தெளிந்த நடையாகவும் விளங்குகின்றது. வழூஉச்சொல் புணர்த்தலோ மயங்க வைத்தலோ இல்லாமல் தமிழ் இயல்பாகவும் தூய்மையாகவும் காணப்படுகின்றது.

சொல்லப்பட்டிருக்கும் கருத்துக்கள் திட்ப நுட்பமுடையனவாகவும் ஆழமுடையனவாகவும் ஒளிர்கின்றன. வெற்றெனத் தொடுத்தல் எவ்விடத்தும் காணப்படவில்லை.

வேறுபட்ட வைணவ, சைவ சித்தாந்தங்களில் ஈடுபாடும் ஆர்வமும் நுண்ணறிவும் உடையவராகக் காட்சியளிக்கின்றார். அருள் பெற்ற ஆழ்வாரும்,சுவாமிகளும் தலைசிறந்தவர்கள் அவர்கள் அருளிய அகவாழ்வுப் பனுவல்களாகிய திருவிருத்தத்தையும் திருக்கோவையாரையும் ஒப்பிட்டுத் திறனாய்வு செய்திருக்கிறார். ஆய்ந்து விளக்கம் செய்து முடிவுகளைத் தந்திருக்கிறார்.

எல்லாப் பக்கங்களும் படிக்கப் படிக்கச் சுவையாக இருக்கும் இப் பனுவலில், "பேசாமடந்தையர்" எனும் தலைப்பில் (பக்கம் 86) தலைவன் ஏங்கித்தவிப்பதை எளிய முறையில் விளக்கியதையும், "காளைப் போர்" எனும் தலைப்பில் (பக்கம்111) கார்காலம் வந்தும் காதலன் வாராதது கண்டு தவிக்கும் தலைவியை ஆற்றுவிக்கத் தோழி சொல்லியதை விளக்கியதையும் பரமான்மாவிற்கும் ஆன்மாக்களுக்கும் உள்ள தொடர்புகள் எவை என்பதை இரண்டு சமயங்களும் சொல்லியவற்றை (பக்கம் 209) விளக்கியதையும் எடுத்துக்காட்டுகளாகக் கூறலாம்.

நிறைந்த நெஞ்சும் தெளிந்த அறிவுமுடைய ஆசிரியர் எழுதிய இந்நூலைப் படித்துப் படித்து அனுபவிக்கலாம். ஆசிரியர் இன்னும் பல்லாண்டு வாழ்ந்து பல நன்னூல்களை இயற்ற வேண்டும். நவின்றோர்க்கு இனிமைதந்து விழுமியது பயக்கும் இவ்வரிய நூல்களைத் தண்டமிழுலகம் ஏற்றுப் போற்றும் என்று நினைக்கிறேன்.

வேலூர்,
24-11-92.

அன்பன்,
(ஒப்பம்) வி.மு. பழநி

# பொருளடக்கம்

# முன்னுரை

வைணவ ஆழ்வார்களுள் நம்மாழ்வாரும், சைவ நாயன்மார்களுள் மாணிக்கவாசகரும் பெருஞ்சிறப்புடையவர்கள் ஆவர். அவர்கள் பாடிய அகப்பொருளமைந்த ஞான நூல்கள் குறிப்பிடத்தக்கவை. எனவே, அவற்றை ஒப்பிட்டு ஆராயும் நோக்கில் "நம்மாழ்வார் திருவிருத்தமும் மாணிக்கவாசகர் திருக்கோவையாரும் - ஒப்பாய்வு" என்னும் தலைப்பு எடுத்துக்கொள்ளப்பட்டது. இதில் அந்நூல்களில் உள்ள ஒற்றுமைநயங்களும், பக்திச் சுவையும், இலக்கிய உத்திகளும் சமுதாய நோக்கங்களும் பிறவும் ஆராயப்பட்டுள்ளன.

நூல்களைப் பொருளுணர்ந்து பாராட்டவும், குறைநிறை கூறி மதிப்பிடவும் ஆன அணுகுமுறைகளுள் ஒன்று ஒப்பாய்வு. ஒரு நூலினைப் படித்தால் அதன் உள்ளுணர்வைத்தான் படிப்பவர் பெற முடியும். ஆனால், அதுபோன்ற வேறு நூல்களை வைத்து ஒப்பாய்வு செய்தால் அதன் உயர்வு, தாழ்வு, சிறந்த நிலைகள் ஆகியன விளங்கும்; அதன் இலக்கியப்பண்புகள், பிற நலங்கள் ஆகியன பற்றியும் சரியான மதிப்பீட்டினைப் பெற முடியும்.

படைப்பாளர் திறன், பாடற்போக்கு. பாத்திரப்படைப்பு, இலக்கிய உத்திகள் ஆகியவை ஒப்பாய்வில் அக அமைப்பு ஆய்வாகக் கொள்ளத் தக்கன. இவற்றுள் உத்தி என்பது பரந்த கூறுகளை உள்ளடக்கிய ஒன்று. அதில், உவமை, உருவகம், வருணனை, கற்பனை, உள்ளுறை, மெய்ப்பாடு. கிளைக்கதை, கனவு, இயற்கை இறந்த நிகழ்ச்சிகள் முதலியன அமையும்.

வெளியீட்டு முறைகளிலும், சமுதாய நிலைகளை வெளிப்படுத்தும் தன்மையிலும், இலக்கிய உத்திகளிலும் படைப்பாளர்கள் மதிப்பிடப் படுகின்றனர். இம்மதிப்பீட்டு முறைகள் படைப்பாளர்களின் இலக்கிய நிலைமையினை உறுதி செய்யும் நிறைகோலாகக் கருதத்தக்கவை.

இந்த ஒப்பாய்வில் இனம், நாடு, நகரம், சமயம் போன்ற புற அமைப்புச் செல்வாக்குகளும். படைப்பாளர்களான நம்மாழ்வார், மாணிக்கவாசகர் ஆகியோரின் திறன்களும், பாடற் போக்குகளும், பாத்திரப்படைப்புகளும், இலக்கிய உத்திகளும், மெய்ப்பொருள் கருத்து களும், சமுதாயநிலைகளை வெளிப்படுத்தும் தன்மையும் ஆகிய அக அமைப்புச் செல்வாக்குகளும் ஆராயப்பட்டுள்ளன.

நம்மாழ்வார் திருவாய்மொழி பற்றிச் சென்னைப் பல்கலைக் கழகத்தில் பல ஆய்வுகள் பிஎச். டி. பட்டத்திற்காகச் செய்யப்பெற்றுள்ளன.

திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் ந. சுப்பு ரெட்டியார், 'நம்மாழ்வாரின் சமயமும் மெய்ப்பொருளும்' குறித்து ஆய்வு செய்துள்ளார். மாணிக்கவாசகரின் திருக்கோவையார் பற்றியும் தனித்தனியான ஆய்வுகள் பல பல்கலைக் கழகங்களில் செய்யப்பெற்றுள்ளன.

ஆனால், நம்மாழ்வார் திருவிருத்தத்தையும், மாணிக்கவாசகரின் திருக்கோவையாரையும் இணைத்து ஒப்பாய்வு செய்வது இதுவே முதன்முறையாகும்.

இரு நூல்களையும் இணைத்து ஆராய்வதற்குச் சில காரணங்கள் உள.

1. திருக்கோவையார் ஓர் அகப்பொருள் நூல்; திருவிருத்தமும் அத்தகைய ஓர் அகப்பொருள் பொதிந்த நூலே ஆகும்.

2. ஆசிரியர்கள் இருவரும் ஏறத்தாழச் சமகாலத்தினர். வைணவ சமயத்தின் சிகரமாக நம்மாழ்வாரும், சைவ சமயத்தின் சிகரமாக மாணிக்கவாசகரும் திகழ்ந்தவர்கள்.

3. மாணிக்கவாசகர் திருவாசகம் அறுநூறும், திருக்கோவையார் நானூறும் ஆக ஆயிரம் பாடல்கள் பாடியவர்; நம்மாழ்வாரும் திருவிருத்தம் முதலாக ஆயிரம் பாடல்களைப் பாடியருளியவர்.

4. திருப்பெருந்துறையிலுள்ள திருக்கோவிலில் மாணிக்கவாசகரையே சிவபிரானாக வைத்து வழிபாடு செய்கின்றனர்; இங்ஙனமே திருக்குருகூரில் நம்மாழ்வாருக்கெனக் கோயில் உள்ளது. நம்மாழ்வாரை முதற்கண் துதித்து வைணவர்கள் திருமாலைத் துதிக்கின்றனர்.

5. இருவரும் தாம் செய்த பாடல்களைத் தாமே ஏட்டில் எழுதவில்லை. நம்மாழ்வார் அர்ச்சாமூர்த்தமான தன்மையில் திரைகத்கு அப்பாலிருந்து நாலாயிரம் பாடல்களை வாய்மொழியாகக் கூற நாதமுனிகளும், மாணிக்கவாசகர் தம் பாடல்களை வாய்மொழியாகக் கூறச் சிவபெருமானும் ஏட்டில் எழுதியதாகக் கூறுவர்.

6. சங்க அக இலக்கிய மரபுகளை ஒட்டி இருவரும் இவ்விரு நூல்களை இயற்றியுள்ளனர்.

மேற்கண்ட காரணங்களையும், நூல்களிலுள்ள கருத்துகளின் ஒப்புமையையும் கருதி "நம்மாழ்வார் திருவிருத்தமும் மாணிக்கவாசகர் திருக்கோவையாரும் — ஒப்பாய்வு" என்னும் தலைப்பில் ஆய்வு நிகழ்த்தப்பட்டுள்ளது.

இவ்வாய்வு ஏழு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. முதலியலில் நம்மாழ்வார், மாணிக்கவாசகர் ஆகிய இருவரின் பிறப்பு, வளர்ப்பு, பெருமைகள், காலம் முதலியன ஆராயப்பெற்றுள்ளன.

இரண்டாவது இயலில் கோவை நூலின் தோற்றம், வளர்ச்சி பற்றியும் நாயக-நாயகி பாவம் பற்றியும், விளக்கப்பெற்றுள்ளன.

மூன்றாவது இயலில் நம்மாழ்வாரும் மாணிக்கவாசகரும் பாடிய பாடல்கள் ஒப்பிட்டு முறையில் விளக்கப்பெற்றுள்ளன. இங்குத் தலைவர் கூற்று, தலைவி கூற்று, தோழி கூற்று தாய்க்கூற்று ஆகியன ஒப்பிடப்பெற்றுள்ளன.

நான்காவது இயலில் இந்நூல்களிலுள்ள பாத்திரப்படைப்புகளும் நாடகப் பாங்கும் ஆராயப்பட்டுள்ளன. விலங்கினம், பறவையினம், பயிரினம் முதலியன பற்றியும் ஆராயப்பெற்றுள்ளது. யாப்பிலக்கணம், அணியிலக்கண அமைதிகளும் இதன்கண் ஆராயப்பெற்றுள்ளன.

ஐந்தாவது இயலில் திருவிருத்தமும் திருக்கோவையாரும் மெய்ப் பொருளினை ஆழ்ந்த பொருளாகக் கொண்டிருத்தல் ஆராய்ந்து விளக்கப்பட்டுள்ளது

ஆறாவது இயலில் இவ்விருவர் காலச் சமுதாய நிலையும் சமுதாயத்தொண்டும் ஆராயப்பட்டுள்ளன.

ஏழாவது இயல் முடிவுரையாக அமைந்தது. இதில் ஆய்ந்து காணப்பட்ட முடிவுகள் தொகுத்துச் சுட்டப்பட்டிருக்கின்றன; சமய வளர்ச்சிக்கும், சமுதாய வளர்ச்சிக்கும் தேவையான சில வழிமுறை களும் குறிக்கப்பட்டிருக்கின்றன. எதிர்கால ஆய்விற்குப் பயன்படும் சில ஒப்பாய்வுக் களங்களும் இறுதியில் குறிக்கப் பெற்றுள்ளன.

பின்னிணைப்பில் திருவிருத்தம், திருக்கோவையார் ஆகிய வற்றின் வெளியீடுகள், அகப்பொருள் கூற்றுக்கள் பற்றிய அட்டவணை மேற்கோள் நூற்பட்டியல் முதலியன தரப்பெற்றுள்ளன.

சென்னைப் பல்கலைக்கழகம் இவ்வாய்வுநூலை அச்சிட அனுமதி யளித்தது. (No. 3167Ph. D. தேதி 28—8-91)

திருப்பதி திருமலை தேவஸ்தானம் இந்நூலை வெளியிடப் பொருளுதவி செய்தது. (Roc. No.8 Edit 8/729/91 dated 30—4—92)
இவ்விரு நிறுவனங்கட்கும் என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

இந்நூல் ஆய்வின் தொடக்கத்தின்போது உற்றுழி உதவி ஊக்கமும் ஆக்கமும் அளித்த தமிழக அரசின் தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத்துறைச் செயலர் டாக்டர் ஔவை நடராசன், தமிழ்க்கடல் திரு பா. பச்சையப்பன், பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியார் சுவாமிகள், டாக்டர் ந. சுப்புரெட்டியார், டாக்டர் ரா. சீனிவாசன், பேராசிரியர் ஆ.க பார்த்தசாரதி, டாக்டர் இரா. குமரவேலன், டாக்டர்

மு. தங்கராசு ஆகியோர் பல நிலைகளில் உதவியுள்ளனர். டாக்டர் மு. தங்கராசு என் மேற்பார்வையாளர். அவர் என்னை ஆராய்ச்சி மாணாக்கனாக ஏற்றுக்கொண்டு ஆவன புரிந்துள்ளார்.

இரா. குமரவேலன் அவர்களின் உதவி காலத்தினாற் செய்ததாகும். டாக்டர். இரா. மாணிக்கம் அவர்கள் எனக்கு உற்றுழி உதவியுள்ளார். இத்தகைப் பெருமக்கள் அனைவருக்கும் என் நன்றி உரித்தாகுக.

மற்றும் இதனைக் குறிப்பிட்ட காலத்தில் செம்மையாக அச்சிட்டு உதவிய புரோகிரசிவ் அச்சகத்தினருக்கு என் நன்றியுரித்தாகுக.

தண்டமிழுலகம் இச்சமய நூலினையும் ஏற்றுக் கொள்ளும் என நம்புகிறேன். பொது நூலகங்களிலும் வீட்டு நூலகத்திலும் இந்நூல் இருப்பின் சமய மணம் கமழ்வதோடு இலக்கிய மணமும் கமழும்.

இந்நூலினுக்குச் சிறந்ததோர் முன்னுரை எழுதி என்னைப் பெருமை செய்த என் கெழுதகை நண்பர் டாக்டர் பேராசிரியர் வி.மு. பழனி எம்.ஏ.,எம்.பில் பிஎச்.டி. அவர்களுக்கு என் நன்றி உரித்தாகுக.

காந்தி நகரில் உள்ள தவத்திரு உமாகாந்தன் அடிகள் அவர்களும் எனக்கு ஆக்கமும், ஊக்கமும் தந்து உதவியுள்ளார் அவர்க்கும் என் நன்றி.

15, இந்திராணி நகர்,
வேலூர் 632 006.
20—11—92

முனைவர் இ.பா. வேணுகோபால்
எம்.ஏ., எம்.எட், பிஎச்.டி.,
முன்னாள் முதல்வர்,
அரசு கல்வியியல் கல்லூரி.

நம்மாழ்வார் மாணிக்க வாசகர் தொடர்புடைய

திருத்தலங்கள்



# நம்மாழ்வார் திருவிருத்தமும் மாணிக்கவாசகர் திருக்கோவையாரும்

### ஒப்பாய்வு

*''நம்மாழ்வார் என்றக்கால் அண்ணிக்கும் அமுதூறும்''*
*''மூல பண்டாரம் வழங்குகிறார் வந்து முந்துமினே''*

## வாழ்வும் காலமும்

## நம்மாழ்வார்

### நாலாயிரத் திவ்விய பிரபந்தமும் ஆழ்வார்களும்

நாலாயிரத் திவ்விய பிரபந்தம் தென்னாட்டில் வைணவப் பெருமக்களால் பெரிதும் போற்றப்பெறும் பக்திநூல் ஆகும். இது, மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார் பெருமக்கள் பன்னிருவரால் அருளிச் செய்யப் பெற்ற பாசுரங்களைக் கொண்டது. பத்து அவதாரங்களுள் கல்கி அவதாரம் இன்னும் நிகழவில்லை. மீன், ஆமை, பன்றி, சிங்கம் எனும் உருவங்களில் திருமால் தோன்றி மக்களுக்கு நன்மை பயக்கும் செயல்கள் ஆற்றியமையை இந்நான்கு அவதாரங்களும் காட்டுகின்றன.

பகவானின் அடுத்த செயல் ஆழ்வார்கள் அவதாரம். திருமாலின் அணிகள், ஆயுதம், வாகனம் முதலியன ஆழ்வார்கள் பன்னிருவராகத் தமிழ்நாட்டிலும் சேரளத்திலும் அவதரித்து வேதத்தைத் தமிழ்செய்தன. சைவ மறுமலர்ச்சியின் பொருட்டு நாயன்மார்கள் தோன்றியது போல வைணவ மறுமலர்ச்சியின் பொருட்டு ஆழ்வார்கள் தோன்றினர்.

நாலாயிரத் திவ்விய பிரபந்தத்தில் ஆழ்வார்கள் பதினொருவர் இறைவன் மீது அருளியுள்ள இருபத்திரண்டு பிரபந்தங்களும், ' மற்றறியேன் குருகூர் நம்பி, பாவின் இன்னிசை பாடித் திரிவனே'' 1 என்று நம்மாழ்வாரைப் போற்றி மதுர கவிகள் அருளியுள்ள ஒரு பிரபந்தமும், திருவரங்கத் தமுதனார் உடையவர் மீது அருளியுள்ள ஒரு பிரபந்தமும் ஆக இருபத்துநான்கு பிரபந்தங்கள் அடங்கியுள்ளன.

இந்நூலில் இசைப்பா தொகுதிகள் மூன்றும், இயற்பா தொகுதி ஒன்று ² ஆக நான்கு தொகுதிகள் உள்ளன. அனைத்துப் பாடல்களும் நூற்றெட்டு திருப்பதிகளில் அர்ச்சாவதாரமாக எழுந்தருளியுள்ள எம்பெருமான்களைப் பற்றியனவாகும்.

இந்தப் பாசுரங்கள் பெற்றுள்ள சிறப்பினைக் கருதி நிகமாந்த மகாதேசிகன் "செய்ய தமிழ் மாலைகள் நாம் தெளிய வோதி, தெரியாத மறைநிலங்கள் தெளிகின்றோமே" 2என்று சிறப்பித்துப் பேசுவார். "வேதத்தைச் செந்தமிழால் விரித்துரைத்தோன் வாழியே" 3என்று வாழித் திருநாமம் கூறுகிறது.

## நம்மாழ்வார் தோற்றம்

நம்மாழ்வார் 'நம் ஆழ்வார்' எனப் பெருமையுடன் உறவு கொள்ளும் வண்ணம் பெயர் பெற்றவர். தாமிரவருணியின் தென்கரையில் உள்ள திருக்குருகூர் இவர் பிறந்த இடம். இத்திருக்குருகூர் பிரமாண்ட புராணத்தில் திருநகரி (ஸ்ரீநகரி) எனக் கூறப்பட்டுள்ளது.4 திருமாலே குருகாக எழுந்தருளிப் பிரமதேவனுக்கு அருள் செய்ததால் இவ்வூர் குருகூர் ஆனது என்பர். 5 இத்தகு சிறப்பு வாய்ந்த குருகூரில் காரியார் எனும் நம்பி, உடைய நங்கையார் எனும் அம்மையாருடன் நெடுநாள் குழந்தையின்றி வாழ்ந்து வந்தனர். திருமாலிடம் இவர்கள் குழந்தை வேண்டி நின்றனர். அப்போது அவர்களுக்குப் பாழடைந்த ஒரு கிணற்றில் புதைந்துகிடக்கும் சிலையினைத் தேடியெடுத்து அதற்குக் கோவில் அமைத்து ஆவன செய்யும்படி ஒரு நியமம் ஏற்பட்டது. அவ்வாறே அவர்கள் செய்யச் சினனாள் கழித்து அவர்கள் ஒருமகனைப் பெற்றனர். அவரே நம்மாழ்வார் ஆவர்.6

துவாபர யுகத்தின் இறுதியிலே கண்ணன் தன் சோதிக்கு எழுந்தருளியவுடன், கலியுகம் பிறந்த 43-ஆம் நாள், பிரமாதி ஆண்டு வைகாசிமாதம் 12ஆம்தேதி பௌர்ணமி திதி, விசாகநட்சத்திரம், கடக லக்கினத்தில் நம்மாழ்வார் தோன்றினார். 7 இவர் ஒரு திங்கள், ஒரு செவ்வாய் முன்னதாகத்தோன்றியிருந்தால் கண்ணனை நேரில்வணங்கியிருக்கலாம் என்று கருதியதாகக் கூறுவர். 8 தாமியற்றிய பாடல்களுள் கண்ணனைப் பற்றியே மிகுதியாகப் பாடியமைக்கு இஃது ஒரு காரணமாக இருக்கலாம். பிறந்த நாளிலிருந்து முத்தனைய முறுவல் செய்து மூக்குறுஞ்சித் தாய்ப்பால் குடிக்காமல் மௌனத்தோடிருந்த குழந்தையைக்கண்ட பெற்றோர் பிறந்த பன்னிரண்டாம் நாள் 'பொலிந்து நின்றபிரான்' முன்னர் எடுத்துச் சென்று கிடத்திப் பெரிதும் வேண்டினர். குழந்தையின் உடம்பில் அசைவு தோன்றியது.

காதசையத் தோளசையக் கையசையத் தாளசையத் தவழ்ந்து சென்ற குழந்தை, திருவனந்தாழ்வான் அவதாரமான திருப்புளியாழ்வார் அல்லது புளிய மரத்தின் பொந்தில் தென்முகம் நோக்கிப் பதுமாசனத்தில் அமர்ந்தது. தெற்கு நோக்கி அமர்ந்தால் தென்றலால் அழகும் சிறப்பும் பெருகும் என்பர் இளவழகனார்.9 நம்மாழ்வார்க்கு இருப்பிடமான புளியமரம் எம்பெருமானுக்குத் திருப்பள்ளி மெத்தையான ஆதி சேடனது அமிசமாகும்.

புளியமரங்கள் பொதுவாக இரவில் இலைகளைக்கூப்பி உறங்கும். ஆனால், மிகப் பழங்காலத்ததாகிய இந்த மரமோ இரவிலும் இலைகள் மூடாத நிலையிலிருந்தது; எனவே 'உறங்காப்புளி' எனப்பட்டது.

ஆதிசேடனின் அவதாரம் என்று அறியும் வகையில் இன்றும் அதன் வேர்கள் சில படமெடுத்தாடும் கருநாகத்தின் வடிவில் இருக்கின்றன. "பொந்தாயிரம் புளியாயிரம்" என்று பாடப்பெற்ற இந்தப் புளியமரத்தின் பொந்தில்தான் நம்மாழ்வார் தங்கியிருந்தார்.10

இங்ஙனமே நெல்லை மாவட்டத்தில் குட்டம் என்ற தலத்தில் உள்ள ஆனந்தவல்லி ஆலயத்தின் முன்னிருக்கும் மரமும் உறங்காப் புளிதான். புளிப்பில்லாத இதன் இலைகள் ஆனந்தவல்லி அம்மனின் அருள் மருந்தாகப் போற்றப்பட்டு வருகின்றன 11

## ஞானக்குழந்தை

ஞான முத்திரை தரித்த கையுடன், மார்பு நிமிர்ந்து, நாசி நுனி நோக்கி, நாட்டம் பிறழாமல் மூச்சும் அடங்கி, யோகாசனத்தில் இருந்த குழநதையைப் பெற்றோர் கண்டனர். அதனை எடுத்துக் கொஞ்சப் பெற்றோராலும் மற்றோராலும் முடியவில்லை காலம் செல்லச் செல்லக் குழந்தையின் உடல் வளர்ச்சி பெருகியது. யோக சக்தியால் வளர்ந்த குழந்தை அற்புத அழகுடன் மின்னி விளங்கியது.

## மதுரகவி கண்ட ஒளி

திருக்குருகூருக்கு அருகிலுள்ள திருக்கோளூரில் தோன்றிய மதுர கவி ஆழ்வார் அயோத்தி வரை யாத்திரை சென்றிருந்தார். அங்குத் தென்திசையில் ஒரு பேரொளியைக் கண்டு வியந்து அதனை நோக்கித் தொடர்ந்துவந்தார். திருக்குருகூர் வந்ததும் ஒளி மறைந்தது· அங்கே ஒரு ஞானி இருக்க வேண்டுமென்று கேட்டறிந்து புளிய நிழலிலேயே நிறைமதி போலப் பதுமாசனம் இட்டுக்கண்மூடி மௌனியாயிருக்கும் நம்மாழ்வாரைப் பார்த்தார். பதினாறு வயதாகியிருந்த நம்மாழ்வருக்குக் காது கேட்குமோ என்றறிய மதுரகவி ஒரு குண்டுக்கல்லை அவர் முன்பு போட, அவரும் கண்விழித்து நோக்கினார். அடுத்து, இவர் பேசுவாரோ என்றறிய "செத்ததன் வயிற்றில் சிறியது பிறந்தால், எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?" என்று வினவ, ஆழ்வாரும், "அத்தைத் தின்று அங்கே கிடக்கும்" என்றருளிச் செய்தார்.12

மதுரகவி, நம்மாழ்வார் திருவடிகளிலே வணங்கி, "மேவினேன் அவன் பொன்னடி மெய்ம்மையே"13 என்று கூறி, அவரையே குருவாகக் கொண்டு திருமாலைப் பாடாமல், நம்மாழ்வாரையே வியந்து, "கண்ணி நுண்சிறுத்தாம்பு" என்னும் பாசுரம் பாடித் துதித்தார்.

''கண்ணி நுண்சிறுத் தாம்பினால் கட்டுண்ணப்
பண்ணி யபெரு மாயன் என் னப்பனில்
நண்ணித் தென்குரு கூர்நம்பி என்றக்கால்
அண்ணிக் கும்அமு தூறுமென் நாவுக்கே''14

என்னும் அரிய பாடல் மதுரகவி நம்மாழ்வார் பால் கொண்ட ஈடுபாட்டை நனி விளக்கும்.

## கவிதை மழை

பதினாறு ஆண்டுகள் வரை யோகத்திலிருந்த ஆழ்வார் எம்பெருமான் காட்சியிலீடுபட்டு, அனுபவித்து, நால் வேதங்களின் சாரத்தைத் தமிழில் அருளினார். ருக், யசுர், சாம, அதர்வண வேதங்களின் சாரத்தை முறையே 100 பாசுரங்களுள்ள திருவிருத்தம், 7 பாசுரங்களுள்ள திருவாசிரியம், 1102 பாசுரங்களுள்ள திருவாய்மொழி,87 பாசுரங்களுள்ள பெரிய திருவந்தாதி என்னும் 1206 பாசுரங்களுடைய நான்கு தமிழ் வேதங்களாகப் பாடினார்.

மற்றைய ஆழ்வார்கள் அனைவரும் நாடு முழுவதிலுமுள்ள 108 திவ்விய தேசங்களையும் கண்டு மகிழ்ந்து அவற்றில் எழுந்தருளிய எம்பெருமான்களை மங்களாசாசனம் செய்தருளினார். ஆனால் நம்மாழ்வார் இந்த 'ஆழ்வார் திருநகரி'யை விட்டு வேறு எந்தத் தலத்திற்கும் செல்லவில்லை. இங்குள்ள உறங்காப்புளியின் பொந்திலேயே வாழ்ந்திருந்தார். எனினும் நூற்றெட்டுத் திவ்விய தேசங்களிலுள்ள எம்பெருமான்கள் இங்கெழுந்தருளிப் புளியமரத்தின் ஒவ்வொரு இலையிலும் அமர்ந்து கொண்டு 'எம்மைப் பாடுவீர்' என்று கேட்டு, ஆழ்வாரின் மங்களாசாசனம் பெற்றிருக்கிறார்கள். தமிழ்நாட்டில் உள்ள முப்பது திவ்விய தேசங்களோடு, வடநாட்டிலுள்ள திருவயோத்தி, துவாரகை, வடமதுரை ஆகிய மூன்றும், மற்றும் பரமபதம், திருப்பாற்கடல் ஆகிய இரண்டும் ஆக மொத்தம் 35 திவ்விய தேசங்கள் ஆகின்றன.15

நான்கு வேதங்களுள் ஒன்றான 'ருக்' வேதத்தில் அந்தந்தத் தேவதையைக் குறித்துத் தமக்கு வேண்டியவற்றைத் தெரிவித்துக் கொள்வதுபோல இங்கும் 'விண்ணப்பமே'16 என்று வேண்டுவதைத் தெரிவித்துக் கொள்வது வருகிறது.

திருமால் தம்மைத் தாமே கவிபாடிக் கொள்ளும் முறையில் இப்பாடல்கள் நம்மாழ்வார் வாயிலாக வந்தன. முன்னர் இருந்த கருத்துக்களே இவர்மூலம் வெளிவந்தன என்பர்.17 இறைவனைப் பாடவேண்டும் என்று எண்ணியும், தமிழில் இதனைத் தரவேண்டும் என்று திட்டமிட்டும் ஆழ்வாரால் இந்நூல் இயற்றப்பட்டதன்று; நீர் பாலாய், பால் நெய்யாய், நெய் அமுதமாய், அதனால் நிறைந்ததோர் ஏரி கரை பொறாது நெளிந்து உடைபடும். அது போன்று ஆழ்வாருக்கு இறைவன்

ஞானம் அருளினன்; அது பரபத்தி வடிவு பெற்றது; அப்பரபத்தி பர ஞானமாயிற்று; பரஞானம் பரமஞானமாய் மலர்ந்தது. அமுதக்கடலானது தான் உள்ள இடத்தை அழித்துவிடாமல் இருப்பதற்காக வெள்ள மெடுப்பது போன்று ஆழ்வார் உள்ளம் வெடித்து விடாமலிருப்பதற்காக அவர் தம் ஆர்வம் பாடல்கள் வடிவாய் வெள்ளமிட்டு 'அவா விலந்தாதி' 18 என்று பக்தியின் வலிமையால் பிறந்த அந்தாதியான ஆயிரம் என்ற சிறப்புடைய நூலாயிற்று. 'உணர்ச்சியில் பிறப்பது கவிதை' 19 எனுமிலக்கணப்படி எழுந்தன இக்கவிதைகள் என்பதே இதன் பொருள்.

பரமபதம் எய்து முன்னரே நம்மாழ்வார் தம் இறுதி நிலையை மதுரகவியாரிடம் 'வந்த காரியம் ஆகிவிட்டது' என்று குறிப்பால் உணர்த்தினார். அவர் தன்னையும் உடனழைத்துச் செல்ல வேண்டினார். மேதினியில் உள்ளோர்க்குச் செய்ய மறைத்தமிழை செப்புவதார் நீயல்லால்' என்று நம்மாழ்வார் மதுரகவிக்குக் கூறி மக்களுக்குப் பக்திநெறி பரப்புமாறு பணித்தார். 20

நம்மாழ்வார், பின்னர்த் தாமிரவருணி ஆற்றுநீரைக் காய்ச்சுமாறு தம் சீடரை ஏவினார் தாமிரம் கலந்த அந்தத் தாமிரவருணி நீரைக் காய்ச்சியதும் செம்பால் திருமேனி ஒன்று உருவானது. இத்திரு மேனியை யாரும் அடையாளம் காணமுடியவில்லை.

கைகளைக் கூப்பி உருவாகியிருந்த அத்திருமேனிதான் இராமானுசர் எனும் யதிராசர் அவர், இனிமேல் தான் உலகில் தோன்றப் போகிறார். திருமாலின் பெருமையை உணர்த்த உலகில் வைணவத்தைப் பெருக்கப்போகிறவர் இவரே என நம்மாழ்வார்சுட்டிக்காட்டினார்.

மீண்டும் ஒருமுறை தாமிரவருணி நீரைக் காய்ச்சியபோது நம்மாழ்வாரின் திருவுருவத் திருமேனி உருவானது. அதில் நம்மாழ்வார் தம் உடலில் இருந்து ஒளி பாயச் செய்துவிட்டுத் தம் பூதவுடலைத் துறந்தார்.

அந்தப் பூதவுடலை மதுர கவியார் பள்ளிப்படுத்தியதோடு ஒரு சந்நிதியையும் உருவாக்கி, அச்சிலையை அங்கு அமைத்தார். நம்மாழ்வார் முப்பத்தைந்து ஆண்டுகள் வாழ்ந்திருந்து பின் திருநாட்டை அலங்கரித்தார். 21 குருவுக்குப்பின் ஆழ்வார் கொள்கைகளைப் பரப்பி வந்த மதுரகவியார் நம்மாழ்வாரின் திருமேனியை ஆழ்வார்த்திருநகரியில் அமைத்து விழாக்கள் பல நடத்தினார். 22

## நாதமுனிகள் தொகுத்த நாலாயிரம்

சிதம்பரத்திற்கு அருகே வீரநாராயணபுரத்தில் ஈசுவரமுனிகளுக்குத் திருமகனாய் அவதரித்த பெரியார் நாதமுனிகள். 23 இவர் வைணவ ஆசாரிய பரம்பரையில் முதன்மையிடம் பெறுபவர். நாதமுனிகள் ஒருமுறை குடந்தை சாரங்கபாணியைத் தரிசிக்கத் தலயாத்திரையாகக் கும்பகோணம் வந்து சேர்ந்தார். அப்போது "ஆராவமுதே அடியேனுடலம் நின்பாலன்பாயே நீராயலைந்து கரைய உருக்குகின்ற நெடுமாலே" 24 என்று தொடங்கிப் பத்துப் பாடல்களை ஓரம்மையார் பாடித் துதித்து, இறுதியில் "குழலின்மலியச் சொன்ன ஓர்ஆயிரத்துளிப் பத்தும் மழலைதீர வல்லார் காமர் மானேய நோக்கியர்க்கே" 25 என்று முடித்ததைக் கேட்டார் நாதமுனிகள். 'ஆராவமுதன்' எனும் அதிமதுரமான நாமம் அவரது உள்ளத்தில் பதிந்து மகிழ்ச்சியளித்தது. அவ்வம்மையாரிடம் இப்பாடல்கள் பற்றிக் கேட்டார். அவர் "இதனை நம்மாழ்வார் அருளினர் என்பர். அதுவும் இப்பாடல்கள் இக்கோயில் சம்பந்தமாக இருப்பதால் தெரியும். அவர் உரைத்ததில் இப்பத்துப் பாசுரங்கள் அன்றி வேறு அறியேன்" என்றார்.26

நாதமுனிகள் நம்மாழ்வார் உதித்த குருகூர் சென்று ஏடுகளைத் தேடினார்; கிடைக்கவில்லை. மதுர கவியாழ்வாரின் சீடரான பராங்குச தாசரிடம் போய்க் கேட்குமாறு சிலர் கூறினர்.27 அவர் அங்குள்ள கோயிலில் அமர்ந்து மதுரகவியார் பாடிய 'கண்ணிநுண் சிறுத்தாம்பு, பாசுரத்தை நம்மாழ்வார் சிலைக்கெதிரில் பன்னீராயிரம் முறை உருவேற்றினால் நம்மாழ்வார் தோன்றுவார்; அவர் அருள்வார் என்றனர்.28 அங்ஙனமே நாதமுனிகள் பன்ராணியிரமுறை உருவேற்ற நம்மாழ்வார் தோன்றினார். நாதமுனிகள் அவரிடம் "தாங்கள் பாடிய ஓராயிரமும் மற்ற ஆழ்வார்கள் பாடிய மூவாயிரமும் எனக்கு ஓதியருள வேண்டும்" என்று வேண்டினார். அப்போது நம்மாழ்வார், "அன்பா! நாம் உமக்கு எதிரில் நின்று கூறுதல் அறமன்று; திரையொன்று போட்டு அதன் பின்னால் நீயிருக்க நான், அர்ச்சா மூர்த்தமான தன்மையிலிருந்து கூறுவேன். நீ எழுதிக்கொள்க" என்றார். அங்ஙனமே நாதமுனிகள் செய்து நாலாயிரம் பாடல்களையும் எழுதிக் கொண்டார்.29

ஆழ்வார் பாண்டி நாட்டில் அவதரித்தவர் ஆதலின் [பாண்டி நாட்டுத் திருப்பதிகளையும், மலைநாட்டுத் திருப்பதிகளையும் மிகுதியாகப் பாடியுள்ளார். சில திருப்பதிகள் இவரால் மட்டுமே பாடப் பெற்றுள்ளன. திருவிருத்தத்தையே ஆழ்வாருடைய முதல் பிரபந்தமென அறிஞர் கொண்டுள்ளனர். பாற்கடலும் பரமபதமும் நீங்கலாக, இங்குள்ள திருப்பதிகளுள் திருவேங்கடத்தையே இவர் திருவிருத்தத்தில் முதலில் எடுத்துக் கூறியுள்ளார்.30

## நாலாயிரம் பாடல்களை ஞாலத்தில் பரப்பியமை

முதற்கண் நாதமுனிகள் ஆழ்வார் திருநகரிக்கு எழுந்தருளி ஆங்குத்தங்கிப் பொலிந்தபிரான் முன்னிலையில பாசுரங்களை இராக தாளத்துடன் பாடினார். பின், வீரநாராயணபுரம் திரும்பி மன்னனார் சந்நிதியில் வணங்கி, அப்பெருமான் திருவருள் பெற்றுத் தம்முடைய மருமக்களான கீழையகத்தாழ்வார், மேலையகத்தாழ்வார் எனும் இருவரையும் அழைத்துத் திவ்விய பிரபந்தங்களை இயலுமிசையுமாக்குதல வேண்டும் என்றும், இனிய இசையில் அமைத்துப் பாடுதல் வேண்டும் என்றும் பணித்தார் 31 இதனை வேதாந்த தேசிகர் எழுதிய "ரஹஸ்ய த்ரயசாரம்" என்னும் நூல் தெரிவிக்கிறது.32 நாதமுனிகள் தம் மருமக்களுக்கு இசைப் பயிற்சியளித்து நாலாயிரத் திவ்விய பிரபந்தப் பாசுரங்களை நாடெங்கும் பரவச் செய்தார். இன்றும் பொலிந்தபிரான் கோயிலில அவர் பயன்படுத்திய கஞ்சிரா இருப்பதாகத் தெரிகிறது. ஒவ்வொரு வைகுண்ட ஏகாதசியன்றும் பொலிந்தபிரான் முன்னிலையில் இப்பாடல்கள் 'ஜால்ரா' இசையுடன் ஓதப்பெறுகின்றன. 33 இதனால்தான் "நாதனுக்கு நாலாயிர மளித்தோன் வாழியே" என நம்மாழ்வாரை வைணவ உலகம புகழ்கிறது. 34

> "ஆளம் வலம்புரி யன்ன நற்காதல் அடியவர்க்குத்
> தாளம் வழங்கித் தமிழ்முறை இன்னிசை தந்தவள்ளல்
> மூளும் தவநெறி மூட்டிய நாத முனிகழலே
> நாளும் தொழுதெழுவோம் நமக்கார் நிகரானிலத்தே"35

என்று வேதாந்த தேசிகர் நாதமுனிகளைப் புகழ்வர். "பராங்குசனார் சொற்பிரபந்தம் பரிந்துகற்றோன் வாழியே, கானமுறத்தாளத்தில் கண்டுரைத்தோன் வாழியே" 36 என்ற வாழித் திருநாமம் அவரைச் சிறப்பிக்கிறது.

## நம்மாழ்வார்-பெயர்

இவருக்கு நம்மாழ்வார், காரிமாறன், மாறன், சடகோபன், பராங்குசன், குருகைப்பிரான். வகுளாபரணர், திருக்குருகூர் நம்பி, அருள் மாறன், தென்னரங்கன் பொன்னடி, திருநாவீறுடைய பிரான், பொரு நற்சேர்ப்பன், பாவலர் தம்பிரான் என்னும் பதின்மூன்று பெயர்கள் உண்டு.37

நம்மாழ்வார் அரங்கநாதர் முன் தம் பாடல்களைப் பாடியபோது "நம் ஆழ்வார்" என்று ஒரு குரல் வானில் தோன்றியது. அதுமுதல் இவர் நம்மாழ்வார் எனப் பெயர் பெற்றார். திருமாலின் அடியவர்க்கு

நமராயிருந்து அருள்செய்ததால் 'நம்மாழ்வார்' என்று வழங்கப்பட்ட தாகவும் கூறுவர். 38

இவர் மாறாமல் திருப்புளியடியில் கிடந்தமையால் மாறன் எனப் பெயர் பெற்றார். மாறுபட்ட மனத்தவரை இறைநெறியில் சேர்க்கப் பாடியதால் 'மாறன்' என்று வழங்கப்பட்டார் என்றும்கூறலாம். உலகின் இயல்பாவது பிறந்த குழந்தைகள் தாய்ப்பால் உண்டு உறங்குவதாகும். இதற்கு மாறாக நின்றாராதலின் ஆழ்வார் 'மாறன்' என அழைக்கப்பட்டு இருக்கலாம். வலிய வினைகட்கு மாறாக இருந்ததால் இப்பெயர் வந்த தாகவும் கொள்ளலாம்.39

> ''மாறன் என்பது பாண்டியனுக்கு ஒரு பெயர், பாண்டிய வம் சத்தைக் குறிக்கும் இப்பெயரை இவர்கள் இக்குழந்தைக்கு இட்டதே மதுரைப் பாண்டிமன்னனுக்கும் திருவழுதி நாட்டுக் குறுநில மன்னனுக்கும் உள்ள தொடர்பைப் புலப்படுத்துகிறது எனலாம். நம்மாழ்வாரின் மரபினரான குறுநில மன்னர்கள் பாண்டிய மன்னர்களுக்குப் போரில் படைத்துணை செய்தார் கள். இவர்கள் பாண்டிய மன்னர் குடும்பத்தினரோடு திருமணத் தொடர்பு கொண்டிருந்தனர். ஆனால் பெண்ணைக்கொடுக்கும் உரிமைதான் இவர்களுக்குண்டு. இவர்கள், முடிமன்னரல்லர். இத்தகைய தொடர்பு பற்றி மாறன் என்ற பெயர் நம்மாழ் வாருக்குப் பிள்ளைப்பெயராக இருந்தது'40

வரலாற்றுத் தொடர்பை அறியாத நிலையில் உலக இயற்கைக்கு மாறியிருந்ததால் குழந்தைக்கு 'மாறன்' என்ற பெயர் வந்தது என்று குருபரம்பரைக் கதைகள் கூறுகின்றன.41

கருப்பத்திலிருக்கிற பொழுது ஞானமுடைய குழந்தைகளைப் பிறந்த உடனே தனது தொடு உணர்ச்சியால் அறியாமைக்கு உள்ளாக்கி அழுதல், அரற்றுதல் முதலியன செய்யும் தன்மையதான சடமென்னும் வாயு இவ்வாழ்வார் அவதரித்த பொழுது இவரையும் தொடுதற்கு வர அப்பொழுது இவர் அதனை உங்காரத்தால் ஒறுத்து ஓட்டி ஒழித்ததனால் 'சடகோபர்' என்று இவர்க்குப் பெயர் உண்டாயிற்று.42

இவர் தம் அருளிச்செயல்கள் ஆகிய அங்குசத்தால் பரமனாகிய களிறு தம்வசமாம்படி செய்ததாலே 'பராங்குசர்' என்னும் பெயர்பெற்றார். பரருக்கு அங்குசம் போன்றவராதலின் இப்பெயர் பெற்றார் என்றும் கூறலாம். பொங்கியெழும் பரசமயத் துடுக்கடக்கியதால் 'பராங்குசர்' எனும் பெயர் பூண்டார்.43

மகிழம்பூ மாலை இவருக்கு உரியதாதலின் 'வகுளாபரணார்' (வகுளம்-மகிழம்பூ) என்னும் பெயரும் இவருக்கு வழங்கியது.44

திருக்குருகூரில் தோன்றியதால் 'குருகூர் நம்பி' என்னும் பெயர் வந்தது,45

ஆன்மாக்கள் வீறுபெறும் சீரிய சொற்களைக் கூறுபவராகையால் 'திருநாவீறுடைய பிரான்' என்று பெயராயிற்று.46

'பாவலர் தம்பிரான்' என்பது பாக்கள் பாடுவதில் வல்லார்களின் தலைவன் என்னும் பொருளில் வழங்கப்படுகிறது. 'பொருநற் சேர்ப்பன்' எனும் பெயர் தாமிரவருணி ஆற்றங்கரையிலுள்ள திருநகரியில் தோன்றியதால் வந்தது.

மற்றும் திருவழுதி வளநாடன்; சண்பக மாறன், பொருநற் சங் கணித் துறைவன் என்னும் பெயர்களும் வழங்குகின்றன.47

திருமாலினுடைய திவ்விய மங்கள குணங்களாகிய அமுத வெள் ளத்திலே முழுகி மிகவும் ஈடுபட்டு நன்றாக ஆழ்ந்திருந்தவராதல் பற்றி 'ஆழ்வார்கள்' என்று பெயர் பெற்ற பரமபாகவதர்களுள் இவர் முக்கிய மானவர். 'பூவெனப் படுவது பொறிவாழ் பூவே' என்னுமாப்போலே ஆழ்வார் என்றாலே நம்மாழ்வாரைக் குறிக்குமாறு இவர்க்குச் சிறப்புப் பெயராக அது வழங்குகிறது.48

## நம்மாழ்வார்-அவயவி :

நம்மாழ்வார் அவயவி; மற்றையாழ்வார்கள் அவயவம். அங்கியும் அங்கமுமாக உருவகப்படுத்துமிடத்து நம்மாழ்வாருக்குப் பூதத்தாழ் வாரை முடியாகவும், பொய்கை, பேயாழ்வார்களைக் கண்களாகவும், பெரியாழ்வாரை முகமாகவும் திருமழிசையாழ்வாரைக் கழுத்தாவும், குலசேகராழ்வாரையும் திருப்பாணாழ்வாரையும் கரங்களாகவும் தொண்டரடிப்பொடி யாழ்வாரை மார்பாகவும் திருமங்கையாழ்வாரை நாபியாகவும், மதுரகவியாழ்வாரைக் கால்களாகவும் உரைப்பது மரபு. இங்கு நம்மாழ்வார், உயிர். எனவே, இங்ஙனம் உறுப்பியும் உறுப்புகளு மாக உருவகித்தற்குக் காரணம் நம்மாழ்வாரது தலைமையாகும் 49

## ஆழ்வார்-அவதாரச் சிறப்பு :

உலகத் தொடர்பான பலவகைப் பெருமைகளை யுடைமையால் நம்மாழ்வார் திருமால் அம்சம் எனப்படுவார் வங்கிபுரத்து நம்பி என்பார். ' எம்பெருமான் இப்படி வந்தவதரித்தான் என்பர் இப்படிச் சொல் வதற்குக் காரணம், ''ஆழ்வாருடைய பிரபாவத்தாலே'' என்னும் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியான வாக்கியம் காணத்தக்கது 50

வைகுண்டத்தில் எழுந்தருளியுள்ள ஸ்ரீமந் நாராயணனது அம்சமும், அவன் திருமார்பிலணிந்துள்ள திவ்விய ரத்தினமாகிய கௌஸ்துபத்தினது அம்சமும், அவன் அடியார்களின் குழாத்துக்குத் தலைவராகிய விஷ்வக்சேனரென்னும் சேனைமுதலியாரது அம்சமுமாக வந்து திருவவதரித்தவர் ஆழ்வார். ''சேனையர்கோன் அவதாரம் செய்த வள்ளல் வாழியே''51 என்பது வாழ்த்துப்பாடல்.

ஆழ்வார் திருவாய்மொழியிலே, ''தானே யானென்பானாகித் தன்னைத் தானே துதித்து''52 என்றும், ''பண்ணார் பாடலின் கவிகள் யானாய்த் தன்னைத்தான் பாடித் தென்னா வென்னும் என்னம்மான்''53 என்றும் கூறுவதிலிருந்து பகவானருள் தன்னிடத் திருப்பதைப் பாடியுள்ளார்.

''இன்று நன்கு வந்து என்னுடனாக்கி என்னால் தன்னை, வன்கவி பாடும் என் வைகுந்த நாதனே''54 ''என்னைத் தன்னாக்கி என்னால் தன்னை இன்றமிழ் பாடிய ஈசனை''55 ''என்னெஞ்சத்துள் இருந்து இங்கிருந்த தமிழ்நூலிவை மொழிந்து'' 56 என்பனவற்றால் திருமால் இவ்வாழ்வாரைக் கருவியாகக் கொண்டு பாடினார் என்பது தெற்றெனத் தெரிகிறது. ஆழ்வாரைப் பகவானுடைய அம்சமெனப் பாத்ம புராணம் கூறுகிறது. 57 எனவேதான் திவ்வியகவி பிள்ளைப் பெருமாளையங்காரும், ''நாராயணா! அடியேன் நாடும் தமிழ்வேத பாராயணா! சடகோபா!'' என்கிறார்.58 ''இன்தமிழால் மாறன் விளைத்த மறை ஓதார்க்கு இல்லையே ஆறன் விளைத் திருமாலன்பு''59 என்றும் அவர் பாடுகிறார். தீவினையாளரால் கெடுக்கப்பட்ட கலியுகத்திலே திருமால், அடியார்கள் பக்கல் மிக்க அன்பினால் அனைவரையும் பாதுகாத்தற்பொருட்டுப் பக்தர் உருவில் தோன்றினர் என்றும், அந்தப் பக்தர் உருவே நம்மாழ்வார் என்றும் கூறுவர் முனிவர்கள்.60

அத்திரி, சமதக்கினி எனும் அந்தணர்களுக்குத் தத்தாத்ரேயனும் பரசுராமனுமாக முதல் யுகத்திலே பிள்ளைகளாகப் பிறந்தனர். இரண்டாம யுகத்திலே தசரதர் என்னும்க்ஷத்திரியர்க்குஇராமர்மகனாகத் தோன்றினார். மூன்றாம் யுகத்திலே யயாதி சாபத்தாலே யதுகுலத்திலே தோன்றிய வசுதேவர்க்கு மகனாகக் கண்ணபிரான் தோன்றினார். நான்காம் யுகத்திலே வேளாளர் குலத்திலே காரியார்க்கு மகனாகத் திருமாலே நம்மாழ்வாராகப் பிறந்தார் என்று கூறுதலுமுண்டு.61

திருமால், வியாசர் முதலானவர்களிடம் ஆவேசித்து வேதங்கள் வகுத்தல் முதலிய காரியங்களைச் செய்து முடித்தது போல, நம்மாழ்வார் பக்கல் ஆவேசித்துத் தமிழ்வேதங்களை வெளியிட்டருளினான் என்பர்.62

திருமால் விஷ்வக்சேனை முதலியாரை நோக்கி, 'ஆருயிர்களைக் காப்பதற்காகப் பலவகை அவதாரங்களை யெடுத்து அவர்களோடு கலந்துபரிமாறி வரினும் அவர்களுக்குப், பொய்ந்நின்ற ஞானம்'63போக வழியில்லை. நேர்மாறாக, எனது பெருமையை மறுத்து அந்தந்தப் பிறப்பாகவே என்னை நினைத்து வீடுபேற்றுக்காக என்னை யனுகாம லிருப்பதற்கே அது ஏதுவாய் விடுகிறது. ஆகவே நீரவதரித்துப் பிர பந்தங்களை அருளி மெய்ந்நின்ற ஞானத்தை ஊட்டி நல்லொழுக்கம் நடக்கச் செய்து நமக்கு "ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழு வில்லா அடிமை செய்ய அவர்கள் விரைந்து வரும்படி அளிக்க வேண்டும்'' என்று நியமித்தருளினான். அவரே நம்மாழ்வாரானார் என்பர் பெரியோர் 64

> ''சேமம் குருகையோ செய்யதிருப் பாற்கடலோ
> நாமம் பராங்குசனோ நாரணனோ - தாமம்
> துளவோ வகுளமோ தோளிரண்டோ நான்கோ
> உளவோ பெருமா னுனக்கு''65

என்று ஒரு தனிப்பாடல் கூறுகிறது.

பெரிய திருவடி, திருவாழி முதலானோரின் அம்சமென்று கூறுவ தோடு, திருமாலின் கௌஸ்துபமும் சேனை முதலியாரும் சேர்ந்து நம் மாழ்வாராக அவதாரம் செய்தனர் என்றும் கருதப்படுகிறது. திருமாலின் அம்சம், அவருடைய ஐந்து ஆயுதங்கள், ஆதிசேடன், சேனை முதலியார் ஆக எட்டு உறுப்புக்கள் இவ்வவதாரத்தில் பொருந்தியிருப்ப தாகவும் ஒரு கருத்துண்டு. இவை நம்மாழ்வார்க்குள்ள உயர்வையும் அவருக்கு அளிக்கப்பெறும் பணிவுகலந்த மதிப்பையும் காட்டுவன வாகும்.66

மதுரகவியார் நம்மாழ்வார் அர்ச்சை உருவை எழுந்தருளப் பண்ணி விழாக் கொண்டாடிய போது நம்மாழ்வாரின் விருது பல கூறி அடியார்கள் செல்ல, மதுரைப் புலவர்கள் சிலர் எங்கள் அனுமதி பெறா மல் செல்லலாகாது என்றனர்.67 இச்செய்தியை அடியார்கள் மதுர கவியாரிடம் போய் முறையிட, அவர் நம்மாழ்வாரான அர்ச்சாமூர்த்தி யிடம் கூறினார். நம்மாழ்வார் அருள்வழிப்படி நின்று 'கண்ணன் கழலிணை' என்னும் பாடல் கிடைக்க, அதனைப் புலவர்களிடம் கொடுத்தனர். 'அவர்கள் உங்கள் குரவர் பாடலை இச்சங்கப் பலகை ஏற்றுக் கொண்டால் உங்கள் குரவரைச் சிறந்தவர் என ஏற்றுக் கொள்கிறோம்'' என்றனர்.68 அங்ஙனமே அதனைச் சங்கப்பலகையின் மீது வைக்க அது புலவர்களெல்லோரையும் தள்ளிவிட்டு அவ்வேட்டி னளவாகச் சுருங்கி நின்றது. புலவர்கள் நம்மாழ்வாரின் பெருமையை ஏற்று ஒவ்வொருவரும் போற்றி ஒரு பாடல் பாடினர். அவற்றுள் ஒன்று:

''ஈயா டுவதோ கருடற் கெதிரே
    இரவிக் கெதிர் மின்மினி யாடுவதோ
நாயா டுவதோ வுறுமிப் புலிமுன்
    நரிகே சரிமுன் நடையா டுவதோ
பேயா டுவதோ அழகூர் வசிமுன்
    பெருமான் வகுளா பரணன் அருள்கூர்ந்
தோவா துரையா யிரமா மறையின்
    ஒருசொற் பொறுமோ வுலகிற் கவியே''69

என்பதாகும். நம்மாழ்வார் பாடல்களை மதுரகவியார் மதுரைப் புலவர்கள் அவையில் விளக்கிப் பேசியிருக்கலாம். பாண்டித்துரைத் தேவர், வச்சிரநந்தி போன்றோர் ஏற்படுத்திய மதுரைத் தமிழ்ச் சங்கங்களைப் போல, அப்போதும் ஒரு சங்கம் மதுரையில் இருந்திருக்கலாம் சங்கப் புலவர், சங்கப்பலகை என்று கூறுவன நம்மாழ்வார் பாடல்களைச் சிறப்பிப்பதற்காகவே எனக் கொள்ள வேண்டியுள்ளது. மதுரகவியார், நம்மாழ்வார் பாடல்களை விளக்கிய திறத்தினால் புலவர்கள் அப்பாடல்களின் பொருட்செறிவு, சொற்செறிவு, நடைநயம். தொடைநயம் முதலானவற்றைக் கண்டு நம்மாழ்வாரைப் போற்றிப் பாடியிருக்கலாம். ஆசிரிய விருத்தத்தில் பாடல் அமைந்திருப்பதால் காரிகை பாடிய காலத்திற்குச் சற்று முன் பின்னாகப் பாடியிருக்கலாம் என்பது தெரிகிறது.

நாலாயிரம் மூன்று இரகசியங்களை எடுத்துரைப்பதாகச் சொல்வதுண்டு. திருமந்திரமாகிய இரகசியம் முதலிரண்டு ஆயிரங்களில் கூறப்படுகிறது. சரமசுலோகம் மூன்றாம் ஆயிரத்திலும் நான்காம் ஆயிரத்திலும் பேசப் பெறுகின்றன. திருமந்திரம் மூன்று சொற்களால் ஆனது. 'ஓம் நம' என்ற இரு சொற்கள் முதலாயிரத்திலும் 'நாராயண, என்ற சொல் இரண்டாமாயிரத்திலும் விளக்கப் பெறுகின்றன. சரம சுலோகம் என்பது கண்ணன் பகவத் கீதையின் முடிவில் கூறுவதாகும் உயிர் தன்னை அறவே இறைவனிடம் ஒப்புவிக்க வேண்டும் என்று வற்புறுத்துவதாகும். வீடு பேற்றுக்கு வழி, வீடு பேறடைவதற்குத் திருமகள் உயிர்களுக்காகத் திருமாலிடம் பரிந்து பேசுவது என்பன பற்றி இருவரிகளில் 'திவ்ய மந்திரம்' கூறுகிறது.70

வைணவத்தில் கூறப்பெறும் 'அர்த்த பஞ்சகம் எனப் பெயரிய ஐந்து பொருள்களைப் பற்றி நம்மாழ்வார் தம் பாசுரங்களில் விளக்கிச் செல்கிறார்' இவ்வைந்தாவன : 1. இறைவன், 2. உயிர், 3. நெறி 4. வீடு, 5. வீடு பேற்றுக்குத் தடையாய் இருப்பது.71

பக்தையாகிய யசோதைக்காக இவ்வளவு எளிமையாக ஓர் உரலுடன் வேண்டுமென்றே கட்டுப்பட்டு நிற்பதோ! உன் எளிமை என்

னென்றுரைப்பது'' என நினைத்து ஆழ்வார் ஆறுமாதகால மூர்ச்சை யாகக் கிடந்தாராம் 72 இவர் கண்ணனிடம் மிகுதியாக ஈடுபட்டார் என்பதை அவரியற்றிய நான்கு பிரபந்தங்களாலும் அறியலாம். கண்ணன் ஒருவனே ஆழ்வாருக்குத் தாரக போஷக போக்கியங்கள், இதனால் நம்மாழ்வாரைக் கிருஷ்ண-திருஷ்ண தத்துவமாக (திருஷ்ணம் விடாய்) உருவகித்துப் பராசரபட்டர் எனும் வைணவப் பெரியார் கூறுவார். 73

## ஆசாரியர்கள்

ஆழ்வார், ஆசாரியர் ஆகிய இருவரிலும் நம்மாழ்வார் எண்ணப் படுவார். குருபரம்பரைப்படி ஆசார்யர்களுள் முதல்வர் திருமால். அடுத்துத் திருமகள்; மூன்றாவதாகச் சேனை முதலியார். நாதமுனி களுக்குத் திவ்விய பிரபந்தம் நாலாயிரத்தையும் உரைத்ததால் நம்மாழ் வார் நான்காவதான ஆசாரியர் பதவியைப் பெற்றார். மண்ணுலகில இவரே முதன்மையான ஆசாரியர். அடுத்து நாதமுனிகள், உய்யக் கொண்டார், மணக்கால்நம்பி, ஆளவந்தார், பெரியநம்பி, இராமானுசர், எம்பார், பட்டர், நஞ்சீயர், நம்பிள்ளை, வடக்குத் திருவீதிப்பிள்ளை, பிள்ளை லோகாசாரியர், திருவாய்மொழிப்பிள்ளை, மணவாள மாமுனி கள், ஆகியோர் ஆசாரியர்கள் ஆயினர். 'எம்பெருமான் தரிசனம்' எனும் பெயர்பெறச் செய்ததாலே இராமானுசர் இடையாசாரியர் ஆவர். இராமா னுச தரிசனத்தைச் செழிப்புற வளரச்செய்தருளிய மணவாள மாமுனி கள் கடைசி ஆசாரியர் ஆவார்.

ஆசாரியர்களுள் முதல் மூவரும் மனித இனத்தைச் சேர்ந்தவர் களல்லர். நான்காமவராகிய நம்மாழ்வாரே ஆழ்வார்க்குத் தலைவர். எனவே நம்மாழ்வார் ஆழ்வாராகவும் ஆசாரியராகவும் விளங்குகிறார்.

## நம்மாழ்வார் காலம்

ஆனைமலைக்கோவில் திருப்பணியைத் தொடங்கி வைத்த அமைச்சர் பெயர் மாறன்காரி (மாறன் மகன் காரி) என்பது; நம்மாழ் வார் பெயர் காரி மாறன் (காரிக்கு மகன் மாறன்) என்பது. அஃதாவது பேரர் 'மாறன்' என்னும் தம் பாட்டன் பெயரையே பெற்றிருந்தார் எனலாம்.

பராந்தகன் நெடுஞ்சடையனின் தந்தை அரிகேசரி பராங்குச மாறவர்மன் (கி.பி. 710-765). நம்மாழ்வார் தந்தையாரான மாறன் அவ்வேந்தனுக்கு வழங்கிய (திருமாலின் பெயர்களுள் ஒன்றான) பராங்குசன் என்ற பெயரினை அவன் நினைவாகவும், திருமாலின் நினைவாகவும் தம் மைந்தர்க்கு இட்டிருக்கலாம். மாறன்காரிக்கு மதுர கவி என்னும் பெயரும் வழங்கியது. நம்மாழ்வார் மாணாக்கர் பெயரும்

அதுவேயர்கும். மாறன்காரி களக்காட்டைச் சேர்ந்தவர். நம்மாழ்வார் தாயார் பிறந்த இடம் களக்காட்டுக்கு அண்மையிலுள்ள திருவண்பரி சாரகம் இவையனைத்தையும் நோக்கும் போது நம்மாழ்வார் மாறன் காரியின் மைந்தராய் இருக்கலாம் என்று ஆராய்ச்சி வல்லுநர் கோபிநாத ராயர் கருதுகிறார்.74

முதல் ஆதித்த சோழன் காலத்துக் கல்வெட்டு என்று கருதப்படும் திருக்கண்ணபுரம் கல்வெட்டு ஒன்றில் ஒருவன் பெயர் 'சடகோபன்' என்று காணப்படுகிறது அக்கல்வெட்டின் காலம் கி.பி. 908 எனலாம். நம்மாழ்வாருக்கு முன்னர் இப்பெயரைக் கொண்டவர் வேறு எவரும் இல்லை. எனவே, ஒரு குடிமகன் ஆழ்வார் கொண்டிருந்த பெயரை 908 இல் பெற்றிருந்தான் என்றால் அவரது புகழ் தமிழ்நாட்டில் பரவி இருந்தமை தெளிவாகும். இங்ஙனம் பெயர் பரவச் சிறிது காலமேனும் தேவைப்படும். இவை அனைத்தையும் கொண்டு காணின் நம்மாழ் வார் கி.பி. 9-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் இருந்தவர் எனக் கொள்ளலாம்.75

நம்மாழ்வார் சீவரமங்கலம் எனும் திருப்பதியில் எழுந்தருளியுள்ள பெருமாள் மீது பதினொரு பாடல்களைப் (3188-3198) பாடியுள்ளார். இச்சீவரமங்கலம் திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள நாங்குநேரி ஆகும். நெடுஞ்சடையன் பராந்தகனுக்கு இருந்த விருதுப்பெயர்களுள் 'சீவரன்' என்பது ஒன்றாகும். அவனே, இவ்வூரைச் சீவரமங்கலம் எனப்பெயர் இட்டு, மகதநாட்டு மறையவனான ஸொஜ்ஜடபட்டன் என்பவனுக்குத் தானமாக அளித்தான். இவ்வூரின் பழைய பெயர்வேலங்குடி என்பது ஆகும். இவ்வறத்தினைக் குறிக்க எழுந்தவையே சீவரமங்கலத்துச் செப்பேடுகள். இம்மன்னன் காலம் கி.பி. 765-790 ஆகும்.76

நம்மாழ்வார், ''புளிங்குடி கிடந்து, வரகுண மங்கை இருந்து வைகுந்தத்துள் நின்று'' என்று ஒரு பாடலில் (3571) பாடியுள்ளார் இதில் கூறப்பட்டுள்ள வரகுணமங்கை எனும் திருப்பதி ஸ்ரீ வைகுண்டத் திற்கு ஒன்றரைக்கல் தொலைவிலுள்ளது; நம்மாழ்வார் பிறந்த குரு கூருக்கு அண்மையில் உள்ளது. இத்தலத்தின் பெயர் வரகுணன் மங் கலம் என்பதாகும். இது வரகுணமங்கை என மருவியது. சீவரன் என்னும் பாண்டியன் பெயரால் சீவரமங்கலம் அமைந்தாற்போல வர குணன் பெயரால் வரகுணமங்கை அமைந்தது பாண்டியர் பட்டியலில் வரகுண மகாராசன் (கி.பி.792-835) என்று ஒருவனும், வரகுணவர்மன் கி.பி. (862-880) என்று மற்றொருவனும் காணப்படுகின்றனர். வரகுண மங்கை முதல் வரகுணனால் அமைக்கப்பட்டதாகக் கொள்ளப்படினும் அத்தலத்தைத் தம் பாடலில் குறிப்பிட்ட நம்மாழ்வார் அவன் காலத் திலோ, அவனுக்குப் பிற்பட்ட காலத்திலோ வாழ்ந்தவர் எனக் கொள்ளல் வேண்டும்.77

நம்மாழ்வார் மற்றைய ஆழ்வார்களுக்குக் காலத்தால் பிற்பட்டவர் என்று கொள்ளுதலும் உண்டு வரகுணமங்கை என ஒரு தலத்திற்குப் பெயர் தோன்றிய காலத்தையும், ஆண்டாள் திருமணத் தொடர்பாக பெரியாழ்வார் நம்மாழ்வாருடன் கலந்து பேசத் திருக்குருகூர் சென்றார் என்னும் திவ்வியசூரி சரிதச் செய்தியையும் சான்றாகக் கொண்டு நம்மாழ்வார், பெரியாழ்வார்-ஆண்டாள் காலத்தவர் என்று கூறுவர்.78

ஆழ்வார்கள் முறைவைப்பின்படி நம்மாழ்வார் மதுரகவியாழ்வாருக்கு முன்னர் வைக்கப்பட்டிருப்பதால் ஆழ்வார்களுக்குள் சற்றுப் பிந்தியவர் என்று கருதப்படுகிறார். கே. ஏ. நீலகண்ட சாத்திரியார் நம்மாழ்வாரையும் மதுரகவியாழ்வாரையும் கி.பி. 9ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த கடைசி ஆழ்வார்களாகக் கூறியுள்ளார்.79

மா. இராசமாணிக்கனார் நம்மாழ்வாரின் காலம் கி.பி. எட்டாம் நூற்றாண்டின் இறுதியும் 9-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியும் ஆகும் என்கிறார்.80

பெரியவாச்சான் பிள்ளை முதலான உரையாசிரியர்கள் காலத்துக்கு முன்னே இவர் இருந்தவர் ஆதலால் ஆழ்வார் கி.பி. பத்தாம் நூற்றாண்டிற்குப் பின்னிருந்தவர் என்கிறார் மறைமலையடிகள். 81 பி.டி. சீனிவாச ஐயங்கார் நம்மாழ்வார் காலம் பத்தாம் நூற்றாண்டு என்று குறித்துள்ளார்.82 வரகுணமங்கையைப் பாடியுள்ளதால் ஆழ்வார் ஒன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்தவர் என்று பி.ஸ்ரீ. கருதுகிறார்.83.

வையாபுரிப் பிள்ளை, மாணிக்கவாசகர் காலத்துக்குச் சற்றுப் பின்னே, அஃதாவது கி.பி. 875ஐக் காட்டிலும் முன்னர்த் தோன்றாதவராகக் கருதுகிறார்.84

இராமானுசர் காலம் கி.பி. 1118 என்பதால் நாதமுனிகள் ஏறத்தாழ 100 அல்லது 150 ஆண்டுகள் முன்னர் வாழ்ந்திருக்கலாம். அக்காலமே நம்மாழ்வாரின் காலமுமாகும். எனவே ஏறத்தாழ கி.பி. 1000 ஆழ்வாரின் காலம் என்பர்.85

இவற்றையெல்லாம் நோக்கும்போது 'நம்' என்ற சொற்பெருமை எவ்வாறு வந்தது என்று மணவாள மாமுனிகள் கூறும்போது, அவரது உயர்தன்மையால் அங்ஙனம் வந்தது என்கிறார். இங்ஙனமே 'நம்' என்ற அடைமொழி நம்சீயர், நம்பிள்ளை ஆகிய மூவருக்கும் வழங்கப் பட்டுள்ளது.86

கோயில் என்று தனியாகக் கூறினால் வைணவர்களுக்குத் திருவரங்கன் பள்ளிக்கொண்டுள்ள திருவரங்கத்தையே குறிக்கும். அங்ஙனமே நம்மாழ்வார் அவதரித்த காரணத்தால் திருநகரி என்றாலே 'ஆழ்வார் திருநகரியையே' குறிக்கும்.87

## கம்பர் முதலானோர் புகழ்தல்

கம்பர், ''குருகை நாதன் குரைகழல் காப்பதே' '88 என்று நம்மாழ்வாருக்கு வணக்கம் கூறுகிறார் வான்வழிக் குரலை ஏற்றுச் 'சடகோபர் அந்தாதி'' என்னும் நூலையும் கம்பர் இயற்றினார்.

கிருக்ஷ்ணதேவராயர் அவையில் 'அட்டதிக்கயங்கள்' என விளங்கிய கவிஞர் எண்மருள் தலைவராக விளங்கிய அல்லசானி பெத்தண்ணா என்பார் தாம் இயற்றிய 'மனு சரித்திரம்' எனும் தெலுங்கு நூலில் இவரை ஞான குரவராகக் கொண்டு பாடல்கள் இயற்றியுள்ளமை நம்மாழ்வார் மேல் அவர் கொண்டிருந்த பக்தியையும் மதிப்பையும் புலப்படுத்தும். இந்தி மொழியில் இராமாயணம் பாடிய துளசிதாசரும் நம்மாழ்வாரைப் பாராட்டிப் பூசித்துள்ளார்.89

## மூவர் சந்திப்பு

குறள் செய்த பிறகு ஒரு முறை திருவள்ளுவர் ஒளவையாரையும் இடைக்காடரையும் சந்தித்துப் பேசினார். அப்போது அவர்கள் வள்ளுவரை நோக்கி, ''நீர் செய்த நூல் எத்தகையது? என்று வினவினார். வள்ளுவர், ''அகத்தியரால் செய்யப்பட்ட அகத்தியமும், என்னால் செய்யப்பட்ட குறளும் ஆகிய இரண்டும் உடையநங்கையின் திருக்குமாரராகிய சடகோபன் அருளிச் செய்த திருவாய் மொழிஉள்ளிட்ட நூல்களின் வழி நூலாம்'' என்றனர். 90

அதுகேட்ட ஒளவை, மரம், வியூகம், விபவம், அந்தர்யாமித்துவம், அர்ச்சை எனும் அர்த்த பஞ்சகத்தையும், நான்குவிதமான அறம், பொருள், இன்பம், வீட்டையும், சித்து, அசித்து, ஈச்வரன் எனும் முப்பொருளையும் அடக்கி அமைக்கப்பட்ட உண்மைப் பொருளாகிய எவ்வகைப்பட்ட வேதங்களுக்கும் எட்டாத மேலான பொருளைக் குருகூர் காரி முதலியார் பிள்ளையாய் அவதரித்த நம்மாழ்வார் செய்த திருவாய்மொழி எனச்சிலர் சொல்லுவார்கள். நான் அவர்கள் சொல்லல மறுத்துத் திருக்குறளை இந்த உலகிலுள்ள எல்லாப் பொருள்களுக்கும் தாய்மொழியாகிய வேதமென்று சொல்லுவேன்''91 என்றார்.

இடைக்காடரோ, "திருவாய்மொழியை எல்லோரும் வேதமென்று சொல்வர் அத்திருவாய்மொழிபோல ஆராயப்பட்ட மொழிகள் மிகவுள்ளன என்று பிறர் சொல்லினும் தடுத்து அந்த மொழிகளும் இந்த மொழியின் சாயையான மொழிகளேயாம் என்பேன். குழந்தை வடிவாயிருந்த ஆழ்வார் வாக்காகிய திருவாய்மொழியையும் எல்லா நூல்களுக்கும் பிறப்பிடமாகிய வேதத்தையும் சீர்தூக்கிச் சொல்லுமிடத்தே அவ்விரண்டும் மொழியால் இரண்டாயிருப்பினும் பொருளால் ஒன்றேயாகும்" என்றார் 92

வள்ளுவர், தம் குறள் நம்மாழ்வார் இயற்றிய திருவாய்மொழியின் வழிநூல் என்றார். ஔவை திருவாய்மொழியை வேதம் என்றார். இடைக்காடரோ வடமொழியில் வேதமும் தென்மொழியில் திருவாய் மொழியும பொருளால் ஒத்த வேதமே என்று கூறினார். இங்ஙனம் இவ்வுரையாடலால் நம்மாழ்வாரது சிறப்புப் புலப்படுகிறது.

மூவர் சந்திப்பு உண்மையோ, கற்பனையோ தெரியவில்லை; எனினும் திருவாய்மொழியின் பெருமை இதனால் நன்கு விளங்குகிறது. மக்களிடையே நாதமுனியால் திருவாய்மொழி பரவிச் செல்வாக்குப் பெற்றது. இதனால் இச்சந்திப்பு கற்பனை செய்யப்பட்டிருக்கலாம். தனிப்பாடல் திரட்டில் இக்கருத்துடைய பாடல்கள் இடம்பெற்றுவிட்டன சடகோபரந்தாதி உரையில் இவற்றை உரையாசிரியர்கள் எடுத்துக் காட்டியுள்ளனர்.93

"நால்வர்சொல் சைவர் வேதம்
நளிர்குரு கூரான் சொல்லைப்
போல்வலார் சிலர்தாம் சொல்லும்
பொருளில் பாகவதர் வேதம்
வால்வளை யுலவும் வீதி
மயிலைவள் ளுவன்சொல் பார்க்கும்
கீழ்மையை யகற்றி மேன்மை
யருளுநல் வேத மாமே"94

என்று புலவர் புராணமுடையாரும் கூறுகிறார்.

## திருவாய்மொழியின் பெருமை

திருக்கை வழக்கம், "வேதம் ஒரு நான்கினையும் மிக்க தமிழ் நாலடியால் ஓதியுரைத்தே ஒளிருங்கை"95 என்று பாராட்டுகிறது. "எண்திசை அறிய இயம்புவேன் ஒண்தமிழ் சடகோபன் அருளையே". 93 என்பது மதுரகவியின் வாக்கு. "வான்திகழும் சோலை" என்று தொடங்கும் தனியனில், "தமிழ் மறையும் ஆயிரமும் ஈன்ற முதல்தாய் சடகோபன், மொய்ப்பால் வளர்த்த இபற்றாய் இராமா

னுசன்'' என்று கூறப்படுகிறது.97 இவற்றிலிருந்து திவ்விய பிரபந்தங்களிலே உடையவர் கொண்டிருந்த ஈடுபாடும் விளங்குகிறது.

## சுதர்சனாச்சாரிய சாத்திரி

சுதர்சனாச்சாரிய சாத்திரி என்பவர் கோவர்த்தன சுவாமியிடம் திவ்வியப் பிரபந்தங்களைப் பற்றிப் பத்து சுலோகங்கள் இயற்றி வெளியிட்டிருக்கிறார். அவற்றின் கருத்து:

''இவ்வுலகில் எண்ணிறந்த நூல்கள் தோன்றியிருந்தாலும் ஆழ்வாருடைய திவ்வியப் பிரபந்தங்களுக்கு வியாக்கியானங்களை அருளிச் செய்த ஆசாரியர்களே உண்மையான பிரம்ம வித்துக்கள். அப்படிப்பட்ட திவ்விய பிரபந்தங்களையும் வியாக்கியானங்களையும் கூறும் ஒரு பிறப்பே பிறப்பு. ஐயோ! நான் தமிழ் மொழிக்கு அந்நியனாய் யமுனைக் கரையிலே பிறந்து கெட்டேனே! ஆனாலும் அந்த நூலின் பொருளை ஒருவாறு கேட்கும் பாக்கியம் பெற்றேன் என்று மகிழ்கிறேன். நாராயணா! கோவர்த்தன சுவாமி திருவடிகளில் சரணம் பெற்ற எனக்கு வீடு பெறுவதில் சந்தேகம் கிடையாது. ஆனாலும் நாராயணா! எனக்கு நீ இப்பிறப்பில் வீடுபேறு கொடுத்தலாகாது என்று உன் திருவடிகளில் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு கெஞ்சுகிறென், என்னை நீ தமிழ் நாட்டில் பிறக்க வைத்து நாலாயிரம் பாடல்களிலும் வல்லவன் என்ற விருதைப் பெறுவித்து, நம்மாழ்வாருடைய பாடல்களை வாயாரக் கதறும்படி பண்ணி, அப்படிப் பத்தெட்டுப் பிறவிகள் கொடுத்த பிறகு தான் என்னை நீ உன் திருவடியில் சேர்த்துக் கொள்ளவேண்டும். நாராயணா! எனக்கு நீ இப்போதே வீடுபேறு கொடுத்து விட்டாயாகில் உபநிஷதத்தையும் பிரம்ம சூத்திரத்தையும் கிழித்தெறிந்துவிட்டு இந்நிலத்திற்குத் திரும்பி வந்து தாமிரவருணி தீர்த்தத்திலும் காவேரிக் கரையிலும் திருப்பெரும்பூதூர் வட்டாரத்திலும் பிறவி எடுத்தே தீருவேன்.98

நம்மாழ்வார் பாடல்களின் பெருமையை இப்பகுதி தெற்றெனக் காட்டுவதாகும்.

## வானமாமலை சின்னகவி சுவாமிகள்

ஒருசமயம், வானமாமலை சின்னகவி சுவாமிகள் வடநாட்டு யாத்திரை சென்றபோது, பாட்னாவில் 'திக்காக்காக்' என்ற இடத்தில் தங்கியிருந்தார். அப்போது அவர் நம்மாழ்வார் பாசுரங்களிலிருந்து விளக்கங்களை இந்தியில் சொற்பொழிவாற்றினார். அதைக் கேட்ட யாவரும் ஆனந்தக்கண்ணீர் சொரிந்தனர். அவர்களுள் தலைவரான ஒருவர் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியாரிடம் கூறிய வார்த்தைகள்:

"வேதங்களாலே தேடப்படும் கண்ணன் போன வழியே கோபியர்கள் பின் தொடர்ந்தார்கள் என்பர். அவர்களுடைய பாததூளி படும் பாங்கில் பிருந்தாவனத்திலுள்ள சிறு செடிகள், கொடிகள் முதலியவற்றில் ஏதேனும் ஒன்றாகப் பிறக்கவேண்டும் என்றும், யமுனைக்கரையில் கண்ணபிரான் திருவடிகளில் மிதித்தேறிய கடம்ப மரமாகவோ, குருந்த மரமாகவோ பிறக்கவேண்டும் என்றும் முன்னை உத்தவர் முதலானோர் பிரார்த்தித்ததாகச் சொல்கிறார்கள். அந்தப் பிறவிகளெல்லாம் எதற்கு? இப்படிப்பட்ட திவ்விய பிரபந்தங்களைக் கேட்கும் பாங்கான பிறவியன்றோ பிறவி".99

## சடகோபரந்தாதி

கம்பர் இயற்றிய சடகோபரந்தாதி நூறு பாடல்களைக்கொண்டது அந்நூலில் கம்பர் நம்மாழ்வாரைப் புகழ்ந்திருப்பதை விட அவருடைய திருவாய்மொழியினை மிகச் சிறப்பாகப் புகழ்ந்து பாடியுள்ளார். திருமாலினுடைய சிறப்புகள் எல்லாவற்றிலும் திருவாய்மொழி அவருக்கு கிடைத்தது மிகப் பெருஞ்சிறப்பு என்கிறார் திருவாய்மொழியை 'ஆராவமுதக் கவியாயிரம்'100 என்கிறார். திருவாய்மொழியின் முன், பிற கவிகள் பொருளற்ற கவிகளே என்கிறார் அவர் 101

"உயிருருக்கும் புக்குணர்வுருக்கும் உடலத்திலுள்ள
செயிருருக் கொண்ட நம் தீங்குருக்கும் திருடித் திருடித்
துயிருருக்கும் நெய்யோடு உண்டா னடிச் சடகோபன் சந்தோ
டயிருருக்கும் பொருநல் குருகூர் எந்தையந் தமிழே"102.

"பாவொடுக்கும் நுண்ணிசை யொடுக்கும் பலவும் பறையும்
நாவொடுக்கும் நல்லறி வொடுக்கும் மற்று நாட்டப்பட்ட
தேவொடுக்கும் பரவாதச் செருவொடுக்கும் குருகூர்
பூவொடுக்கும் அமுதத் திருவாயிரம் போந்தனவே"103

என்னும் பாடல்களும் அதன் பெருமையைத் தெரிவிப்பனவாம். இவை திருவாய்மொழி முத்தமிழ் நூல் என்பதைக் காட்டுகின்றன.

கம்பர் ஆழ்வார்மீது கொண்டுள்ள அளவற்ற பக்தியினால் குருகூரில் குடியிருக்க இயலாவிட்டாலும், அவரது ஊரின் அருகிலேனும் வாழ்தல் வேண்டும் என்று மக்களை அறிவுறுத்துகிறார். "செம்மலர் நோன்தாள்"104 என்னும் சிவஞானபோதச் சூத்திரம் ஈண்டு நினைவு கொள்ளத்தக்கது.

## மாறனகப்பொருளும் திருப்பதிக்கோவையும்

மாறனகப் பொருளின் ஆசிரியர் திருக்குருகைப் பெருமாள் கவிராயர். இவ்வகப்பொருள் இலக்கண நூலிற்கு இலக்கியமாகத் திகழ்வது

அவருடைய திருப்பதிக்கோவை. இவர் சடகோபரை இனிய தமிழோடு இணைத்தே காண்கிறார்.

''நான்மறை முற்ற வோதாதுணர்ந்து உரைசெய்த குருபரனாம் குருகைப்பிரான்''105 என்றும் ''இரையுந்திரைத் திருப்பாற்கடல்நாதன் இனியவுள்ளம் கரையும்படி செந்தமிழ் செய்த மாறன்''106 என்றும் ''தேக்கிய செஞ்சொற் றமிழ்மாறன்''107 என்றும் நம்மாழ்வாரைச் சிறப்பித்து கூறுகிறார் ஆசிரியர்.

## பிற நூல்களில்

'திருவாய்மொழி நூற்றந்தாதி' என்னும் நூலை மணவாள மாமுனிகள் இயற்றியுள்ளார். இது திருவாய்மொழியின் ஒவ்வொரு பதிகத்தின் கருத்தையும் தொகுத்து ஒவ்வொரு வெண்பாவில் அடக்கிக் கூறுகிறது.

திருக்குருகூரில் நம்மாழ்வார் பரம்பரையில் தோன்றிய புலவர்கள் மாறனலங்காரம், மாறன் பாப்பாவினம், மாறன் திருப்பதக் கோவை, மாறனகப்பொருள், நம்மாழ்வார் தாலாட்டு, ஸ்ரீ சடகோப திவ்விய சரித்திரம், குருகூர்ப்பள்ளு, ஆழ்வார்கள் வைபவங்கள், ஸ்ரீபராங்குச நாடகம் முதலிய பல நூல்களை இயற்றியுள்ளார்.108

திரு. வேங்கடத்துறைவான் கவிராயர் 'மாறன் கோவை' என்னும் அரிய நூலொன்றனை இயற்றியுள்ளார். அவர் தம் நூலில், ''நெடுமால் புகழ்மெய்ம்மை அல்லால் பாடாத புகழ் மாறன்109'' என்று நம்மாழ்வாரைச் சிறப்பிக்கிறார்.

'திராவிட வேதோபநிஷத் சங்கதி', 'திராவிட வேதோபநிஷத் தாத்பர்ய ரத்னாவலி' என்னும் இரண்டு வடமொழி நூல்கள் திருவாய்மொழியின் சிறப்பினை எடுத்துக்கூறுவன. சமயத்தமிழ் நூலைச் சிறப்பித்து வடமொழியில் நூல்கள் தோன்றியுள்ளன என்னும் சிறப்பு திருவாய்மொழிக்கு உயர்வு தருவதாகும். திருவாய்மொழியை ஆயிரம் தெலுங்குச் செய்யுளாகவும், ஆயிரம் வடமொழிச் செய்யுளாகவும், பாடிய நூல் 'ஆந்திர கீர்வாண சகஸ்வரம்' என்பதாகும். இவ்வாறு கன்னடத்திலும் செய்யப்பட்டுள்ளது 110

நாதமுனியின் பேரரான யமுனாசாரியார்க்குச் சடகோபரே தாயும் தந்தையும் நண்பனும் செல்வமும் கடவுளுமாவார்.

''சேலேய் கண்ணியரும் பெருஞ் செல்வமும்
நன்மக்களும் மேலைத் தாய்தந்தையும்
அவரே இனியாவரே''111

என்னும் வரிகள் இதனைத் தெரிவிக்கும்.

இராமானுசர் சடகோபரால் ஈர்க்கப்பட்டவர். அவர் திருவாய் மொழி சம்பந்தமாகச் சொற்பொழிவுகள் ஆற்றியுள்ளார். ஸ்ரீபாஷ்யத்தையும் திருவாய்மொழியையும் ஒப்பிடும்போது சடகோபரால் இராமானுசர் எங்ஙனம் செல்வாக்குறப் பெற்றார் என்பதைத் தெளியலாம்.112

சீனசலேசர் என்ற ஆசார்ய பரம்பரையில் வந்த பக்திமான் நாடோறும் திருவாய்மொழி ஓதி வந்தமையால் இவரை அன்பர்கள் 'திருவாய்மொழிப் பிள்ளை' என்றே வழங்கினர்.113

ரங்கராச பட்டர் எழுதிய 'தனியன்' திருவாய்மொழியின் பெருமையைத் தெரிவிக்கிறது. திருவாய்மொழி இந்தியில் சாந்தி நிகேதன் பல்கலைக்கழகத்தில் சீநிவாசராகவாசாரியார் என்பவரால் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது 114 நாடோடிப் பாடலிலும் திருவாய்மொழியினுடைய கருத்துகள் பாடப்பட்டுள்ளன. 'திவ்விய பிரபந்த சார ஓடம்' என்னும் நூல் திருவாய்மொழிப் பாடல்களின் கருத்துக்களைப் பிரதி பலிக்கிறது. பத்துப் பிரிவுகளைக் கொண்ட இந்த நூலில், திருவாய் மொழியின் பத்துப் பதிகங்களின் கருத்துக்கள் ஒன்றன் பின் ஒன்றாக விளக்கப்பட்டுள்ளன. திருவரங்கம் திருமலை ஆனந்தன் பிள்ளை என்பவரால் வெளியிடப்பட்ட இதனை இசையோடு பாடியவர் திருமதி. குஞ்சம்மாள் என்னும் குறிப்பும் காணப்படுகிறது.115

தஞ்சை சரசுவதி மகால் நூலகம் 'திருவாய்மொழி வாசகமாலை' எனும் விவரண சதகத்தினை வெளியிட்டுள்ளது.116 இதனைத் திருக்கோனேரிதாஸ்யை எனும் அம்மையார் எழுதியுள்ளார் இவர் ஒவ்வொரு திருவாய் மொழிப் பதிகத்தினின்றும் முதற்பாட்டையோ, முதற்பாட்டும் மற்றுமொரு பாட்டுமாக இரண்டனை எடுத்தோ, மொத்தம்164 பாடல்களுக்கு அரிய விளக்கங்களைத் தருகிறார். மேலும் அப்பதிகம் முழுமைக்கும் முதற் பாசுரமே கரு என்பதனையும் விளக்குகிறார். இவர் வடக்குத் திருவீதிப் பிள்ளையின் மாணாக்கி.

திருவாய்மொழியை ஆங்கிலத்தில் மொழிபெயர்க்க முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. டி. எஸ். எம் ஹூப்பர் நம்மாழ்வார் பாடல்களுள் சிலவற்றை ஆங்கிலமாக்கித் தந்துள்ளார்.117 அ. சீனிவாச ராகவன் திருவாய்மொழிப் பாடல்கள் சிலவற்றை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளார். இது சாகித்திய அகாதமி வெளியீடு.

## உரைகள்

1. திருக்குருகைப்பிரான் பிள்ளான் என்பவர் முதன் முதலில் ஆறாயிரப்படியாகத் திருவாய்மொழியின் உரை எழுதினார். விஷ்ணு புராணம் ஆறாயிரம் கிரந்தங்களை யுடையது. அங்ஙனமே உரையும் ஆறாயிரம் கிரந்தங்களில் அமைந்தது. (ஒரு கிரந்தம் என்பது ஒற்றும் ஆய்தமும் நீக்கி 32 எழுத்துக்கள் கொண்டது ஆகும்)

2. நஞ்சீயர் 'ஒன்பதினாயிரப்படி' எழுதினார். இவர் தன் குருவிடமிருந்து ஆறாயிறப்படியைத் தெரிந்து விரிவுபடுத்தி எழுதினார். இது ஸ்ரீபாஷ்யத்தோடு ஒத்தது.

3. வாதிகேசரி அழகிய மணவாளஜீயர் பன்னீராயிரம் கிரந்தங்களால் உரை இயற்றினார். இது ஸ்ரீபாகவதத்தோடொத்தது. ஸ்ரீபாகவதம் பன்னீராயிரம் கிரந்தங்களின் தொகையைக் கொண்டு எழுதப் பெற்றது.

4. பெரிய பரகாலஸ்வாமி பதினெட்டாயிரம் கிரந்தங்களால் எழுதினார்.

5. பெரியவாச்சான் பிள்ளை எனும் 'வியாக்கியான சக்கரவர்த்தி இருபத்து நாலாயிரப்படி எழுதினார். வால்மீகி இராமாயணம் 24000 சுலோகங்களைக் கொண்டது இங்கு நினைவு கூரத்தக்கது.

6. நம்பிள்ளை என்பவர் சொல்லியதை வடக்குத் திருவீதிப் பிள்ளை முப்பத்தாறாயிரப்படியாக எழுதினார். சுதர்சனபட்டர் அவர்களால் 36ஆயிரம் கிரந்தங்களால் எழுதப்பட்ட 'ஸ்ருதிபிரகாசிகா' போன்று ஸ்ரீபாஷ்யத்தின் உரையோடு ஒப்புமை உடையது இது.

7. வேதாந்த தேசிகர் 72000 கிரந்தங்களால் திருவாய்மொழிக்கு உரை எழுதினார். இது இன்று கிடைக்கவில்லை

முப்பத்தாறாயிரப்படிக்குச் சீயர் அரும்பதம், அடைய வளைந்தான் அரும்பதம் எனும் குறிப்புரைகளும் உள்ளன. இவர்களுள் பெரியவாச்சான் பிள்ளையே அருளிச்செயலின் எல்லாப்பகுதிகட்கும் உரை இயற்றினார்.

திருவிருத்தத்திற்கு பெரியவாச்சான் பிள்ளை உரையோடு அப்புள்ளை அரும்பதவுரை என்றோர் உரையும் உள்ளது. இதற்குப் பெயர் குறிப்பிடப்படாத வேறொருவர் அரும்பதவுரையும் உள்ளது. இவை நம்மாழ்வார் நூலுக்குப் பெருமை சேர்ப்பன.

இவ்வுரைகள் எல்லாம் மணிப்பிரவாள நடையிலுள்ளன. முத்தும் பவளமும் போன்று வடமொழியும் தமிழ்மொழியும் சமபாதியாகக் கலந்து உரை வகுத்துள்ளனர். உரைவகுத்தவர்களின் பெயர்கள் ஒரு பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது:

> ''பிள்ளான் நஞ்சீயர் பெரியவாச் சான்பிள்ளை
> தெள்ளார் வடக்குத் திருவீதிப் – பிள்ளை
> மணவாள யோகிதிரு வாய்மொழியைக் காத்த
> குணவாளர் என்றுநெஞ்சே கூறு!'' 118

என்பது அது.

## பரிமேலழகர்

திருக்குறளுக்கு உரைவரைந்த பரிமேலழகர் பல இடங்களில் நம்மாழ்வார் பாடல்களை எடுத்துக் காட்டியுள்ளார்.

"பற்றற்ற கண்ணே" என்னும் குறளுரையில்120 பரிமேலழகர் "அற்றது பற்றெனில் உற்றது வீடு"119 என்னும் நம்மாழ்வாரின் பாடலை எடுத்தாண்டுள்ளார்.

"திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே யென்னும்" 121என்ற பாடலை, "படைகுடிகூழமைச்சு" 122 என்று தொடங்கும் குறளுரையில் எடுத்தாண்டுள்ளார்

"ஆராவியற்கை அவாநீப்பின்" 123 என்னும் குறளுரையில், பரிமேலழகர், "நன்றாய் ஞானம் கடந்துபோய், நல்லிந்திரிய மெல்லா மீர்த்து" என்னும் பாடலை எடுத்துக்காட்டியுள்ளார்.124

"ஊரவர் கௌவை எருவாக அன்னைசொல்
நீராக நீளுமிந் நோய்"126

என்னும் குறளை நம்மாழ்வார் உள்ளவாறே திருவாய்மொழிப் பாடல் ஒன்றில் கையாண்டுள்ளார். "ஊரவர் கவ்வை யெருவிட்டு அன்னை சொல் நீர்மடுத்து"125 என்று வருகிறது அப்பாடல்.

## வேதமோதும் குழு

நாலாயிரப் பிரபந்தப் பாடல்களைப் பாடிக்கொண்டு முன்னே பக்தர்குழாம் செல்லப் பின்னே வேதபாராயணக் குழு வருவது எங்கும் காணக்கூடிய ஒன்று. தமிழ்வேதமான திவ்வியப் பிரபந்தங்கள் எம் பெருமானுடைய கலியாண குணங்களையெல்லாம் கூறுகின்றன. ஆனால் வடமொழி வேதங்கள் எம்பெருமானுடைய கல்யாணகுணங் களைச் சொல்ல ஆரம்பித்துச் சொல்லமுடியாமல் பின்னடைந்துவிட்டன எனவேதான் அருளிச்செயல் முன்னேயும், வேதபாராயணம் பின்னேயும் செல்கின்றன.

திருமால் திருவிழாக் கொண்டருளும்போது திருவாய்மொழி யோதுவார் பெருமானுக்கு முன்செல்ல, வடமொழியோதுவார் பின் செல்வது, பெருமாள் தமிழ்மறையை விரும்பி அதற்குப் பின் போவ தாகவும், வடமொழி வேதம் பெருமாளைத் தேடி அவரைப் பின் தொடர்ந்து முறையிடுவதாகவும் கொள்வர்.127

## சடாரி

நம்மாழ்வார் பாடலில் ஒன்றாவது தெரியவில்லையேல் வீடு பேறில்லை என்று ஸ்ரீதேசிகர் சொற்பொழிவாற்றினர். அந்தச் சொற்

மொழியைக் கேட்ட தமிழ்தெரியாத ஒருவர், ''எனக்குத் தமிழ் தெரியாதே'' என்றார் தேசிகரோ '''சடாரி' வைத்தால் போதும்'' என்றார் 128 நம்மாழ்வார், திருமால் திருவடியில் எப்போதும் விளங்கு கின்றார் என்பது வைணவ சமயக்கொள்கை. அதனால் திருமால் திருக் கோயில்களில் அப்பெருமானைச் சேவிக்கச் செல்வோர் முடிமீது அவர் திருவடியாக வைக்கப்படுவதைச் 'சடகோபம்' அல்லது 'சடாரி' என்று வழங்குகின்றனர்.129 சடகோபம், சடாரி என்பன நம்மாழ்வாரின் திருப்பெயர்கள். சட+அரி = சடாரி (வடமொழிப்புணர்ச்சி) சடாரி; தீர்க்கசந்தி). சடாரியைத் தாங்கி அகந்தை எல்லாம் அழிகின்றன 130 கடவுளின் அடியார்க்கு அடியார்கள்தாம் தமக்குத் தலைவர்கள் என்று நம்மாழ்வார் கூறுகிறார். ''அடியார் அடியார்தம் அடியார், அடியார் தமக்கடியார் அடியார்தம் அடியார் அடியோங்களே''.131

நம்மாழ்வார் பாடல்களுள் 'திருவிருத்தம்' என்னும் பகுதி தனிச் சிறப்புடையது.

இது மாணிக்கவாசகர் அருளிய 'திருக்கோவையார்' என்னும் நூலோடு ஒப்பிட்டுக் காணும் அருமையுடையது.

நம்மாழ்வாரின் வரலாற்றையும், அவரது காலம், நூற் பெருமை முதலானவற்றையும் ஆய்ந்தறிந்தது போல, மாணிக்க வாசகர் வரலாற் றையும், அவரது காலம், நூற்பெருமை முதலானவற்றையும் ஆய்ந்தறிதல் இவ்வொப்பீட்டிற்கு இன்றியமையாததாகும்.

## மாணிக்கவாசகர்

## வரலாறும் சிறப்புகளும்

ஆரிய நூல் வைப்புமுறை வேதம், உபநிடதம், ஆகமம் என நின்றாற்போலவே, தேவாரத் திருப்பதிகங்கள் தமிழ் வேதங்களாகவும், திருவாசகம், திருக்கோவையார் என்பன தமிழ் உபநிடதங்களாகவும்' திருமந்திரம் தமிழ் ஆகமமாகவும் ஒன்றற்குப் பின் ஒன்றாக வைத்து முறைப்படுத்தப்பட்டு நிற்கலாயின.132

ஜி.யூ போப்,''வழி படுவதற்குரிய கடவுள், இறவாமை பற்றிய உறுதி, வழிபாட்டிற்கு அழைப்பு இவை தென்னிந்தியாவில் வேண்டி யிருந்தன. இவைகளே தென்னிந்தியாவில் மாணிக்கவாசகரின் பாடல்களில் கண்டனவாகும்''133 என்று கூறியுள்ளார்.

'நாலுபேர் போனவழி போ' என்னும் பழமொழி சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகியோரைச் சுட்டுகிறது. ''ஆன்மாவின் அணி திருக்கோவையார்'' என்கிறார் மறைமலை அடிகள்.134 ஜி.யூ. போப்பை மிகவும் கவர்ந்தது திருவாசகம்.

வாசகர் பாடல்களைச் சேர்த்துக்கொண்டார். மேலும் திருவாசகம் செர்மனில் மொழிபெயர்க்கப் பட்டுள்ளது.

> ''வேதம் பசு அதன்பால் மெய்ஆக மம்நால்வர்
> ஓதும் தமிழ் அதனின் உள்ளுறுநெய் - போதமிகும்
> நெய்யின் உறுசுவையாம் நீர்வெண்ணெய் மெய்கண்டான்
> செய்த தமிழ் நூலின் திறம்''.135

என்னும் தனிப்பாடல் நால்வர் தமிழின் சிறப்பை எடுத்துரைக்கிறது.

திருவாலவாயுடையார் திருவிளையாடல் புராணம், பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற் புராணம், திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம்பிள்ளை அவர்கள் எழுதிய திருப்பெருந்துறைப் புராணம், கடவுண்மாமுனிவர் எழுதிய திருவாதவூரர் புராணம், மாசிலா மணி தேசிகரின் சீடர் எழுதிய திருவுத்தரகோசமங்கைப் புராணம் ஆகியவற்றினின்றும் மாணிக்கவாசகர் வரலாறு கிடைக்கின்றது மாணிக்கவாசகரைப் பற்றிய சில செய்திகள் கடம்பவனபுராணம், கல்லாடம், சுந்தரபாண்டியம் ஆகியவற்றிலும் உள்ளன.

பாண்டியநாட்டில் மதுரையினின்று தென்கிழக்கே இருபத்தைந்து கிலோமீட்டர் தொலைவில் வைகை நதியின் கரையிலிருக்கும் திருவாத ஊரில் அந்தணர் குலத்தில் சம்புபாதசிரதர் என்பாருக்கும் சிவஞானவதி எனும் அம்மையாருக்கும் திருவாதவூரர் தோன்றினார் ஆலாசிய மகாத்மியம், சம்புபாதசிரதர் எனும் பெயரைச் சுந்தரநாதர் என்கிறது. சங்ககாலப் புலவர் கபிலர் இவ்வூரில் தோன்றியவரே. இவரது கல்வி கேள்விகளை அறிந்து இவரைத் தம் முதலமைச்சர் ஆக்கிக்கொண்டான். ஆரிய பூமியிலிருந்து கப்பலில் வந்திறங்கிய குதிரைகளைப் பார்வை யிட்டுத் தேர்ந்தெடுத்து விலைக்கு வாங்கிவரும்படி அரசன் இவரை அனுப்பிவைத்தான்.

மாணிக்கவாசகர் குதிரை வாங்குதற்காகச் சென்று திருப்பெருந் துறையை அடைந்தார். அவ்வூர் இப்போது ஆவுடையார்கோவில் என வழங்கப்பெறுகிறது.136 அங்குள்ள சிவன்கோவிலில் ஒரு குருந்த மரத்தின் கீழ்ச் சிவபிரான் ஆசாரிய மூர்த்தங்கொண்டு சீடர்களுடன் மானுடவுருவந் தாங்கித் தங்கியிருந்தார்.

திருவாதவூரர் அக்கோயிலுக்குச் சென்று ஆசாரியரைக் கண்டு தம்மை ஆட்கொள்ளுமாறு வேண்டினார். ஆசாரியார் கருணைகொண்டு அவர்க்குப் பஞ்சாட்சர உபதேசம் செய்தார். அப்போதுதான் திருவாத வூரர்க்கு மாணிக்கவாசகன் என்னும் பெயரை ஞானாசிரியர் வழங்கினார். பழுதில்லாத சொற்களாகிய மணிகளை அன்பாகிய கயிற்றில் கோத்துப் பாமாலையாக இறைவனுக்குச் சாத்துதலால் இவர்க்கு இப்பெயர் வந்தது இவர்க்குப் 'பெருந்துறைப்பிள்ளை' எனும் பெயரும் வழங்கியது.

திருவாதவூரர் அந்த ஞானாசிரியர் முன்னே தாம் கொணர்ந்த அளவற்ற பொருளைக் காணிக்கையாக வைத்து வணங்கினார். ஆசாரியார் அப்பொருளை மகிழ்வோடு ஏற்றுச் சிவாலயத் திருப்பணிக்குச் செலவழித்தார். மாணிவாசகரும் தாம் வந்த வேலையை முற்றும் மறந்து அங்கேயே தங்கிவிட்டார்.

இதனைப் பாண்டிய மன்னனிடம் சிலர் கூற, அவன் வாதவூரர்க்குக் கடிதமனுப்பினான். வாதவூரர் தம் ஞானாசிரியர் கூறிய வண்ணம் ஆவணித் திங்கள் மூலநாளில் குதிரைகள் வரும் என்று கூறியனுப்பினார். குதிரை வருவதற்கு இரண்டுநாள் முன்னதாக அமைச்சர் ஒருவர் வாதவூரர் சிவனடியார் ஒருவரிடம் பொருளையெல்லாம் கொடுத்துவிட்டார் என்றும், குதிரைகளை வாங்கவில்லை என்றும் கூறினார். இதனை ஒற்றர் மூலமறிந்த மன்னன் தண்டலாளரை அனுப்பி வாதவூரரை வருத்தினான்.

சிவபிரான் இவர் வருத்தத்தை நீக்க எண்ணி, நரிகள் பரிகளாகவும், தேவர்கள் அவற்றை நடத்துபவராகவும் செய்து, தாம் குதிரை வாணிகனாக வேடங்கொண்டு மதுரையை அடைந்தார். அரசன் குதிரைகள் வருவதைக் கண்டு திருவாதவூரரைச் சிறை விடுத்து அவரோடு சென்று குதிரைகளைக் கயிறு மாறிப் பெற்றுக் கொண்டான்.

மறுநாள் ஞாயிறு தோன்றுமுன் அக்குதிரைகள் நரிகளாகிக் குதிரைப் பந்தியிலிருந்த பிற குதிரைகளைக் கடித்துக் கொன்று, ஊரார் அஞ்சுமாறு ஊளையிட்டுக்கொண்டு ஓடிவிட்டன. அரசன் இதனையறிந்து கோபங் கொண்டு ஏவலரையனுப்பித் திருவாதவூரரை வருத்திப் பொருள்வாங்கச் சொன்னான். அவர்கள் வாதவூரரை வெயிலிலே மணலின்மீது நிறுத்தி வாட்டினர்.

சிவபிரான் வைகையில் வெள்ளம் பெருக்கெடுக்கச் செய்தார். மன்னன் வீட்டிற்கோர் ஆள்வந்து வைகைக் கரையெழுப்ப ஆணை பிறப்பித்தான். பிட்டு விற்கும் செம்மனச்செல்வி என்னும் முதியவள் தனக்கு ஆள் கிடைக்காமல் அல்லலுற்றாள். சொக்கேசர் அவளுக்காகக் கூலியாள் வேடந்தரித்துச் சென்றார். வைகைக் கரையில் ஒரு மர நிழலில் படுத்துறங்கினார். முதியவளின் பங்கு அடைபடாததால் அதன் வழியாகப் பாய்ந்த வெள்ளம் மற்றவர்கள் அடைத்த கரையையும் அழிக்கத் தொடங்கியது. இதனை அறிந்த அரசன் அக்கூலியாளைப் பிரம்பால் அடிக்க, அவ்வடி அனைத்துயிர் மேலும் பட்டது. அக்கூலியாள் ஒரு கூடை மணலை அவருக்கென ஒதுக்கிய அக்கரையில் கொட்ட அது அடைபட்டது.

இவையனைத்தும் அறிந்த அவ்வரசன் வாதவூரரை அழைத்துத் தரணியாளச் சொன்னான். அவர் அதனை மறுத்து அரசனிடம் பெருந்துறை செல்ல அனுமதி வேண்டினார். பாண்டியனும் விடைதர, வாதவூரர் திருப்பெருந்துறை அடைந்தார். அங்குத் திருவாசகத்தின் பல பதிகங்களை அருளிச்செய்தார். பின் உத்தரகோசமங்கை சென்று நீத்தல் விண்ணப்பம் அருளினார். திருவாரூர் சென்று திருப்புலம்பல் பாடினார் சீர்காழியில் பிடித்த பத்து அருளினார். திருவண்ணாமலை சென்று திருவெம்பாவை, திருவம்மானை ஆகியவற்றைப் பாடியருளினார் திருக்கழுக்குன்றம் சென்று பதிகம் பாடினார். பின்னர்ச் சிதம்பரம் சென்று திருவாசகத்தின் பல பதிகங்களைப் பாடினார்.

இலங்கை சென்ற சிவனடியார் ஒருவர் பொன்னம்பலம் பற்றிப் பெருமையாக அந்நாட்டரசரிடம் கூற, அங்கிருந்த பௌத்தகுரு, ''தில்லைசென்று வாது செய்து நடராசர் கோயிலைப் புத்தர் கோயிலாக மாற்றுவேன்'' என்று சூளுரைத்துச் சிதம்பரம் வந்தார். உடன், இலங்கை அரசனும் தம் மகளான ஊமைப்பெண்ணை அழைத்து வந்தான். சிவபிரான் கட்டளைப்படி மாணிக்கவாசகர் பௌத்த குருவை வாதில் வென்றார். இலங்கை அரசன் மகளின் ஊமைத் தனத்தை நீக்கிப் பௌத்தகுருவோடு அவளையே பேசச் செய்தார் மாணிக்கவாசகர். திருவாசகத்திலுள்ள திருச்சாழல் பதிகம் இலங்கை இளவரசி வாதில் பதில் கூறுவதாக அமைத்துப் பாடியதாகும் 187

சிவபிரான் வேதியர் உருத்தாங்கி மணிவாசகரிடம் போந்து, ''உம் பரந்த புகழைக்கேட்டும் பௌத்தரை வாதில் வென்றதையும் நினைந்து உம்மிடம் வந்தேன். உம் பாடல்களை எழுதிக்கொள்ள வேண்டும்'' என்று கூற, மணிவாசகரும் உடன்பட்டார். அனைத்தையும் ஏட்டில் எழுதிவந்த வேதியர், ''பாவை பாடிய வாயால் கோவை பாடுக'' என, அவரும் பாடல்களைச் சொல்லிவரக் கோவையினை எழுதி, அவற்றைக் கட்டிக்கொண்டு சென்றார். ''வாதவூரர் சொல்ல எழுதிய இப்புத்தகம் அழகிய திருச்சிற்றம்பலம் உடையார் கையெழுத்து'' என்று திருக்கோவையார் முடிந்த இடத்தில் மைக்காப்புச் செய்து அதனைப் பொன்னம்பலத்தில் வாயிற்படியில் வைத்து மறைந்தார். அதனைப் பூசை செய்ய வந்த அர்ச்சகர் கண்டு, சான்றோர்களிடம் கூற, அவர்கள், ''இந்நூலின் பொருளைத் திருவாதவூரரிடம் போய்க் கேட்போம்'' என்று அவரிடம் சென்று கூறினார்கள். திருவாதவூரர், ''கனகசபைக்கு எதிர் சென்று பொருள்சொல்வோம்'' என, யாவரும் கனகசபைமுன் சென்றனர். திருவாதவூரர் அங்கு, ''இத்தமிழ் நூலிற்குப் பொருள் இவரே'' என்று நடராசரைச் சுட்டிக்காட்டி

எல்லோருங்காண அப்போதே மறைந்தார். கடவுளும் அவரது பக்தியின் பெருமையைக் காட்ட அவரைத் தம்மிடம் சேர்த்துக் கொண்டார்.

## திருவாசகத்தில் அகச்சான்று

மாணிக்கவாசகருக்கு மனைவி மக்கள் உண்டா என்பது அவர் வரலாற்றில் அறியக் கூடவில்லை. மறைமலையடிகள் திருவாசகத்தில் உள்ள அகச்சான்றுகளால் அவர் குடும்ப வாழ்க்கையில் இருந்திருக்க வேண்டும் என்கிறார் அவர் மணவாழ்க்கை நடத்தியதாகத் தெளிவாக யாண்டும் கூறப்படவில்லை

> ''முடித்த வாறு மென்றனக்கே
> தக்க தேமுன் னடியாரைப்
> பிடித்த வாறுஞ் சோராமல்
> சோரனேனிங் கொருத்திவாய்
>
> துடித்த வாறுந் துகிலிறையே
> சோர்ந்த வாறு முகங்குறுவேர்
> பொடித்த வாறு மிவையுணாந்து
> கேடென் றனக்கே சூழ்ந்தேனே''138

என்னும் பாட்டில் ஒருத்தி என்றது அடிகளின் மனைவியாரை என்று சிலர் கருதுவர். திருவருள் பெற்ற பின் தம்மைத் தேடிவந்த தேவியார்க்குக் கடவுள்நிலை உணர்த்துதற்பொருட்டு நிட்டை கலைந்தமையே தமக்குக் கேடு சூழ்ந்ததாகக் கருதினரென்பர். திருவருள் பெறுமுன் மணவாழ்க்கை நடத்தித் திருவருள் பெற்ற பின் பேரின்ப வாழ்க்கைத் துணைவியாகத் தமது தேவியைக் கொண்டிருத்தலால் போந்த இழுக்கு யாதுமில்லை. இறைவனைக் கண்டு ஞானம் பெறுவதற்கு முன் உலக வாழ்க்கையில் அடிகள் ஈடுபட்டது போன்ற குறிப்புக்கள் திருவாசகத்தின்கண் உள்ளன.139

## மாணிக்கவாசகர் காலம்

மாணிக்கவாசகர் காலம் பற்றி ஆராய்ச்சிகள் பல நடைபெற்று உள்ளன. அவர் காலத்தை முதல் நூற்றாண்டு தொடங்கிப் பதின் மூன்றாம் நூற்றாண்டுவரை பலவாறாக வரையறை செய்து கூறுவர்.140

திருமலைக்கொழுந்து பிள்ளை, வி கோ.சூரியநாராயண சாஸ்திரியார், தி. பொன்னம்பலம் பிள்ளை ஆகியோர் மாணிக்கவாசகர் காலம் கி.பி. முதல் அல்லது இரண்டாம் நூற்றாண்டு என்பர்.

திருச்சிற்றம்பலம்பிள்ளை கி.பி. இரண்டாம் நூற்றாண்டு என்று கூறுவர்.

மறைமலையடிகள், ஜி. வன்மீகநாதன், கி.வா. ஜகந்நாதன் ஆகியோர் கி.பி. மூன்றாம் நூற்றாண்டு என்று வரையறை செய்வர்.

திருமந்திரமணி துடிசைகிழார் அ. சிதம்பரனார் கி.பி. 250 முதல் கி.பி 282 வரை என்று அறுதியிடுவர்

டி.எம்.பி. மகாதேவன் கி.பி. மூன்றாம் நூற்றாண்டுக்கும் ஆறாம் நூற்றாண்டுக்கும் இடையில் என்று கூறுவர்.

கா. சுப்பிரமணிய பிள்ளை மாணிக்கவாசகர் கி.பி. நான்காம் நூற்றாணடிற்குச் சற்று முற்பட்டவர் என்பர்.

சங்ககாலச் சோழர் வரலாறு எழுதிய கே.ஜி. சேஷ ஐயர் இவரது காலம் கி.பி. நான்காம் நூற்றாண்டின் இடைப்பகுதி என்பர்.

திவான்பகதூர் கே எஸ். ராமசாமி சாஸ்திரியார் கி.பி. நான்காம் அல்லது ஐந்தாம் நூற்றாண்டே அவரது காலம் என்று கூறுவர். எஸ். நடேசப் பிள்ளை கி.பி. ஆறாம் நூற்றாண்டின் முற்பகுதி என்பர்.

கே.ஏ. நீலகண்ட சாஸ்திரியார் மாணிக்கவாசகர் தேவார காலத்திற்கு முன்தோன்றியவர் என்றும, அவரது காலம் கி.பி. ஏழாம் நூற்றாண்டிற்கு முற்பட்டது என்றும் வரையறை செய்வர்.

சிவக்கவிமணி சி.கே. சுப்பிரமணிய முதலியார் கி.பி. ஏழாம் நூற்றாண்டின் இடைப்பட்ட பகுதி என்பர்.

மெக்கென்ஸி நூல் தொகுதி பட்டிகை ஆசிரியர் வில்சன் மாணிக்க வாசகரின் காலத்தை கி.பி. ஏழு அல்லது எட்டாம் நூற்றாண்டு என்பர்.

கௌடி என்னும் பாதிரியார் மாணிக்கவாசகர் கி.பி. எட்டு-பத்தாம் நூற்றாண்டின் இடைப்பட்ட காலத்தவர் என்பர்,

தேசிய மாநாடு ஆய்வாளர் பி.எஸ். இந்திரா அவரது காலம் கி.பி. 875 அல்லது கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் முதற்பகுதி என்பர்.

தி.வை. சதாசிவ பண்டாரத்தாரும், புத்தர் வரலாற்று ஆசிரியர் நெல்சனும் மாணிக்கவாசகர் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்தவராகக் குறிப்பிடுவர்.

கே.கே. பிள்ளை அவரது காலம் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் முதல்பகுதி என்று கூறுவர்.

கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளையும் ஏ. வி. சுப்பிரமணிய அய்யரும் மாணிக்கவாசகர் கி.பி ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதி என்பர்.

பி.ஸ்ரீ. அவரது காலம் ஒன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதிக்கும், பத்தாம் நூற்றாண்டின் இறுதிப்பகுதிக்கும் இடையில் என்று வரையறை செய்வர்.

சென்னை உயர்நீதிமன்ற நீதிபதியாக விளங்கிய இன்னிஸ், எம். சீனிவாச ஐயங்கார், எஸ். அனவரதவிநாயகம்பிள்ளை, கே.எஸ். சீனிவாச பிள்ளை, எஸ். வையாபுரி பிள்ளை, டி பி. பழநியப்ப பிள்ளை, ஜுலியன் வின்சன் கா. நமச்சிவாயனார், ஔவை சு. துரை சாமி பிள்ளை ஆகியோர் மாணிக்கவாசகரின் காலம் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டே என்று அறுதியிட்டுக் கூறுவர்.

ஜி.யூ. போப் பத்தாம் நூற்றாண்டின் தொடக்கமே மாணிக்க வாசகரது காலம் என்பர்.

டி.ஏ. கோபிநாதராவும், கோ. சுந்தரமூர்த்தியும் அதே கருத்தை வலியுறுத்துவர்.

ரெயின்ஹோல்ட் ரோஸ்ட் என்பவர் பிரித்தானிகா ஆங்கிலக் கலைக்களஞ்சியத்தில் மாணிக்கவாசகரது காலத்தைக் கி.பி. 13 அல்லது 14ஆம் நூற்றாண்டு என்று குறிப்பிடுவர்.

இவ்வாறு மாணிக்கவாசகர் காலத்தை அறிஞர் பலரும்வெவ்வேறு விதமாக வரையறுத்துக் கூறுவர்.

மாணிக்கவாசகர் காலத்தை வரையறுத்துக் கூறியவர்களுள் இரண்டு சாரார் குறிப்பிடத்தக்கவர்கள். அவர் மூன்றாம் நூற்றாண்டைச் சார்ந்தவர் என்று குறிப்பிடுவர் ஒரு சாரார். 'அவர் ஒன்பதாம் நூற்றாண்டைச் சார்ந்தவர் என்று குறிப்பிடுவர் மற்றொரு சாரார். இனி ஒவ்வொரு சார்பாளர் கருத்தினைக் காணலாம்.

## ஜி. வன்மீகநாதன் கருத்து

சாகித்திய அகாடமி வெளியீடான 'மாணிக்கவாசகர்' என்னும் ஆங்கில நூலை எழுதியவர் ஜி. வன்மீகநாதன். இதில் மறைமலை அடிகள் கூறிய கி.பி. மூன்றாம் நூற்றாண்டு என்பதை மாணிக்கவாசகர் வாழ்ந்த காலமாக ஏற்றுக்கொண்டு வன்மீகநாதன் தம் கருத்துகளை விளக்குகிறார்.

மாணிக்கவாசகர் காலம் பற்றிக் கி.பி. முதல் நூற்றாண்டிலிருந்து கி.பி. 11-ஆம் நூற்றாண்டுவரை ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். மறைமலையடிகள் இவர் காலத்தைக் கி.பி மூன்றாம் நூற்றாண்டு என்கிறார். கி.வா. ஜகந்நாதன் உட்பட்ட ஆராய்ச்சியாளர்கள் பலர் இதனை ஏற்றுக்கொள்கின்றனர். அப்பர் சுவாமிகள் (81 ஆண்டுகள் வாழ்ந்திருந்தவர்; மற்றும் கி.பி. ஆறாம் நூற்றாண்டின் இறுதிப்பகுதியிலும் கி.பி ஏழாம் நூற்றாண்டின் முதலிலும் வாழ்ந்த வர்) தம் பாடலில் நரியைப் பரியாக்கிய தன்மையையும் ("நரியைக் குதிரை செய்வானும் நரகரைத் தேவு செய்வானும்" நான்காம திருமுறை, திருவாரூர்ப் பதிகம், பாடல்2) சிவபிரான் கூலியாளாக வந்து வைகையில் வெள்ளமெடுத்தபோது மண்கொட்டிய செயலையும் கூறுகிறார். இவ்விரு செயல்களும் மாணிக்கவாசகர் காலத்தில் நடந்தவையே. இவற்றை மாணிக்கவாசகர் வாழ்க் கையின் நிகழ்ச்சிகளாகக் கொள்ளாமல் தள்ளி விடுவதும் பொது வாகச் சொன்னவைகளாகக் கொள்வதும் ஏற்றுக்கொள்ளத் தக்கவையல்ல. மாணிக்கவாசகர் காலம் கி.பி 9-ஆம் நூற்றாண்டு என்பவர்கள் மூன்று சமய குரவர்களுக்கு முன்னர் மாணிக்கவாசகர் வாழ்ந்திருந்தால சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருத்தொண்டத் தொகையில் சேர்த்துப் பாடியிருக்க மாட்டாரா என்று வினவு கின்றனர். இதற்குக் கீழ்வருமாறு பதில் கூறலாம் :

தன் காலத்துக்கு முன்னிருக்கும் சைவநாயன்மார்களையெல்லாம் தொகுத்துக்கூற அவர் முயலவில்லை அவர்க்கு அந்த நேரத்தில் மனத்தில் நினைவுக்கு வந்தவர்களை மட்டுமே கூறினார். மேலும் தமிழ்நாட்டிலுள்ள நாயன்மார்கள் எல்லோரையும் பற்றி அவர் அறியவில்லை. அவர் பதினெட்டாண்டுகள் மட்டுமே வாழ்ந்து இருந்தார். இந்தக் குறுகிய காலத்திற்குள் அவர்க்கு நிரம்பத் தொல்லைகள் இருந்தன. இரண்டு பெண்டாட்டிக்காரராக இருந்த போதும் முதல் திருமணத்தின்போதும், மற்றும் கண்களை இழந்த போதும் பல தொல்லைகளைத் தாங்கியதால் மனத்தில் அவ் வெண்ணமே நிலைத்திருந்தது. திருஞானசம்பந்தரைப் போன்றும் திருநாவுக்கரசரைப் போன்றும் அவர் நாட்டைப் பரந்த அளவில் சுற்றவில்லை. பாண்டி நன்னாட்டின் நான்கு நாயன்மார்களைத் தவிர வேறு ஒருவரையும் அவர் பாடவில்லை. அவர்கள் யாவர் எனின் ஓரரசன், அவன் மனைவி, அவன் அமைச்சன் (கூன் பாண்டியன், மங்கையர்க்கரசி, குலச்சிறையார்), மற்றும் அவ் வரசனின் முன்னோன். இச்செய்தியும் திருஞானசம்பந்தர் வரலாறு

இதனோடு பின்னிப் பிணைந்ததால் கூறியுள்ளார், மற்றும் அவ்வரசனின் முன்னோர் பற்றியது தெரிந்த புராணச் செய்தியே. அவர் காலத்திலேயே பாண்டி நன்னாட்டின் வேறு நாயன்மாரைத் தெரியாதவர், கி பி. மூன்றாம் நூற்றாண்டில் வாழ்ந்த மாணிக்க வாசகரைப் பற்றி அறிந்திருக்க முடியாது.

ஒன்பதாம் நூற்றாண்டு என்று கூறுபவர்கள் மாணிக்கவாசகர் திருக்கோவையாரின் வரகுணபாண்டியனைப் பற்றிக் கூறியுள்ளார் என்று கொண்டு அவ்வரகுண பாண்டியன் கி பி. 792இலிருந்து 805 வரை அரசாட்சி செய்ததால் அந்தக் காலத்தில் வாழ்ந்தவராக ஆக்குகின்றனர். இது மிகவும் தவறுடைத்து.

இங்கிலாந்தில் எட்டு ஹென்றிகளும் எட்டு எட்வர்டுகளும் இருந்தது போலத் தமிழ்நாட்டில் ஒன்பது நக்கீரர்களும், அவ்வையார் பலரும, அகத்தியர் அநேகரும் இருந்தனர். அங்ஙனமே. வரகுண பாண்டியர்களும் பலர் இருந்திருக்கலாம். ஹென்ரி, எட்வர்டுகளைக் கணிக்கக் கிறித்துவ சகாப்தத்தைக் குறிப்பது போலத் தமிழ் சகாப்தத்தைக் குறிக்கத் தமிழர் எதுவும் வைத்துக் கொள்ளவில்லை எனவே இதில் பல பக்கங்களைச் செலவிடுவதில் பயனொன்றும் இல்லை பழமை என்பதால் மட்டுமே கவிஞர்களோ, அடியார்களோ, ஓவியர்களோ, நூல்களோ பெருமை பெற்று விடுவதில்லை. எனவே, அவர் வாழ்ந்தது எந்தக் காலம் என்பதைவிட அவர் என்ன கூறினார்? நமக்கு என்ன கற்பித்தார்? என்பதே முக்கியமானது 141

மாணிக்கவாசகர் ஒன்பதாம் நூற்றாண்டினர் என்னும் கருத்தினை மறுத்து. அவர் மூன்றாம் நூற்றாண்டினரே என்பதை வன்மீகநாதன் வலியுறுத்தியுள்ளார்.

கா. நமச்சிவாயனார், மாணிக்கவாசகர் ஒன்பதாம் நூற்றாண்டினர் என்பதை விளக்குகிறார் :

திருக்கோவையாரின் துறையடைவுகளை உள்ளுறையாகக் கொண்டு கல்லாடனார் தம் நூலினை யாத்தனரெனின் மணிவாசகர் கல்லாடனார்க்கு முற்பட்டவர் என்பது பெறப்படும். சிலர், மணிவாசகர் திருத்தொண்டத் தொகையுட் கூறப்படாமையின் அவர் சுந்தரர்க்கும் பிற்பட்டவர் என்று கொண்டு மணிவாசகர் சற்றேறக் குறையக் கிறித்து சகாப்தம் ஒன்பதாம் நூற்றாண்டில் இருந்தனர் என்கின்றனர் (ஸ்ரீமான் கோபிநாதராவ் அவர்களை உள்ளிட்டோர்) சிலர் பொய்யடிமையில்லாத புலவர் என்பது மாணிக்கவாசகரையே குறிக்கற்பாலது, நம்பியாண்டார் நம்பிகள் அதற்குச் சங்கப்புலவருள் கபிலர், பரணர், நக்கீரர் ஆகிய மூவரையும் முரண்படக் காட்டினர்

என்பது முதலிய அடைவுகளைக் காட்டி மணிவாசகர் சுந்தரர்க்கு முற்காலத்தவராதலே யன்றி. 'நரியைக் குதிரை செய்வாலும்' என அப்பர் அருளிய மறைமொழியை வெளியாக்கி, வாசகர் சம்பந்தர்க்கு முற்பட்டவர் என்றும் கூறுவர். (ஸ்ரீமான் கே.ஜி சேஷ ஐயர் அவர்களை உள்ளிட்டோர்), மற்றும் சிலர் மணிவாசகர் சம்பந்தருக்கு முற்பட்டவர் என்பதில் சற்றும் ஐயமில்லை. அவர் வீர சைவராயினமை பற்றிச் சுந்தரர் அவரைத் திருத்தொண்டத் தொகையுள் கூறாதொழிந்தனர் என்ப மணிவாசகர் வீர சைவரே என்னலாமெனின் வீர சைவர்கள் அவரை அடியார் தொகையுள் கொண்டிலராதலின் அது முரண்படுமாறு காண்க

இது நிற்க, கல்லாடம் ஒன்றனையே ஆதாரமாகக் கொண்டு மணிவாசகர் கடைச்சங்கக் காலத்திற்கு முற்பட்டவர் என்பதில் முரண்படுமாறு என்னையோவெனின், அற்றாயின் திருக்கோவையார் சங்க மருவிய நூலாயின் இறையனார் அகப்பொருளுக்கு உரை கண்டருளிய நக்கீரர் மேற்கோளாக இதனை எடுத்து ஆளாதிருத்தல் கூடுமோ என்னும் ஐயப்பாடு நிகழ்கிறது. டாக்டர் ஜி.யூ போப்பையர் அவர்களும் மணிவாசகர் 9ஆம் நூற்றாண்டில் வதிந்தவரென மதிக்கின்றனர்.142

மேற்கண்டவாறு கா. நமச்சிவாயனார் பல்வேறு கருத்துக்களை ஆய்ந்து ஒன்பதாம் நூற்றாண்டு என்பதில் போப்பையரோடு உடன்படுகிறார்.

## மாணிக்கவாசகர் : ஒன்பதாம் நூற்றாண்டினர்

1) நெல்சன் தம் மதுரைச் சரித்திரத்தில (Madura Manual) தமிழ் நாட்டிலிருந்து சைவர்களுள் ஒருவர் ஈழநாட்டிற்குக் கி.பி 819இல் சென்று ஆங்குள்ள பௌத்த அரசனைச் சைவ சமயத்திற்குத் திருப்பினாரென 'ராஜரத்நாகரி' என்னும நூல் கூறுகிறதென்றும், இவ்வாசாரியர் மாணிக்கவாசக சுவாமிகளாதல் வேண்டும் என்று கூறி, அவர் காலம் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியாகும் என்றும கூறுகிறார்.143

2) திருக்கோவையாரில் வரகுண பாண்டியன் பற்றிய வரலாற்றுக் குறிப்பு வருகிறது பாடப்பட்டவன் இரண்டாம் வரகுணன் இவன் சிறந்த சிவபக்தன் இவன் கி.பி. 9ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஆட்சிபுரிந்தவன். இவன் ஆட்சிசெய்த காலம் கி.பி. 862-880. எனவே, மணிவாசகர் இக்காலத்தவர் எனலாம்.144

3) திருக்கோவையார் 86ஆம் பாட்டில் நடராசர் கோவிலில் கோவிந்தராசர் இருப்பதைப் பற்றிப் பாடுகிறார். வரலாற்றா சிரியர்கள் இதனை நந்திவர்மன் ஏற்படுத்தினான் என்பர். இவன் காலம் கி.பி. எட்டாம் நூற்றாண்டு தேவாரத்தில் நடராசர் அருகே கோவிந்தராசர் இருப்பதாகப் பாடலே இல்லை. இதனாலும் மாணிக்கவாசகர் ஒன்பதாம் நூற்றாண்டினர் என்னும் கருத்து வலுப்பெறுகிறது 145

4) சங்கரரால் பரவச் செய்யப்பெற்ற மாயாவாதத்தின் குறிப்புக்கள் மாணிக்கவாசகர் பாடல்களில் உள்ளன; தேவார ஆசிரியர்கள் பாடல்களிலில்லை. சங்கரர் காலம் கி.பி. 788-822 என அறிஞர்கள் கூறுகின்றனர், மாக்ஸ் முலலர், கீத் என்போர் கி.பி. எட்டாம் நூற்றாண்டுக்கும் ஒன்பதாம் நூற்றாண்டுக்கும் இடைப்பட்ட காலத்தில் வாழ்ந்தவர் சங்கரர் என்பர். அதனைக் காம்போச நாட்டுக் கல்வெட்டு உறுதி செய்வதாகப் பேராசிரியர் கே ஏ நீலகண்ட சாஸ்திரியார் கூறுவர். இதனால் மாணிக்கவாசகர் காலம் ஒன்பதாம் நூற்றாண்டாகலாம்.146

இம்மாயா வாதத்தைக் கி.பி. 12, 13ஆம் நூற்றாண்டுகளில் வாழ்ந்த சந்தானாசாரியர்கள் கண்டித்துள்ளனர்.147 எனவே, சங்கரர் காலம் கி பி 9ஆம் நூற்றாண்டின் முற்பகுதி எனலாம. அதனால் மணி வாசகர் காலம் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் இடைப்பட்ட பகுதி யாகவோ அன்றிப் பிற்பகுதியாகவோ இருக்கலாம்.148

5) மணிவாசகர் ஈழத்துப் பௌத்தரை வாதில் வென்ற செய்தி வாதவூர்த் தலபுராணத்தும் ஈழநாட்டு ராஜரத்நாகரி எனும் நூலிலும் கூறப்பட்டுள்ளது. இந்நிகழ்ச்சி கி.பி. 869இல் நடந்ததாதல் வேண்டும்.149

6) பெரியாழ்வார், ஆண்டாள், நம்மாழ்வார், மாணிக்கவாசகர் ஆகிய நால்வர் பாடல்களும் கருத்திலும் மொழியிலும் நடையிலும் அமைப்பிலும் ஏறத்தாழ ஒத்திருத்தலால் இந்நால்வரும் ஏறத்தாழச் சமகாலத்தவர் எனக் கூறலாம். இவர்களுள் முதல் மூன்று ஆழ்வார்களும் ஏறத்தாழக் கி பி. 850க்கும் 925க்கும் இடைப்பட்டவர். எனவே, சுருங்கக்கூறின், மாணிக்கவாசகர் பெரியாழ்வாரும் ஆண்டாளும் வாழ்ந்த காலத்தவராக இருந்தவர் எனக் கொள்ளுதல் பொருத்தமாகும்.150

இவற்றுள் மாணிக்கவாசகர் தேவார ஆசிரியர்கள் மூவர்க்கும் முற்பட்டவர் என்பவர் கூற்றுக்களைத் தக்க காரணங்கள் காட்டி மறுத்துக், கி.பி. 9ஆம் நூற்றாண்டே மணிவாசகர் காலமாக இருத்தல் வேண்டுமென்று எழுதியவருள் தஞ்சை சீனிவாச பிள்ளை, எம்.எஸ். பூரணலிங்கம் பிள்ளை, எம். சீனிவாச ஐயங்கார், டி.பி. பழநியப்ப பிள்ளை, ஔவை சு. துரைசாமி பிள்ளை முதலானோர் சிறப்பிடம் பெறத்தக்கவராவர்கள்.151

மேலே கூறப்பட்ட ஆய்வாளர்களுள் மிகப்பலர் மாணிக்கவாசகர் காலம் ஒன்பதாம் நூற்றாண்டு என்னும் கருத்துடையவர் ஆவர். எனவே, கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டே மாணிக்கவாசகர் வாழ்ந்த காலம் எனல்வேண்டும். இதுவே இவ்வாய்வாளர் முடிவுமாகும்.

## மாணிக்கவாசகர் முற்பிறப்பும் பிறவும்

சிவகணத் தலைவரொருவர் மாணிக்கவாசகராகப் பிறந்தருளினாரெனத் திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம் குறிப்பிடுகிறது.152-1 பரஞ்சோதியார் திருவிளையாடற் புராணத்தில் இக்குறிப்பில்லை. கடவுண்மாமுனிவர் இயற்றிய திருவாதவூரர் புராணத்திலும் பூர்வ பிறப்புப் பற்றிய குறிப்புக் காணப்பெறவில்லை. திருப்பெருந்துறைப் புராணத்தில் இவர்தம் பிறப்புப் பற்றிய குறிப்பில் இவர் சிவகணநாதர் ஆயிரவர்களுள் ஒருவர் என்று அறியக் கிடக்கிறது.

இவர்கள் ஒருநாள் சிவபெருமானை வணங்கி நின்று ஆகமப் பொருளை அறிவுறுத்தியருளுமாறு வேண்ட, அவர்தம் விருப்பத்தை நிறைவேற்றத் திருவுளம்கொண்ட சிவபெருமான் திருவுத்தரகோசமங்கையில் அந்தணராகி அவர்கட்கு ஆகமப் பொருளை உபதேசித்துக் கொண்டிருக்கையில் வானோர் தலைவனாகிய இந்திரன் பலவகை அணிநலம் திகழத் திருவுலாப் போதரக் கணநாதர்களுள் ஒருவர் அவ்வுலாக் காட்சியில் கருத்தைச் செலுத்த, இதனைக் கண்ட சிவபெருமான் கணநாதராகிய அவரை நோக்கி, "பிள்ளாய்! நீ நாம் கூறிய உபதேசப் பொருளை மறந்து இந்திரனது உலாக்காட்சியில் கருத்தைச் செலுத்தினமையால் நீ இந்நிலவுலகிற் பிறந்து விரும்பிய செல்வமெல்லாம் எய்தப் பெற்றுப் பின் நம்மை அடைவாயாக" எனப் பணிக்கக் கணநாதரும் தமது இழிநிலைக்கு வருந்தி அமுதரற்ற, அருளாளராகிய இறைவனும், "பிள்ளாய். அஞ்சற்க! நாமே குருவாக வந்து நின்னை யாட்கொள்வோம்" என ஆறுதல் கூறித் தேற்றியருள, இறைவன் பணித்த வண்ணம் சிவகணநாதராகிய அவ்வடியவர் திருவாதவூரராகப் பிறந

தார் என்ற வரலாறு காணப்பெறுகிறது.152-2 திருவாதவூரர் புராணம் பிட்டு விற்றுண்டு வாழ்பவளைச் செம்மனச்செல்வி என்கிறது; பரஞ் சோதியார் திருவிளையாடற் புராணம் அவளை 'வந்தி' என்கிறது. திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணம் பெயர் குறிப்பிடாது செல்கிறது.

பரஞ்சோதி திருவிளையாடற் புராணம் அரிமர்த்தன பாண்டியனே கூலியாளை அடித்தான் என்கிறது; மற்றவையெல்லாம் அரசன் அனுமதி பெற்ற அதிகாரிகள் அடித்தனர் என்கின்றன. மறைமலையடிகள் பரஞ் சோதியார் கூறுவதே ஏற்கத்தக்கது என்கிறார். பரஞ்சோதியார் திருவிளையாடல் புராணம் முழுமையும் கூறிச்செல்ல வில்லை. திருவாத வூரர் புராணம் மட்டும் முழுமையாக எதையும் விடாமல் இறுதிவரை தொடர்ச்சியாகக் கூறுகிறது.

## மாணிக்கவாசகர் பெருமை

ஜி.யூ. போப் திருவாசகத்திலிருந்து 51 கவிதைகளைத் தேர்ந் தெடுத்து ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார். அற்புதங்கள் நிறைந்த மாணிக்கவாசகர் வரலாற்றை எழுதிக் கவிதையுடன் சேர்த்து வெளி யிட்டார் தமது எண்பதாவது வயதில் அதற்கு முன்னுரை எழுதினார். ஜி யூ போப்பின் ஆங்கிலத் திருவாசக மொழிபெயர்ப்பு 1900ஆம் ஆண்டில் ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகப் பதிப்பாக வெளிவந்தது. 8327 கவிதை வரிகளைக் கொண்ட திருவாசக மொழிபெயர்ப்பு விளக்க வுரையால் பெருநூலாகியது. சென்னைப் பல்கலைக்கழகம் இதனை 1960ஆம் ஆண்டில் வெளியிட்டது.153

'இலக்கணக் கொத்து' நூலாசிரியர் சுவாமிநாத தேசிகர் மணி வாசகரை 'அறிவாற் சிவனே' என்று கூறுகிறார்.154 பட்டினத்தடிகள் தம் திருவிடைமருதூர் மும்மணிக்கோவையில் ''வித்தகப்பாடல் முத் திறத்தடியரும் திருந்திய அன்பில் பெருந்துறைப் பிள்ளையும்'' என்று மாணிக்கவாசகரை மூவரோடு சேர்த்து வாழ்த்தினார்.155 இங்கு மணி வாசகரை ஆசிரியர் 'பெருந்துறைப்பிள்ளை' என அழைத்தலைக் காணலாம் நம்பியாண்டார் நம்பிகள் சைவத் திருமுறைகள் வகுத்த போது திருவாசகத்தை எட்டாந் திருமுறையாக வைத்தார். எனவே, திருக்கோவையாரும் அதனுள் அடங்கும். கற்பனைக் களஞ்சியம் சிவப்பிரகாச சுவாமிகள் நால்வர் நான்மணிமாலையில் மணிவாசகரைப் புகழ்ந்த விதம் காணத்தக்கது. அது வேதத்திலும் சிறந்தது; எவரும் கற்கலாம்; ஆதலின் அது பொற்கலம் நிகராகும்; அதனை ஓதுவோர் மனம் கரைந்து அன்பராகுவர் என்றெல்லாம் அவர் கூறுவர். திருக்

கோவையாரின் உரையாசிரியரான பேராசிரியர் இதனை, ''ஆகம நூலின் வழி நுதலிய ஞானயோக நுண்பொருளுடையது'',(41-2) என ஓதுகின்றனர் குமரகுருபர முனிவர், 'ஐந்திணையுறுப்பில் நாற்பொருள் பயக்கும் காமஞ் சான்ற ஞானப் பனுவல்'' என ஓதியருளுகின்றார்.166

''திருவாசகமும் திருக்கோவையாரும் ஒரு திருநூலின் இரு பேருறுப்புக்களாம்''157 என்று பண்டிதமணி க.சு. நவநீதகிருஷ்ண பாரதியார் கூறியுள்ளார்.

மாணிக்கவாசகரைக் குறித்துக் கடவுள்மாமுனிவர். ''உலகின் மாயப்பொங் கிருளகல, எம்மை ஆளுடையான் அன்பர் இதயத் தாமரைகள் எல்லாம், செம்மையாய் மலர ஞான தினகரன் உதயஞ் செய்தார்''158 எனச் சிறப்பாகப் போற்றுகிறார்.

பேராசிரியர் சுந்தரம் பிள்ளை அவர்கள்,

''மனங்கரைத்து மலங்கெடுக்கும் வாசகத்தின் மாண்டோர்கள்
கனஞ்சடைஎன் றுருவேற்றிக் கண்மூடிக் கதறுவரோ'' 159
என்று 'வேதத்திலும் விழுப்பமுடைய' திருவாசகத்தைப் போற்றுகிறார்.

சந்தான குரவர் நாலவருள் காலத்தால் கடைப்பட்டவராகிய உமாபதி சிவாசாரியார்.

''வள்ளுவர் நூல் அன்பர் மொழி வாசகம்தொல் காப்பியமே
தெள்ளுபரி மேலழகர் செய்தமொழி - ஒள்ளியசீர்த்
தொண்டர் புராணம் தொகுசித்தி ஓராறும்
தண்டமிழின் மேலாந் தரம்''160.

என்கிறார். இப்பாட்டில் திருவாசகம் தமிழிலுள்ள ஆறு சிறந்த நூல் களுள் ஒன்றாகக் கூறப்பட்டுள்ளது.

ஔவையார் தாம்செய்த நல்வழி என்னும் நூலில் மாணிக்க வாசகரையும் திருவாசகத்தையும் போற்றிப் பாடுகிறார்.

''தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும் - கோவை
திருவா சகமும் திருமூலர் சொல்லும்
ஒருவா சகமென் றுணர்''161

என்கிறார் ஔவையார். இங்கு 'முனி' என்றது வாதவூர் முனிவரைச் சுட்டுகிறது. 'திருவாதவூர் மகிழ் செழுமறை முனிவர்' 162 என்று திருக்கோவை உரையில் கூறியுள்ளது இதற்கு அரண்செய்கிறது

'முனிமொழி' என்ற பெயரில் வேறொரு நூலும் உள்ளது. ஔவையார் 'முனிமொழி' என்றது அந்நூலை யன்று. அரசினர் கீழ்த் திசைக் கலைக் கையெழுத்துப்பிரதி நூலகம் வெளியிட்ட 'முனிமொழி' என்னும் நூல் முப்பது வெண்பாக்களைப் பெற்றுள்ளது. இது சிற்றிதழாக 15—11—1955 இல் வெளியிடப்பட்டது அகத்திய முனிவரின் மாணாக்கர் ஒருவர். அவர் மொழிந்தவற்றைத் திரட்டி ஒரு நூலாகச் செய்தமையால் 'முனி மொழிந்தவை' என்னும் பொருளுடையதாக 'முனிமொழி' எனும் பெயர்பெற்று வழங்கியது என அறியலாம். இதற்கு 'முனிமொழி முப்பது' என்ற வேறு பெயருமுண்டு. இந்நூல் யோகநெறி பற்றியும், அட்டமாசித்திகள் பற்றியும் கூறுகிறது. 163 எனவே, இங்கு 'முனிமொழி' என்பது வாதவூர் முனிவர் மொழிந்த திருக்கோவை யாரையே குறிக்கும்.

திருவாதவூரடிகள் இயற்றியருளிய திருக்கோவையாரின் சிறப்பினை உலகிற்குணர்த்த விரும்பி அதிலிருந்து நூறு துறைகளைத் தேர்ந்தெடுத்து ஒவ்வோர் ஆசிரியப்பாவை இயற்றித் தமிழறியும் பெருமானாகிய ஆலவாயண்ணலின் முன் 'கல்லாட'த்தை அரங் கேற்றவும் செய்தார். கல்லாடனார். கல்லாடம் இயற்றப்பட்டதன் நோக்கம் யாது என்பதைப் பழஞ்செய்யுள் ஒன்று தெரிவிக்கிறது. அதன் கருத்து "மணிவாசகரின் திருக்கோவையாரைச் சங்கப் புலவர் கள் மதித்துப் போற்றத் தயங்கினர். இதை உணர்ந்த கல்லாடனார் திருக்கோவையாரின் அருமை பெருமைகளை உலகிற்குணர்த்தத் திருக்கோவையாரின் பாடல்களுள் நூறு பாடல்களைத் தேர்ந்தெடுத்து அவற்றின் நுட்பமான பகுதிகளை யாவரும் அறியுமாறு விரித்து, அகலக் கவியாக இயற்றினார்" 164

சிலர் 'திருக்கோவையார் மணிவாசகரால் இயற்றப்படவில்லை' என்று இக்காலத்தில் கூறுவதைப் போல அக்காலத்தில் மதுரையி லிருந்த புலவர் (சங்கப் புலவர்கள் என்பது உபசார வழக்கு) சிலர் கருதி யிருக்க வேண்டும். அதனால் மணிவாசகருடைய திருத்தொண்டின் சிறப்பைப் புலப்படுத்தும் வகையில் மேற்கூறியவாறு கல்லாடம் பாடியிருக்கக் கூடும். புதியதாகச் செல்வாக்குப் பெற்ற விருத்தயாப்பில் பாடாது பழைய மரபினைப் போற்றும் விதத்தில் அகவற்பாவால் அவர் பாடியுள்ளமையும் இக்கருத்தை அரண் செய்கிறது. 165

> "இக்காலத்தில் திருக்கோவையார் மாணிக்கவாசகரின் வாக்குத்தானா என்று ஐயுற்றுக் கேட்பவர்களும் உண்டு. காலஞ்சென்ற இரசிகமணி டி.கே.சி., திருவாசகம் பாடிய மணி

வாசகர் திருக்கோவையாரைப் பாடியிருக்க முடியாது என்று கூறக்கேட்டிருக்கிறேன். திருக்கோவையார் அகப்பொருளின் துறைகளோடு அகப்பொருள் இலக்கணத்திற்கு இலக்கியமாய் அமைந்திருக்கிறது. இந்தச் செயற்கை நடை எங்கே? திருவாசகத்தின் அன்பிலே ஊறிய அமுதத் தமிழ்நடை எங்கே? என்று இரசிகமணி கேட்டதுண்டு. இதைக்கொண்டு திருக்கோவையார் மணிவாசகரின் திருவாக்கு அன்று என்று முடிவு கட்டுவது சரியன்று''166 என்று கூறுகிறார் பி.ஸ்ரீ.

பழநிக்கோவை ஆசிரியர் திருக்கோவையாரைப் பின்பற்றியே தாம் அந்நூலை இயற்றியதாகக் கூறியுள்ளமை167 திருக்கோவையாரின் பெருமையை எடுத்துரைப்பதாகும்.

வெங்கைக் கோவையில், பாங்கி தலைமகள் அவயவத்தருமை சாற்றல் என்னும் துறையில்,

> ''மந்தா கினியணி வேணிப்பிரான் வெங்கை மன்னவரீ
> கொந்தார் குழல்மணி மேகலை நூனுட்பம் கொள்வதெங்ஙன்
> சிந்தா மணியும் திருக்கோ வையுமெழு திக்கொளினும்
> நந்தா வுரையை எழுத வெவ்வாறு நவின்றருளே''168

என்று பாடுகிறார் சிவப்பிரகாசர். இப்பாடலில் மணிமேகலை, சிந்தாமணி, திருக்கோவையார் எனும் நூல்களின் பெயரைக் குறிப்பிட்டு அவற்றுக்குத் தலைவியின் அவயவங்களைச் சிலேடையாக்கி அவற்றின் பெருமையை வெளிப்படுத்துகிறார். அந்நூல்களைக் குறிக்கும்போது மணிமேகலை என்ற நூலின் நுட்பத்தை எவ்வாறு அறிவது? சிந்தாமணியையும் திருக்கோவையாரையும் எழுதிக் கொண்டாலும் அவற்றின் அழியாத பொருளை எவ்வாறு யாரால் எழுத முடியும்? எனவும் சிலேடைப் பொருளால் விளக்குகிறார்.

திருவாவடுதுறை மகாவித்துவான் தாண்டவராய சுவாமிகள் திருக்கோவையாரை,

> ''காமச்சுவையினைக் கட்டுரைத் திடுதலால்
> காமுகர் காமநூ லெனக் களித்துரைப்பவும்,
> இலக்கியக் கடல் நின்றேறுதற் கீதோர்
> இலக்கிய நூ லெனக் கவிஞர் களிசைப்பவும்,
> இலக்கிய விதிபெலாம் எளிதினிற் பயில
> இலக்கண நூ லென வியல்வலோ ரியம்பவும்,

> அன்பினைப் பெருக்கி யருளடி யளித்தலால்,
> அன்புநூலென மெய்யன்பர்றையவும்,
> வேதமெய்ப் பொருளினை விளங்க வோதுதலால்
> வேத மேயென வேதியர் விரிந்துரைக்கவும்,
> சைவ சித்தாந்தத் தனிப்பொருள் தருதலின்
> சைவ ராகமம்எனச் சைவர்கள் சாற்றவும்''169

சிறந்து விளங்குகிறது என்று புகழ்ந்துரைப்பர்.

சி. தியாகராச செட்டியார், ''அறிவுரு வாக்க ஆனந்த வெள்ளப் பெருக்கடை மூழ்கிப் பேருலகு வாழத் திருவாய் மலர்ந்து செய்திய சிற் சபைத் தேவையே பரவும் திருச்சிற்றம்பலக் கோவையார்''170 என்று இந்நூலைப் போற்றியுரைப்பர்.

மறைமலையடிகளார், ''திருக்கோவையார், தொல்காப்பியமும் திருக்குறளும் போன்று பெருமை பெற்ற நூல்''171 என்கிறார்.

நன்னூல் விருத்தியுரையில் செய்யுளின் இலக்கணத்திற்குத் திருக்கோவையாரிலிருந்து எடுத்துக்காட்டுத் தரப்படுகிறது.172

மொ.அ. துரை அரங்கனார் திருக்கோவையாரின் நானூறு பாடல்களிலும் அடங்கிய சிவனைப் பற்றிய கருத்துகளைத் தொகுத்தால் சைவ சித்தாந்தக் கருத்துகளையே தொகுத்து விடலாம் என்கிறார்.173

## சிவபாத்தியனா? சிவபாத்தியனா?

''மாணிக்கவாசகர் திருக்கோவையாரைப் பாடவில்லை; திருவாதவூர்ச் சிவபாத்தியன் என்பவரே திருக்கோவை செய்தனர் என்று நம்பியாண்டார் நம்பி தம் கோயில் திருப்பண்ணியர் விருத்தத்தில் கூறியிருக்கிறார்; எனவே திருக்கோவையைப் பாடியவர் சிவபாத்தியன் என்பவரே'' என்று சிலர் கருதுகின்றனர்.174

> ''வருவா சகத்தினின் முற்றுணாந் தோனைவண் டில்லைமன்னைத்
> திருவாத வூர்ச்சிவ பாத்தியன் செய்திருச் சிற்றம்பலப்
> பொருளார் தருதிருக் கோவைகண் டேயுமற் றப்பொருளைத்
> தெருளாத வுள்ளத் தவர்கவி பாடிச் சிரிப்பிப்பரே''175

என்பது நம்பியாண்டார் நம்பியின் செய்யுளாகும்.

'சிவபாத்தியன் திருக்கோவை செய்தார்' என நம்பியாண்டார் நம்பி கருதுவதாகக் கூறுவது ஏடுபடிப்பவர்கள், எழுதுபவர்கள் செய்த பிழை என்றே தோன்றுகிறது.

இத்தொடரில் 'பாத்தியன்' என்னும் சீரை, "பாததியன், பாத தீயன், பரத்தியன், பரத்தீயன், பர்த்தீயன், பர்த்தியன், பாத்தீயன்" என்றுகொண்டு பொருள் எப்படி ஒத்துவருகிறது என்று ஆராய்ந்து பார்க்கவேண்டும்.

'வருவாசகத்தினின் முற்றுமுணர்ந்தவன்' என்பது திருவாசகம் பாடிச் சிவனை முழுதுமுணர்ந்தவன் என்னும் பொருள் தருவதால் இத் தொடர் மாணிக்கவாசகரையே குறிக்கும் எனலாம். 'வண்தில்லை மன்னைத் திருவாதவூர்' என்பதால் இவர் வளப்பம் பொருந்திய சிதம்பரத்தில் நீண்டநாள் பொருந்தியிருந்த திருவாதவூரில் தோன்றி யவர் என்னும் பொருள் கொள்ளக் கிடக்கிறது.

'சிவ பாத்தியன்' என்றே கொண்டு சிவன், பரம், அத்து, இயன் என்று பிரித்துச் சிவனே பரம் (பரம்-மேலானவன்) என்று நினைந்துந் தொழுபவன் என்று பொருள்கொண்டு, இவர் செய்த திருச்சிற்றம்பலக் கோவையார் எனல் வேண்டும்.

வேணியன் சேணியன் என்பனபோல் 'இயன்' என்பதை ஆண்பால் உடைமை விகுதியாகக் கொள்ளல் வேண்டும்.176

பொ.வே. சோமசுந்தரனார் தம் பதிப்பில் நம்பியின் இப்பாடலை எடுத்துக்காட்டித் திருக்கோவையார் மாணிக்கவாசகர் பாடியதே என்று கூறுகிறார்.177 ஆனால் அவர் 'சிவபரத்தியன்' என்னும் தொடர் குறித்து ஏதும் கூறவில்லை. சிவபரத்தியன் என்னும் தொடர் மாணிக்கவாசகரைச் சிறப்பிக்க வந்த அடைமொழி என்று கொள்ள வேண்டும் என்பதே முடிந்த முடிவு.

பழநியப்பப் பிள்ளை, 'திருவாதவூர்ச் சிவபாத்தியன் திருக் கோவையாரைச் செய்யவில்லை ; மாணிக்கவாசகரே செய்தார்' என்று முடிவு கட்டுகிறார். இதற்குச்சான்றாக மாணிக்கவாசகர் சிலைகளை நம்முன் நிறுத்துகிறார். ஸ்ரீலங்காவில் பொலன்னருவாவில் இருந்து கொணரப்பட்ட நான்கு சிலைகள் கொழும்புப் பொருட்காட்சியில் வைக்கப்பட்டுள்ளன. அவை சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்க வாசகர் சிலைகளாம். அவற்றுள் மாணிக்கவாசகர் இடக்கையில் 'நமச்சிவாய சிவம் வாழ்க' என உள்ளது. சிலைகள் 11 அல்லது 12ஆவது நூற்றாண்டைச் சார்ந்தனவாயிருக்கலாம்.

தமிழ்நாட்டில் 1933இல் மதுக்கூர் கிராமத்தில் நிலத்தை அகழும் போது நால்வர் சிலைகள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. இவை சென்னைப் பொருட்காட்சியில் வைக்கப்பட்டுள்ளன. மாணிக்கவாசகர் இடக்கை உள்ளங்கையில் 'திருவளர் தாமரை-சி' என எழுதப் பட்டுள்ளது. இச்சிலை கி.பி. 12 ஆவது நூற்றாண்டைச் சார்ந்தா

யிருக்கலாம். கொழும்புப் பொருட்காட்சியிலுள்ள சிலை மாணிக்க வாசகர்தாம் திருவாசகம் எழுதினார் என்பதை உறுதிப்படுத்துகிறது. சிலையின் கையில் உள்ளபடி திருவாசகம் 'நமச்சிவாய வாழ்க' என்று தொடங்குகிறது மதுக்கூர் உருவச்சிலை அவரது திருக்கோவையாரின் முதற்பாடலில் முதற்றொடரை 'திருவளர் தாமரை' என்பதைத் தன் கையில் கொண்டுள்ளது. எனவே, சிலைகளை ஆதாரமாகக் கொண்டால் மாணிக்கவாசகரே திருக்கோவையாரைப் பாடியிருக்க வேண்டும் என்னும் முடிவுக்கு வரலாம்.178

மேற்கண்ட சான்றுகளால் மாணிக்கவாசகர் திருவாசகம், திருக் கோவையார் ஆகிய இரண்டையும் பாடியுள்ளமை தெளிவாகிறது.

## திருக்கோவையார் – பிற நூல்கள்

திருக்கோவையாரின் சிறப்பைப் பின்வந்த புராணங்களும் பிற நூல்களும் போற்றியுள்ளன.

'வருவாசகத்தினின்' என்று தொடங்கும் பாடலில் கோயில் திருப்பண்ணியர் விருத்தமும், 'மந்தாகினியணி' என்னும் பாடலில் திருவெங்கைக்கோவையும் திருக்கோவையாரைப் பற்றிக் கூறுகின்றன 'தமிழ்க்கோவை யொரு நானூறும்' என்று சிவஞானபாலைய தேசிகர் பிள்ளைத்தமிழும். 'சிற்றம்பலத் திருக்கோவையார் கரத்தால் வரைந் தாய்' என்று கம்பர் அந்தாதியும் பாடுகின்றன. நானூற்று மணிக் கோவை' என்கிறது பட்டினத்துப் பிள்ளையார் புராணம். மன்றுடை யாற்குக் கோவை மாலை சாத்தும்' என்று சிவராத்திரிப் புராணமும், 'பிறைமுடித்த பிரான் எழுதக் கோவை திருவாசகப்பேர்' என்று மச்ச புராணமும், 'அகமுருகித் தொழுதழுது கோவை பாவை' என்று ஆதிபுரத் தலபுராணமும் குறிப்பிடுகின்றன, திருவாலங்காட்டுப் புராணம் 'சித்திரக் கோவை பாடி' என்றும், திருச்செந்தூர்ப் புராணம் 'தெள்ளு செந்தமிழிற் கோவை நானூறும்' என்றும், செவ்வந்திப் புராணம் 'தேனூறும் வாசகங்கள் அறுநூறும் திருக்கோவை நானூறும்' என்றும் மாணிக்கவாசகரின் நூல்களைக் குறித்துப் பாடுகின்றன. 'பூதநாதர்க்குக் கோவை புனைந்திடும்' என்று திருப்பனசைப் புராணமும், 'துதிப்ப நிறை கோவையார்த் துறைகள்யாவும்' என்று புள்ளிருக்குவேளூர்ப் புராணமும் குறிப்பிடுகின்றன. மயூரகிரிப்புராணம் 'அந்நிலையே கோவை திருவாசகத்தால்' என்கின்றது. "அற்புதத் தமிழால் கோவை அறைந்திடும் வாதவூரன்" என்று பாராட்டுகிறது திருவாஞ்சரத் தல புராணம். திருவெண்காட்டுப் புராணம் 'சிற்றம்பலக கோவை தேன் சொரியும் செம்முகில்' என்று பாடுகிறது. வேதாரணிய புராணம் 'அந்த மில் ஐந் திணை தழுவும் கோவை நூல்கள்' என்று குறிப்பிடுகின்றது179 இங்ஙனம் திருக்கோவையாரைப் பல நூல்கள் போற்றிப் பாடுவது, அதன் பெருமையையும் அருட்டிறனையும் நன்கு உணரவைப்பதாகும்.

## நம்மாழ்வாரும் மாணிக்கவாசகரும்

அருள்வாழ்வு நடத்திய நம்மாழ்வாரும் மாணிக்கவாசகரும் தத்தம் சமய நெறிகளை யொட்டி அரிய பாசுரங்களையும் பதிகங் களையும் பாடி இறையுணர்வையும் இன்றமிழையும் நன்கு வளர்த் தவர்கள் ஆவர்.

இருபெரும் ஞானியரும் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந் தவர்கள்.

இவர்கள் அருளிய திருவிருத்தம், திருக்கோவையார் ஆகிய நூல்கள் இரண்டும் தமிழுக்கும் சமயத்திற்கும் கிடைத்த அருங் கருவூலங்கள் ஆகும். இவற்றை ஒப்பிட்டு நோக்குவது இலக்கிய நோக்கிலும் சமய நோக்கிலும் நற்பயன் விளைப்பதாகும்.

---

# வாழ்வும் காலமும்

## குறிப்புக்கள்

1. மதுரகவியாழ்வார், 'கண்ணிநுண் சிறுத்தாம்பு', நா.தி பி., 938.
2. ஸ்ரீமந் நிகமாந்த தேசிகன், 'ஸ்ரீதேசிகப் பிரபந்தம்', அதிகார சங்கிரகம், பாடல் 1, லிப்கோ, சென்னை, 1967.
3. பி.ஸ்ரீ., 'ஞானசிகரம்', ப.99.
4. பு.ரா. புருஷோத்தம நாயுடு, 'கட்டுரைக் கதம்பம்', ப.48
5. ஞானபூமி, சனவரி 85, ப.82
6. எஸ்.எம். நாராயணசாமி (ப-ர்), 'திருவாய்மொழி', சென்னை, 1976, முன்னுரை, ப.2.
7. ''வலமொழி கலியில் நாளும் நாற்பதோ ரிரண்டு செல்ல
   நலமுடைப் பிற்றை நாளில் பூரணை வெள்ளி யோடு
   குலவுசீர் விசாக மோங்கக் கோதிலாச் சோதி தன்னை
   நிலவுசீ ருடைய நங்கை நீணில முய்ய வுய்த்தாள்''
   — டி.கே. இராசகோபாலன், 'ஆழ்வார்கள் வரலாறு', ஸ்டார் பிரசுரம், சென்னை, 1970, குறிப்புரை ப 87.

(2) கரப்பங்காடு ஸ்ரீ கோபாலாசாரியார் (ப-ர்), நா.தி.பி., இரத்தின நாயகர் சன்ஸ். சென்னை, 1968, ப.14.

8. டி.கே. இராசகோபாலன், 'ஆழ்வார்கள் வரலாறு', ஸ்டார் பிரசுரம், சென்னை-5, 1970, ப 31.

திங்கள்-மாதம், செவ்வாய்-செவ்வாய் என்ற கிரகத்தின் சாரத்திற் காகும் காலம் 45 நாட்கள்.

9. இளவழகனார் அவர்களின் சொற்பொழிவு, 13—9—1949.

10. ஞானபூமி, சென்னை, சனவரி 1985, பக். 43-48.

11. மே.நூ. பக். 43-48.

12. இதன் பொருள் : "சீவன் கர்மபரவசனாய்ப் பிரகிருதியோடு சேர்ந்தால் எதைப் புசித்துக்கொண்டு எங்கே வாழ்வான்? அந்தப் பிரகிருதியை அனுபவித்துக் கொண்டு அந்தப் பிரகிருதியிலேயே கிடப்பான்".

13. மதுரகவியாழ்வார், 'கண்ணிநுண் சிறுத்தாம்பு', நா.தி.பி., 938.

14. மே.நூ. பா. 937.

15. நா.தி.பி., இரத்தின நாயகர் சன்ஸ், ப.15.

16. A. Hirianna, The Essentials of Indian Philosophy, p.30.

17. காழியூர் சேஷாத்திரி மணவாளன், 'திருமாலடியார்கள்', சென்னை, 1976, ப.72.

18. "நம்மாழ்வார் தம் பாசுரங்களுக்கிட்ட பெயர் 'அவாவிலந்தாதி ஆயிரம்' என்பதாகும். பக்தி பரவசத்தால் வெளிவந்து அந்தாதித் தொடையில் அமைந்த பாசுரம் என்பது பொருள்."

— மே.நூ. ப.72.
— திருவாய்மொழி 3776.

19. கு. தாமோதரன், 'ஆழ்வார் திருவுள்ளம்', பூங்கொடி பதிப்பகம், சென்னை, 1978. முன்னுரை, ப 8.

20. ஞானபூமி, சனவரி, 1985, பக். 43-48; மற்றும், பி.ஸ்ரீ, 'ஞான சிகரம்', ப. 65-66.

21. மே.நூ. (ஞானபூமி) பக். 43-48.

22. காழியூர் சேஷாத்திரி மணவாளன், 'திருமாலடியார்கள்', பக். 65-66.

23. ''நாதமுனிகள் காலம் கி.பி. 823-918. 95 ஆண்டுகள் வாழ்ந்திருந்தார் என்பது திரு.மு. இராகவய்யங்கார் முடிவு''
— தெ. ஞானசுந்தரம், 'வைணவ உரைவளம்', ஆய்வேடு, ப.7. சென்னைப் பல்கலைக்கழகம், டிசம்பர் 1980.

24. திருவாய்மொழி 3194.

25. மே.நூ. 3204.

26. ''சொற்ற சொலைச் செவியோர்த்தனார் துணையடியைத் தொழுதுரை செய்வான்
நற்றவ தென்குருகூ ரெனுநக ரதனுட் சடகோபனென்
றற்றை யுதித்து மறைப்பொருளனைத்து மருந்தமி ழுன்முனாள்
உற்று விரித்தன ரென்று முன்னோ ருரைசெய்குவ ராதலால்''
— உ.வே. தேவராஜய்யங்கார், 'ஸ்ரீசடகோப திவ்விய சரித்திரம்', திருநாதமுனி படலம், பா 49, சென்னை, 1920.

27. ''அப்ப ராங்குச நம்பி யடுத்தனா
னைப்ப ராவி யினைய நவில்வரா
லிப்ப ராவு மண்ணேழிலு நின்றசீர்த்
துப்ப ராயவத் தூ நெறி யாளரே''
— மே நூ., பா.63.

28. ''மாமகிழ் மாற னுள்ள மகிழ்ந்துரை செய்வ னென்பா
நாமுனக் கெதிரி னின்று நவிலுத லறமன் றர்ச்சை
தூ மலர் வாயதிறந்து சொல்லுவன் திரையி னப்பால்
நீமனங் களிப்பக் கேட்டு வரைந்திடு நிமல வென்றான்''
— மே.நூ , பா.92.

29. மே.நூ., பா.93.

30. பு.ரா. புருஷோத்தம நாயுடு, 'கட்டுரைக் கதம்பம்', ப.47.

31. ந. சுப்பு ரெட்டியார், 'சோழநாட்டுத் திருப்பதிகள்', முதல் பகுதி, பக். 95-97.

32. நா.சி. இராமசுவாமி, 'சடகோபனும் செழுந்தமிழும் ப. 40.

33. எஸ்.எம் நாராயணசாமி (ப-ர்), 'திருவாய்மொழி', இரண்டாம் பாகம், ப.144.

34. ஏ.வி. சுப்பிரமணிய அய்யர், 'தமிழ் ஆராய்ச்சியின் வளர்ச்சி', 1971, ப 172.

35. காழியூர் சேஷாத்திரி மணவாளன், 'திருமாலடியார்கள்', ப.226.

36. மே.நூ. ப.226.

37. "திருவழுதி வளநாடன் பொருநைச்சேர்ப்பன்
சீபராங்குச முனிவன் வகுளச் செல்வன்
தருவளரும் குருகையர்கோன் காரி மாறன்
சடகோபன் தமிழ்வேதம் ததியர் பாட..."
— பிள்ளைப் பெருமாளையங்கார், 'சீரங்கநாயகரூசல்', பா.6.

38. "When Satagopa sang his hymns, before Ranganatha, a voice was born". 'He is our Alwar', - Suddhananda Bharatiar **Alwar Saints,** Trichy, 1942, p.10.

39. வை.மு. சடகோபராமானுஜாசாரியார்-சே. கிருஷ்ணமாசாரியார் (ப-ர்), 'சடகோபரந்தாதி', பா.1இன் உரைக்குறிப்பு, ப.6.

40. பி.ஸ்ரீ., 'நம்மாழ்வாரும் மாணிக்கவாசகரும்', ப.31.

41. உ.வே. தேவராஜய்யங்கார், 'ஸ்ரீசடகோப திவ்விய சரிதம்', நாமதேயப் படலம், பா.40.

42. ந. பாலம்மாள், 'சிற்றிலக்கியச் சொற்பொழிவுகள்' என்னும் நூலில் 'சரசுவதியந்தாதியும் சடகோபரந்தாதியும்' என்னும் கட்டுரை கழகம், சென்னை, 1962, ப.368.

43. சடகோபரந்தாதி, பா.4., உரைக்குறிப்பு, ப 20,145.

44. ந. பாலம்மாள், 'சிற்றிலக்கியச் சொற்பொழிவுகள்', ப.368.

45. மே.நூ., ப.368.

46. சி. இராமானுஜையங்கார், (ப-ர்), 'மாறனகப் பொருளும் திருப்பதிக்கோவையும்', செந்தமிழ்ப் பிரசுரம், மதுரை, 1932, ப.1.

47. நாராயண ஐயங்கார் (ப-ர்), 'மாறனலங்காரம்', செந்தமிழ்ப் பிரசுரம், முன்னுரை, ப 12. மதுரை, 1932.

48. சடகோபரந்தாதி, முன்னுரை, ப.3.

49. மே நூ , பா.5, உரைக்குறிப்பு, ப.20.

50. மே.நூ., பா 78, உரைக்குறிப்பு ப.114. மற்றும், உத்தமூர் தி. வீரராகவாசார்யன் (ப-ர்). 'உபய வேதாந்த க்ரந்த மாலை', என்னும் நூல், 'ப்ரபந்த ரக்ஷை' என்னும் உரையுடன், விசிஷ்டாத்வைத ப்ரசாரிணி சபா, சென்னை, 1971, ப.5.

51. மே.நூ.. (சடகோபரந்தாதி ப.114.

51. அ சடகோபரந்தாதி, ப.150.

52. திருவாய்மொழி, 3724.

53. ,, 3737.

54. ,, 3430.

55. ,, 3425.

56. ,, 3725.

57. சடகோபரந்தாதி, பக்.8,14.

58. பிள்ளைப் பெருமாளையங்கார், 'திருவேங்கடமாலை', காப்புச்செய்யுள்.

59. ,, 'நூற்றெட்டுத் திருப்பதி யந்தாதி' பா.1.

60. சடகோபரந்தாதி, பா.78, உரைக்குறிப்பு ப.115.

61. மே நூ. ப.115.

62. மே.நூ. ப.115.

63. திருவிருத்தம் 2478.

64. 'உபய வேதாந்த கிரந்த மாலை', ப்ரபந்த ரக்ஷை என்னும் உரை, ப.4.

65. பி.ஸ்ரீ., 'ஞான சிகரம்' ப.72.

66. டி.எம்.பி. மகாதேவன், 'மெய்யடியார்கள்', வ.ஆ தேவசேனாபதி (மொ-ர்), ஜெமினி பிரசுரம், சென்னை, 1959, ப.72.

67. "இதுகேட்டுச் சிலர்சீறி இணையற்ற மறையோன்பால்
பொதுவாகும் மறுகுதனில் புகலற்க விருதுதமை
மதுவாரும் பாவெனினும் மாமதுரைச் சங்கத்து
முதுவோர்தம் புகழன்றி மொழியாரே புகழ்தன்னை."
— ஆழ்வார்கள் வரலாறு, நம்மாழ்வார், பா.76.

68. மே.நூ, பா.75.

69. சடகோபரந்தாதி, சிறப்புப் பாயிரம், ப.6 , மற்றும் பி.ஸ்ரீ. 'ஞானசிகரம்', ப.73.

70. டி.எம் பி. மகாதேவன், 'மெய்யடியார்கள்', பக். 71-72.

71. மே.நூ. பக். 71-72.

72. திருவாய்மொழி 2597.

73. ''உண்ணுஞ்சோ றென்றருளும் பதிக மதிற்றாய் சோகமுற
வன்னா மெல்லாம
பெண்ணுந் சோகந் தெளிந்து தாரக போஷ போக்யம் பின்னுடன்
கண்ணன்றா னென்றனக் கென்றே திருக்கோளூர் செலத்தாய்
கலக்கந் தீர்ந்து
திண்ணங் கொண்டென் மகளவ்வூ ரடைந்தா ளெனுமாறு
செப்பின னால்''

— ஸ்ரீசடகோப திவ்விய சரிதம், திராவிட வேதமருளிய படலம், பா.80.

74. மயிலை மாதவதாசன் (ப ர்), நா.தி.பி., மா. இராச மாணிக்கனாரின் 'ஆழ்வார்கள் காலம்' என்னும் கட்டுரை, ப.46.

75. மே.நூ., ப.47.

76. ,, ப.47.

77. ,, ப.48.

78. ,, ப.48.

79. ,, ப.48.

80. ,, ப.48.

81. மறைமலையடிகள், 'மாணிக்கவாசகர் வரலாறும் காலமும்', பகுதி 2, கழகம், சென்னை, ப.419.

82. மே.நூ., ப.419.

83. பி.ஸ்ரீ., 'நம்மாழ்வாரும் மாணிக்கவாசகரும்', ப.50.

84. கரு. நாகராசன், 'திவ்விய பிரபந்தத்தில் மனம்', உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1981, ப.10.

85. Sir Charles Eliot. Hinduism and Buddhism, Vol II p 231.

86. ‘‘நம்பெருமாள் நம்மாழ்வார் நஞ்சீயர் நம்பிள்ளை
என்ப ரவர்த மேற்றத்தால் — அன்புடையோர்
சாற்றுதிரு நாமங்கள் தானென்று நன்னெஞ்சே
ஏற்றதனைச் சொல்லீ யின்று’’.

—மணவாள மாமுனிகள், ‘உபதேச ரத்னமாலை’, பா.50.

87. ஞானபூமி, சனவரி, 1985 ப 48.

88 கம்பராமாயணம், பால காண்டம், 1.

89. மாறனலங்காரம், முன்னுரை, ப.12.

90. ‘‘குறுமுனிவன் முத்தமிழும் என்குறளும் நங்கை
சிறுமுனிவன் வாய்மொழியின் சேய்’’

—தனிப்பாடல் திரட்டு, பாகம் 1 ப.210 (பழைய பதிப்பு),
மற்றும ‘சடகோபரந்தாதி, பா.9., ப.28.

91. ‘‘ஐம்பொருளும் நாற்பொருளும் முப்பொருளும் பெய்தமைத்த
செம்பொருளை யெம்மறைக்கும் சேட்பொருளைத் தன்குருகூர்ச்
சேய்மொழிய தென்பர் சிலரியானிவ் வுலகில்
தாய்மொழிய தென்பேன் றகைந்து’’
—தனிப்பாடல் திரட்டு, பாகம் 1. ப.211.

92. ‘‘சேய்மொழியோ தாய்மொழியோ செப்பிலிரண்டு மொன்றே
வாய்மொழியை யாரு மறையென்பா — வாய்மொழிபோல்
ஆய்மொழிகள் சால வளவெனினும் அம்மொழியும்
சாய்மொழிய வென்பேன் றகைந்து’’
—தனிப்பாடல் திரட்டு, பாகம் 1. ப.211

93. மே.நூ பக்.210, 211.

94. சரவண ஆறுமுக முதலியார், சொர்ணம்மாள் அறக்கட்டளைச் சொற்பொழிவுகள், சென்னைப் பல்கலைக்கழகம், 1971, ப.188. மற்றும் தண்டாயுதபாணி சுவாமிகள், புலவர் புராணம் திருவள்ளுவர் சருக்கம் பா.27. கேசரி அச்சுக்கூடம், சென்னை. (1936)

95. கம்பர், ‘திருக்கை வழக்கம்’, கண்ணி 20.

96. மதுரகவியாழ்வார், ‘கண்ணிநுண் சிறுத்தாம்பு’, நா.தி.பி., பா 948

97. பட்டர், திருவாய்மொழித் தனியன், 1.

98. பி.ப. அண்ணங்கராசாரியார், 'ஸ்ரீ இராமானுசர் தொண்ணூற்றிரண்டு உபந்நியாச மாலை', நான்காவது உபந்நியாசம், ப.8.

99. மே.நூ. ப.8.

100 சடகோபரந்தாதி, பா.45, ப.67.

101. மே.நூ., பா.9. பக் 25,30.

102. பா.13, ப 33.

103. பா.3, ப. 14.

104. மெய்கண்டார், 'சிவஞான போதம்', சூ. 12.

105. திருக்குருகைப் பெருமாள் கவிராயர், 'திருப்பதிக் கோவை' பா.3.

106. மே.நூ., பா. 461.

107. ,, பா. 3.

108. உ.வே. தேவராஜையங்கார், (ஸ்ரீ சடகோப திவ்விய சரிதம் )

109. வேங்கடத்துறைவான் கவிராயர், 'மாறன் கோவை' பா. 227.

110. R. Ramanujachari, 'The Mysticism of Nammazhwar' P.5.

111. Ibid., P.5.

112. Ibid., P.5.

113. T. Srinivasan, Spiritual Quest in Nammalvar's Tiruvaymoli P.45

114. Ibid., P.46

115. Ibid., P 46,

116 Ibid., P.46.

117. Ibid , P.46.

118. உபதேச ரத்தின மாலை, பா 39

119. திருவாய்மொழி, 2690.

120. திருக்குறள் 349, "பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் மற்று நிலையாமை காணப் படும்"

121. *திருவாய்மொழி*, 3047.

122. *திருக்குறள்*, 381.

123. *திருக்குறள்*, 370.

124. *திருவாய்மொழி*, 3529.

125. ''ஊரவர் கவ்வை பெருவிட் டன்னை சொல்மடுத்து
ஈரநெல் வித்தி முளைத்த நெஞ்சப் பெருஞ்செய்யுள்
பேரமர் காதல் கடல்புரைய விளைவித்த
காரமர் மேனி நங் கண்ணன் தோழி கடியனே''.

*திருவாய்மொழி*. 3142.

126. *திருக்குறள்* 1147.

127. கா சுப்பிரமணிய பிள்ளை, 'குமரகுருபர அடிகள் வரலாறும் நூலாராய்ச்சியும், 'சென்னை, 1982, ப 95.

128. ஸ்ரீரங்கம் திருமலாசாரியார் ஸ்ரீராமநவமி பிரசங்கங்கள், வேலூர் திருவேங்கடவன் மேனிலைப்பள்ளி, 12-4-1983

129. பு. ரா. புருஷோத்தம நாயுடு, 'கட்டுரைக் கதம்பம்', ப.47.

130. ஞானபூமி, ஆகஸ்ட் 1982, ப 11.

131. *திருவாய்மொழி*, 2972.

132. மறைமலையடிகள், ''மாணிக்கவாசகர் வரலாறும் காலமும்''
பகுதி2, ப 360.

133 டி எம்.பி. மகாதேவன், 'மெய்யடியார்கள்' ப.66.

134. Studies in Tirukkovaiyar'. (M.Litt Thesis).Madras University 1964. p.l. "No Less a savant than Maraimalai Adigal cherished the work as 'The Immediate Jewel of his soul''.

135. நா. மகாலிங்கம், சைவ சித்தாந்தப் பெருமன்றம் 79ஆம் ஆண்டுவிழா, பேரூர், மே 85, வரவேற்புரை. ப. 7

136. கே. தமிழ்ச்செல்வி, '*தினமணி கதிர்*' இதழ், 23-3-1986, ப.26

137. டி.எம்.பி. மகாதேவன், 'மெய்யடியார்கள்', ப 66

138. *திருவாசகம்*, *திருச்சதகம்*, 57.

139. கா. சுப்பிரமணியபிள்ளை, 'மாணிக்கவாசகப் பெருமான் வரலாறு. ப. 9.

140. Avvai D. Natarajan, '**Studies in Tirukkovaiyar**', P. 174.
(M. Lit Thesis). Madras University.

141. G. Vanmeeganathan, '**Manickavasagar**', Sahitya Academy
New Delhi, 1976, PP.7-9,

142. கா. நமச்சிவாயர் (ப-ர்), 'கல்லாடம்', 1911, முகவுரை,
பக். 3, 4.

143. Avvai D. Natarajan, '**Studies in Tirukkovaiyar**', P. 175.

144. Ibid , P. 175.

145. Ibid., P. 175.

146 Ibib., P. 175.

147. மா. இராசமாணிக்கனார், 'கால ஆராய்ச்சி' சென்னை. 1957
பக் 97, 98, 118.

148 மே.நூ. 97, 98, 118.

149. ,, ,,

150. ,, ,,

151. ,, ,,

152 (1) "நன்னெறி விடையிற் போந்தார் நன்கனத் தலைவர் காம
மின்னெறி வாதவூர ரென்ன வந்துயஞ் செய்தார்"
—திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம்.
ஞானோபதேசஞ் செய்த திருவிளையாடல், பாடல். 6.

152 (2). ந சுப்பு ரெட்டியார், 'தம்பிரான் தோழர்',
'தினமணி கதிர்' பக். 194. 195.

153 கே. தமிழ்ச்செல்வி, தினமணி கதிர்' 23-3-86 ப.26.

154. சாமிநாத தேசிகர், 'இலக்கணக் கொத்து', சூ.10

155 பட்டினத்தடிகள்.'திருவிடைமருதூர் மும்மணிக் கோவை,பா. 98

156. குமரகுருபரர், 'சிதம்பர மும்மணிக் கோவை', பா,23.

157. பி.ஸ்ரீ., நம்மாழ்வாரும் மாணிக்கவாசகரும்', ப.13.

158. கடவுண்மாமுனிவர், 'திருவாதவூரடிகள் புராணம்'. மந்திரிச்
சருக்கம் பா.5.

159. டெ. சுந்தரம் பிள்ளை, மனோன்மணீயம்', தமிழ்த்தாய்வாழ்த்து,
பா.1. தாழிசை 22.

160. எஸ். அனவரதவிநாயகம் பிள்ளை,'தமிழ்ப்பெருமக்கள் வரலாறு'
ப. 99.

161 ஔவையார், 'நல்வழி', பா. 40.

162. கா. நமச்சிவாயர் (ப-ர்), 'ஆத்திசூடி, கொன்றைவேந்தன்',
சென்னை, 1981, பக் 2,8,

163. வி.எஸ். கிருஷ்ணன் (ப-ர்), சிற்றிதழ் பதிப்பு, 1956.

164. ச. வே. சுப்பிரமணியன்-ஏ. என். பெருமாள், 'தமிழிலக்கியக்
கொள்கை', 4ஆம் பகுதி, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
'கல்லாடம்' பற்றிய கட்டுரை, சென்னை, 1979, ப.25.

165. மே.நூ., ப.25.

166. பி.ஸ்ரீ. 'நம்மாழ்வாரும் மாணிக்கவாசகரும்', ஸ்டார் பிரசுரம்,
சென்னை, 1978, பக்.57,58.

167. கலைக்களஞ்சியம், தொகுதி 5, ப.48.

168. சிவப்பிரகாசர், 'திருவெங்கைக் கோவை', பா.107.

169. ஆறுமுக நாவலர் (ப-ர்), திருக்கோவையார், பாயிரம், ப 7.

170. மே நூ.

171. Avvai D. Natarajan, Studies in 'Tirukkovaiyar' p 244.

172. Ibid., P.244.

173. Ibid., P.270.

174. எஸ். அனவரதவிநாயகம் பிள்ளை,'தமிழ்ப்பெருமக்கள் வரலாறு'
ப.100.

175. மே நூ. ப.100

176. தனிப்பாடல் திரட்டு, பா.183.

177. பொ வே. சோமசுந்தரனார் (ப—ர்) 'திருக்கோவையார்', ப.4.

178. Avvai D. Natarajan, Studies in 'Tirukkovaiyar' p.p.178–179

179 வ சு. செங்கல்வராய பிள்ளை, 'திருக்கோவையார் நுனிநெறி',
கழகம், சென்னை, 1970, பக். 351-861.

## "என்னையும் மறந்து தன்னையும் மறந்ததே"

# கோவை நூல்களின் தோற்றமும் வளர்ச்சியும்

### அகப்பொருளும் சங்கப்புலவர்களும்

தொல்காப்பியப் பொருளதிகாரம் இலக்கியப் பொருளைச் செவ்வனே பாகுபாடு செய்து விரிவாக விளக்கியிருக்கும் அரியதோர் இலக்கண நூற்பகுதியாகும். இது தமிழின் தனிச் சிறப்புக்களிலொன்று தொல்காப்பியத்தின் பொருள், அகத்திணை புறத்திணை, என இரண்டாகப் பிரிக்கப்பட்டுள்ளது. பிறர் புலன்களால் அறியக்கூடிய பொருளை புறப்பொருள் என்றும், அனுபவிப்பவர் மட்டும அறியக் கூடியதும, ஏனையோர் புலன்களுக்கு அறியக்கூடாததுமான சிற்றின்ப உள்ளுணர்ச்சியினை அகப்பொருள் என்றும் பிரித்துள்ளனர். இவ்விருபொருள்களையும் விளக்கும்போது ஒவ்வொன்றையும் ஏழு திணைகளாகப் பிரித்து, ஒவ்வொரு திணையிலும் நிகழக்கூடிய நிகழ்ச்சிகளை விரிவாகக் கூறியுள்ளனர் நம் ஆன்றோர்.

அகம், புறம் என்பன காரணப்பெயர் என்பர் இளம்பூரணர் 1 ஆகுபெயர் என்பர் நச்சினார்க்கினியர் 2 இன்பம் அகத்தே நிகழ்வதா-தலின் அகத்தே நிகழ்கின்ற இன்பத்திற்கு அகம் என்றது ஓர் ஆகுபெயர் என்பது நச்சினார்க்கினியர் விளக்கம். அகத்தே நிகழ்கிறது என்பதற்கு மாறாக, 'அகத்தால் நிகழ்கிறது' என்று கருதி, அகம் என்பதைப் போக நுகர்ச்சிக்குக் காரணம் எனக் கொண்டனர் இளம்பூரணர். அகத்தை இடமாகக் கொள்வதிலும் காரணமாகக் கொள்ளுதலே பொருந்தும் என்றும், பாலுறவிற்குக்காரணம் என்பதினும் உள்ளஎழுச்சியே காரணம் என்றும் க.ப. அறவாணன் விளக்குகின்றார்.3

நச்சினார்க்கினியரின் விளக்கத்தையே தஞ்சைவாணன் கோவை உரையாசிரியர் சொக்கப்ப நாவலர் பின்பற்றுகிறார்.

### அகப்பொருளும் புறப்பொருளும் :

பொருள் என்பது அகத்திற்கும் புறத்திற்கும் பொது. அகத்தைச் சார்ந்துவரும் பொருளெல்லாம் அகப்பொருள் எனப்படும். புறத்தைச் சார்ந்து வரும் பொருளெல்லாம்புறப்பொருள் எனப்படும். புறப்பொருள் கொடை பகை, நட்பு, போர் முதலியனவற்றின் மேல் வரும். இப்

பொருளிலக்கணம் தமிழில் மட்டுமே உள்ளது. இவ்விரண்டனுள் அகமாவது புறத்தைக் காட்டிலும் பலவகைகளில் உயர்ந்தது.

## அகப்பொருளும் அன்பும் :

இன்பப் பகுதியைக் கூறும் நூல்களெல்லாம் அன்புடைக் காமத்தின் இலக்கணத்தைக் கூற எழுந்தமை வெளிப்படை மற்றும் அவை மக்களுக்கு உறுதி பயக்கும் அகநூல்களில் கூறப்படும் இன்ப வொழுக்கம், மேன்மக்களால் புகழப்படும் அன்பின் பெருக்கால் நிகழ்வ தொன்றன்றி, உலகினரால் இகழப்படும் காமவேட்கையால் நிகழ்வ தொன்றன்று. இவ்வின்ப வொழுக்கத்திற்குக் காதலெனப்படும் சிறந்த அன்பே காரணமென்பதை வலியுறுத்தவே,

"அன்பொடு புணர்ந்த ஐந்திணை"4

என்று ஆசிரியர் தொல்காப்பியரும்,

"அன்பின் ஐந்திணை
களவு கற்பெனக் கண்ணிய வீண்டையோர்
உளநிகழ் அன்பின் உயர்ச்சி மேன"5

என்று இறையனாரும்,

"அவையெல்லாம் அன்பினான் நிகழுமாதலின் காமப்
புணர்ச்சியென்றார்".6

என்று களவியலுரையாசிரியரும்,

"ஐந்திணை யுடையது அன்புடைக் காமம்"
"உளமலி காதற் களவெனப் படுவது"7

என நாற்கவிராச நம்பியும் கூறுவர்.

எனவே, அன்பு என்பது தான் வேண்டப்பட்ட ஒரு பொருளின் இடத்துத் தோன்றும் உள்ள நெகிழ்ச்சி என்பது போதரும்.

காதலிருவருள் ஒருவர் நோயுறின் மற்றொருவர் தாமும் நோயுற்றதுபோல் வருந்துதலும், ஒருவர் மகிழ்ச்சியுற்றால் தாமும் மகிழ்ச்சியுறுதலும் இங்ஙனம் ஒருவருக்கு வரும் இன்ப துன்பங்களை மற்றவர் தமதாகவே பாவித்தலும், ருவரை விட்டு ஒருவர் நீங்க விரும்பாது எஞ்ஞான்றும் ஒருயிரும் ஈருடலுமாய் வாழ்தலுமே அவ்வன்பின் அறிகுறியாகும். அவ்வன்பு காதலிருவரும் புணராத முன்பு எங்ஙனம் நின்றதோ, அங்ஙனமே புணர்ந்த பின்பும் நிறைந்து நிற்கும். மற்றைய உலகத்து அன்புபோல் அஃது என்றும் தேய்தலின்று

எனவே, அகத்திணையைப் பற்றி 473 சங்கப்புலவர்களுள் 378 பேர் பாடியுள்ளனர் 2381 சங்கப்பாக்களில் 1862 அகத்திணையைப் பற்றியே உள்ளது. தொல்காப்பியரும் புறத்திற்கென்று ஒரு பகுதியே எழுதியிருக்க, அகத்திற்கென அகத்திணையியல், களவியல், கற்பியல், பொருளியல் என நான்கு பகுதிகள் எழுதியுள்ளார்.

சங்கப் புலவர்களுள் சிறந்த கபிலர் ஆரிய அரசன் பிரகத்தனுக்குத் தமிழ் கற்பிக்கக் 'குறிஞ்சிப் பாட்டு' எனும் அகப்பாடலையே பாடியுள்ளார். அவர் தமிழின் சிறப்பினை அறிவுறுத்த நினைத்து இத்தகைய அகப்பாடலை இயற்றிக் கற்பித்தார்.8

## அகமே உயர்ந்தது

"தள்ளாப் பொருளியல்பின் தண்டமிழின் வந்திலார்
கொள்ளாரிக் குன்று பயன்"9

என்று குன்றம்பூதனார் தமிழின் அகத்திணைக்கான உயர்மதிப்பைப் புலப்படுத்துகிறார். பொருளதிகார இலக்கணத்தை இழந்து வருந்திய பாண்டிய மன்னன் இறையனார் அகப்பொருள் சூத்திரங்களைக் கண்டதால் மனநிறைவடைந்தான் என்று நக்கீரர் தம் உரையில் கூறியிருப்பதால் புறத்தைவிட அகமே உயர்ந்தது என்பது போதருகிறது.10

ஆங்கிலத்திலும் அகப்பாடல்களுக்குத் தனிச்சிறப்புண்டு வால்டர் டிலாமேர் என்பவர், "ஆங்கிலத்தில் மூன்றில் இரண்டு பாகம் காதலைப் பற்றியது" 11 என்கிறார்.

எனவே, தமிழின் தொன்மை, சங்கத் தமிழ்ப்புலவர்களின் மிக்க எண்ணிக்கை, தமிழின் உயர்வு ஆகியவற்றில் அகத்திணைப் பாடல்களே தலைமையேற்கின்றன என்பது உள்ளங்கை நெல்லிக்கனி.

## காதலுக்கு உள்ளமே நிலைக்களன்

அகத்திணை என்பது இன்ப ஒழுக்கம் இயல்பும் இயல். உள்ளத்தின்கண் எழுந்த அவா உடல்வழிப் படர்ந்து உள்ளத்தைக் குளிர்விப்பதாகலின் உள்ளம் என்பதோடு தொடர்புபட 'அகம்' என்றனர் ஆன்றோர் அன்பிற்கும் இன்பத்திற்கும் அடிப்படை உடல் அன்று; உள்ளமே என்பதை இப்பெயர் உணர்த்தி நிற்கின்றது. உள்ளத்தை அகம்என்றே வழங்கினர் வள்ளுவர்.12.

உள்ளம் காற்றன்பிற்கு உயிர்த்தளம். ஆயினும் அதனை மெய் வழி உணர்த்தலே இவ்வுலக இயற்கை. ஆனால் அது உடல் இன்பம்

மட்டுமன்று; உயிர் இன்பமுமாகும். உள்ளமும் உடலுமாகிய இரண்டு உறவும் சம அளவாகக் கலந்தஇன்பச் செவ்வியே அகம். இன்ப நுகர்ச்சிக்கு உடலே கருவி; எனினும் உள்ளமே காரணம். காதல் மொழியும் காதற் செயலும உள்ளம் வழி இயங்குவனவே. உள்ளத்தால் நினைத்த நினைப்பும் காதல் நுகர்ச்சிக்குச் சமமாகும். உள்ளப் புணர்ச்சி மெய்யுறு புணர்ச்சிக்கு நிகராகும்.

"உள்ளத்தால் உள்ளலும் தீதே" 18 என்னும் குறட்பாவின் மூலம் உளநிலைகளைச் செயலுக்கு நிகராகக் குறிப்பர் வள்ளுவர்.

"பிறர்நெஞ்சு புகாக் கற்பு" 14 என்பர் மணிமேகலையில் சீத்தலைச் சாத்தனார். இவையனைத்தும் காதற்செயலுக்கு உள்ளமே காரணம் என்பதைக் கூறும். எனவே தான் முன்னோர் காதல் பற்றிய இயலை 'அகம்' என்றனர்.

காதலரிருவரிடத்து நிகழும் அகவொழுக்கம் 'திணை' எனப்படும். அங்ஙனம் நிகழும் ஒழுக்கம் எழுவகைப்படும். அவை புணர்தலும், இருத்தலும், ஊடலும், இரங்கலும், பிரிதலும், ஒருதலைக் காமமும, பொருந்தாக் காமமும் ஆகும். இவற்றை முறையே குறிஞ்சித்திணை, முல்லைத்திணை, மருதத்திணை, நெய்தல்திணை, பாலைத்திணை, கைக்கிளைத்திணை, பெருந்திணை எனக் கூறுவர். இவற்றுள் முதற்கண் கூறிய ஐந்தும் அன்பின் 'ஐந்திணை' எனப்படும்.

தலைவர் பாட்டுடைத்தலைவர், காமத்தலைவர் என இரு வகைப்படுவர். அகனைந்திணைச் செய்யுளெல்லாம் தலைமகனையும் தலைமகளையும் திணைப்பெயராய்ச் சுட்டுமேயன்றி இயற்பெயராற் சுட்டா . . . அச்செய்யுள்கள் புறத்திணையுடன் மயங்கி வருமிடத்தே தலைவனையும் தலைவியையும் இயற்பெயரால் விதந்து கூறும். கைக்கிளையும் பெருந்திணையும் அங்ஙனமின்றி ஒருவர் பெயர் கொண்டும் கொள்ளாதும் நடைபெறும்.

இவ்வொழுக்கம் களவு, கற்பு எனும் இருபெரும் பிரிவுகளை உடையது.

## களவொழுக்கம்

களவொழுக்கம் என்பது ஒத்த குலமும், ஒத்த கல்வியும், ஒத்த குணமும், ஒத்த செல்வமும், ஒத்த அழகும், ஒத்த அன்புமுடைய தலைமகனும் தலைமகளும் தனித்தவராய் ஒரு பொழிலினிடத்து எதிர்ப் பட்டுத் தம்முணர்வினராய் இல்லாமல் தெய்வக் குறிப்பாலும் விதிவயத்

தினாலும் ஒருவர் மீது ஒருவர் காதல் மிகுத்து கொடுப்பாரும் அடுப்பாரும் இன்றித் தாமே புணர்வதாகும். பிறர்க்குரியவளாகிய தலைவியை அவள் பெற்றோர் கொடுப்பத் தலைமகன் ஏற்றுக் கொள்ள வேண்டியிருக்க அங்ஙனம் கொள்ளாது கரந்த உள்ளத்தனாய்த் தலைமகன் அவளை எதிர்பட்டுப் புணர்வது களவு போன்றிருத்தலின் இது களவென்றாயிற்றாம்.

களவு என்பது யாழோர் மன்றல் எட்டனுள் காந்தர்வ மணத்தை ஒத்தது. இது கரவு, வஞ்சம் ஆகியவற்றைக் குறித்ததில்லை. மொ. அ. துரை அரங்கனார், களவு என்பதற்குக் களைதல் என்ற பொருளை தருகிறார். அவர் களவு என்னும் தூய்தல்லாத இவ்வியல்பூக்கத்தை நீக்கிவிடவேண்டும் என்று கருதுகிறார்15.

களவு என்றாலே தீங்குதருவது; நரகத்திற்கு ஏது என்று யாவரும் கருதுவர். அகவொழுக்கத்தின் களவோ, ''பொய்மையும் வாய்மையிடத்த புரைதீர்ந்த, நன்மை பயக்கு மெனின்''16 என்னும் வள்ளுவர் வாக்கிற்கிணங்க நன்மையே பயந்து நிற்கிறது. இதற்குக் கதை ஒன்று கூறுகிறார் நக்கீரர். கணவனிடம் பிணக்குப் பூண்ட பெண்ணொருத்தி நஞ்சினைக் குடித்து உயிர் போக்க வைத்திருந்தபோது, பிறர் நலம் கருதும் ஒருவன் அவளறியாமல் அதனை எடுத்து வெளிய கொட்டிவிட அவள் நஞ்சு வைத்த இடத்தில் சென்றுபார்க்க அது இல்லை. எனவே, அந்த எண்ணம் மாறி வாழ்ந்திருந்தாள். இஃது அந்த நல்லவன் அவளறியாமல் கவர்ந்த களவேயாகும். எனினும் புறத்தே நிகழ்ந்த செயல் நோக்கி அதனைக் களவெனக் கருதாது அச்செயலின் பயனோக்கி அதனை அறமெனக் கருத வேண்டும். நஞ்சினை அவளறியாமல் கைப்பற்றியதால்தான் ஓர் உயிர் பிழைத்தது. எனவே தோற்றத்தால் ஒரு செயலின் தன்மையை அளவிட்டுரைத்தல் ஆகாது. அதன் பயனோக்கியே நல்லதென்றும் அல்லதென்றும் வகுத்து கூற வேண்டும் என்பது தெளிவாகும்.17 மறைந்திருக்கும் காரணத்தால் மறை' என்று வேதத்திற்குப் பெயர் கூறினாற்போலப் பிறரறியாமல் இருவரும் கரந்த உள்ளத்தினராய்க் கூடுவதால் களவியல் என்னும் பெயர் உண்டாயிற்று. பின்பு, கற்பின்வழி நின்று விளங்குவதால் இது குற்றமில்லை.

## காட்சி

தலைமகன் தனித்தவளாய் நின்ற தலைமகளுடைய கருங்குழல் விற்புருவம், செவ்வாய் முதலிய உறுப்புகளின் அழகைக் கண்டு, அவள் தெய்வ மகளோ, வரையரமகளோ, நீரரமகளோ என்று ஐயமுறுவான். அவள் கால்கள் நிலத்தில் படுவதாலும், கண் இமைப்பதாலும் அவள்

மக்களுள் ஒருத்தியே எனத் துணிவான்; துணிந்து காதல் உணர்வுடன் நோக்குவான். அவளும் அவனைக் காதல் மனத்துடன் நோக்குவாள். நோக்கியபோதே உள்ளத்தால் புணர்ந்தவர் ஆவர்.

## தெய்வப் புணர்ச்சி

அங்ஙனம் உள்ளப் புணர்ச்சியோடமையாது மெய்தொட்டுப் பயிறல் ஆகிய மெய்யுறு புணர்ச்சியும் நிகழ்த்துவர். இஃது இயற்கைப் புணர்ச்சி எனவும், தெய்வப் புணர்ச்சி எனவும், முன்னுறு புணர்ச்சி எனவும் வழங்கப்பெறும்.

## நின்னிற் பிரியேன்; பிரியின் உயிர் தரியேன்

தெய்வப் புணர்ச்சி நிகழ்த்திய பின்னர்த் தலைமகன் தலைமகளைப் பாராட்டி நயம்பட உரைப்பான். இதனைக் கூறக்கேட்ட தலைமகளும் ஆற்றாளாவாள். அவளை ஆற்றிய பின்னர் அவ்விடத்தி னின்றும் நீங்காவிடில் புறத்தார் உணர்வர் என்றஞ்சித் தன் பிரிவினை உணர்த்த முயல்வான். மென்மையாக உணர்த்த வேண்டி, 'நின்னிற் பிரியேன், பிரியின் உயிர் தரியேன்' எனும் பொருள்படப் பிரிவச்சம் கூறுவான். அது கேட்டு அவள் மனம் உருகி ஆற்றாளாவாள். அவளை ஆற்றவேண்டித் தலைமகன் தன் ஊர் அணித்தென்றும், அதனால் பல காலும் இருவரும் காணவும் கேட்கவும் கூடுமென்றும் வன்புறை கூறித் தன் அன்பின் மிகுதி தோன்ற அவளது கூந்தலைத் திருத்தி, உடலைத் தொட்டு, இனிய சொற்களைக் கூறிப் பிரிவான். அவன் பிரியவே தலைவி தோழியரை நாடிச் செல்வாள்.

## தலைவனும் பாங்கனும்

தலைமகள் தோழியரை அடைந்தது கண்ட தலைமகன், தான் தலைவியை அடைந்தது கனவோ என்றெண்ணி, அவளை எய்துதல் இயலாதென்று ஆற்றாமை மிகுவான். இதனால் உண்டாகிய வேறு பாட்டைப் பாங்கன் கண்டு அதன் காரணத்தை வினவத் தலைமகன் அவனுக்கு உற்றதுரைப்பான். அங்ஙனம் மனமுருகி ஆற்றாதிருத்தல் தலைமகனின் பெருமைக் குணத்திற்கு இழுக்கென்று கூறி, அவனைக் கடிந்துரைப்பான். அது கேட்ட தலைமகன் அவள் திருவுருவைக் கண்டவர் அங்ஙனம் கூறார் என எதிர்மறுத்துக் கூறுவான். அவனது ஆற்றாமையைக் கண்ட பாங்கன் தான் இடமறிந்து கூறாமைக்கு வருந்திப் பின் அவ்வுருவைக் கண்டது எவ்விடத்தது? என்று கேட்டு அறிந்து அவன் சொன்ன இடம் நோக்கிச் செல்வான். சென்று அவளைக் கண்டு தலைவன் ஆற்றாமைதக்கதே யென்றறிந்து பின்னர் அவன்பாற்

சென்று அவனை யெய்துமாறு கூறுவான் தலைமகன் அவ்விடம் நோக்கிச் சென்று தனியளாய் நின்ற தலைமகளைக் கண்டு கூட்டம் பெறுவான். இது 'பாங்கற் கூட்டம்' எனப்படும்.

## இடந்தலைப்பாடு

இனி, பாங்கனால் வினாவப்பட்டு குறியிடம் அடைதலின்றித் தானே முன் தலைமகளை எதிர்ப்பட்ட இடம் நோக்கித் 'தந்த தெய்வம் தானே தரும்' என்று சென்று அவளைக் கண்டு புணர்வதும் உண்டு. இஃது இடந்தலைப்பாடு எனப்படும். பாங்கற் கூட்டம் நிகழின் இடந் தலைப்பாடு நிகழாது, இடந்தலைப்பாடு நிகழின் பாங்கற் கூட்டம் நிகழாது

## கையுறை

தலைவியும் தோழியும் ஒருங்கேயிருக்கும் சமயமறிந்து தழையும் கண்ணியும் கையுறையாகக் கொண்டு சென்று, அவற்றைத் தோழி யிடத்துக் கொடுத்துத் தான் குறையிரப்பான். தலைவியின் வேறு பாட்டினைக் கண்டு முன்னரே ஐயுற்றிருந்த தோழி அவன்குறையிரந்து தன் பின்நிற்றல் அவள் பொருட்டே என்று அறிந்தனளாயினும், முதலில் உடன்படாது, தலைவியின் இளமை, பேதமை முதலிய வற்றைக்கூறி அவன் குறையை மறுப்பாள்; மறுக்கவே, தலைமகன் மடலேறுதல், வரைபாய்தல் முதலியவான பழிதரத்தக்க செயல்களைச் செய்தாயினும் குறைமுடிப்பேன் எனக் கூறுவான். பின்னர்த் தோழி, அவனையாற்றி அவன் குறையை முடித்து வைப்பதாகக் கூறுவாள்.

தோழி தலைமகளிடம் சென்று தலைவனுடைய பெருமையெல் லாம் எடுத்துக் கூறி, அவன் தந்த தழையையும் கண்ணியையும் புகழ்வாள். அங்ஙனம் அக்கையுறை தந்தவன் தன் காதலனென்று தலைமகளறிந்தும் அறியாள் போன்றிருப்பாள். பின்னரும் தோழி அவ னுடைய தலைமைக் குணத்தையும் அன்பையும் எடுத்துச் சொல்லிக் குறையை நயந்து கூறுவாள். தலைமகளும் அக்கையுறையை ஏற்றுத் தன் குறிப்பை உணர்த்துவாள். தோழி அவள் குறிப்பைத் தலைமகனுக் குணர்த்த அவன், தலைமகளைச் சார்ந்து கூட்டம் பெறுவான். இது பாங்கியிற் கூட்டம் எனப்படும்.

## இரவுக்குறி

இங்ஙனம் கூட்டம் பெற்ற தலைமகன் தலைமகளைக் கண்டு கூடும் இடத்தை அறிந்து, அங்கே அவளை நாள்தோறும் பகலில் அடைந்து கூடி மகிழ்வான். இது பகற்குறி எனப்படும். சுற்றத்தார்

தலைவியை இட்லிங்கண்ணே செறித்தவழித் தோழியின் உதவியால் தலைவர் அங்கே இரவிற்சென்று கூட்டம் பெறுவான். இஃது இரவுக் குறி எனப்படும்.

## அறத்தொடு நிற்றல்

இங்ஙனம் நிகழுங்கால் தலைவி, தலைவன் வரும் வழியின் அருமையையும், தாய் துஞ்சாமையையும், காவலர் கடுகினும், நிலவு வெளிப்படினும், தாய் துஞ்சாதிருப்பினும் கூட்டம் பெறாது செல்வதையும், காமம் கைம்மிகுதலையும் நினைத்து உருவம் வேறுபடுவாள். இவள் வேறுபாட்டைக் கண்ட தாய் இது தெய்வத்தால் ஆயிற்று என்று வெறியாட்டெடுப்பாள். இனியும் அக்களவொழுக்கத்தை மறைத்து வைத்தல் குற்றமாமென்று தோழியறிந்து நடந்தவற்றைக் கூறுதல் அறமென்று எண்ணிச் செவிலிக்கு அறத்தோடு நிற்பாள். செவிலி நற்றாய்க்கும், நற்றாய் தந்தை தமையன்மார்க்கும் அறத்தொடு நிற்க, அவர்கள் மணத்தை முடித்தல் நலமென்று கருதுவார்கள்.

## திருமணம்

தோழி காவலின் கடுமையையும், அவன்வரும் வழியின் கொடுமையையும் பிறவற்றையும் தலைமகனுக்கு எடுத்துக்கூறித் தலைவியை மணந்து கொள்ளுமாறு கூறுவாள். அவன் அதற்கிசைந்து வரைந்து கொள்ளுதற்கு யாதோர் இடையூறுமிராவிடின் தலைவியின் பெற்றோர் இசைவினை யறிந்து மணந்து கொள்வான்.

அங்ஙனமின்றிப் பொருட் குறைபாட்டால் மணமுடிக்க இயலாவிடின் முன்னோர் ஈட்டிய பொருள் தனக்குச் சிறப்பின்று என்று துணிந்து தானே பொருளீட்ட நினைத்துத் திருமணத்தைப் பின்னர் நடத்திக் கொள்ளலாம் என்று கூறிக் தலைமகன், தலைமகளுக்குப் பிரிவை ஆற்ற வேண்டிக் குறிப்பாகத் தெரிவித்துப், பொருள் தேடச் செல்வான். தலைமகளும் தலைவன் சொல் தவறாது இல்லில் தங்கியிருப்பாள். தோழி, அவள் ஆற்றாமை கண்டு வருந்தித் தலைவன் குறித்த பருவம் அஃது அன்றென்றும், அவன் செய்த குறிகள் கண்டமையால் அவன் வருவனென்றும் பிறவும் கூறித் தலைவியை ஆற்றுவிப்பாள் தலைவனும் தான் குறித்துச் சென்ற வினைமுடித்துக் குறித்த பருவம் வரவே மீண்டு வருவான் திரும்பிவரும் வழியின் தான் தலைவிக்குச் சொன்ன குறிகள் எல்லாம் தோன்றும் அவை பொருட்டுத் தலைமகள் ஆற்றாள் என்று தேர்ப்பாகனுக்குக் கூறித் தேரை விரையச் செலுத்தச் செய்வான். விரைந்து வந்த தலைவனைத் தோழி சந்தித்து

தலைவியை ஆற்றியிருக்குமாறு செய்த அருமையைக் கூறுவாள். பின்னர்ப் பொருள் தேடிவந்த தலைவன் சுற்றத்தார்க்குத் தன்கருத்தை தெரிவித்து அவளை மணந்து கொள்வான்.

## உடன் போக்கு

இனி, அங்ஙனமின்றிஃ அவர்கள் ஒழுகி வருங்காலத்துக் களவு வெளிப்பட்டு அலர் பெருகியவிடத்தும் பிறர் அவளை மணக்க நேரிடும் காலத்தும் தலைமகன் அவளை வெஞ்சுரத்தைக் கடந்து தன் ஊர்க்குக் கொண்டுபோக முயல்வான். இதனைத் தோழியால் அறிந்த மற்றைய சுற்றத்தாரும் சுரத்தினருமையும் தலைவியது கற்பு நிலைமையுமறிந்து அவளை அவனுக்கே வரைந்து கொடுப்பர். அங்ஙனம் மணமுடித்துக் கொடுத்ததற்கு இயலாமல் போயின் தலைவன், தலைமகளை யாரும் அறியாதபடி உடன்கொண்டு செல்வான். இதனை 'உடன்போக்கு, என்பர். சென்றவர்கள், தலைவன் ஊர்சென்று தாமே மணந்து கொள்வதுமுண்டு. செவிலியும் பிறரும் அவளைத் தேடிச் சென்று வழியில் கண்டவர்களால் அவர்கள் சுரத்திடைச் சென்றார்கள் என்று அறிந்து காணமுடியாமல் திரும்பி வருதலுமுண்டு.

இந்தக் களவொழுக்கத்தை மட்டுமே (மடலூர்தல் தவிர்த்து) விதந்து பாடியவர் நம்மாழ்வார். நம்மாழ்வார் பாடியன கீழ்வரும் கிளவித் தொகைக்குள் உள்ள கொளுவினில் காணலாகும்.

| கிளவித் தொகை | கொளு | திருவிருத்தப்பாடல் எண் |
|---|---|---|
| 1. பாங்கிமதி உடன்பாடு | 1. தகையணங்குறுத்தல் | 3, 34 |
| | 2. இறைவனை நகுதல் | 28 |
| | 3. யாரே இவர்மனத்து எண்ணம் யாது எனத் தேர்தல் | 16 |
| | 4. பெயர் வினாதல் | 11 |
| | 5. பதி வினாதல் | 76 |
| | 6. ஊர் வினாதல் | 24 |
| 2. வரைதல் வேட்கை | 1. கவினழிவுரைத்தல் | 6 |
| | 2. பாங்கி இறைவனைப் பழித்துரைத்தல் | 37 |
| | 3. வெறி விலக்குவித்தல் | 54,97 |
| | 4. காமமிக்க கழிபடர்கிளவி | 4,13,79 98,26,91 |

| | | | |
|---|---|---|---|
| 3. | வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிதல் | 1. இருவர் வம்பு என்றல் | 8,19,58,69 |
| | | 2. பூங்குழை இரங்கல் | 25 |
| | | 3. தலைமகள் ஆற்றல் | 9 |
| | | 4. மீண்டு வருங்கால் பாகனொடு சொல்லல் | 6 |
| | | 5. தோழி ஆற்றுவித்தல் | 5,14,29,42 50,71 |
| 4. | பாங்கியிற் கூட்டம் | 1. பாங்கி அருளியல் கிளத்தல் | 84,88 |
| | | 2. இறையோன் இறைவிதன்மை இயம்பல் | 7 |
| | | 3 புணர்ச்சியின் மகிழ்தல் அல்லது புகழ்தல் (இரவுக்குறி) | 15,16, |
| 5. | அறத்தொடு நிற்றல் | 1. பாங்கி வெறிவிலக்கல் | 21,82, |
| | | 2. தலைமகள் கலுழ்தல் காரணம் கூறல் | 100,67 |
| | | 3 தலைமகள் இயற்பட மொழிதல் | 64,92,93 |
| | | 4. புனல்தரு புணர்ச்சியால் அறத்தொடு நிற்றல் | 49 |
| 6. | ஒருவழித் தணத்தல் | 1. கூடலிழைத்தல் | 35 |
| | | 2. தேர்வழி நோக்கிக் கடலொடு கூறல் | 18 |
| 7. | ஒருசார் பகற்குறி | 1. பாங்கி புலம்பல் | 70 |
| | | 2. கிழவோன் பிரிந்துழிக் கிழத்தி பொழுது கண்டிரங்கல் | 36,41,81 |
| | | 3. தலைவன் நீடத் தலைவி வருந்தல் | 87,89,90 |
| 8 | வரைவு கடாதல் | 1 பிறர் வரைவு உணர்த்தல் | 22 |
| 9. | கற்பொடு புணர்ந்த கவ்வை | 1. தலைமகள் மென்மைத் தன்மைக்கிரங்கல் | 38,48 |

| | | |
|---|---|---|
| 10. பாங்கற் கூட்டம் | 1. தலைவனுக்குத் தலைவி நிலைகூறல் | 59 |
| | 2. கிழவோன் கழற்றெதிர் மறுத்தல் | 67 |

இவற்றுள் தோழி ஆற்றுவித்தல், காமமிக்க கழிபடர் கிளவி என்னுமிரு கொளுக்களில்தாம் நிரம்பப் பாடல்கள் பாடியிருக்கிறார். இவ்விரண்டு கொளுக்களில்தாம் அவலத்தை நன்கு பாட முடியும். தனக்குக் காட்சியளித்த நாராயணன் மறைந்துவிட்டதால் அவரை மீண்டும் பார்க்க நினைந்து தலைவி நிலையில் அவலங்கொண்டு வருந்துகிறார். மற்றும் பெரும்பாலும் தோழி, செவிலி, தலைவி கூற்றிலும், சிறுபான்மை பாங்கன், தலைவன் கூற்றிலும் பாடியுள்ளமையை அறியமுடிகிறது. எனவே, நம்மாழ்வார் களவியல் மட்டுமே பாடினார். மாணிக்கவாசகர் களவொடு கற்பொழுக்கத்தையும் பாடியுள்ளார்.

## கற்பொழுக்கம்

பெற்றோரால் கொடுக்கப்பட்ட தலைவியைத் தலைமகள் ஏற்று விதிப்படி மணந்துகொண்டு அவ்விருவரும் இல்லிலிருந்து ஆற்றும் அறவொழுக்கமே கற்பொழுக்கம் எனப்படும். கற்பென்பது இல்லாளுக்குச் சிறந்த தெய்வமாகிய கணவனும் பெற்றோரும் இவ்வாறொழுகவென்று கற்பித்த சொல்லைத் தலைமகள் கடைப்பிடித்து ஒழுகுவதாகும். "கற்பெனப் படுவது சொற்றிறம் பாமை"[18] என்றார் ஔவையாரும். இங்ஙனம் இல்லறம் நடத்திவரும் நாளில சில காரணத்தை முன்னிட்டுத் தலைமகன் தலைவியைப் பிரிந்து செல்வான். இங்ஙனம் பிரிந்து செல்வது ஓதற்பிரிவு, போர்வயின் பிரிவு, துணைவயின் பிரிவு போன்றதாகும். ஓதலும், தூதும், பொருளும் குறித்துத் தலைமகன் பிரிந்தால் தலைவியை உடன்கொண்டு செல்லானென்பர் நச்சினார்க்கினியர்.[19] தலைவன் வேந்தற்குற்றுழிப் பிரிந்தானாயின் பாசறைக்குத் தலைமகளை உடனழைத்துச் செல்லான்.

## பரத்தையர் பிரிவு

பரத்தையர் பொருட்டுப் பிரியும் பிரிவில் தலைமகன் வேறு நாட்டிற்குச் செல்லான். அஃது ஒரூர் ஓரிடத்தே நிகழ்வதாகும். பரத்தையர், காமக்கிழத்தியர், காதற்பரத்தையர் என இருவகையினர். காமக்கிழத்தியர் என்பார் சேரிப்பரத்தையர் போலப் பலர்க்கு

முரியாரன்றி, ஒருவற்கே யுரிமைபூண்டு வரும் குலப்பரத்தையர் மகளிராய்க்காமம் காரணமாகத் தலைமகனால் மணந்துகொள்ளப் பட்டவர்கள். காதற்பரத்தையர் என்போர் யாவரையும் விரும்பாத வியல்பினால் மிக்க சேரிப்பரத்தையருடைய மகளிராய்த் தம்மன்பினால் தலைமகனோடு கூடுவோராவர்.

தலைமகன் பொழிலிடத்தே விளையாடுதற் பொருட்டாகவும், புனலாடுதற் பொருட்டாகவும் பரத்தையரைத் தேர் மீதேற்றிச் செல்வான். தலைமகன் பரத்தையரின்பம் நுகர்ந்து மீண்டு வந்த-விடத்துத் தலைவி ஊடல் பாராட்டுவாள். தலைமகன் அவள் ஊடலைத் தணிக்கும்பொருட்டுத் தோழி, பாங்கன், பாணன், இவைபோர் முதலியவர்களை வாயில்களாகப் போக்கி, அவள் ஊடலைத் தவிர்க்கச் செய்து, சென்று சேர்வான். பின் இருவரும் கூடி இன்புற்று வாழ்வர்.

இவை யாவும் கற்பொழுக்கத்தின் பாற்படும். கற்பொழுக்கம் திருக்கோவையாரில் உள்ளது.

## கோவை இலக்கியம்

அகப்பொருள் இலக்கியங்களுள் பழமைச்சிறப்பும் புதுமைப் பொலிவும் ஒருங்கே பெற்று முதன்மையுடன் திகழ்வது கோவை. மணிகளை ஓரினமாய் ஒழுங்குபடக் கோப்பது கோவையெனப் பெயர் பெறும். அதுபோல இதுவும் அகப்பொருட் கிளவிகளை ஒழுங்குபடக் கோத்த திறத்தின் கோவையெனப் பெயராயிற்று. அகப்பொருளில் சிதறிக்கிடக்கும் அகத்துறைகளை நிரல்பட அமைத்துக் கோத்துக் கற்பனைச் செறிவுடன் பாடப்பெறும் ஒருவகை அகப்பொருள் சிற்றி லக்கியம் இது. தமிழ்ச்செய்யுட்களை நிரல்பட அமைத்தலைக் கோத்தல் என வழங்குதல், 'கோக்கும் தமிழ்க்கொத்தனைத்தும் வாழியே' (தக்கயாகப் பரணி) என்பதனால் அறியப்படுதலின் கோவை யென்னும் பெயர் நூலுக்கு ஏற்புடையதாகின்றது.[20] ஆகவே கோவை யென்பது உவமவாகுபெயர்.

இருவகைப்பட்ட முதற்பொருளும் (நிலம், காலம்), பதினான்கு வகைப்பட்ட கருப்பொருளும் (தெய்வம் முதலியன), பத்துவகைப்பட்ட உரிப்பொருளும் (புணர்தல், புணர்தல் நிமித்தம் முதலியன) பொருந்திக், கைக்கிளை முதலான அன்புடைக் காமப் பகுதியையுடைய களவொழுக்கத்தினையும் கற்பொழுக்கத்தினையும் கட்டளைக் கலித்

துறை யாப்பில் பன்னிரண்டகப் பாட்டுறுப்பும் (திணை, கைகோள், கூற்று முதலியன) தோன்றப், பல துறைகள் அமைய அகப்பொருள் நூலாகப் பாடப்படும் அரிய பெரிய நூல் கோவையாகும்.

அகப்பொருட்குரிய ஐந்திணைகளும் அமைந்திருத்தலின் இஃது ஐந்திணைக் கோவை' எனவும், அகம் பற்றியதாதலின் 'அகப்பொருட் கோவை' எனவும் வழங்கப்பெறும். "குலோத்துங்க சோழனைச் சொல்லிய வைந்திணைக் கோவை பாட"21 "திருந்து தமிழிலக்கண வைந்திணைக் கோவை",22 "தம்மை வியப்பிக் கொடுத்திடும் ஐந்திணைக் கோவை ஏற்றனையால்"23 என்னும் கூற்றுகள் 'ஐந்திணைக் கோவை' என்னும் வழக்காற்றை உறுதிப்படுத்துவன.

## கோவை இலக்கியத் தோற்றம்

நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு முதலிய நூல்களில் அகத்திணைத் துறைகள் வரிசையாக அமையாமல் அங்கொன்றும் இங்கொன்றுமாக அமைந்துள்ளன. ஆனால் அம்மூவனார் என்னும் சங்கப்புலவர் ஐங்குறுநூற்றில் நெய்தல் திணையில், தொண்டிப்பத்தில், அகப்பொருள் துறைகளை வரிசைப் படுத்திப் பாடியுள்ளார். இப்பத்துப் பாடல்களே பிற்காலத்தில் வந்த புலவர்களைக் கோவை இலக்கியத்தை வரிசைப்படுத்திப் பாடல் பாடத் தூண்டியன எனலாம். மற்றும் இறையனார் களவியலுரையே துறைகள் வரிசையாக அமையக் கோவை நூல்கள் பலவற்றிலிருந்து செய்யுள் களை எடுத்து எழுதி வகைப்படுத்தியுள்ளமையைத் தெளிவாகக் காட்டுகிறது.24

## பழமையானது பாண்டிக்கோவையா? திருக்கோவையாரா?

கோவை இலக்கிய வகையில் காலத்தால் முந்தியது எது என்பது ஆராய்தற் குரியது. இறையனாரகப்பொருள் உரையில் வரும் பாண்டிக் கோவை முழுமையாகக் கிடைக்கவில்லை. இந்நூலின் 350 பாடல்களே கிடைத்துள்ளன. இதன் பாட்டுடைத் தலைவன் பெரும்பாலும நின்றசீர் நெடுமாறனாய் இருக்கலாம் என அறிஞர் சிலர் கருதுகின்றனர். 25 இதனை இயற்றியவர் பெயர் தெரியவில்லை இக்கோவை கி பி. ஏழாம் நூற்றாண்டில் தோன்றியதெனச் சிலர் குறிக்கின்றனர்.26 வையாபுரிப்

நாட்டிய கலித்துறை நானூறு றுரைப்பது
கோட்ட மில்லாக் கோவை யாகும்''32

எனவரும் பன்னிரு பாட்டியற் சூத்திரங்களாலும்.

" முதற்பொருள் கருப்பொருள் உரிப்பொருள் முகந்து
களவு கற்பெனும் வரைவுடைத் தாகி
நலனுறு கலித்துறை நானூ றாக
ஆறிரண் டுறுப்பும் ஊறின்றி விளங்கிக்
கூறுவ தகப்பொருட் கோவை யாகும்''33

எனவரும் இலக்கண விளக்கப் பாட்டியற் சூத்திரத்தாலும் கோவை நூலின் இலக்கணம் நன்கு விளங்கும்

அகப்பொருள் இலக்கணத்தைத் தழுவி, ஐந்திணையில் திரியாததாய்ப் பொருந்திய களவு கற்பினுக்குரிய கிளவிகளையுடையதாய்க் கட்டளைக் கலித்துறை யாப்பில் நானூறு பாடல்கள் செய்யப்படுவது கோவையின் இலக்கணம் என்பதை இவற்றின் மூலம் அறியலாம். "வாது பாடில் வண்ணம் பாடு; யாவையும் பாடிக் கோவை பாடு" என்னும் பழமொழியால் கோவையின் சிறப்புணரலாம்.

இக்கோவைநூல் வகையினைச் சார்ந்தே ஒருதுறைக் கோவை, வருக்கக்கோவை எனும் நூல்கள் தோன்றின.

ஒரே துறையில் பல பாடல்கள் அமைந்திடுவது 'ஒருதுறைக கோவை' எனப்படும். இது கி. பி. 17ஆம் நூற்றாண்டில் தோன்றியது. ஒருதுறைக் கோவையில் இதுகாறும் வேண்டேச்சு மருங்கணைதல், நாணிக்கண் புதைத்தல் எனும் இருதுறைகளில் அமைந்தனவே உள்ளன.34

மொழிக்கு முதலாக வரக்கூடிய எழுத்துக்களால் தொடங்குவதாக ஒவ்வோரெழுத்திற்கும் ஒரு பாடல் வீதம் இயற்றப்பெறுவது 'வருக்கக் கோவை' யாகும். இது நானூறு பாடல்களில் குறைந்து சாதாரணமாக நூறு பாடல்களைப் பெறும்.

அகப்பொருள் துறைகள் அனைத்தும் முறையாக அமைக்கப் பெற்றுத் தலைவன் தலைவியரின் வாழ்க்கையைத் தொடர்பாக, நாடகப் போக்கில் விளக்கும் பெற்றிமை யுடையனவாகக் கோவை நூல்கள் திகழ்கின்றன. கோவையுட் கூறப்படுவனவற்றிற்கு இலக்கணம் இறையனாரகப்பொருளும், நம்பியகப்பொருளுமே ஆகும்.

தமிழ்நெறி விளக்கம் எனும் இலக்கண நூலொன்று இத்தொடர்பு முறையையே பின்பற்றி இலக்கணம் அமைக்கிறது.

அகப்பொருள் வரன்முறைப்படி பாத்திரங்களின் கூற்றுகளைச் செவ்வனே தொகுத்து அமைத்துள்ளார் இறையனார். அம்முறையைத் தழுவியே வரன்முறையின் இன்றியமையாமையினை உணர்ந்து மாணிக்க வாசகர் திருச்சிற்றம்பலக் கோவையாரை அமைத்துள்ளார்.35 கோவை நூல்களையன்றி, அகப்பொருட் செய்யுட்களைத் தொடர் பாகக் கொண்ட வேறு சில வெண்பா நூல்களும் உள்ளன. அவை களவி மாலை, களவி விளக்கம் முதலியன.

கோவை பாடுவோர் பெருங்கவிஞர்களாக இருத்தல் வேண்டும். ஆகையினாற்றான் யாப்பருங்கல விருத்தி உரையாசிரியர் கோவை, பாடும் கவிஞர்களை 'வித்தார கவி' என்றார் அவர், ''வித்தார கவியாவான், மும்மணிக்கோவையும், பன்மணிமாலையும் மறமும் கலிவெண்பாவும், மடலூர்ச்சியும் முதலாகிய நெடும் பாட்டும், கோவையும், பாசண்டமும், கூத்தும், விருத்தமும், கதை முதலாகிய செய்யுளும் இயல், இசை, நாடகங்களோடும் கலைநூல்களோடும் பொருந்தப்பாடும் பெருங்கவியெனக் கொள்க''36 என்றார்.

## கோவையின் பல வகைகள்

கோவையின் நூல்கள் கடவுள், அரசன், வள்ளல் ஆகியோர் பற்றியும், இடத்தைக் குறித்தும் பாடப்பட்டு உரிய பெயர்களால் வழங்கப்படுகின்றன.

மதுரைக் கோவை, திருவாரூர்க் கோவை, திருக்கழுக்குன்றக் கோவை திருப்பதிக் கோவை, பழநிக் கோவை, மயூரகிரிக் கோவை, திருவொற்றியூர்க் கோவை, திருவாவடுதுறைக் கோவை குற்றாலக் கோவை, சிராமலைக் கோவை, கலைசைக் கோவை, குளந்தூர்க் கோவை, சீகாழிக் கோவை முதலியன இடங்களைக் குறித்து எழுந்தவை

திருச்சிற்றம்பலக் கோவையார், தியாகேசர் கோவை, கோடீச்சுரர் கோவை ஆகியன கடவுளைப் பற்றி எழுந்தவை.

குலோத்துங்க சோழன் கோவை, பாண்டிக் கோவை முதலியன அரசரைப் பற்றி இயற்றப்பட்டவை,

தஞ்சைவாணன் கோவை, காங்கேயன் நாலாயிரக் கோவை, தமிழ் முத்தரையர் கோவை, அசதிக் கோவை, கருமாணிக்கம கப்பற்

கோவை, ஆனந்தரங்கன் கோவை, காவைவேலன் கோவை முதலியன வள்ளல்களைப் பற்றி எழுந்தவை.

மாறன் கோவை இறைவனடியார் பற்றி இயற்றப்பட்டது.

குமரகோசிரியர் கோவை, அம்பிகாபதி கோவை

ஆகியன ஆசிரியர் பற்றி எழுதப்பெற்றவை.

அமிர்த கவிராயர் இரகுநாத சேதுபதி மீது பாடிய ஒருதுறைக் கோவை இவ்வகைக்கு எடுத்துக்காட்டு. இக்கோவை 'நாணிக்கண் புதைத்தல்' என்னும் ஒரே ஒரு துறையைப் பற்றிப்பாடப்பட்டது.

மாறன் வருக்கக் கோவை, வடகரைப் பெரியசாமித் தேவர் வருக்கக்கோவை, பாம்பலங்காரர் வருக்கக் கோவை, நெல்லை வருக்கக்கோவை, சவ்ரிப்பெருமாள் வருக்கக் கோவை, மதுரைச் சொக்கநாதர் வருக்கக் கோவை, முத்துசாமி தேவர் வருக்கக் கோவை, ஆதிவராகர் வருக்கக் கோவை, சசிவர்ணன் வருக்கக் கோவை முதலியன வருக்கக்கோவை வகையின.

## பாடல் எண்ணிக்கை அளவு

கோவை நூல்கள் நானூறு கட்டளைக் கலித்துறைகளில் அமைந்தவை. இவற்றுள் சில ஆசிரியம், வெண்பா ஆகிய பாக்களில் பாடப்பட்டுள்ளன. சில கோவை நூல்களில் நானூறு பாடல்களைக் காட்டிலும் மிகுதியாக அமைந்துள்ளன.

ஒட்டக்கூத்தர் இயற்றிய காங்கேயன் நாலாயிரக் கோவையில் 4000 பாடல்கள் உண்டு என்பர்.37

அம்பிகாபதி கோவை (568), மயூரகிரிக் கோவை (536), சீகாழிக் கோவை (531), திருப்பதிக்கோவை (527), திருவாரூர்க் கோவை (515), மாறன் கோவை (511), குலோத்துங்க சோழன் கோவை (510), குற்றாலக் கோவை (459), திருவாவடுதுறைக் கோவை (457), திருக்கழுக்குன்றக் கோவை (455), வியாசைக் கோவை (449), கோடீசுவரர் கோவை (443), குளத்தூர்க் கோவை (438), தஞ்சைவாணன் கோவை (425), திருவெங்கைக்கோவை (411), மதுரைக்கோவை (408), முதலான கோவை நூல்கள் நானூறுக்கு மேற்பட்ட பாடல்களைக் கொண்டவை.

நானூறு பாடல்களுக்குக் குறைவாக உள்ள கோவை நூல்களும் உண்டு. பாண்டிக் கோவையில் 350 பாடல்கள் மட்டுமே கிடைத்து உள்ளன. கோவைச் சதகம் எனும் நூல் மற்ற சதகங்களைப் போல

நூறு பாடல்களை மட்டுமே கொண்டுள்ளது. திருவிருத்தமும் இங்ஙனமே நூறு பாடல்களைக் கொண்டுள்ளது.

## கோவை முடிவு

போர்க்குச் சென்று மீண்டுவந்த தலைவன் தலைவியோடு உடனிருந்து கார்ப்பருவம் கண்டு 'முகிலே, இனிப் பொழியத் தடை இல்லை, என்றான் என்பது தஞ்சைவாணன் கோவை முடிவு.

பரத்தையர் பிரிவு காரணமாக வந்த ஊடலைத் தீர்த்துத் தலைவன் தலைவியை இன்பமுயக்கம் செய்கிறான் என்பது திருக் கோவையார் முடிவு

ஓதற்குப் பிரிந்து திரும்பிவந்த தலைமகன் மனைவியோடிருந்து இன்புற்று இறைவன் திருவடிகளை நினைக்கிறான் என்பது மதுரைக் கோவை முடிவு.

பொருள்வயின் பிரிந்த தலைவன் காதலியை வீட்டிலே கூடி யிருக்கும்போது, ''செழுங்கொண்டலே, இறைவன் திருவடிபோலத் திங்கள் மும்மாரி பொழிக!'' என்று ஏவுகிறான் என்பது கலைசைக் கோவை திருவாவடுதுறைக் கோவை முடிவுகள்.

தலைவியைக் கூடிய தலைவன் முகிலை வாழ்த்துகிறான் என்று திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் தாம் பாடிய மூன்று கோவைகளிலும் (சீகாழிக் கோவை, வியாசைக் கோவை, குளத்தூர்க் கோவை) மொழிவார். கோவையென்பது அகப்பொருட் கோவையாதலின் இங்ஙனம் முடிவதே சிறப்பு.

தலைமக்கள் இருவரும் அறம்புரி சுற்றம் துணையாகத் துறவுள்ளம் மேற்கொண்டு, மெய்யுணர்வெய்தி, அவாவறுத்துச் சிறந்தது எனப்படும் வீடுபேற்றுக்குச் சமைகின்றனர் அவரது காதலன்பு, வீடு காதலிக்கும் வியன்பேரன்பாய் மிளிர்கின்றது. இவ்வாறு 'கிழவனும் கிழத்தியும் சிறந்தது பயிற்றல் இறந்ததன பயனே' என்பதற்கேற்ப முடிவது அம்பிகாபதி கோவை.

> ''அல்லொடு நன்பகல் ஐம்புல னாரும் போகந்துய்த்து
> வல்லியும் மல்லல் வரையபு யாறும் மாதருமே
> சொல்லிய கேள்வித் துறைமுடி வாய்ந்து துணைவியரோ
> டில்லறங் காத்துத் துறவறந் தாங்கல் இசைந்தனரே''

என்பது அம்பிகாபதி முடிவுப்பாடல். மாறன் வருக்கக்கோவை,

ஆனந்தரங்கன் கோவை ஆகியன அம்பிகாபதி கோவையை யொட்டி முடிந்துள்ளன.

## கோவையில் நாயகன்-நாயகி பாவம்

சங்க காலத்தில் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, அகநானூறு முதலிய நூல்களில் தலைவன்-தலைவி கூற்றிலமைந்துப் பாடல்கள் பாடப்பட்டுள்ளன. பல்லவர் காலத்தில் பக்தி இயக்கம் தோன்றியது. ஆழ்வார்களும் நாயன்மார்களும் தம்மை நாயகியாகவும், கடவுளை நாயகனாகவும் கொண்டு பாடத் தொடங்கினர். இங்ஙனம் தேவாரத்தில் திருவிருத்தமும் (270,) நாலாயிரத் திவ்விய பிரபந்தத்தில் திருவிருத்தமும், சிறிய திருமடலும், பெரிய திருமடலும், பெரிய திருமொழியில் 14 பதிகங்களும், திருவாய்மொழியில் 22 பதிகங்களும் இவ்வாறு பாடப்பட்டுள்ளன.

நம்மாழ்வார் தம் திருவாய்மொழியில் தலைவி கூற்றாகப் பதினான்கு பதிகங்களும், தோழி கூற்றாக இரண்டு பதிகங்களும், தாய்க் கூற்றாக ஆறு பதிகங்களும் பாடியுள்ளார்.

திருமங்கையாழ்வார் இயற்றிய பெரிய திருமொழியில் தாயக் கூற்றாக எட்டுப் பதிகங்களும், தலைவி கூற்றாக ஆறு பதிகங்களும் உள்ளன.

நாயகன், நாயகி என்பன வடசொற்கள். தலைவன், தலைவி யென்ற தமிழ்ச்சொற்கள் உலகியற் காதலரை உணர்த்தப் பயின்று தமிழ்மொழியில் வழங்கி வந்ததால் நாயகன்-நாயகி என்ற சொற்கள் தெய்வீகக் காதலரை உணர்த்துதற்கு ஆளப்பட்டிருக்க வேண்டும். ‘பாவம்’ என்ற வடசொல் பாவனை செய்தலை உணர்த்தும்; உளவியலில் ‘பாவனை விளையாட்டு’ என்று கல்வியியல் வல்லுநர்கள் கூறுவதும் அஃதே. எனவே, இறைவன், ஆன்மா இரண்டனையும் நாயகன் நாயகியாகப் பாவனை செய்யப்படுதலையே ‘நாயக-நாயகி பாவம்’ உணர்த்துவதாகக் கொள்ள வேண்டும்.

> ‘‘தெய்வ நிலையை-தெய்வீகக் காட்சியை நிலை
> நாட்டுவதுதான் கவிஞனுடைய அமரத் தொழிலாகும்.
> ஆண்டவனுடைய அடியார்களாகக் கவிதை புனையலாம்.
> அவன் குழந்தையாயிருந்து பாட்டிசைக்கலாம். அவன்
> தலைவியாய் நின்று தன் உணர்ச்சி வெள்ளத்தைச்
> செஞ்சொற்களால் பாயும்படி செய்யலாம்’’38

என்று பாட்மூர் கூறுகிறார். இதற்கேற்ப அமைந்ததே 'நாயக-நாயகி பாவ'ப் பாடல்கள்.

## பாலுணர்வு

நாயகன் நாயகி பாவம் பாலுணர்வை அடிப்படையாகக் கொண்டது. இப்பாலுணர்வே தலைவன் தலைவி உறவை ஏற்படுத்துகிறது. "உலக வாழ்க்கையிலே அமைந்துள்ள உறவு முறைகள் பல வகையின. அவை யாவற்றிற்கும் சிகரமாகத் தலைவன் தலைவி உறவு முறை அமைந்துள்ளது. ஏனைய உறவு முறைகள் யாவும் தலைவன் தலைவி உறவுமுறையோடு ஒப்பிடும்போது ஒளியிழந்து குறுகுகின்றன. மனித வாழ்வு முழுவதையும் பாலுணர்வு நெறிப்படுத்துகிறது"[89] என்று சிக்மண்ட் ஃப்ராய்ட் எனும் உளவியலறிஞர் கூறியுள்ளார். எனவே, பாலுணர்வு மனித வாழ்க்கையிலே மிகவும் செல்வாக்குள்ள சக்தி என்பதனை அறியலாம்.

## சமயங்களில் நாயக-நாயகி பாவம்

இறைவன், ஆன்மா என்பவற்றுக்கிடையிலான தெய்வீக உறவை தலைவன், தலைவியர்க்கிடையிலான உலகியல் உறவாகப் பாவனை செய்யப்படுதலையே 'நாயக நாயகி பாவம்' என்ற தொடர் உணர்த்துகிறது. நாயகன், நாயகி பாவம் தமிழ் இலக்கியத்திற்கு மட்டுமே சிறப்பாக உரியதன்று. ஆங்கிலத்தில் 'Bridal Mysticism' என்று வழங்கப்படும் நாயகன் நாயகி பாவம் இடைக்காலத்தில் வாழ்ந்த கத்தோலிக்க ஞானிகள் சிலராலும், இசுலாமிய சூஃபி ஞானிகள் சிலராலும் கையாளப்பட்டுள்ளது. பக்தியியக்கம் இந்தியா முழுமையும் பரவியபோது பிற இந்திய மொழிகள் பலவற்றிலும் நாயகன், நாயகி பாவச் செய்யுட்கள் தோன்றின. தமிழில் அகப்பொருள் இலக்கியங்களும், அவற்றிற்கொப்பத் தொல்காப்பியத்தில் பொருளிலக்கணமும் தோன்றியதால், நாயகன்-நாயகி பாவச் செய்யுட்கள் தமிழில் சைவ, வைணவ சமயங்களில் பெருந்தொகையாக எழுந்துள்ளன.

## பல்லவர் காலத்தில் அருட்பாடல்கள்

சங்க காலத்தில் உலகியற் காதலின் நுட்பவுணர்வுகளை வெவ்வேறு வகையிலே சித்திரித்துப் பாடிவந்த தமிழ்ப்புலவர்கள் பல்லவர் காலத்தில் தெய்வீகக் காதற் பாடல்களைப் பெருந்தொகையாகப் பாடியதற்கு அக்காலச் சூழ்நிலையும் ஒரு காரணம் ஆகும். இவர்கள் காலத்தில் சிவபெருமான், திருமால் எனும் இருவர் மேலும் எழுந்த அருட்பாடல்கள் பதின்மூவாயிரத்துக்கும் அதிகமாகும்.

சங்க காலத்திற்குப் பின்பு தமிழ்நாட்டின் பெரும்பகுதி களப்பிரர்களால் ஆளப்பட்டு வந்தது. அவர்கள் தமிழ்க்கவிஞர்களை ஆதரிக்கவில்லை. தமிழ்க்கவிஞர்களும் மன்னர்களைப் புகழ்ந்து பாட விரும்பவில்லை. அதற்கடுத்த பல்லவர் காலத்திலே இசையும் கூத்தும் இறைவனுக்கே அர்ப்பணம் செய்யப்பெற்றுள்ளன. சமண பௌத்தர்களின் அரசச் செல்வாக்கால் காதலும் போரும் வெறுக்கப்பட்டன. ஆனால், சைவ வைணவர் உணர்ச்சியை இறைவன் மேற் செலுத்துக என்று யாண்டும் பரப்பிய பிரசாரம் சமண பௌத்தரின் கருத்தைத் தோற்றோடச் செய்தது.

## தலைவி பாவனை-நாயகி பாவனை

அன்பின் ஐந்திணை மரபு. தலைவி மனநிலையைப் பெரும்பாலும் எடுத்துக் கூறுகிறது. புணர்தல், பிரிதல், இரங்கல், இருத்தல், ஊடல் என்பன சங்க காலத்திலும் கூடத் தலைவிக்கு மட்டுமே உரியனவாக விளக்கப்படுகின்றன. பொருள்வயின் பிரிவால் தலைவியை நினைந்து தலைவன் வருந்துதலைவிட, தலைவனைப் பிரிந்து தலைவி வருந்துவதே பெரும்பான்மையாகப் புலவர்களால் சித்திரிக்கப்படுகிறது. எனவே, சங்க அகத்திணைப் பாடல்களில் தலைவியின் மனநிலையே பெரும்பான்மையாகச் சித்திரிக்கப்பட்டுள்ளது எனலாம். இதனையொட்டிப் பல்லவர் காலப் பக்திப் பாடல்களிலும் நாயகி மனநிலையே மிகுதியாகப் பாடப்பட்டுள்ளது. அகத்திணைப் பாடல்களைப் பாடியவர்கள் பெரும்பாலும் ஆண்பாற் புலவர்களே. அவர்கள் பாடல்களில் பெண் மனநிலையை அதிகமாக விதந்து பாடியிருப்பது கண்கூடு பெண்டிர் மனம் உணர்ச்சி மிக்கதாகக் கொள்ளப்படுவதனால். பெண்ணின் உணர்ச்சியை இலக்கியப் பொருளாக்கியுள்ளனர். வீட்டினுள் தனித்துத் தலைவனைப் பிரிந்திருக்கும் பெண்ணைக் காதலுணர்ச்சிமிகவும் பாதிக்குமாதலால் பெண்மனம் காதல் துன்பத்தின் அவலத்தைக்காட்டச் சிறந்தது என ஆண்பாற் புலவர்கள் கருதியிருக்கலாம். மற்றும், பெண்கள் தமக்காக ஏங்குவதைப் பற்றிக் கற்பனை செய்வது ஆண்பாற் புலவர்களுக்கு இயல்பாக இருந்திருக்கலாம். காரணம் எதுவாயினும் 'தலைவி பாவனை' சங்க கால வழக்கு. 'நாயகி பாவனை' பல்லவர் காலத்தில் அதன்வழி வளர்ந்த நிலை.

ஆண்டாள் இறைவனை நாயகனாக நோக்குகிறார். மணிவாசகரும் நம்மாழ்வாரும் இறைவனை நாயகியாக நோக்குகின்றனர். ரமணர் 'அட்சரமண மாலை' என்னும் தோத்திர நூலில் அருணாசலேசுவரரை நாயகி பாவமாகக் கருதி வழிபடுகிறார் 40

## கிறித்தவர் கவிதைகள்

கிறித்தவ அருளாளர் ஞானி பெர்னார்டு என்பார் 'உயிர்த் தலைவியின் உண்மைத்தலைவன் கிறித்து நாதனே''41 என்கிறார். பிறிதோர் அருட்சான்றோராகிய ஞானி ஜான்,

> மலர்ந்த என் கொங்கைகள் அவனுக்கேயாகும்.
> அவனையன்றி வேறு யாருக்குமே இல்லை. என்
> தலைவனுக்கு நான் அந்தக் குவிந்த கொங்கை
> களிடமே துயில்கொள்ளும் நிலையை அளித்திட்டேன்''42

என்கிறார். இங்ஙனமே மாணிக்கவாசகர் திருவெம்பாவையில்,

"எம்கொங்கை நின் அன்பர் அல்லார்தோள் சேரற்க''43 என்கிறார்.

## வியாக்கியானங்களில் நாயக நாயகி பாவம்

நாயகன். நாயகி பாவம் நம்மாழ்வார் பாடிய திருவிருத்தத்திலும் திருவாய்மொழியிலுமுள்ளது. விரிவும் விளக்கமும் கருதி ஆறாயிரப்படி, பன்னீராயிரப்படி, பதினெண்ணாயிரப்படி, முப்பத்தாறாயிரப்படி என ஒன்றன்மேலொன்று அதிகரித்து எழுந்த உரைகள் நாயகன் நாயகி பாவத்தை மிக நுட்பமாக ஆராய்ந்துள்ளன.

கோபிகையரோடு கண்ணன் இயற்றிய லீலைகள் நாயகன், நாயகி பாவம் பாடப் பெரும்பாலும் கவிதைப் பொருளாகின்றன. கண்ணன் கோபிகையரோடு சேர்ந்து ஆடியதும் அவர்கள் கண்ணன் மேல் மையல்கொண்டு வருந்தியதும் ஆழ்வார்களைப் பெரிதும் கவர்ந்துள்ளன. நாயகன், நாயகி பாவத்திலே தொடர்ச்சியாக, அந்தாதி முறையிலே பன்னூறு பாடல்கள் பாடிப் பகவத் காமத்திலே திளைத்தார் நம்மாழ்வார் குலசேகர ஆழ்வார், திருமங்கை ஆழ்வார், ஆண்டாள், பெரியாழ்வார், திருப்பாணாழ்வார் ஆகியோர் நாயகன், நாயகி பாவத்திலே பாடியிருந்தாலும் நம்மாழ்வார் பாடல்களிலேயே அது சிறந்து விளங்குகின்றது.

திருப்பாணாழ்வார் அரங்களிடத்திலே ஆராக்காதல் கொண்ட தலைவியாகத் தன்னை ஒரு பதிகத்திலே கூறுகிறார். 44 பெரியாழ்வார் தம் இறுதிப் பகுதிகள் சிலவற்றில் தம்மை நாயகியாகப் பாவனை செய்து உள்ளார். இராமனைப் பிரிந்து வருந்தும் சீதையாகவும் கண்ணனுக்காக ஏங்கும் கோபிகையாகவும் இவர் பாடல்களை யாத்துள்ளார். 45

குலசேகரர், பெருமாள் திருமொழியில் ஆறு, ஏழாம் பத்துக்களிலே நாயகன் நாயகி பாவத்திலே பாடல்கள் பாடியுள்ளார். 46 திருமங்கை யாழ்வார் தலைவி கூற்று, தாய்க்கூற்றுகளிலே பதிகங்கள் பாடியதோடு சிறிய திருமடல், பெரிய திருமடல்களையும் பாடியுள்ளார். 47

> " நாம் இறைவனோடு கொள்ளும் காதலுறவு
> ஒருபோதும் கைக்கிளை அன்று; நாம் அவனைக்
> காதலித்துத் தேடும் ஆர்வத்திலும் பன்னூறு மடங்கு
> அவன் நம்மைக் காதலித்துத் தேடி வருகிறான்
>
> நாம் அவனது திருவருளுக்கு ஏங்கிக் கிடப்பது
> போலவே அவனும் நமது அன்புக்கு ஏங்கிக்
> கிடக்கிறான். அதுதானே இருதலையும்ஒத்த
> எழிற்பெருங்காதல்,, 48

என்னும் கருத்து இங்கு நினைக்கத்தக்கது.

## தூய காதலே கடவுட் காதல்

காட்சி, காதலன் வாழ்க்கையில் ஒரு பெரும் புரட்சியாகும். நீர் ஓட்டத்தின்வழி வெள்ளத்தில் புல்சாய்ந்தாற்போலத் தலைவனும் இயற்கை அல்லது கடவுளது சட்டமாகும் பால்வழி யோடிப்பின் முனைப் படங்கி நிற்கிறான்.

> " அதுவே
> தானே அவளே தமியர் காணக்
> காமப் புணர்ச்சி இருவயின் ஒத்தல்,, 49

என்னும் இறையனார் களவியல் சூத்திரத்திற்கு நக்கீரர் காணும், உரையில் விளக்கப்பெறும் நிலை, திருமூலர் காணும்,

> " அன்பும் சிவமும் இரண்டென்ப ரறிவிலார்
> அன்பே சிவமான தாரு மறிகிலார்
> அன்பே சிவமான தாரு மறிந்தபின்
> அன்பே சிவமா யமர்ந்திருந் தாரே" 50

என்னும் பாடலினபடி அன்பே சிவமாம் நிலைக்கு ஒத்திருக்கக் காண் கிறோம். இறையனாரின் இந்தச் சூத்திரம்' அவனே தானேயாகிய அந்நெறி' 51 என்னும் சிவஞான போதத்தோடு ஒருங்குவைத்து ஆராயத்தக்கது. இந்த இன்பத்தினைக் கடவுள் இன்பத்தோடு சான்றோர் உவமை கூறுதலையும் காண்கிறோம்.

> " தாம்வீழ்வார் மென்றோள் துயிலின் இனிதுகொல்
> தாமரைக் கண்ணா னுலகு" 52

" உறுதோறு உயிர்தளிர்ப்பத் தீண்டலால் பேதைக்கு
அமிழ்தின் இயன்றன தோள்" 53

எனும் குறள்கள் 'இவள் தோள்களில் துயில்வதைக் காட்டிலும் அதிகமான இன்பம் திருமாலிருக்கும் வைகுண்டத்திலிருக்குமோ' என்றும், 'இவள் தோள்கள் என்னைத் தீண்டுவதால் அத்தோள்கள் தேவாமுதத்தால் செய்யப்பட்டனவாயிருத்தல் வேண்டும்' என்னும் பொருளை உடையனவாயிருத்தலால் சிற்றின்பம் பேரின்பத்திற்கு வழிகோலுதல் காணலாம்.

மேலும் 'சர்வகந்த', சர்வரச என ஆண்டவனைக் கூறுவது போல,

" வேட்ட பொழுதின் அவையவை போலுமே
தோட்டார் கதுப்பினாள் தோள்' 54

என்று கூறுவதும் கருதத்தக்கது.

" பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர்" '55

" உடம்பொடு உயிரிடை என்னமற் றன்ன
மடந்தையொடு எம்மிடை நட்பு" '56

என அத்துவித நிலைக்குப் பல உவமைகள் வருகின்றன.

" அறிதோறும் அறியாமை கண்டற்றால் காமம்
செறிதோறும் சேயிழை மாட்டு" '57

என்னும் குறளில் வரும் உவமையும் சிறந்த குறிக்கோளை உணர்த்துகின்றது.

" தம்மி லிருந்து தமதுபாத் துண்டற்றால்
அம்மா அரிவை முயக்கு' 58

எனும் குறள் 'உழைத்தது கொண்டு உண்டலின் உயர்வும் இனிமையும் பாத்துண்டலின் மேன்மையும் இன்பமும்' உணர்த்துகிறது. இதுவும் காதலின்பத்திற்குச் சிறந்த உவமையைத் தரும் குறள் ஆகும்.

இங்ஙனம், காதலைத் தூய்மை செய்து கடவுட் காதலாக மாற்றி விடுகிறார் வள்ளுவர். அகத்திணை நேரே சிற்றின்பத்தையும், உள்ளுறை வகையான் பேரின்பத்தையும் கூறுவதாக உள்ளது. வள்ளுவர் வகுத்த தூய காதல் நெறியே இவர்களுக்கு வழியாக (மாணிக்கவாசகர், நம்மாழ்வார்) அமைந்தது. "கண்ணனுக்கே ஆமது காமம்" '59 எனும் இராமானுச நூற்றந்தாதிப் பாடல் காமத்திற்குக் காதற் பொருளைக் கொண்டுள்ளது.

இத்தகைய சிறப்புடைமையினால்தான் களவியலுரையாசிரியர் அதனை, ''ஒருவனோடொருத்தியிடை நிகழும் அன்பு விசேட இலக்கணமுடைத்து' என்று விதந்து கூறுவாராயினர்.60 காதற்காமமே சிறந்ததோர் இன்பம் பயத்தலின் இதனையே இறையடியார்களும் தங்கள் அருட்பாடல்களில் பயன்படுத்துவாராயினர்.

## கண்ணுதலான் நினைவு

திருக்கோவையாரின் பாட்டுடைத்தலைவன் தில்லைத் திருச் சிற்றம்பலவன் ஆதலின் ஒவ்வொரு திருப்பாட்டையும் ஓதுந்தொறும் அவன்றன் பொருள்சேர் புகழ் பலவகையாகப் பன்முறை ஓதப்பெறும். அந்நிலையில் காதலர் தம் தூய உள்ளத்தில் அவன்றன் தூய திருவடியே மறவா நினைவால் விளங்கி நிற்கும். காதலர் சிவமும் சக்தியுமாகவே காணப்படுகின்றனர்.

செவிலித்தாய் வழிப்போக்கரை நோக்கி 'உங்கள் எதிரே நம்பியும் நங்கையும் சென்றனரோ? என்று கேட்க, அவர்கள் கூறுவது நமது மனத்தைத் தொடுகிறது; பேரின்பப் பொருளைக் காட்டுகிறது.

காதலில் பிணைப்புண்ட இருவர் உடன்போக்கின்கண் காட்டிடை நடந்து சென்றனர். காதற்கனிவோடு அவ்விருவரும் கசிந்து குழைந்து ஓர் உடம்பே என இணைந்து இயன்ற அழகினைக் கண்டோரெல்லாம் சிவமும் சக்தியும் இணைந்த காட்சியே இது எனக் கைதொழுதார்கள். அவர்கள் இருவரும் கூடி நடந்த கோலத்தால் காலிலே ஒரு பக்கம் வீரக்கழலும், ஒருபக்கம் சிலம்பும் ஒளிவீசிக் காட்சி அளித்தன. இடையிலே ஒருபக்கம் ஆண் உடுத்திய வெண்பட்டும், ஒருபக்கம் பெண் உடுத்திய செந்நிறப்பட்டும் விளங்கின. இவ்வாறு அணியும் ஆடையும் வேறுபட்டனவே யன்றி அவர்களிருவரும் ஒருவர் போவது போலவே நடந்தனர். அவர்களைக் கண்டவர்கள், ''ஆகா! என்ன புண்ணியம் செய்தோம் இவ்வழகு காட்சியைக் காண'' என்று கூறி உமாபதிபாகிய அம்மையப்பரின் கோலத்தை நினைந்து கைதொழுதனராம். இப்பாட்டின் உரையில் பேராசிரியர், ''எல்லா வற்றையும் உடையனாகிய தன் காதலியொடு ஒருவடிவாய் விளையாடும் புலியூரான் என்றே கருதி யாங்கள் எல்லாம் ஒத்துப் பெரிதும் அவ்வழகைத் தொழ நினைத்தோம்''என்று எழுதியுள்ளார்

இங்ஙனமே நச்சினார்க்கினியர் தம் உரைக்கு மேற்கோள் ஒன்றனை எடுத்துக்காட்டி யிருப்பது ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது. அது:

''சிலம்பும் சிறுநு தலும் சில்குழலும்
பல்வளையும் ஒருபால் தோன்ற
அலங்கலந் திண்டோளு மாடெருத்தும்
ஒண்குழையும் ஒருபால் தோன்ற
விலங்கல் அருஞ்சுரத்து வேறுருவின்
ஒருடம்பாய் வருவார் கண்டே
அலங்கல் அவிர்சடை யெம்மண்ணல்
விளையாட் டென்றகன்றேம் பாவம்''62

இவ்வாறு பாடுபவர் திருநாவுக்கரசர். இவர் இங்கு எல்லாவற்றையும் சொல்லமுடியாமல் அர்த்தநாரீசுவர வடிவத்திலே மெய்ம்மறந்தார். எனவே, மாணிக்கவாசகர் இவர் சொல்ல மறந்ததைச் சொல்கிறார்.

தோலும் துகிலும் குழையும் சுருள் தோடும்
பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்
சூலமும் தொக்க வளையும் உடைத்தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ''63

மாணிக்கவாசகரின் இந்தப் பாடலுக்கு ஏற்ற விளக்கம் தரும் வகையில் கும்பகோணம் கீழ்க்கோட்டம் நாகேசுவரசுவாமி கோயிலிலே கருவறைச் சுவரிலே மேற்கே பார்த்த கோலத்தில் நிற்கும் மாதொரு பாகன் காட்சி தருகிறான்64.

## இருநூல்களில் இறைவன்

இரு சமய நூல்களிலும் இறைவன் எவ்வாறு பாடப் பெற்றுள்ளான் என்பதற்கு ஒவ்வொரு சான்று இங்குக் காட்டப் படுகிறது.

''குருநாள் மலர்ப்பொழில் சூழ் தில்லைக் கூத்தனையேத் தலர்'' எனும் உவமையைத் தலைவி தன் நாணம் அகன்றமைக்காக வருந்தும்போது கூறுகிறாள்.

''நிறமுடைத்தாகிய செல்வி மலருடைய சோலை சூழப்பட்ட பெரும்பற்றப் புலியூரில் கூத்தரை வாழ்த்தாதாரைப் போல மேல்வரும் நாள்கள் இங்ஙனே நாணழியப் பெறாதொழியப் பெறுவேனோ?'' என்கிறாள்.65.

மேகத்தைப் பார்த்ததும் தலைவிக்குத் திருமால் நினைவுதான் வருகிறது. ''நீங்கள் கருமைநிறம் பெற்றீர்களே எவ்வாறு?'' என்று தலைவி வினவும்போது ஆழ்வார் திருமாலைச் சார்த்தியுரைக்கிறார்.

''மேகங்களே! உரையீர், திருமால் திருமேனியொக்கும் யோகங்கள் நீங்கள் எவ்வாறு பெற்றீர்? நீங்கள் தவம்செய்து பெற்றீர்களா?''66 என்கிறாள். இதனால் தானும் அவ்வாறு தவம்செய்து தன் காதலைச் சித்தியடையச் செய்ய இயலும் என்று எண்ணுகிறாள்.

## முடிவுரை

தமிழில் மட்டுமே அகப்பொருள், புறப்பொருள் அமைந்து பொருளிலக்கணம் தொல்காப்பியரால் பாடப்பட்டுள்ளது; தமிழின் சிறப்பு இதனால் உணரப்படுகிறது.

களவொழுக்கம், கற்பொழுக்கம் என்பனவற்றின் அடிப்படையில் அன்பின் ஐந்திணை நெடுங்காலமாகத் தமிழில் பாடப்பட்டு வருகிறது.

அகப்பொருளின் மலர்ச்சியாகக் கோவை இலக்கியம் தோன்றியது. திருக்கோவையாரே முழுமையாகக் கிடைத்துள்ள முதல் கோவை இலக்கியம்.

களவொழுக்கத்திலுள்ள பல்வேறு கிளவிகளில் அமைந்த கொளுக்களுக்குரிய பாடல்களை நம்மாழ்வார் தம் திருவிருத்தத்தில் பாடியுள்ளார்.

களவொழுக்கம், கற்பொழுக்கம் ஆகிய இரண்டையும் பாடுகிறது திருக்கோவையார்.

'நாயக-நாயகி பாவம்' சங்கப் பாடல்களின் விளைவால் பின்னர்ப் பல்லவர் காலத்தில் தோன்றியது; சைவ வைணவ அடியார்களால பாடப்பெற்றது.

நாலாயிரத் திவ்விய பிரபந்த வியாக்கியானங்கள் நாயக நாயகி பாவ உணர்வுப் பாடல்களுக்கு உரைவிளக்கம் தரப் பெரிதும் முயன்றிருக்கின்றன.

உடன்போக்கில் காதலர் செல்வது மாதொரு பாகனை நினைவிற்குக்கொண்டு வருகிறது; தவமிருந்து திருமாலிடம் கருமைநிறத்தைப் பெற்றது மேகம். இவ்வாறு பாடும் இருவரின் பாடல்களில் காதல் தெய்வீகமணம் கமழ விளங்குகிறது.

வட்ட விளக்கப்படம்

திருவிருத்தம்



வட்ட விளககப்படம்

திருக்கோவையார்



அகப்பொருள் நூற்பாக்கள்
திருவிருத்தம
பட்டை விளககப்படம்



அகப்பொருள் நூற்பாக்கள் - திருக்கோவையார்

பட்டை விளக்கப்படம்



"இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு
அன்பொடு புணர்ந்த ஐந்திணை"

இயல்–மூன்று

# கோவை நூல்களின் தோற்றமும் வளர்ச்சியும்

## குறிப்புகள்

1. தொல். பொருள். இளம்பூரணம், தோற்றுவாய் ப.2.
2. தொல். பொருள். நச்சினார்க்கினியம், அகத்திணையியல், நூ.1 உரை.
3. க.ப. அறவாணன், 'அற்றைநாட் காதலும் வீரமும்' ஆப்பிரிக்க அடிப்படை ஆய்வகம், தக்கார் பல்கலைக்கழகம், தக்கார், செனகல், 1978, ப.5.
4. தொல். பொருள். களவியல், நூ.1.
5. இறையனார் களவியலுரை, நூ.1.
6. மே நூ., ப.37.
7. நம்பியகப்பொருள் விளக்கம், நூ 1.
8. உ.வே. சாமிநாதய்யர் (ப-ர்), 'பத்துப்பாட்டு', குறிஞ்சிப்பாட்டு, சென்னை, 1956, ப.512.
9. பரிபாடல், பா.9.
10. D. Natarajan, '**Studies in Tirukkovaiyar**', p.33.
11. Ibid., p 11
12. குறள் 92.
13. குறள் 282.
14. மணிமேகலை, காதை 22, அடிகள் 45–46
15. மொ.அ. துரை அரங்கசாமி, 'கலைக்கதிர்' இதழ், தொகுதி 13. ப.10.
16. குறள் 292.
17. இறையனாரகப்பொருளுரை, கழகம், சென்னை, 1958, ப.11.
18. ஔவையார், கொன்றைவேந்தன், 14.
19. தொல். பொருள். அகத்திணையியல், நூ.34, உரை.
20. உ.வே. சாமிநாதய்யர் (பு-ர்), 'உண்ணாமுலை எல்லப்ப நயினார் திருவாரூர்க் கோவை', சென்னை, 1937. முகவுரை, ப.8.

21. உ.வே. சாமிநாதய்யர் (ப-ர்) 'கோடீசுவரக் கோவை', நூன்முகம், சென்னை, 1932, ப.12.

22. மே.நூ ப. 12.

23. ,, ,,

24. D. Natarajan, Studies in Tirukkovaiyar, p.9.

25. சொ. சிங்காரவேலன், 'சிற்றிலக்கியச் சொற்பொழிவுகள்', கழகம், சென்னை, ப.26.

26. மே.நூ. ப.26.

27. வே. துரைசாமி (ப-ர்) 'பாண்டிக் கோவை' அணிந்துரை, ப.2.

28. மே.நூ. ப.2.

29. ஐந்திணை அகநூல், முன் இணைப்பு 2, ப.30.

30. பாண்டிக் கோவை, அணிந்துரை, ப.2.

31. பன்னிரு பாட்டியல், நூ. 221.

32. இலக்கண விளக்கம், நூ. 816, கி. இராமானுஜையங்கார் (ப-ர்)

33. மாறனகப் பொருளும் திருப்பதிக் கோவையும்', முன்னுரை ப.2.

34. திருவாரூர்க் கோவை, முகவுரை, ப.4.

35. D. Natarajan, Studies in Tirukkovaiyar, p.42.

36. இரா. இளங்குமரன் (ப-ர்), யாப்பருங்கல விருத்தியுரை, ஒழிபியல் கழகம், சென்னை, 1976, பா.552.

37. ஏ எஸ். முத்தையா முதலியார் (ப-ர்), 'குற்றாலக் கோவை', 1939, முகவுரை, ப.2.

"ஏற்றிடும் பாட்டுடைத் தலைவனூர்ப் பெயரினை
இசைத்து மெண்ணாற் பெயர்பெற
ஈரைந்து கவிமுதல் ஆயிரம் வரைசொல்
எண்செய்யு ளாகும் அன்றே"

என்பது பிரபந்த தீபிகை (பாடல் 14) என்னும் இப்பாடலை அடிப்படையாகக் கொண்டு 'நாலாயிரக் கோவை' என்பது ஆயிரம் பாடல்களை மட்டுமே கொண்ட கோவை நூலாக இருக்க வேண்டும் என்பர். — எஸ் வையாபுரிப்பிள்ளை, 'இலக்கிய தீபம்', பாரி நிலையம், சென்னை 1952. ப. 179.

"ஒட்டக்கூத்தர் பாடிய நாலாயிரக் கோவை பேரெல்லைக்கு எடுத்துக் காட்டு" என்பர் வ.சுப. மாணிக்கம்.

— வ சுப மாணிக்கம், 'கோவைத் திறன்', சொந்தப் பதிப்பு, சென்னை, 1964, ப 87.

38. ரா. ஸ்ரீ தேசிகன், 'கவிதைக்கலை', பாகம் 2, ப.8.
39. Sigmund Freud, New Introductory Lectures on Psycho-Anaysis, p.152.
40. ஞானபூமி, நவம்பர் 1984, ப.8.
41 மே. நூ. ப 8
42 மே. நூ. ப 8
43. திருவாசகம், திருவெம்பாவை, 19,
44. திருப்பாணாழ்வார், அமலனாதிபிரான், 1–10.
45. பெரியாழ்வார் திருமொழி, 7,9 திருமொழிகள்.
46. குலசேகராழ்வார், 'பெருமாள் திருமொழி8, 6,7 ஆம் பத்து.
47. திருமங்கையாழ்வார், பெரிய திருமொழி, 8ஆம் பத்து, 7ஆம் திருமொழி சிறிய திருமடல், பெரிய திருமடல் ஆகியன.
48. குன்றக்குடி அடிகளார், 'வாழ்க்கை விளக்கம்', பக்.187–188
49. இறையனார் களவியலுரை, நூ.2.
50. திருமந்திரம், பாடல் 58.
51. சிவஞான போதம், நூ 10.
52. திருக்குறள் 1103.
53. ,, 1106.
54. ,, 1105.
55 ,, 1121.
56. ,, 1122.
57. ,, 1110.
58. ,, 1107.
59 இராமானுச நூற்றந்தாதி, பாடல், 40.
60. இறையனார் களவியலுரை, நூ.2 ப.87.
61. திருக்கோவையார், பாடல் 246இன் உரை.
62 தொல், பொருள். அகத்திணையியல். நூ. 40இன் உரை.
63. திருவாசகம், திருக்கோத்தும்பி, 18.
64. தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான், 'அமரகாதலர்', ப.67–68.
65. திருக்கோவையார் 264.
66. திருவி. பாடல் 2509.

# அகப்பொருள் கூற்றுநிலைகள்

## அ. தலைவன் கூற்று

### முன்னுரை

திருவிருத்தத்தில் தலைவன் கூற்று, தலைவி கூற்று, தோழி கூற்று, தாயின் கூற்று, பாங்கன் கூற்று என்று ஐவரின் கூற்றுக்கள் உள்ளன. திருக்கோவையாரில் பாடப்பட்டிருக்கும் பரத்தையர் பிரிவு, ஓதற்பிரிவு போன்றன திருவிருத்தத்தில் இல்லை வரைவின் மகளிர் என்னும் அதிகாரம் திருவள்ளுவரின் சீர்திருத்தத்தை விளக்குவது.

> "அக்காலத்தில் நூல்களிலெல்லாம் இடம்பெற்று வந்த பரத்தையர்க்குத் திருக்குறளில் இடமில்லை வேண்டா என்று கடியப்படும் இடமே கிடைத்தது. ஆதலின் மருதத் திணைக்கு முன்னோர் வகுத்ததாகிய இலக்கணத்தையும் இடம் இல்லாமல் செய்தார். நூலோர் மரபையே கடந்து புதுவழி வகுத்தார்"1

என்று மு. வரதராசனார் கூறியுள்ளார். திருவிருத்தம் திருக்குறளை இந்தத் தன்மையில் பின்பற்றிச் செல்கிறது.

திருவிருத்தத்தில் தலைவன் கூற்றாகப் பதினான்கு பாடல்களும, தலைவி கூற்றாக ஐம்பத்து நான்கு பாடல்களும், தோழி கூற்றாக இருபத்தாறு பாடல்களும், செவிலியின் கூற்றாக நான்கு பாடல்களும், பாங்கன் கூற்றாக ஒரு பாடலும் உள்ளன.

திருக்கோவையாரில் தலைவி கூற்றாக அறுபத்துமூன்று பாடல்களும், தோழி கூற்றாக நூற்றறுபத்தாறு பாடல்களும், செவிலி கூற்றாக முப்பது பாடல்களும், தலைவன் கூற்றாக நூற்றிரண்டு பாடல்களும், பாங்கன் கூற்றாகப் பதினொன்று பாடல்களும், கண்டோர் கூற்றாக ஏழு பாடல்களும், பரத்தை கூற்றாக இரு பாடல்களும், நற்றாய் கூற்றாக இரு பாடல்களும், கட்டுவிச்சி கூற்றாக ஒரு பாடலும், சுற்றத்தார் கூற்றாக ஒரு பாடலும், உழையர் கூற்றாக ஐந்து பாடல்களும், செம்முது பெண்டிர் கூற்றாக ஒரு பாடலும், இளையர் கூற்றாக ஒரு பாடலும், இல்லோர் கூற்றாக இரு பாடல்களும், வாயிலவர் கூற்றாக மூன்று பாடல்களும். பரத்தைக்குப் பாங்காயினார் கூற்றாக ஒரு பாடலும், ஏனைத் தோழியர் கூற்றாக ஒரு பாடலும், பாணன் கூற்றாக ஒரு பாடலும் ஆக நானூறு பாடல்கள் உள்ளன.

திருவிருத்தத்தில் நூறு பாடல்களில் தலைவி கூற்றாக ஐம்பத்து நான்கு பாடல்களிருக்கத் தோழி கூற்றாக 26 பாடல்களே உள்ளன. திருக்கோவையாரில் நானூறு பாடல்களில் தலைவி கூற்றாக அறுபத்து மூன்று பாடல்களிருக்கத் தோழி கூற்றாக நூற்றறுபத்தாறு பாடல்கள் உள்ளன. இது குறிப்பிடத்தக்க செய்தி.

இருவருடைய பாடல்களிலும் தக்க சொற்கள் அமைந்து, சொன்னயம், பொருணயம், நடைநயம், தொடைநயம் முதலியன மிக்கு விளங்குகின்றன.

## கண்கள் - கொங்கைகள்

"தலைவி, வளைந்துள்ள வில் போன்ற தன் வட்டமான புருவங்களை நெறித்தாளினால் ஆடவர்மேல் விழுந்து துளைக்கும் அம்பு போன்ற நல்ல விசாலமான கண்களையுடையவள். தலைவி அக்கண்களைத் திறந்து பார்க்க முயன்றபோது அதற்கு இலக்கு யாருமில்லை என்று அவ்வம்புகளை அவள் வெளியிடாமல் தன்னிடத்திலேயே அடக்கிக் கொண்டாள். எனவே, அவளைப் பெண் வடிவுடையவள் என்று நினைத்து அவளருகில் செல்லாதீர்கள். திருமாலின் மகன் மன்மதனின் ஆட்சியை நடத்துகின்ற கூற்றமாக எண்ண வேண்டும். பூமியில் நீங்கள் சிறிது காலம் உயிர் பிழைத்திருக்க வேண்டுமெனில் உங்கள் உயிரை இவள் கையிலகப்படாதபடி விழிப்புடன் பாதுகாத்துக் கொள்ளுங்கள்" என்கிறான் தலைவன்.2 இது திருவிருத்தத்தில் வரும் பாடல்.

"விண்ணுலகமும் மண்ணுலகமும் ஒருசேரப் பெறுவதாயினும் அவற்றையும் ஒரு பொருளாக மதியேன் நீங்கருப்பஞ் சாறும் தேவரமிழ்தமும் செழுந்தேனும் கலந்து பொதித்து வைக்கப்பட்ட பொற் செப்பினையும் கோங்கரும்புகளையும் ஒத்து என்னை ஆட்கொண்டு அருளிய இக்கொங்கைகளை மறந்தமைகிலேன்" என்கிறான் திருக் கோவையாரின் தலைவன்.3

மகளிரின் கண்களையும் கொங்கைகளையும் கவிஞர் புகழ்ந்து பேசுதல் மரபு. நம்மாழ்வார் தலைவியின் கண்களைப் புகழ்கிறார். அருணகிரியார், பெண்களின் கண்களை முருகனின் வேலுக்கு உவமையாக்கிக் கூறுங்கள்' என்கிறார்.4 அதற்கொப்ப நம்மாழ்வார் தலைவியின் கண்களை இராமனின் அம்புக்கு உவமையாக்கிக் கூறுகிறார். இராமனின் அம்பு எய்யப்பட்டபின் ஒன்று பத்தாகவும், பத்து நூறு ஆயிரமாகவும் பெருகி, இலக்குப்படி சென்று, தவறாது வென்றுவா

மீனும் அங்ஙனமே, தலைவியின் கண்களும் காணுமிடமெல்லாம் நின்று ஆடவரின் ஆருயிரைக் கொள்ளைக் கொள்ளத் துடிக்கின்றன.

மணிவாசகர் தலைவியின் கொங்கைகளைப் புகழ்கிறார். தலைவிக்குப் பதில் விண்ணுலகமும் மண்ணுலகமும் ஒருசேரக் கொடுப் பதாயினும் அவற்றை ஒருபொருட்டாக மதியேன் என்கிறான் தலைவன் 'பழியெனின் உலகுடன் பெறினும் கொள்ளலர்.5 என்னும் புறநானூற்றடியும்.

> ''உறுதோறு உயிர்தளிர்ப்பத் தீண்டலால் பேதைக்கு
> அமிழ்தின் இயன்றன தோள்.''

என்பதும் இங்கு நினைக்கத்தக்கன தலைவியின் கொங்கைகள் அமுத கலசங்கள் என்று சொல்லும்போது அவள் அழகு புலப்படுகிறது. கொங்கைகள் ஆகிய செப்புக் கலசங்களில் இனிய கருப்பஞ்சாறு ஊற்றப் பட்டுள்ளது; அமுதம் பெய்யப்பட்டுள்ளது; செழுமையான தேன் ஊற்றிவைக்கப்பட்டுள்ளது என்கிறார். அமுதம் நரை திரை மூப்பு பிணி சாக்காடுகளை நீக்குவது போலஇவளால் இன்பம் பெறுபவன் எல்லா நன்மையும் அடைவான் என்று சொல்லத் தோன்றுகிறது.

## பேசாமடந்தையர்

தலைவன், பாங்கி – தலைவியெனும் இருவரையும் நோக்கிக் கூறுதல் மரபாயினும், 'ஒன்றித் தோன்றும் தோழி'6 'ஒன்றாமிவட்கும்'7 என்பவற்றால் ஒற்றுமை பற்றிப் பாங்கியை நோக்கித் தலைவன் கூறிய தாக கண்டுக் கொள்ள வேண்டும். இங்ஙனம் தோழியை நோக்கிக் கூறினும் தலைவியையும் கூடச் சுட்டியதாகக் கொள்ள வேண்டும்.

''நானிப்படி வேதனைப்படுகின்ற சமயத்தில் நீ வந்து என்னை விசாரித்து இந்நோய்க்குப் பரிகாரஞ் செய்ய வேண்டியிருக்க, அது தவிர்ந்ததுமன்றி நானுன்னைக் கிட்டி என் அவத்தையை அறிவிக்கு மளவிலும் அதைக் காதுகொடுத்துக் கேட்கவும் உனக்குக் கடினமாய் இருக்கிறது. என் துன்பத்தை நானே அறிவிக்கவும் கேட்கின்றிலீர். இத்துன்பத்துக்குக் காரணம் என்னவென்று பார்க்கில் அக்காரணம் உன் உறுப்புகளின் அழகோ? கிளியும் கூடத் தோற்று இரையெடுப்பதும் தவிர்த்து ஈடுபடும்படி நீ கிளி குருவிகளை யோட்டுகின்ற ஒலியோ? தெரியவில்லை. உனக்கு அது தெரிந்திருந்தால் எனக்குச் சொல்ல வேண்டும்'' என்று பாங்கியை நோக்கிக் கூறுகிறான் தலைவன், திருவிருத்தத்தில்.8

ஆகாயவரசனின் மகளான பத்மாவதி தேவியிடம் காதல் கொண்ட திருவேங்கடமுடையான் அவள் தோழியரோடு தினைப்புனத்தில் பூக்கொய்திருக்கும்போது களிறொன்றைத் தூரத்திக்கொண்டு உட்புகுந்ததும், அப்போது அவர்கள் பேசியதும், நாயகி மிகவும் கடுமையாக நடந்து கொண்டதும் கருத்தில்கொண்டு, ஆழ்வார் தம்மை அந்த நாயகியாகவும், அங்கே தெளிவாகத் தம்மை இன்னாரென்று கூறாமல் மறைத்துச் சொன்ன திருவேங்கடமுடையானை நாயகனாகவும் வைத்துப் பாடல் செய்திருப்பதை கண்டு அறிந்து கொள்ள முடிகிறது.

தினைப்புனத்தில் தலைவியும் தோழியும் காவல் காத்துக் கொண்டிருந்தனர். தலைவன் அவ்வழியே ஒரு தழையுடையைக் கையுறையாகக் கொண்டு வருகிறான். மான் வேட்டையாட வந்தது போல நடித்துத் தோழியிடம் பேச்சுக் கொடுக்கிறான் அவன். ''நீங்கள் யார்? எந்த ஊர்? என்னபேர்? என் கணைக்குத் தப்பி ஒரு மான் இங்கு ஓடிவந்ததா?'' என்று வினவுகிறான். தோழி பதிலொன்றும் பேசவில்லை அவளுக்குச் சிரிப்பு மூட்டினாலாவது பேசுவாள் என்று தலைவன் வேடிக்கையாகப் பேசுகிறான். ''இனிமையாக ஆடுகின்ற கூத்தப் பெருமானின் தில்லையைப் போல மிகவும் நல்லவர்கள் இந்தப் புனத்தைக் காக்கும் பெண்மணிகள்! அவர்கள் பேசா மடந்தைகளோ? அன்பாக வரவேற்றுப் பேசவேண்டிய விருந்தினர்களைக் கண்டால் பேசக்கூடாது என்று ஒரு விரதம் எடுத்துக் கொண்டிருக்கின்றார்கள் போலத் தோன்றுகிறது! அல்லது நிச்சயமாக வாயைத் திறந்தால் சலக்கென்று உதிரக்கூடிய முத்துமணிகளை வாயிலடக்கிக் கொண்டிருக்கிறார்கள் போலும்! பேசினால் வாய்முத்தும் சிந்தி விடுமோ?'' என்று திருக்கோவையாரின் தலைவன் கூறுகிறான் 9

தலைவனின் உள்ளம் வேதனையுறுகிறது. தலைவி தன்னிடம் ஒரு பேச்சுக்கூடப் பேசவில்லையே என்று கவலை கொள்கிறான். ''தலைவியே! என்னை அலைக்கழிப்பவை உன்பிறங்கு பேரழகும், நீ கிளியை 'ஆயோ' என்று ஓட்டும ஓலியுமே. என்னிடம் சிறிது நேரமாவது பேசலாகாதா? அப்படிப் பேசினால் உன் வாயினின்று முத்துக்களா உதிர்ந்துவிடும்?'' என்று கூறுபவன், இதனால் அவர்கள் வாய்மொழியினைப் போற்றிப் புகழ்ந்துரைக்கிறான். தில்லையைப் போன்ற நல்லவர்கள் என்று உயர்த்திப் பேசுகிறான் தில்லையை நினைத்தாலே முத்தி. அங்ஙனமே பெண்களும் சுற்றின்பத்தில் சிறந்து பேரின்பமளிக்கின்றனர்.

## யாவரும் தொழும் புனித ஊர்கள்

"பெண்ணே! நானிலத்தில் சூரியன் துப்பின பாலையிடத்தில் இனி நீ தவிக்க வேண்டுதில்லை அந்தப் பாலை நிலத்தையெல்லாம் நீ கடந்தாகிவிட்டது. இனிப் பொன்போன்ற உனக்கு அழகும் மதிப்பும் குன்றாத இடந்தான் இருக்கையாகும் விண்ணோர்கள் தங்கள் இடமான விண்ணிலே வாழ்வர். அவர்கள் நானிலத்தில் வாழும் மக்களுக்கே துன்பம் என்று நினைக்கின்றனர் மேலும் வானோர் யாகம் செய்யும்போது மண்ணுக்கு வந்தாலும் மண்மேல் தங்கள் மனம் பிடிக்காமல் விலகியிருந்தே யாகத்தில் அளிக்கும் அவிர்ப்பாகத்தை மட்டும் தொலைவில் நின்று பெற்றுச் செல்வார்கள் அத்தகைய விண்ணோரும் தங்கள் கால்கள் பொருந்த நின்று தொழும் இடமாம் கச்சி நகரில் திருவெஃகா எனப்படும் 'யதோக்தகாரி' (சொன்ன வண்ணம் செய்த பெருமாள்) வீற்றிருக்கும் திவ்விய இடம் சிறிது தொலைவிலேயே உள்ளது. அங்கு விளக்கொளிப் பெருமாள் எழுந்தருளியுள்ளார். அவர் எழுந்தருளியுள்ள இடத்திற்கு 'இமோபவனம்' என்று பெயர். அவ்விடம் சென்றால் அங்குள்ள பூந்தேன் இளஞ் சோலையிலே நாயகனுடன் கூடி நிலையாகக் களித்திருக்கலாம். இங்கிருப்பவர்களுடைய 'ஞானஒளி' எங்கும் பரவி எல்லா நிலத்தையும் நன்னிலமாக்கும். நானிலத்திலுள்ள எந்தப் பாலையிடத்திற்கும், மற்றும் பாலை என்று பிரிக்கப்பட்ட ஐந்தாவது நிலத்திற்கும் நலமளிக்கும்படி ஒளிவீசி நீரும் நிழலுமில்லா இடங்களிலெல்லாம் திருத்தண்கா என்று சொல்லும்படி செய்யும் மேன்மை வாய்ந்ததாகும்"10 என்று தலைவன் கூறுகிறான். இந்தத் திருவெஃகா எனும் தலம் காஞ்சிபுரம் ஆடிசன் பேட்டையிலுள்ள அரங்கசாமி குளத்திற்கு அருகில் உள்ளது.

"அதோ! தோன்றுகின்ற நெடிய நகரைப் பார்ப்பாய்! சந்திரன் தங்குகின்ற நீண்ட மாட மாளிகைகளோடு பொன்னாலியன்ற மதில்கள் நிற்கின்றன. அவற்றின்மீது மின்போன்ற பொன்னிறக் கழிகளிலே கட்டிக் கொடியாடைகள் உயர்த்தியுள்ளன, அவை வானமாகிய நீலக்கடலில் மடங்கி விழுகின்ற அலைகள் போன்று அசைகின்றன. அம்மதில்கள் மேருமலையை யொப்பப் பொலிகின்றன. அந்தப் புலியூரே நம் பொன்னூர்; காண்க"11 என்கிறான் திருக்கோவையார்த் தலைவன்.

புலியூரில் (சிதம்பரம்) மாளிகையுச்சிதோறும் சூலம்போன்று ஓர் உறுப்பு நடப்பட்டிருப்பதையும் அவன் கூறுகிறான். இது அனைவருக்கும் சிவனை நினைவுகூறச் செய்கின்றது. மாளிகைகளைக்

காணும்போது சைவமணம் கமழ்கிறது. மதில்கள் மேருமலையை யொப்பப் பொலிகின்றன. மேருமலை சிவன் வீற்றிருக்கும் கைலாய மலையை நினைவுகூறச் செய்கிறது. மதில்கள் பொன்னாலியன்றால் அவ்வூர் பொன்னூ ராகத்தானே இருக்கவியலும்.

திருவிருத்தத்தில் தலைவன் தன் ஊரைத் திருவெஃகா என்கிறான். திருக்கோவையாரில் புலியூர் (சிதம்பரம்) என்கிறான். திருவெஃகாவிலுள்ள பொன்ன வண்ணம் செய்த பெருமாலை வைகுண்டத்திலிருந்து நித்தியசூரிகள் வழிபட்டுச் செல்கின்றனர் என்பதைப் பார்க்கும் போது நம்மாழ்வார் வைணவ பக்தியை யாவருக்கும் ஊட்டுவதற்காகவே இங்ஙனம் கூறுகிறார் என்று உணரலாம்.

திருவெஃகா பெரும்பாணாற்றுப்படை என்னும் நூலில் கூறப்பட்டிருப்பதனை நோக்கச் சங்க காலத்திலேயே இதன் பெருமையும் சிறப்பும் விளங்குகின்றன.12 தண்டியலங்கார நிரனிறையணிக்கு உதாரணச் செய்யுள் கூறும்போது திருவெஃகா பதிபற்றி வருகிறது.13

## தலைவியின் ஊர்

"பாகனே! வாகுகனான நளன் போன்று உன் வல்லமையை இப்போது காட்ட வேண்டும். சில நிமித்தங்களால் நாயகியின் நெற்றியில் ஒளியும் அதனால் ஒப்பற்ற அழகும் உண்டாயிருக்கிறது. இனி விரைவில் அவளைப் பெறாவிடில், மீண்டும் பசலை நிறம் பரவிவிடும். நன்னிமித்தங்களை அவள் கண்டாலும் ஆறுதல் பெறமாட்டாள். ஆகவே விரைந்து தேரை நடத்தினால்தான் அவளை உடனடியாகக் கிட்டுதல் முடியும். நாயகி மிக்க தொலைவிலிருக்கிறாள் என்றெண்ண வேண்டா. நீ திருமலைக்கருகேயுள்ள தொலைவுவரை வேகமாகப் போய்ச் சேர்ந்தால் போதும். பரதாழ்வானை அடைய நினைந்த இராமன் புட்பக விமானத்தை விரும்பிச் செலுத்திச் சென்றடைந்தது போல நாம் இத்தேரை விரும்பி அதில் செல்கிறோம். அவர் பரத்வாசர் ஆசிரமம் வந்து நின்றவண்ணம் நாமும் திருமலைக்கருகே நிற்போம். அவ்வாசிரமத்திலிருந்து அனுமனை அனுப்பியதுபோல் ஏதேனும் ஒருவழி செய்து அவளுக்கு ஆறுதலளிக்கலாம். மிகவும் துன்பப்பட்டிருப்பவருக்கு முழுமையான பலன் உடனே பெறப்பட்டால் அதனைத் தாங்குவது அரிது. அதனால் தான் இராமன் அனுமனைப் பரதனிடம் அனுப்பினான். இப்போது நாமும் அவ்வாறே செய்வோம். இங்கிருந்து வண்டுகளே! தூதாகச் சென்று அவளுக்கு நாம் வந்திருப்பதை விளக்கிக் கூறுக. விரைந்து செல்க!"14 என்று திருவிருத்தத் தலைவன் கூறுகிறான்.

"பாக! நம்மில்லத்துப் புறாக்கள் நம் பெடையோடு இறப்பின்கண் இனிதே உறங்கிப் பகற்பொழுதில் அப்பெட்டைகளோடு நம்முன்றிலில் இரை தேர்ந்துண்ணுகின்றன. என் தலைவி அக்காட்சியைக் கண்டு தன் தனிமையையும் நினைந்து ஆற்றாது வருந்துவாள். எனவே சிறப்புக்களாற் பொலியும் சிவனது சிற்றம்பலத்தைச் சென்றடைந்தவர்கள் தம் பிறவி வினைகெடுவது போல விரைந்து இத்தேரைச் செலுத்துவாயாக!"15 என்கிறான் திருக்கோவையார்த் தலைவன்.

புறாக்களின் செயல் தலைவிக்குத் தனிமைத் துயரைமிகுவிக்கும்; அவள் வருந்துவாள் என்பதைக் குறிப்பாலுணர்ந்தி, சிவனடி சேர்ந்தோரின் பிறவி விரைந்து கெடுதல் போலத் தேரை விரைவிற் செலுத்துக என்று தலைவன் விரைவு உவமையால் கூறுகிறான்.

> "மேலாடை வீழ்ந்த தெடுவென்றான் அவ்வளவில்
> நாலாறு காதம் நடந்ததே"16

எனும் நளவெண்பாப் பாடல் நளன் தேரோட்டும் விரைவினைக் குறிப்பது ஈண்டு நினைக்கத்தக்கது. தலைவனின் மனத்தில் தலைவியின் நிலை நன்கு தெரிகிறது. அவளை இதயத்தில் இருத்தி வைத்திருக்கிறான் அவன் தேரில் சென்றடைவதற்கு முன் அவன் மனம் அவளைச் சென்று சேர்கிறது.

## காமம் செப்பாது கண்டது மொழிமோ

"வண்டுகளே! நான் உங்களையொன்று கேட்கிறேன். அதற்குப் பதில் சொல்லிவிட்டுப் பறந்து செல்லுங்கள். அஃதென்னவெனில் நீர்ப்பூவான தாமரை, குவளை, அல்லி மலர்கள், நிலப்பூவான மல்லிகை முதலியவை, மரப்பூவான சண்பகம் முதலியவை, கொடிப் பூவான சம்பங்கி முதலியவை போன்ற பூக்களில் சென்று தேனுண்டு திரிவீர்களே! நான் ஓரிடத்தில் அனுபவித்த நறுமணத்தை எங்கும் உங்களால் காண முடியாது. எம்பெருமானுக்கு வைகுந்தத்தில் போகம் அளவற்றதாகையால் அதையே அவன் சிறந்ததாக நினைப்பவன், அவன் வராகவதாரம் எடுத்துச் சேறும் நீரும் பெருகின வண்ணம் இருந்து பார்மகளுக்கு உதவிப் பூமியை நிலைநிறுத்தினான். அவ்வாறு நிலைநிறுத்தியதன் காரணம் என்னவெனில் தனது வைகுந்தத்திற்கு ஒப்பான மேன்மை பொருந்திய நாயகியொருத்தி தோன்றப் போகிறாள் என்பதினாலேயாம். இவளுக்கு மேம்பட்ட பெண்மணி இல்லையென்பதற்கு இவள் கூந்தலிலுள்ள இயற்கை மணமும் இவள் முகக் கமலம் மலர்ந்தால் அதில் வீசும் மணமும் சான்றாகும். எனவே, இத்தலைவி

யின் கூந்தலில் சூடிய மணமும் தேனும் உள்ள பூவோடு ஒத்து நீங்கள் காணும் பூக்கள் பூத்திருக்கும்மா? நீங்கள் திரிகின்ற இடங்களில் எங்கேனு மோரிடத்திலாவது இப்படிப்பட்ட பூவிருந்தால் சொல்லுங்கள் தலைவி யின் கூந்தலிலிருந்து கமழும் நறுமணத்தைப் பெற்றீராகில் உங்களுக்கு இந்த நான்குவகை மலர்களிலேயுள்ள ஆசையெல்லாம் தானே விலகிப் போகும்''17 என்கிறான் தலைவன்.

''வண்டுகளே! நீங்கள் உலாவுகின்ற அகன்ற மருத நிலத்திலே நான்குவகைப் பூக்களையும் பார்த்திருக்கிறீர்கள். என் தலைவி சிறிய இடையையுடையவள். அவள் வாய் கொவ்வைக்கனி போன்றுள்ளது. அந்த வாய், மேலும் தெய்வ மணங்கமழும் ஆம்பற்பூவினைப் போன்று உள்ளது. அத்தகைய ஆம்பற்பூவினை நீங்கள் கண்டதுண்டோ? அங்ஙனம் கண்டால் நீங்கள் எனக்குக் கூறுங்கள்''18 என்கிறான். திருக்கோவையார்த் தலைவன்.

நம்மாழ்வார் தலைவியின் கூந்தலின் இயற்கை மணத்தோடு கூடத் தலைவி சூடிய பூவிலுள்ள மணமும் சேர்ந்து கமழ்வது போன்ற தன்மையை வண்டுகள் எங்கும் கண்டிருக்கவியலாது என்று தலைவன் கருதுவதாகப் பாடுகிறார். இது.

> ''கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி
> காமம் செப்பாது கண்டது மொழிமோ............''19

எனும் இறையனாரின் பாட்டை நினைவூட்டுகிறது. அதில் கூந்தலுக்கு இயற்கை மணம் கூறப்பட்டுள்ளது; இதில் இயற்கை மணமும் பூக்களின் மணமும் சேர்ந்த தன்மை கூறப்படுகிறது ''ஆம்பல் நாறும் தேம்பொதி துவர்வாய்''20 என்னுமாப் போல, வாய் திறந்தாலே செவ்வல்லி மலரின் வாசனை கமழ்கிறது மாணிக்கவாசகரின் தலைவிக்கு. மாணிக்க வாசகர் உவமேயத்தையே உவமையாகக் காட்டுவதும், உவமையை உவமேயமாகக் காட்டுவதும் நன்கு சிந்திக்கத்தக்கது. இதனைத் தொல்காப்பியர் 'தடுமாறு உவமம்' என்பர்.21 தலைவன் என்ன சொல் வதெனத் தெரியாமல் தலைவியை நினைத்தபோது தலைவியின் பிம்பம் எதிரே நின்றதால் 'ஆம்பல் போன்ற' என்று கூறுவதற்குப் பதில் 'வாய் போன்ற ஆம்பல்' என்று தடுமாறிக் கூறிவிட்டான்.

கல்லாடத்திலும் இதே பொருளமைந்த பாடலொன்று உள்ளது. அதில் நால்வகைப் பூக்களுக்குப் பதில் நிலப்பூ நீங்கலாக மூவகைப் பூக்களே கூறப்பட்டுள்ளன. கல்லாடனார் திருக்கோவையார்ப் பாடலைப் போலவே தொடங்குகிறார் 22

## மத்தெறி தயிரெனக் கலங்குதல்

"தோழனே! அத்தலைவியின் முகம் மிகவும் அழகாயுள்ளது. அழகிய குண்டலங்களையுடையதாய்த் தாமரைமலர் போன்று விளங்குகிறது. அந்த முகத்திலே கண்கள் தம்மில் ஒன்றன்மேலொன்று பாய்ந்து நெருக்க வேண்டும் என்னும் எண்ணம் கொண்டிருந்தும் மூக்காகிய கொடியால் தடுக்கப்பட்டு இடையில் விலக்கப்பட்டுச் சீற்றத்தோடு தனித்தனி உலாவிக்கொண்டு வேற்படையைக் கொண்டு குத்தினாற் போல் வருத்துவனாய் என்னை நோக்குகின்றன அத்தகைய கண்களால் தலைவி என்னை நோக்கும்போது அவற்றால் கலக்கப்பட்ட விதந்திருமால் கைடந்ககாலத்து அலைபெழுப்பப்பட்ட அப்பாற்கடல் கலங்கின விதந்தேர்விடாக்கும். அப்படி நான கலக்கப்பட்டபோது அக் கண்களின் நிலைமையை நேரில் பரர்த்தவர்கள் எவரேனுமுளரேல் அவர் ஒரு காலுமென்னை இடித்துரைக்க மாட்டார்கள். தலைவியின் கண்ணழகில் ஈடுபட்ட நீ உயிர்தொலையப் பெறாது உயிர் தாங்கியிருப்பது எவ்வளவோ மேல் என்று சொல்லும்படியாயிருக்கும். வேண்டுமாயின் அக்கண்களின் அழகை ஒருமுறை நீயே காண்!"23 என்கிறான் தலைவன்.

காதல் கொண்ட தலைவனை நகையாடினான் தோழன். அவனிடம் காதல்நோய்க்குக் காரணமாகவிருந்த கன்னியர் திலகத்தின் பெருமையை விரித்துரைக்கிறான் தலைவன் "ஏ,தோழ!நீ அத்தலைவியைக் கண்டால் அதனால் தாக்குண்ட என்னை இவ்வாறு இழித்துரைக்க மாட்டாய். நீ பார்க்கவில்லை. தில்லைச் சிற்றம்பலக் கூத்தனுக்குச் சொந்தமான கயிலை மலையிலே உலவும அம்மயிலை, அணிகள்புரள விளங்கும் கொங்கைகளையுடைய என் ஆவியை, என் ஓவியப் பொற் கொழுந்தை, நீ கண்ணாரக் கண்டால் இப்படி ஒரு நாளும் கூறமாட்டாய் என்பது உறுதி" 24 என்கிறான் திருக்கோவையார்த் தலைவன்.

சிறையிருந்த சீதையை அனுமன் காணாத போது இராமன் இவ்வாறு கதறுகிறானே என நினைத்தான். இலங்கை சென்று அவளைக் கண்ட அனுமன், "இராமன் இவளைப் பிரிந்த பின்பும் பாழும் உடலை எதற்காகச் சுமந்து பிழைத்திருக்கிறான்?" என்று நினைக்கிறான்.25 அங்ஙனம் பாங்கன் தலைவியைக் கண்டால் அந்த அனுமன் பட்ட பாடு அவனும் படப் போகிறான் என்று தலைவன் கருதுகிறான் என்று நினைக்கத் தோன்றுகிறது.

கயிலைமலையில் வாழும் மயில் என்று தலைவியைக் குறிக்கின்றான் தலைவன். குறிஞ்சி நிலத்தில் அதன் கருப்பொருளான மயில் இருப்பது கருதி அங்ஙனம் கூறினான். தலைவியைத் தன் உயிர் என்றும், ஓவியப் பொற்கொழுந்து என்றும் கூறி, அவள் அழகைப் பாங்கனின் மனத்தில் பதிய வைக்கிறான் 'ஓவியப் பொற்கொழுந்து' என்னும தொடர், கம்பரின்

> ' ஆதரித்து அமுதில்கோல் தோய்த்து அவயவம் அமைக்கும் தன்மை
> யாதெனத் திகைப்பதல்லால் மதனற்கும் எழுத வொண்ணாச்
> சீதை'' 26

என்னும் பாடலடிகளை நினைவுபடுத்துகின்றது.

'அணிகள் புரள விளங்கும் கொங்கைகளையுடைய என் ஆவி' எனும்போது பெண்ணுக்குப் பொன்னிட்டுப்பார்' என்ற பழமொழியும், ''பூணும் கழகளிக்கும் பொற்றொடியைக் கண்டக்கால்''27 எனும் நளவெண்பாச் செய்யுளும, ''அணிந் திணைச் சுவைசெய்தென்ன அழகினுக் கழகு செய்தார்''28 எனும் கம்ப ராமாயணப் பாடலும நினைவிற்கு வருகின்றன,

முன்னர் மாணிக்க வாசகர் கொங்கைகளை 'அமுதமும் கருப்பஞ் சாறும் தேனும் பொதிந்து வைத்த கலசங்கள்' என்றார்,29 இங்கோ நகைகள் கொங்கைமீது புரளுகின்றன என்பதால், மலைமீது பெருந் தீனி தின்றுவிட்டு அது செரிக்கப் புரளும் மலைப்பாம்புகள் போன்றன எனும் கற்பனை தோன்றிக் கொங்கைகளின் திண்மையும் பருமையும் பெருமையும் தெரிகின்றன.

## மாலவனையும் மயங்கச் செய்யும் கண்கள்

கருடவாகனத்தின் மீதேறிச் சென்று அசுரரை அழித்தவன் திரு மால். அவன் மிக எளியவனாய் வந்தவதரித்துத் திருவேங்கடத்திலே எழுந்தருளியிருக்கின்றான். அங்கு வராகமூர்த்தி, கோவிந்தன் என்ற பேருடனும் சீநிவாசன் என்ற மாதவனாகவும் சேவையளித்து வருகிறான். அப்படிப்பட்டவன் எழுந்தருளியுள்ள திருவேங்கடத்தைச் சேர நினைத்துத் தலைமகள் தன்னை அன்னமாகக் கற்பனை செய்து வைகுந்தத்திற்கே பறக்க நினைக்கிறாள். அன்னம் எவ்வளவு தொலை வானாலும் மானச சரோவர் ஏரி வரைக்கும் கூட விரைந்து பறக்க வல்லது. அன்னம் இரு சிறகுகளால் பறப்பதுபோல இவளும் காதலும் கற்புமாகிய இரு சிறகுகள்கொண்டு தலைவனை நாடி வேங்கடம காணலாம் எனச் சென்றாள். இவளுடைய ஆற்றலைக் கண்டவுடனே

எம்பிரான் இவன் பரமபதமே வந்தாலும் வரலாம். எனவே, இவனைப் பூமியில் நிறுத்த, மாவிபம்புள் ஏறி, மாதவன், கோவிந்தன் என்ற பேர்பூண்டு, வேங்கடம் வந்து நின்றான்போலும்; இத்தலைவியின் இணைந்த பூக்கள் போன்ற கண்களானவை கடைக்கண் சிவப்பினால் செங்கழுநீர்ப் பூவையும், கருவிழியின் கருமையினால் கருநெய்தற் பூவையும் நோக்கின் கூர்மையாலும் ஒளியாலும் வருத்துதலாலும், வேற் படையையும், அழகினாலும் குளிர்ச்சியாலும் கெண்டை மீன்களையும் இவ்வாறே தன் மற்றுமுள்ள குணங்களினால் மற்ற பொருள்களையும் (மருட்சிக்கு மான் பார்வை முதலியன) உவமை கூறச் செய்து என் உயிரையும் அபகரித்து என் தலைவனான திருமாலையும் கவரக் கூடியதால் எல்லாவிடங்களிலும் தோன்றத்தொடங்கியதுஎனவே, நான் இதனின்று மீள ஆற்றலில்லாதவன் ஆனேன்'' என்கிறான் திருவிருத்தத் தலைவன்80.

''பெண்ணே! என் தலைவியின் கண் செங்கழுநீர் மலரை ஒத்து இருக்கும். அதன் தன்மையைக் கூறுகிறேன் கேள். அந்தக் கண்கள் நான் ஈசனிடம் வைத்த அன்பு எவ்வளவு அகலமுடையதோ அவ்வளவு அகலமுடையதாயுள்ளது. அவன் என்னிடத்தினின்றும் அகற்றிய ஆணவமலம் எத்துணைக் கருமையாயுள்ளதோ அத்துணைக் கருமை நிறம் உடையதாயுள்ளது. அவன் எழுந்தருளியிருக்கின்ற அறிவுவெளி எவ்வளவு ஒளியுடையதோ அவ்வளவு ஒளியுடையதாயுள்ளது. அவன் தோளிற் பூசும் பால்வெண்ணீறு போன்ற வெண்மையுடையதாயுள்ளது மேலும் அவன் திருவடிகளைப் புகழும் திருமொழி எத்துணை நீளம் உடையதாகுமோ அத்துணை நீளம் உடையதுகாண், அறிந்து கொள்க"81 என்று கூறுகிறான் திருக்கோவையார்த் தலைவன்.

பிறழ்வனவாகிய கண்களின் தன்மையைக் குறிப்பிட்ட இருவரும் சிவனையும் திருமாலையும் தொடர்புபடுத்தி நயம்பட உவமை கூறியுள்ளனர். கண்களை வருணிக்கும்போது அவை வட்ட வடிவில் அகன்றவை என்றும், காதளவு வரும் நீளம் உடையவை என்றும் கூறுவது மரபு.

அகன்ற வட்ட வடிவு, கருமை, ஒளி, வெண்மை, நீளம் ஆகிய கண்ணின் தன்மைகளை ஈசனிடம் வைத்த அன்பின் அகலத்திற்கும் ஈசனிடம் கொண்ட பக்தியால் அவன் அகற்றிய கருமையான ஆணவ மலத்திற்கும் ஒளிமிக்க அறிவுக்கும், பால்வெண்ணீற்றிற்கும் அவனைப் புகழ்ந்து பாடும் நாமங்களுக்கும் உவமையாக உரைப்பது எண்ணி மகிழும் இன்பமுடையது; சமயப்பற்றை ஊட்டுவது.

## தலைவி வாழும் இடம்

"பெண்ணே! நீ நான் வேறிடம் நோக்கும்போது என்னைப் பார்த்துக் கொண்டிருந்தாய்; நான் உன்னைப் பார்க்கும்போது அப் பார்வையை என்னிடத்தினின்றும் விலக்கும் காலத்தில் உன் அழகிய முகத்திலுள்ள புருவம் செல்வதுபோல அப்பார்வை செவிவரை சென்று அம்புபோல அதிகக் கொடுமையாய் என்னைக் கவர்வனவாக இருந்தன. உன் அழகைக் கண்டு எனக்கொரு ஐயமுதித்தது. நித்திய சூரிகள், உலகிலுள்ள பெண்கள் ஆகிய இருவரிலும் அழகானவள் நீ. இப்போது நீ வாழ்கின்ற இடமானது தன் அலைகளினால் சங்கங்களைக் கரைமீதெறிந்து ஒலிக்கின்ற திருப்பாற்கடலோ! நித்திய சூரிகள் வாழும் வைகுந்தமோ? பொருநர்களில் ஆசை செலுத்துகின்றவர் வாழும் பூவுலகமோ? இதனைச் சந்தேகமற எனக்குக்கூற வேண்டும்" என்கிறான் தலைவன் 32

"நங்கையரே! நான் வினவிய வேழம் முதலியவற்றிற்கு விடை கூறினால் உங்களுக்குப் பழி வந்துவிடும் என்று நினைத்து விடைகூறா தொழிந்தீர்கள் போலும்! இனி உங்கள் ஊர்தான் எது? அதனையேனும் உரைக்க மாட்டீர்களோ? ஒரோவழி ஊர் இஃதெனக் கூறினால் அது நமக்கேயுமன்றி நம்மூர் வாழும் பெண்களுக்கெல்லாம் பழியாகும் என்று கருதுவீராயின் அதுவும் சொல்லவேண்டா" என்கிறான் திருக் கோவையார்த் தலைவன் 33

தலைவியின் கண்கள் அம்புகள்; அவை கெண்டை மீன் வடிவ மானவை. "அவ்வம்புகளைப் புருவமாகியவில்லை வளைத்துக் காதளவு வரை இழுத்துச்சென்று விடுத்தல் செய்து என் உயிரை ஊடுருவித் துளைக்கும்படி செய்கிறீர்கள். கண்களாகிய அம்புகளையும் புருவ மாகிய வில்லையும் கொண்டவர்களே!" என்று தலைவன் தலைவியை யும் தோழியையும் விளிப்பதில் கண்களின் கொடுமை விளங்குகிறது.

தலைவியோ, தோழியோ ஊரைச் சொன்னால் நாணத்தை விட்டு ஓர் அந்நியனிடம் பேசினார்கள் இப்பெண்கள் என்று கருதி, இப்பெண்களால் நமக்கும் பழி வந்துவிட்டது என்று ஊரிலுள்ள பெண்கள் பழிதூற்றுவார்கள் என்று நினைத்து ஊரின் பேரைச் சொல்லவில்லை என்று தலைவன் கற்பனை செய்து கூறக்கூடும். தோழியும் தலைவியும் பேசவே இல்லை. எனவே தோழியிடம் அசதியாடுவான் போலத் தோழியின் புத்தி நுட்பத்தை ஆராய்கிறான் தலைவன்.

குறிஞ்சிப் பாட்டில் தலைவன் தலைவியையும் தோழியையும் இங்ஙனமே வினவுகின்றான். 34

## (ஆ) தலைவி கூற்று

திருவிருத்தத்தில் தலைவன் கூற்றாக 14 விழுக்காடு பாடல்கள் உள்ளன. திருக்கோவையாரில் 25 விழுக்காடு பாடல்கள் தலைவன் கூற்று.

ஆனால் தலைவி கூற்றாக வரும் பாடல்களோ திருவிருத்தத்தில் 54 விழுக்காடு; திருக்கோவையாரில் 16 விழுக்காடு.

நம்மாழ்வார் தம்மைத் தலைவி நிலையில் வைத்துப் பாடுவதிலேயே பெருவிருப்பம் கொண்டவராக இருந்தார் என்பதை இது காட்டுகிறது.

மாணிக்கவாசகரோ எல்லாவகைக் கூற்றுகளிலும் பாடல் அமைக்க விரும்பியவர். எனவே கோவை நூல் மரபிற்கேற்பக் கூற்றுகளை அகப்பொருள் மாந்தர்கள் அனைவருக்கும் ஏற்றவகையில் பகிர்ந்தளித்திருக்கிறார்.

இருவரும் பாடிய தலைவியின் கூற்றுப் பாடல்களில் சில இங்கு ஒப்பிட்டு ஆராயப்படுகின்றன.

## நெஞ்சே நீ திரும்பி வாராயோ ?

தோழி! நாயகனைப் பிரிந்திருக்கின்ற இந்நிலையில் அவன் சாத்தியருளின குளிர்ந்த திருத்துழாயும் அவன் திருக்கைக்கு நிறைந்த ஆபரணமாகிய திருவாழியும் என்மேல் தீ வீசி மிகவும் உபத்திரவம் செய்யாநின்றன. இந்த அவத்தையிலும்கூட அந்தத் திருமால் திருத்துழாய் மாலையோடும் எழுந்தருளி எனக்குச் சேவை சாதியாமல் தன்னை விரும்பிய நித்திய சூரிகளை உய்வித்தற்காக, இலையசைந்தாலும் விரோதிகளோவென்று சீறியருளும் பெரிய திருவடியை வாகனமாகக் கொண்டு, சென்று சேவை கொடுத்தான். பின்னர்த் தலைவியிடம் ஒரு கணநேரம் நின்று மறைந்தான். அப்போது பராங்குச நாயகி, 'இக்கருடனுடைய பாக்கியமே பாக்கியம்; எம்பெருமானுடைய காட்சி நமக்குக் கனவிலும் கிடைப்பது அரிதாயுள்ளது. இக்கருடன் இரவு பகலென்று பாராமல் எப்போதும் இப்பெருமானைச் சுமந்து திரிகிறானே! இப்பரமபாகவதனுடைய பாக்கியம் மேலானது!' என்று கருதினாள். உடனே அவளுள்ளம் அக்கருடன் பின்னே போயிற்று.

அவன் புகுந்த பரமபதத்தை நெஞ்சு சென்றடைந்தது. போன இடத்திலே பெரிய பிராட்டியார், பூமி பிராட்டியார், நப்பின்னை பிராட்டியார் எனும் தேவிமார் மூவரும் எம்பெருமானுக்கு நிழல் போலே இருக்கும்படியைக் கண்டால், (நின்றால் நிற்பது, உட்கார்ந்தால் உட்காருவது, நடந்தால் நடப்பது போன்று செய்து, பக்தர்களின் குற்றங்களைப் பொறுத்தலைச் செய்ய, அப்போது பெருமானுக்குத் தலையெடுத்திருக்கும் அழகைக் கண்டால்) அவ்வழகை அனுபவிப்பதை விட்டுவிட்டு மீண்டும் வரத் தோன்றுமோ; தோன்றுவது அருமையே! அச்சேர்த்தியழகைக் கண்டுகொண்டு அவ்விடத்திலேயே நின்று விடுமோ! அன்றி நம் தலைவியிடம் போய்ச் சேர்ந்துவிடுவோம் என்று நினைத்துத் திரும்பி வந்திடுமோ, சொல்''? என்று கேட்டு ஐயமுறுகிறாள் 36

திருக்கோவையாரில் வரும் தலைவியோ, ''அன்றொருநாள் பூக்களையுடைய சோலையின்கண் புன்னைமரத்தின்கீழ் மணலாகிய பாயில் கலந்திருந்தோம். பின் பிரிந்த தலைவன் தேர்ப்பின் சென்றது என் நெஞ்சு. இந்நாள் வரை இவ்விடத்தில் என்னை இடையறாது வருத்திக் கொண்டிருக்கிறது. ஏன் என்று புரியவில்லை?'' என்கிறாள்.37

''ஆதரத்தினோடு தூதுவிட்ட பிழை ஆரிடத்துரை செய்து ஆற்றுவேன்''38 என்னும் திருவரங்கக் கலம்பகப் பாடல் இதனை அடியொற்றியே எழுந்திருக்கவேண்டும்.

இங்குத் தலைவி ஆற்றாமை மீதூரும்போது, 'நாமும் ஐயோ, இப்படியா தலைவி நிலை ஆகவேண்டும்!' என்று அவளுடன் சேர்ந்து வருந்துகிறோம் பாவம்! அந்நெஞ்சம் திருமாலை முயங்கியதால் கள் குடித்தவன் நிலை போலாகவே தலைவியையும் மறந்து தன்னையும் மறந்துவிட்டதாம்.

இங்ஙனமே திருவாய்மொழியிலும் ஒரு காட்சி வருகிறது.39 சூடிக் கொடுத்த சுடர்க் கொடியைப் போலவே குலசேகரர்புதல்வி சேரர்குல வல்லியும் நந்தசோழன் மகள் கமலவல்லியும் அரங்கநாதனையே காதலித்துப் பேறுபெற்றனர் என்பதை வைணவ உலகம் நன்கறியும். தில்லி சுல்தானிடம் (தில்லி பாதுஷாவின் மகள்) இராமானுசர் சென்று பெருமானிடம் பேசப் பெருமான் அவரிடம் வந்துவிட, இதுவரை சுல்தானி தன்கூட இருந்த பெருமானைக் காணாமல் தேடி, இறுதியில் தன் உயிரை விட்டாள் என்ற வரலாறும் ஈண்டுக் கருதத்தக்கது40.

இங்ஙனம் தலைவியோடு கூடச்சேர்ந்து நான்கு தேவியாரும் எம்பெருமானைத் தலைவனாகக் கொண்டு ஒழுகியமை காணத்தக்கது இது கடவுண்மாட்டு மானிடப்பெண்டிர் நயந்த பக்கம் என்னும் புறப் பொருள் துறையைச் சார்ந்தது.41

திருவிருத்தத்தில் கருடனாகிய வாகனத்தின்பின் போன நெஞ்சு என்று குறிப்பிடப்படுகிறது; திருக்கோவையாரில், தலைவன் சென்ற தேர்ப்பின் சென்ற நெஞ்சு என்று கூறப்படுகிறது

''தலைவன் தான் கூறிய சத்தியத்தை மறந்துவிட்டுத் தேரேறிச் சென்றான். 'என் மனமோ அவன் தேர்ப்பின் சென்றது. அது இன்று வருமோ, நாளை வருமோ, அல்லது என்று வருமோ, அறிகிலேன்'' என்று கல்லாடத் தலைவி அல்லலுறுகிறாள்42.

## ஓரிரவு-பல யுகங்கள்

'கையும் திருவாழியுமாகக் கண்ணன் எனக்குச் சேவை சாதித் தான். அப்போது அவன் சாத்தியருளிய திருத்துழாய் மாலைக்கு ஆசைப்பட்டு அவன்பின்னே என் மனம் போய்விட்டது அந்நெஞ்சு அங்குச் சென்று பகைவரைப் பிளக்கும் திருச்சக்கரத்தின் திறமையையும் அதை பணிந்த எம்பெருமானின் அழகையும் குளிர்ச்சியையும் நினைத்து கொண்டு நிற்கிறது அங்ஙனம் நின்றதால் என் உடலழகும் கெட்டு வெளுத்துப் பசலை நிறமுற்றது மற்றுமுண்டான தென்றல் முதலியனவும் பாதிக்கத் தொடங்கின. இத்துன்பங்களினால் ஓரிரவு அநேகம் யுகங்களாய் பெருகத் தொடங்கியது. இந்த நெஞ்சுடன் உறவாடியதற்கு இந்த இரவே பலம் பொருந்தியதாகிவிட்டது'' என்று தலைவி வருந்துகிறாள்.43

''அறியாமையுடைய நெஞ்சே! நம் தலைவர் இப்போது நம்மைப் பிரிந்து சென்றது நம்மை நல்லற நெறிப்படுத்தி இனிது வாழ்வதற் பொருட்டன்றோ? இவ்வறத்தின்பாற்பட்ட பிரிவும் நம்மை வருத்தும் என்றால், பின்னர் நாம் அறம் பற்றி எங்ஙனம் வாழ்வோம்? வருந்தற்க!'' என்று நெஞ்சினைத் தேற்றுகிறாள் திருக்கோவையார்த் தலைவி.44

இரவு தலைவன் கலப்பதற்கு முன் முப்பது நாழிகையாயிருந்த தென்றால், கலந்தவாறே ஒரே ஒரு நொடியாகிக் குறைந்து விட்டது. பிரிந்தவாறே கல்பங்களாக வளர்ந்து நின்றன தான் பெற்ற பேறு (தனிவளம்) தனக்கன்றி வேறு யார்க்கும் கிடைப்பதரிது என்று கலுழ் கிறாள் தலைவி. தலைவன் பிரிந்து சென்றதால் அறவாழ்க்கையின் கண்ணுள்ள நன்மதிப்பினை அறிகிறாள் தலைவி, அறம் பற்றிப் பிரிந்து சென்ற அவனை நினைந்து வருந்தவேண்டா என்கிறாள்.

## கிட்டாதாயின் வெட்டென மற

"நரகாசுரன் படையெடுத்துச் சென்று வெற்றி பெற்ற போது அங்கிருந்த பதினாயிரத்தொரு நூறு கன்னியர்களைச் சிறையிலடைத் தான். கண்ணன் நரகனைக் கொன்று அக்கன்னியர்கள் யாவரையும் மணஞ்செய்து கொண்டான். கண்ணனின் பேரனான அநிருத்தனை அவன் தேவியான உஷையுடன் சேரவொட்டாமல் சிறையிலடைத்தான் பாணாசுரன். அவன் தோள்களைத் துணித்து, அவன் மகளான உஷையைத் தனது பேரனான அநிருத்தனுக்கு மணஞ்செய்து கூடி வாழும்படி செய்தவன் கண்ணன். அந்தக் கண்ணனுடைய உபகாரத் தன்மையான அன்பு முதலான கல்யாண குணங்களை வேதமே அள விட்டுக் கூற முடியாதிருக்க, அவற்றின் பெருமையை நம்மால் கூற முடியாது. எனவே, அவர் பக்கல் காதலித்த காதலியாகிய என்னை வந்தடைந்து இன்பம் அனுபவிக்கச் செய்ய வேண்டும். அவன் நமக்கு இப்போது வந்து உதவாதது அவன் இழைத்த குற்றமன்று. இப்ப யிருக்க நமக்கெட்டாத நிலத்திலெழுந்தருளியிருக்கின்ற அஞ்சனமலை போன்ற திருமேனியழகுடைய அந்தப் பேரருளாளனின் திருத்துழா மாலைக்கு ஆசைப்பட்டுநின்ற, நமக்கரிதானதை நாம் ஆசைப்பட கூடாதென்று சொன்னாலும் கேளாத, என் மனத்தினால் எனக்கு இவ் விதமான வேதனை வந்து விட்டது" என்கிறாள்தலைவி.45

திருக்கோவையார்த் தலைவியோ, "தோழி! நீ கூறியவாறு த தலைவன் வாய்மை பிறழார் என்பதனை நானும் நன்கறிவேன். அவ விரைந்து மீள்வர் என்று ஆறுதலெய்தவும் முயல்கிறேன். என்ன பயன் என் நெஞ்சமும் நிறையும் என் வயப்படுகின்றில. இவை என் சொற்ப யாதும் செய்தில இவ்வருத்தத்தால் என் உயிரும் தாங்குதல் அரிதே யாம். இங்ஙனமாதற்குக் காரணம் நான் முன் செய்த தீவினையே இக்காலத்தினியல்போ? அறிகின்றிலேன்" என்கிறாள் 46

'கிட்டாதாயின் வெட்டென மற"47 எனும்படி எனக்கு அடை முடியாதவர் எனக்கருதி என் காதலையடக்கி ஆறுதல் பெற்றிருப்பே ஆனால், என் நெஞ்சமோ அங்ஙனம் ஆறுதல் பெறாமல் அவன மாலையினைப் பெறுதற்கு ஆசைப்பட்டு, அது கிடைக்காமையா எனக்கு இத்தகைய வருத்தத்தை விளைத்துத் தான் அவனிடம் போ சேர்ந்து நிம்மதி பெற்றது" என்று அங்கலாய்ப்போடு கூறுகிற தலைவி

''இங்ஙனமே வாணனைப் பற்றித் திருமழிசை யாழ்வார் 48 திருமங்கையாழ்வார்49 பிள்ளைப் பெருமாளையங்கார்50 ஆகியோரும் கூறுகின்றனர்.

குறுந்தொகைத் தலைவி துன்பத்திற்குப் பதில் காந்தள் மலரைக் கூறுகிறாள்.

''ஒரு நாள் மாலையில் தலைவன் மலையிலே பெருமழை பெய்தது. அதனால் ஏற்பட்ட வெள்ளத்தில் சிக்கிய காந்தன் செடி முழுமையுடையதாக நம் ஊருக்கு வந்தது. தலைவனுடைய ஊர்க்காந்தன், அஃதன்றோ! நான் அதை அருமை பாராட்டி வீட்டுக்குக் கொண்டு வந்து பேணினேன். காந்தளைப் பார்க்கும் போதெல்லாம் தலைவனின் நினைப்பிலே திளைப்பேன். என்னுடைய இந்தச் செயலைத் தடை செய்யாமல் விட்ட நம் அன்னைக்குத் தேவர் உலகமே கொடுத்தாலும் ஈடாகாது''51 என்கிறாள் குறுந்தொகைத் தலைவி.

''தலைவன், நீ உயிர், நான் உடல்'' என்று நெஞ்சங் கரியாக வைத்தான் ஆனால் இப்போது சொல் மாறுபட்டுக் குற்றம் உண்டாயிற்று. அது அவன் குற்றமன்று; என் தீவினையாயிருக்கலாம். அவன் குறித்த காலத்தை என் மனந்தடுமாறியதால் முன்னதாகக் குறித்து மயங்கிவிட்டேனோ?'' என்கிறாள் கல்லாடத் தலைவி 52

## கடலே தேர்வழித் தூறல்

''கடலே! நீலமாயிருப்பதொரு அபூர்வமான சூரியனைப் போல் சுற்றிலும் கருஞ்சுடரைப் பரப்பிக்கொண்டு திருமால், திருவனந்தாழ்வானைப் படுக்கையாக விரித்துக்கொண்டு உன்னிடத்தில் எப்போதும் வாசஞ் செய்கிறான். பிரியாமலிருக்கிற அதனால் அவனைப் பிரிந்தவர் படும் வேதனையை நீ அறியாய். என் தலைவனான அந்தத் திருமால் இன்றிரவு என்னுடன் கூடியிருந்து பகலிற் போனால் அனைவரும் காண்பார்கள் என்று அந்த இரவிலேயே தேர் ஏறிப் போனான். அந்தப் பிரிவுத் துன்பத்தை என்னால் பொறுக்க முடியவில்லை. இனி, அவன் தேர்வழியை யாகிலும் பார்த்து உயிர் பிழைத்திருக்கலாம் என்று இருக்கிறேன் நீ உன்னுடைய அலைகளாலே, அவ்வழியை முன்பொரு கால் இராமன் சீதையைப் பெறுவதற்கு அணைகட்டினபோது, மோதாதபடி செய்தாயே, அங்ஙனம் இப்போதும் அழிக்காதிருக்க வேண்டும். அப்படி அழிக்காதிருப்பது என் அன்பன் திரும்பி வரும் வரையிருந்தால் போதுமானது. எனக்கு இந்த உதவியைச் செய்தாயாகில் நெடுங்காலம் சுகமாக இருப்பாய்''53 என்று கூறுகிறாள் தலைவி.

"கடலே! அன்பு செய்யத்தக்க என்னைப் பிரிந்துசென்ற என் ஆருயிர்த் தலைவனது தேர்ச்சுவடு கண்டு யான் ஒருவாறு ஆறுதலுறுகின்றேன். நின் அலைக்கரங்களால் அத்தேர்ச் சுவடுகளை அழித்திடேல் அழித்திடேல்!" என்று வேண்டுகிறாள் திருக்கோவையார்த் தலைவி.55

கடலின் ஓசை தலைவியின் தனிமைத்துயரைப் பெருக்குகிறது. மேலைநாட்டுக் கவிஞர் வில்லியம் கௌபர் என்பாரும் கடலின் காட்சியும் ஓசையும் பலமுறைகள் தம் உள்ளத்தில் ஒருவகைத் தனிமை உணர்ச்சியை எழுப்பி வருத்தியதாகக் குறித்துள்ளார் 55

ஆடவர்க்கே கடலின் ஓசை தனிமைத் துயரைத் தருகிறதென்றால், காதலரைப் பிரிந்த தலைவியர்க்கு எத்தகைய துயரைத் தரும் என்பதை உணரலாம். துன்பம் நேர்கையில யாரிடமாவது கூறினால்தான் அந்தச் சுமை குறையும். இல்லாவிடில் துன்பத்தின் கொள்கலம் கொள்ளாது வெடித்து விடும். ஆனால், இங்குத் தலைவி தோழியிடம் கூடச் சொல்ல முடியாமல் கடலிடம் கூறித் தன் துன்பத்தைத் தீர்த்துக் கொள்கிறாள்.

களவினால் தலைமகளைப் புணர்ந்துநின்ற தலைமகன் அதனால் ஊரெங்கும் பழிபரவுதலை யறிந்து. அஃதடங்குமாறு அவளைச் சில நாள் பிரிந்திருக்கக் கருதினான். அதனை அவளுக்குக் கூறாமலே தான் பிரிதலை அவளறிந்தால் வருந்துவாளென்று அவளறியாதபடியும் ஊராரறியாதபடியும் இருளிலே பிரிந்து சென்றான். பின்பு அப்பிரிவை யறிந்து ஆற்றாது வருந்துகின்ற தலைமகள் அவனது தேர்ச்சக்கரம சென்ற சுவட்டை நோக்கி அவன் மீண்டு வருமளவும் அதனையே தனது உயிர்க்குப் பற்றுகோடாகக் கொண்டு பார்த்துக் கொண்டு இருந்தாள். எனவே. அங்ஙனம் பிரிந்திருந்து இரங்குமிடம் கடற்கரைச் நெய்தல் நிலத்திலே சென்ற அத்தலைவனின் தேர்ச்சக்கரச் சுவட்டைக் கடலின் அலைவீசி வந்து அழிக்கப் புக, அழித்திடாதே என்று அதனை வணங்கி வேண்டியது இந்தத் துறை. 'உள்ளதெல்லாம் கொடுத்து உஞ்சவிருத்தி பண்ணிப் பிழைப்பவர்' போலத் தலைவரைப் போக விட்டு, அவன் போனவழி பார்த்து ஆறுதலடையும் தலைவி. தேர்ச் சுவட்டையும் அழித்திடவேண்டா என்று கடலை வேண்டுகிறாள்.

## அன்னமே! நீ தூது செல்லாயோ

"அன்னங்களே! நான் அந்தக் கண்ணனுடைய மோகத்தால் மிகவும் நொந்து இனி அவன் முகத்தில் விழித்தாகிலும் சில நாள்

பிழைப்போம்என்று பார்த்து, உங்களைவிட வேறொருவரில்லாமையால், அவனிடம் தூது போகச் சொன்னேன். என் நிலையைப் பார்த்து நான் சொல்வதற்கு முன்னமே சென்று, அவன் இதயத்தில் படும்படி சொல்ல வேண்டியிருக்க, நான் சொன்ன பின்புங்கூடச் சென்றறிவியாமல் உம் பெட்டை அன்னங்களுடன் போவதும் வருவதுமாய் இன்பமுடன் இருக்கிறீர்கள்.

நளன் ஆண்மகன். அவன் தூது அனுப்பினான். நம் முன்னோர் போய் வந்தனர். எனவே, பெண்ணுக்கு இதுவரை தூது போனதில்லை என்னலாமோ! பிரிவைப் பொறுத்துக் கொள்ளாமல் வருந்துகின்றவர் களுக்கு உதவி என்றால் ஆண் என்றாலென்ன? பெண் என்றாலென்ன? இப்படிப் பார்த்தால் அரசனுக்குத் தூது போவதுண்டு; அபலைக்குத் தூது போவதில்லை எனலாம். இங்ஙனம் அத்தகைய பண்பை மேற் கொண்டால் அது தீமையைத் தரும் பண்பேயாகும். நாம் போகக் கூடாதென்று மனத்தில் நினைத்து வெளியே ஏதோ சாக்குப்போக்குக் கூறுகிறீர்கள். நீலமேகத்தில் மின்னினாற் போலத் திருவாபரணங்களை உடைய அந்தத் திருமகள்நாதன் எழுந்தருளியிருக்கும் இடத்திற்கு நீங்களே திருமண நிமித்தமாகப் போக வேண்டும். அப்படியிருக்கத் தூது போகக் கூடாதென்ற எண்ணமே என்று தோன்றுகிறது நீங்கள் நல்ல குடியில் பிறவாமையால் மிக்க பெருந்தன்மை உங்களுக்கு இல்லாமற் போய்விட்டது'' என்கிறாள் திருவிருத்தத் தலைவி.56

இப்பாடலுக்கு உடன்பாட்டுத் தன்மையிலும் பொருள் கொள்ளலாம். ''இவ்வன்னங்கள் சிறந்த குடியிற் பிறந்தமைக்கேற்பத் தூதுக்கு வேண்டும் குணங்கள் நிறைந்தவை. ஆகவே, நான் இங்ஙனமாகச் சொல்கிறேன் என்பதையும் நன்கு உணர்ந்து கொள்ளும் நான் சொன்னதொன்று; அவை சொல்வதொன்று என்றில்லாமல் நாய கனிடம் சொல்லத்தகாதவற்றைச் சொல்லாமல் போய்வரும். போகும் போது பெண்டிரை இங்கேயே விட்டுவிடாமல் அழைத்துக்கொண்டு போய்வர வேண்டும். என்னைப் போன்று பெட்டை அன்னங்கள் உங்களைப் பிரிந்து பரதவிக்க வேண்டா. சேர்ந்து சென்றால் கலந்து பேசி வர அனுகூலமாகும் நாயகனுக்கு அவற்றைப்போல் சேர்ந்திருக்க எண்ணமும் பிறக்கும். பெட்டை அன்னங்களோடு இருக்கிறோமே, இத்தலைவியிடம் திரும்பி வாராமல் அங்கேயே நின்றுவிட்டால் என்ன என்று அவ்வாறு நினைந்து சொல்லிக் கொள்ளாமல் பெடையோடு திரும்பி வந்து எனக்கு ஆறுதல் கூறுமா? ஒருகால் உலகில் பெண்கள் தூது அனுப்புவதில்லையென்ற அனுபவத்தைக் கொண்டு தங்களுக்குக்

குடிச்சீர்கூமயிருந்தும் புறப்பட மாட்டாவோ? அப்படிப் புறப்படவில்லை யானால் இவை குடிச்சீர்மை யில்லாமலுள்ள அன்னங்களேயாகும்.''57 இந்தப் பொருளும் ஏற்றதாகவே உள்ளது.

''நெஞ்சே! இப்போது இவ்வுலகத்தின் உயிரெல்லாம் இனிதே உறங்குகின்றன நான் ஒருத்தி மட்டுமே துயிலின்றி வருந்துகிறேன்· ஈண்டு இப்பெண் அன்னத்தின் கீழான தன்மையைக் காண்பாய். அது இவ்விடத்தே என்னோடு நீண்டநாள் பழகி நட்புத்தன்மை யுடையதாக வுள்ளது. ஆனால் நான் உற்ற துயரத்தை எம்பெருமான்பாற் சென்று கூறச் செல்லவில்லை. மாறாகத் தான் விரும்பிய சேவலைச் சிறகினால் அணைத்துக் கொண்டே சென்று தன் சேக்கையில் இனிதே உறங்கு கிறது. ஆதலால் அது நம்மால் இரங்கத்தக்கதாயுள்ளது'' என்கிறாள் திருக்கோவையார்த் தலைவி.58

மேகத்தினிடையில் மின்னல் தோன்றும்போது அம்மின்னல் முழுமையான கருமேகத்தைச் சூழ்ந்து அதன் கருநீலத்தை மறைப் பதைப் பார்க்கிறோம். அதுபோல் எம்பெருமான் மார்பிலுறையும் பிராட்டியாரின் ஒளி எங்கும் பரவினதால் அவ்வொளியின் இடை வெளியிலே எம்பெருமான் திருமேனி அடங்கிவிடுகிறது.

இரு நூல்களிலும் வரும் தலைவியர்கள் அன்னப் பறவைகளைத் தூது செல்ல விடுக்கிறார்கள். திருவிருத்தத் தலைவி ஆண் அன்னத்தைத் தூது விடுகிறாள். அந்த ஆண் அன்னம் பெண் அன்னத் தோடு இணைந்து சென்றே தூது கூறி வரவேண்டும் என்கிறாள். இன்னும் போகாமல் இங்கேயே இருக்கின்றனவே என்று வருந்திக் கண்ணீர் வடிக்கிறாள்.

திருக்கோவையாரில் தலைவி பெண் அன்னத்தைத் தூது விடுக்கிறாள். ஒரு பெண் மனத்தை இன்னொரு பெண்தானே அறிய முடியும். அந்தப் பெட்டையன்னமோ சேவலோடுசேர்ந்து படுக்கையில் நிம்மதியாக இன்னொரு பெண் அன்னத்தைப் புரிந்துகொள்ளாமல் களியன்னமாகத் தூங்குகின்றது. அந்த நேரத்திலும் பெட்டையன்னம் ஆணின் மெய்தொட்டுப் பயிறலை விரும்புகிறது. அதனைக் கண்ட தலைவிக்குக் காம உணர்ச்சியைத் தூண்டிவிடுகிறது. ஆனால் தலைவியின் துன்பத்தை நீக்காமல் தான் மட்டும் இன்பத்தை அனுபவிக்கின்றது. இதுவா பெண்ணுக்குப் பெண்செய்யும் உதவி என்று கலுழ்கிறாள் திருக்கோவையார்த் தலைவி.

இங்கு நான்கு அடிகளிலும் 'தழீஇ' எனும் சொல்லிசை யளபெடை வந்து இன்பஞ் செய்கிறது. தழுவிக்கொண்டே நீண்ட நேரம் இருக்கவேண்டும் என்னும் பொருளுணர்த்த நீட்டிச்சொலலும் உயிரளபெடையைப் பெய்திருக்கிறார் மாணிக்கவாசகர்.

அன்னத்தைத் தூது விடுப்பது இங்கு மிகவும் பொருத்தமாக உள்ளது. அன்னம் நெடுந்தூரம் பறந்து செல்லவல்லது. அன்னம் எங்ஙனம் விசும்பில் பறந்து செல்ல இயலுகின்றதோ, அங்ஙனமே ஆசாரியர்களும் ஞானம், ஒழுக்கம் எனும் இரு சிறகுகளாலும் இறைவனை அடையப்பெறுகிறார்கள். இவ்வாறு அடைந்தவர்கள் செல்வநம்பி, பெரியாழ்வார், நாதமுனிகள், ஆளவந்தார் முதலானவர்கள். அன்னார்பால் இத்தகைய குண ஒற்றுமை உள்ளமையால் இது பொருத்தமேயாகும்.59

ஆண் அன்னம் தான் கண்ணுறங்காத தன்மையைச் சொக்கேசரிடம் போய்க் கூறாமல் பெடையையும் குஞ்சுகளையும் தன் சிறகினுள்ளே தழுவி உறங்கச் செல்கிறதே என்று வருந்துகிறாள் கல்லாடத்தில் வரும் தலைவி.60

## கை வளை பறிக்கும் கடல்

''இவள் ஓர் அபலை; நாம் எதைச் செய்தாலும் நமக்கு இவள் ஒரு கைம்மாறும் செய்ய ஆற்றலற்றவள், என்று உறுதி செய்து இக்கடலானது இப்போது எம்பெருமான் அருளின நறுமணங் கமழும் திருத்துழாயைத் தனக்குக் கூட்டுப்படையாகக் கொண்டு தன்னுடைய ஓசையால் என்னை வருத்தி என் கைவளையைப் பறிக்க முயலுகிறது. என் வளை எனக்கே சேர வேண்டும் என்கிறது. நான் விலைகொடுத்து வாங்கினேனே என்றால் யாரிடம் வாங்கினாய்? பரதவரிடந் தானே? அவர்கள் நெய்தல் நிலத்தைத் தம் இடமாகக் கொண்டவர்கள்தாமே! அவர்கள் என் கரையில் திரிந்து எனக்கொன்றும் கொடாமே கூறாமே என் சங்குகளைக் கள்ளத்தனமாகக் கொண்டு விற்றால் அவற்றிற்கு நீ பணம்கொடுத்து வாங்கினாலும் கூட அவை உன்னுடையனவாகா. நீ பணம் இழந்தாயானால் நான் என்ன செய்வது? என் சங்குகள் எனக்கே சேர வேண்டும். நீதிமன்றத்தில் முறையிட்டுப் பெறுகிறேன் பார்! என்று வம்புச்சண்டைக்கென்றே இழுக்கிறது. எனக்காவது என் சந்ததியான துழாய்க்காவது சேரவேண்டிய சொத்தை நீ யார் கொள்ள கொள்வது என்கிறது. அந்தத் துழாய் என் அருகில் நின்றால் இக்கடலின் அகங்காரத்தை அடக்குவேன்''61 என்கிறாள் திருவிருத்தத் தலைவி.

“மடமை பொருந்திய கடலே! எனக்கு அணியாக இருந்தது வெண்மை பொருந்திய வளை. அது உன்னிடமிருந்து பிறந்த வளையாகும். அதனைக் கவர்ந்து சென்ற கள்வனைப் பற்றி நீ யாதொன்றும் சொல்லாமலிருந்தாய். பண்புமிக்க உனக்கு இது தகுமோ?”62 என்கிறார் திருக்கோவையார்த் தலைவி.

திருப்பாற்கடலைக் கடைந்தபோது மந்தரமலையை மத்தாக நாட்டி வாசுகியைக் கயிறாகக் கட்டித் தன்னுள் உடையும்படியாகத் தான் சின்னபின்னமாய் ஆயாசத்தில் அலைகளாய் எழும்பி அலையும் படியாகவும், தன்னைக் கடைந்து தன் சத்தான அமுதத்தை எடுத்துக்கொண்டு போன எல்லாம்வல்ல பெருமானிடத்தினின்றும் தன் பொருள்களை வாங்கிக்கொள்ள ஆற்றலற்ற இந்தக் கடல் ஓர் சக்தியும் இல்லாதவளான என் கை வளையைக் கண்டு இங்ஙனம் தாயம்கொள்வாரைப் போலக் காலம் பார்த்து என் வளையை அபகரிக்க உத்தேசித்துத் துன்பம் செய்யத் தொடங்கியது என்னும் கருத்துப்படப் பேசுகிறாள் திருவிருத்தத் தலைவி

சீதை கணையாழியைப் பெற்று மகிழ்ந்ததுபோலத் தானும் துழாயைப் பெற்று மகிழவியலாதா என்றும், அது தன்னைத் துளைத் தெடுக்க வேண்டுமென்றே இவ்வாறு செய்கிறது என்றும் அவள் வருந்துகிறாள்.

“கடலே! உன் துறைக்கண் புன்னை மரத்தைப் பாடிவரும் வண்டிற்குப் பொற்கிழி தருகிறாய் (பொன்போன்ற நிறமுள்ள மகரந்தம்) அத்தகைய வள்ளல் தன்மை உடையை! ஆனால் நீ, வருந்திவந்து உன்னிடம் வினவும் பெண்பாலாகிய எனக்கு ஒருவாய்ச் சொல்லும் தர மறுக்கிறாய்! நீ மிகவும் கொடியை!” என்று வருந்திப் பேசுகிறாள் திருக்கோவையார்த் தலைவி.

“தலைவனைக் கண்டு பின் அவன் பிரிவால் ஊண் உறக்கம் துறந்ததால் உடலிளைத்துக் கையிலிருந்த வளையல் கீழே விழுந்து தொலைந்துவிட்டது அதற்குக் காரணம் தலைவன். அக்கள்வனைப் பற்றிச் சொல்லாமலிருக்கிறாயே, இது தகாதுகாண்!” என்கிறாள் அவள்.

## மாலைப்பொழுதின் கொடுமை

“அரக்கர் வாழும் இலங்கையிற் சென்று அவர்களைக் கொன்று கூறாக்கி, அவ்வூரைச் சுடுகாடாக்கி நிற்கையில் அம்மகிமையைக் கண்டு பிரமன் முதலியவர்களால் தோத்திரம் செய்யப்பட்ட நம் சக்கர

வர்த்தித் திருமகன் அக்காலத்தில் சாத்தியருளிய செழுந் துழாய் மாலையைப் பெறவேண்டுமென்று ஆசைப்பட்டு, அது கிடைக்காமையாலே முன்னமே துக்கப்பட்டுக் கொண்டிருக்க, அதற்குமேல் பகற்காலமும் போய்ச் சூரியனும் மறைந்து சந்திரனுமுதிக்க, அப்போதுண்டான பறவை ஒலிகளையும், செவ்வானத்தையுமுடைய மாலையானது, முன்னர் இராமனம்பினால் அடிபட்டுப் போர்க்களத்தில் விழுந்த வாலியைக் கண்டு பிள்ளையாகிய அங்கதனும் தானுமாய்த் தாரையானவள் புலம்பியதுபோல் தோற்றி என்னை மிகவும் நலிவுறச் சேய்கிறது'' 63 என்கிறாள் தலைவி.

''அந்தோ !! பகல்செய்யும் சூரியன் மறைந்தனனே வருந் துன்பத்தைக் காக்கும் தலைவர் தொலைவிலுள்ளனரே ! எனக்குப் பேச்சுத் துணையாகி இங்குத் திரிந்து கொண்டிருந்த அன்னங்களும் தம் இருப்பிடத்தை நோக்கிச் சென்றனவே. மாலைக் காலம் வருகிறதே இனி என்ன செய்வேன்?'' என்கிறாள்.64.

திருவிக்கிரமாவதாரத் திருத்துழாயாகில் அவன் எங்கும் பரவினனாதலால் ஒருகால் கிடைக்கலாம். சக்கரவர்த்தித் திருமகன் சூட்டிய திருத்துழாய் கிடைப்பதரிது. அவன் மனிதனாகப் பிறந்ததால் துழாய் தரியான். எனினும், இராமன் இலங்கையை வீட்டிய பிறகு பிரமன் முதலியோரால் நாராயணனாகக் கருதிப் பூசிக்கப்பட்டதால் அப்போது அவர்கள் திருத்துழாயைச் சாத்தினார்கள் எனலாம். இந்தத் துளசி பெறுமாசை விரைவில் நிறைவேறாதது மாலைக் காலத்துக்கு மிக அனுகூலமாயிற்று அதனால் அது தலைவியை நலிகின்றது.

சீதை அனுமனிடம், ''என் பொருட்டாகக் காக்கை உருவெடுத்த இந்திரன் மகன் செயந்தன் மீது கூடப் பிரம்ம மந்திரத்தைக் கூறிப் புல்லை அம்பாக எய்தவர் இராவணாதியரை நலியாமலிருப்பது நியாயமோ?'' என்றாள். சீதைக்காக அத்தனை பாடுபட்டு இலங்கை வெங்களம் செய்த பிரான் எனக்காகத் தன் துழாயில் ஒரு சிறிது தரலாகாதோ ? என்கிறாள் பாராங்குச நாயகி. இதே கருத்தடங்கிய பாடல் திருவரங்கக் கலம்பகத்திலும் உள்ளது.65

''மாலைக்காலமே! என்னுயிரை வருத்துவதும் தலைவர் சார்பாக நிற்பதும் உனக்கு ஒருதலைப் பட்சமாகவே உள்ளது. நீ விண்ணில் இருந்து வந்தாயா? மண்ணிலிருந்துதான் வந்தாயா? நீ எங்கிருந்து வந்தாயோ?'' என்று வினவுகிறாள் கல்லாடத் தலைவி 66

"இடைச்சியர்கள் பிறர் அறியக் கூடாதென்று தாங்கள் கடைந்தெடுத்த வெண்ணெயை ஒருவருமறியாத ஓரிருட்டறையில் கைக்கெட்டாத உயரத்தில் உறியில் வைத்துக் கள்ளக் கயிற்றை உருவி அதன் மேல் மற்ற கொம்பு கொடிகளையும் அமைத்து மோர் விற்கப்போக, கண்ணன் அவ்வெண்ணையை அமுது செய்தான். பின், அவர்கள். குறித்த அடையாளங்களை முன்போலவே அமைத்து வைத்தான் இந்தக் கண்ணனது வீரச் செயலில் நான் ஈடுபட்டேன். மற்றும் பிரளய காலத்தில் எல்லா வுலகையும் தன் வயிற்றின் ஒரு மூலையில் வைத்துக் காத்த அவனுடைய உபகார குணத்திலும், மிகச் சிறிய வடிவினையெடுத்துக் கொண்டு மகாபலியிடம் சென்று இரண்டடியை யாசித்தால் இவனைச் சிறை செய்யத் தந்திரமில்லையே யென்று மூன்றடி யாசித்து வாங்கி இரண்டடியாலே மண், விண் அளந்து ஓரடியாலவனைச் சிறை செய்த அவனுடைய நடையழகிலும் புத்தி சாதுரியத்திலும் ஈடுபட்டேன். ஈடுபட்டு அவனுக்கே அடியவளானேன். எனவே என் மனம் உங்கள் சொற்படி மற்றொன்றையும் பொருந்தாது. நான் என் செய்வேன்?67 என்கிறாள் பராங்குச நாயகி.

"தோழி! அன்றொரு நாள் ஆயமும் நானும் சென்று கடற்கரையின்கண் சிறுவீடு கட்டிச் சிறுசோறு சமைத்து விளையாடியிருந்தோம் அப்பொழுது ஒரு நம்பி வந்து, 'நங்கையீர்! நானின்று உங்கள் வீட்டில் விருந்தினராய்ச் சோறுண்ண விரும்பி வந்துள்ளேன்' என்று கூறி நின்றான். அதுசமயம் கீழ்க்காற்று மிகுதலாலே கடலலை மேலேறி என்னைக் கவர்ந்திழுத்துச் சென்றது. அது கண்ட அப்புதியவன் கடலிற் பாய்ந்து என்னைத் தன் கையால் அணைத்து நீரினின்றும் கரைக்குக் கொணர்ந்து என்னுயிர் தந்துதவினான். பின்னர், அவன் கண்டல் [தாழை]மரங்களால் அழகுற்றுத் திகழும் ஒரு சேரி நோக்கிச் சென்றான் இது முன் நிகழ்ந்தது. இனி நீ தக்கது செய்க"68 என்கிறாள் வாசக நாயகி.

இந்தப் பாட்டில் இறைவனின் எளிமை, மேன்மை என்னும் இரு குணங்கள் பேசப்பட்டுள்ளன.

மாவலியைக் கேட்காமலே திரிவிக்கிரமாவதாரத்தில் உலகைத் தன் வசமாக்கி இந்திரனிடம் சேர்த்தாலும் இவனைக் கேட்பாரில்லை. இவன் மூவுலகையும் எனக்குக் கொடு என்று கேட்டாலும் அவன் கொடுக்கலாம். அப்படியிருக்க ஒருகால் மாவலியின் பெருமைக்குக் குறை வருமோ என்றஞ்சிக் குறளனாகி அவன் ஆசைப்படும்படியிருந்து

கபடமாக மூன்றேயடி யென்று கேட்டு மூவுலகமும் கொண்டான். இப்படித் தன் சொத்தை எவ்விதமாகவாவது தான் பெற முயற்சி செய்யும் பிரான் அவன் அடியாளான தன்னையும் ஆதரவற்ற நிலையில் விட்டு விடமாட்டான் என்னும் நம்பிக்கையுடைய நெஞ்சம் இம்மாயத்தின் மேன்மையால் அவனையல்லது வேறொன்றையும் விரும்பவில்லை என்கிறாள் பராங்குச நாயகி.

அறத்தொடு நிற்றல் என்பது களவை முறையே வெளிப்படுத்தலாகும். இங்ஙனம் வெளிப்படுத்துதல் தலைவி பாங்கிக்கும், பாங்கி செவிலிக்கும், செவிலி நற்றாய்க்கும் நற்றாய் தந்தை தமையன்மாா களுக்கும் என முறைப்படி நிகழும் இதனால் வரைவு நிகழும்.

''என்னைக் கடலின் அலைகள் அடித்துக்கொண்டு போன போது தலைவன் என்னைத் தாழைப் பாவையுடனே தூக்கிவந்து கரையில் சேர்த்தான். மறறும் கோரையால் பொம்மை பண்ணிக் கொடுத்தான். தாழை மலரைக் கையுறையாகத் தந்தான். அத்தகைய தலைவன் ஒருவன் உள்ளான்'' என்று கல்லாடத் தலைவி கூறி வெறியாட்டை நிறுத்த முயல்கிறாள்69.

# (இ) தோழி கூற்று

## முன்னுரை

தலைவன், தலைவி ஆகியோர்தம் உள்ளக்குறிப்பை அவ்வப் போது வெளிக்கொண்டு வருவதில் தோழி மிகவும் வல்லவள். எனவே, அக இலக்கியத்தில் அவள் பெறுமிடம் தன்னிகரற்றது. தலைமகளின் பாத்திரப் பண்புநலன்களைத் தோழியின் துணையின்றி விளக்குதல் இயலாது. அணியிலக்கண மொழியில் சொல்வதானால் தோழி மத்திம தீபமாக நின்று எல்லாப் பாத்திரங்களுக்கும் ஒளியூட்டும் பாத்திரமாக ஒளிர்கிறாள். 2379 சங்கப் பாடல்களுள் 1864 அகம் பற்றியன அவற்றுள் முழுமையாகக் கிடைப்பது 1859 பாடல்கள். பெண் பாத்தி ரங்களின் கூற்று 1458 பாடல்களில் அமைந்துள்ளன, அவற்றுள் தோழி யினுடையது மட்டும் 785 பாடல்கள்.70 சங்க அகப்பொருள் பாடல் களில் தோழியின் கூற்று 42% ஆகும்.

திருக்கோவையாரில் 166 பாடல்கள் தோழி கூற்றாக அமைந் துள்ளன. இதுவும் நூலில் உள்ள மொத்த பாடல்களில் 41.5% ஆகும். சங்கப் பாடலிலும், திருக்கோவையாரின் அருட் பாடலிலும் தோழி கூற்றினைப் பொறுத்தவரை எண்ணிக்கையளவில் இந்த வியக்கத்தக்க ஒற்றுமையைக் காண்கிறோம்.

திருவிருத்தத்தில் 26 பாடல்கள் தோழி கூற்றாக உள்ளன. இது அனைத்துப் பாடல்களோடு கணக்கிட 26% ஆகும் நாயக நாயகி பாவத்தில் பாடல்களை மிகுதியாக நம்மாழ்வார் அமைத்ததால் தோழிக்குக் குறைந்த இடம் திருவிருத்தத்தில் அமைந்தது. இருப்பினும் தோழியின் இன்றியமையாமையைக் குறைத்து மதிப்பிட முடியாது.

நட்பிற்கு நல்லிலக்கணமாக விளங்குபவள் தோழி. தன்னைப் பற்றியோ, தன் விருப்பு வெறுப்புகளைப் பற்றியோ அவள் எடுத்துக் கூறுவதில்லை எண்ணத்தாலும், சொல்லாலும் செயலாலும் தலைவியின் நல்வாழ்வுக்கெனவே அவள் தொண்டாற்றுபவள். தோழியும் தலைவியை ஒத்த வயதினள் என்பதை அறியுமபோது அவள் உள்ளத்தின் முதிர்ச்சி வியப்பிலாழ்த்துகிறது. தோழி இன்றித் தலைவியின் வாழ்க்கை சிறந்தலியலாது. ஆனால் தோழனின்றியும் தலைவனின் வாழ்வு சிறக்கக் காணலாம். அகப்பொருள் பாடல்களில் இடம்பெறும் துணைப்பாத்திரங்களுள் தலைமைப் பாத்திரம் தோழியாகும். வேறு எபபாத்திரத்தைத் தவிர்த்தாலும், தோழி தவிர்க்கவியலாப் பாத்திரம். தலைவி, தலைவனிடம் பேசுவதை விடத், தோழியிடமே மிகுதியாகப் பேசுகிறாள்.

தோழியைத் தலைவியின் உள்மனம் எனலாம். உணர்ச்சி வயப் பட்ட தலைவி, தன் புறமனத்தைத் தன் சொற்களாலேயே வெளிப் படுத்தி விடுகிறாள். ஆனால் அவளது அகமனத்தைத் தோழியின் மூலமே வெளிப்படுத்துகிறாள்.

> ''ஒரு காலத்தில் தலைவனுக்கு நோயைத் தந்தவளும்
> தலைவியே; நோய்க்கு மருந்தானவளும தலைவியே.
> பின்பு.தலைவிக்கு நோயைத் தந்தவனும் தலைவனே;
> நோய்க்கு மருந்தானவனும் தலைவனே தோழியோ
> இருவருக்கும் நோயைத் தரவில்லை. ஆனால் அவர்தம்
> நோய்க்கு மருந்தாகப் பயன்படத்தனது வாழ்க்கையை
> அவள் அமைத்துக்கொள்கிறாள்''70

என்று கூறுவர் ஈ. கோ. பாஸ்கரதாஸ் தம் ஆய்வு நூலில்.

தேர்ந்தெடுத்த பண்பமைந்த இனிய சொற்களை இடமறிந்து, காலமறிந்து பயன்படுத்தும்செவ்வியால் தோழி சொல்லின் செல்வியாகத் திகழ்கிறாள். தலைமக்கள் உணர்ச்சிகளைச் சமன் செய்யும் அவள் தன் உணர்ச்சிகளை வெளிப்படுத்துவதில்லை. தலைமக்கள் வாழ்க்கையில் சுவையூட்டும் அவள் தன் வாழ்வின்சுவையை நினைத்துப் பார்ப்பதில்லை.

தோழியின் தாயும் தலைவியின் தாயும் நெருங்கிய தோழியராய் விளங்கியவர்கள். தலைவி பிறந்தபோது குழந்தையான அவளுக்குச் செவிலியாகத் திகழ்ந்தவள் தோழியின் தாய் ஆவாள். 'தோழி தானே செவிலி மகளே'71 என்பது தொல்காப்பியம். ''காதற்றோழியைக் குறிக்கும் தலைமகளின் தோழியர் பலருள்ளும் இவளே களவிற்குச் சிறந்தவளாகையால் 'தானே' எனப் பிரித்தார்''72 என்பர் புலவர் குழந்தை.

'ஒன்றித் தோன்றும் தோழி' என்றதனால் தோழியர் பலருள்ளும் இன்றியமையாதவள் என்று கொள்க'' என்பர் இளம்பூரணர்.73

தோழியும் தலைவியும் பிரிவு என்பதை அறியாத அளவிற்கு ஒன்றாக இயைந்தவர்கள். உவர்த்தல் இல்லாத நட்பினர். இருதலைப் பறவையைப் போல உடம்பால் இருவராய் உயிரால் ஒருவராய் ஆனவர்கள். இங்ஙனம் தோழியே தலைவிக்கும் தனக்கும் உள்ள நட்பினை எடுத்துக்காட்டுகிறாள்,

''இருதலைப் புள்ளின் ஓருயி ரம்மே''74

என்பது அகநானூற்றுப் பாடல் வரி.

ஒருயிரானவர் என்பதால் இருவரும் ஒரே மனத்தினர் என்பது வெளிப்படை. தலைவி உள்ளந்தளர்ந்த சமயங்களிலெல்லாம் தோழியே செயலாற்றும் உள்ளத்தினளாக விளங்கி நெறிப்படுத்தி வந்திருக்கிறாள்.

## தலைவனைப் பிரிந்த தலைவி

''நீர்கொண்ட மேகம்போல் மிக்க அழகான திருமாலின் வடிவழகை வைகுண்டத்தில் நித்தியசூரிகள் எல்லாரும் விரும்பி அனுபவிக்குமாப் போலே இவள் தானும் அனுபவிக்க ஆசைப்பட்டாள். ஆனால் அது கிடைக்கப்பெறவில்லை. எனவே, கவலை கொண்டாள். அதனால் தன் மீன்போன்ற கண்களின்றும் கண்ணீரைத் தாரை தாரையாய்ப் பெருக்கிக்கொண்டு தன் தலைவன் எந்தத் திக்கினின்று வருவானோ என்று நான்கு பக்கங்களிலும் கண்களைச் சுழற்றி விழித்துப் பார்த்துக் கொண்டிருக்கிறாள். நிறைந்த தடாகத்திலே துள்ளுகின்ற இருமீன்கள் போன்ற இவள் கண்ணழகை அனுபவிக்க இப்போது இவள் நாயகனுக்கு பிராப்தமில்லையே இனி விரைவில் நாயகனுடன் சேர்ந்து இவள் இக்கவலை தீர்ந்து இன்பமடையக் கடவாள்'' என்கிறாள் தோழி.75

''நம் தலைவன் கல்விக்காக அகல்வர் போலும் எனும் சொல்லைக் கேட்குமளவிலே இவ்வளவு பெருந்துயர் கொள்ளுமிவள் அவன் பிரிந்துழி

எங்ஙனம் ஆற்றியிருப்பாளோ, அறிக்லேனே!'' என்று தன் நெஞ்சிற்குக் கூறிக் கழிபேரிரக்கம் கொள்கிறாள் திருக்கோவையார்த் தோழி.76

திருவிருத்தத்தில் அழுகை நிலையைக் கூறுகிறபோது வாழ்த்துக் கூற நேரமேது என்னில் இறைவன் சார்பாக அன்பு மிகுதியினால் கண்ணும் கண்ணீருமாய் இருக்கும் நிலைமை அன்பர்கட்குச் சிறந்த கண்காட்சியாதலால் இந்த நிலைமை மேலானதாகவும் அனுபவிக்கத் தக்கதாகவும் உள்ளது இது மாறாமல் என்றும் நிலைத்திருக்க வேண்டும் என்று பல்லாண்டு பாடுவது ஏற்கும்.

''வண்பொன்னிப் பேராறு போலவரும் கண்ணநீர் கொண்டு அரங்கன் கோயில் திருமுற்றம் சேறுசெய் தொண்டர் சேவடிச் செழுஞ் சேறு என் சென்னிக் கணிவனே''77 என்றும், ''கண்டிடக் கூடுமேல் அது காணும் கண் பயனாவதே''78 என்றும் குலசேகரர் பாடுவதனால் இதனை அறியலாம்

தலைவன் ஓதுவதற்காகப் பிரிகிறேனென்று ஒருவார்த்தை தலைவியினிடம் கூறிய அளவிலே அவளுக்குப் பலவகைத் துன்பங் களும் கூடி இருசெவிகளினிடத்துப் புகுந்தாற் போல்கின்றன என்று கல்லாடத்தின் தோழி கூறுகின்றாள்.79

## காளைப் போர்

நாயகியோடு கூடியிருந்த தலைவன் பொருள் தேடும் நிமித்தம் வெளிநாடு செல்லவேண்டி, ''பெண்ணே! நான் கார்காலத்தில் வருவேன்'' என்று சொல்லிக் காலம் குறித்துப் பிரிந்து சென்றான். அந்தக் கார்காலம் வந்த அளவிலும் அவன் நாயகன் வரவில்லை. ''அந்தோ! நாயகன் குறிப்பிட்ட காலம் வந்துவிட்டதே, இவ்வளவிலும் அவன் வந்திலனே!'' என்று கார்கால வரவையும் காதலன் வாராமை யையும்நோக்கிவருந்துகின்ற தலைவியைத் தோழியானவள், ''நங்காய்! நீ ஏன் வீணே வருந்துகிறாய். மெய்யே கார்காலம் வந்தாலன்றோ காதலன் வந்திடுவான் அவன் சொல்லிப்போன கார்காலம் வரவில்லை. கார்காலமாகில் இதோ மழை பெய்கின்றதே! இஃது ஏன் என்று கேட்பாய்? வானத்தில் நெருங்கி நீர் சொரிபவை மேகங்களல்ல; இரண்டு கறுத்த காளைகள், பூமியில் இடம்போதாமல் ஆகாயத்திற் கிளம்பி ஒன்றுக்கொன்று சீறிக்கொண்டு பூமியெல்லாம் நடுநடுங்கும்படி கால்பிறாண்டிக் கொண்டு சண்டையிடுகின்றன. அவற்றினுடைய மதநீரும் வியர்வை நீரும் சிறுநீரும் இப்படித் துளிக்கின்றன'' என்றாள் பின், இப்படிக் காண்கின்ற இக்காலத்தை வேறென்றாகச் சொன்னால்

நம்மிடத்தில் நம்பிக்கையின்மை பிறக்கும் என்று நினைத்து, ''தோழி! இது திருமாலின் வேடம்பெற்ற மேகமாகவும் ஆகலாம். மேகம் பெரு முழக்கம் செய்வதைப் பார்த்தால் நான் வந்த காலத்தில் உன்னை விட்டுப் பிரிந்த நாயகன் வரவில்லையே என்று உன் துக்கத்தைக் கேட்டு அதிகரிக்கிறாப் போலே இருக்கிறது. இந்த உன் அவத்தையைப் பார்ப்பது என் பாவமென்றே நினைக்கிறேன்'' 80 என்கிறாள் தோழி.

''பேதைப் பெண்ணே! அதோ காந்தள் மலர்ந்திருத்தல் கண்டு நீ கார்ப்பருவம் வந்துற்றது எனக் கருதி வருந்துகிறாய் உண்மையாக இன்னும் கார்ப்பருவம் வரவில்லை. மடமையுள்ள இக்காந்தள் திருத் தில்லை அம்பலத்தே இறைவர் இயற்றும் இன்பகூத்தின் பொருட்டு அங்கு முழக்கப்படுகின்ற குடமுழாவின் முழக்கத்தை முகில முழக்க மென்று கருதி மலர்ந்துள்ளதுகாண்! நீ கவலையடையாதே!'' என்று பொய்யேபுனைந்து ஆற்றுவிக்கிறாள் திருக்கோவையார்த் தோழி.81

இப்படிப் பொய்யுரை கூறுவது பாவமாகாதோ வெனின் ஆகாது.

''பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்.''82

என்பது தமிழ்மறை. பெருந்தீங்கையாயினும் மரணத்தையாயினும் அடைய நின்றதோர் உயிர் ஒரு பொய்யுரையால் அத்துன்பத்தினின்றும் நீங்கி இன்பமடைவதாயிருந்தால் அது பொய்ம்மைக் குற்றத்தின்பாற் படாதென்பது தமிழ்மறையின் கருத்து.

இங்குப் பிரிவாற்றாமையால் தலைமகளுக்கு உண்டாகும் அபாயத்தைப் புனைந்துரையால் ஒழித்ததைக் காணலாம். இங்ஙனம் தோழி பொய்சொல்லி விட்டாலும் தலைமகளுக்குப் பின்னர் உண்மை தெரியும். எப்படியாவது நம்மை ஆற்றுதற்காகக் கற்பனை வகையால் முழுப்பொய் கூறுகிறாள் என்று நினைத்துக்கொள்ள மாட்டாளோ என்றால் அவ்விதமாக அவள் நினைத்துக் கொள்ளாமைக்காகவே, உடனே 'தண்பூங்காலங்கொலோ வறியேன்' (மெய்யே, இதுகார்காலந் தானோ என்னவோ அறியேன்) என்று தானும் ஐயப்படுவதாகச் சொல்லி முடிக்கிறாள்.

'இது கார்காலமன்று' என்று ஐயமறச் சொன்னால்தானே தலைவிக்கு ஆறுதலுண்டாகும். முதலில் காலத்தை மயக்கிச் சொல்லி, உடனே அக்கார் காலந்தானே இது என்றும் சொல்லிவைத்தால் தலைவிக்கு வருத்தமேயன்றோ மிகும். ஆறுதல் உண்டாகாதோ எனின், 'நமது தோழி இரண்டு வகையாகவும் சொல்கிறாள். அவள் சொல்வது பொய் எனில், 'இது கார்காலமன்று' என்று உறுதியாகச் சொல்லி

விடலாம். அப்படிச் சொல்லாமல் ஐயமாகச் சொல்லியிருப்பதால் அவளும் நிச்சயிக்க முடியாதபடியிருக்கிறது போலும்! இதை நாமே ஆராய்ந்து பார்த்து உறுதிசெய்வோம்' என்று தலைவி நினைத்து, 'இது நீல வல்லேறு பொராநின்ற வானமா? தண்பூங்காலமா? என்று ஆராயத் தொடங்குவாள் இந்த ஆராய்ச்சியில் சிறிதுபோது ஆறியிருந்திடுவாள்' என்பது தோழியின் கருத்தாகலாம். பூமியில் இடம்போதாமல் ஆகாயத்திலே சண்டையிடுகின்றன என்று தோழி சொல்லும்போது இப்படியும் கரிய எருதுகள் வானத்திலும் ஏறிப் போரிடுமோ? என்று சிறிது நேரம் ஆலோசிக்கட்டும்; அதில் சிறிது காலம் ஆறுதலடையட்டும் என்ற கருத்தினால் இங்ஙனம் கூறினாள்.

'அந்தோ! ஆறுதல் சொல்ல வந்த நான் கவலையை மேலும் விளைவித்தேனே, விளையாட்டியேன் காண்கின்றன இவையே ஆயினவே' எனத் தோழி உள்ளமுருகுகிறாள். உளநூல் கருத்துப்படி மேலே செல்லும் மேகம் யானை போன்றும் காளை போன்றும் குதிரை போன்றும் ஒருவருக்குத் தெரிவதுண்டு. அஃது அவர் ஆளுமையை நிர்ணயிக்கும். எனவே, இங்குத் தோழிக்கு மேலே செல்லும் மேகம் இரு கரிய காளைகளாகத் தோன்றின.

காந்தள் மலர் மலர்வதற்குக் குடமுழவின் இசை காரணமாகியது. எனவே, இசையின் பெருமையால் காந்தள் மலர்ந்தது எனக் குறித்தாள். இசையால் பயிர் வளர்கிறது என்னும் கருத்து இன்று நிலவுகிறது. இந்த அறிவியல் செய்தியை மாணிக்கவாசகர் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தெரிவித்துள்ளார்.

## சககளத்திப் போராட்டம்

''தலைவியே! தலைவர் வாய்மை பிறழ மாட்டார்; எனவே கார் காலம் வந்தவுடனே அவரும் கட்டாயம் வந்து சேருவார்'' என்று தோழி கூறினாள். ஆனால் கார்காலம் வரவில்லையே, ஆகாயத்தில் இரைந்து காண்கின்றவை மேகங்களன்றோ? ஆறுகளும் பெருகி வெள்ளம் எடா நின்றன வென்று தலைவி கேட்டாள். அதற்குத் தோழி கீழ்வருமாறு கற்பனைக் கதையொன்று கூறித் தேற்றுகிறாள். பேச்சை மாற்றித் தலைவிக்குச் சககளத்திப் போராட்டத்தைக் கூறித் திசைதிருப்புகிறாள் இதனால் பிரிவு வருத்தம் குறையும்.

நீல இரத்தின மயமான இடத்தில் கண்ணாடிப் படிகளின் வழியாக ஏறிப் போவாரைப் போலக் கடல் தன் மகளான சீதேவியைத் தன் ஓசை யாகிற இனிய குரலால் அன்போடு அழைத்து அலைகளாகிய கைகளை

முன்நீட்டி அவற்றால் அவளை எடுத்துக்கொண்டுபோய் எம்பெரு மானிடம் சேர்க்க அத்திருமகள் அந்த அலைகளாகிய படிகளின் மூலமாக எம்பெருமானது உயர்ந்த திருவனந்தாழ்வானாகிய படுக்கையின் மீதேறி அப்பெருமானோடு கூடிக் குலவி ஆனந்தமடைந்து கொண்டு இருந்தாள். இதைப் பார்த்த பூமிதேவி தனக்கு இப்படிப்பட்ட பாக்கியம் கிடைக்கவில்லையே என்றேங்கினாள். பிராட்டியோடு எம் பெருமானுக்கு நட்பு, அருள் காரணம் என்றிருந்தோம். இப்போது விபரீதமாகப் போய்விட்டது. அவளுடன் சேர்ந்து என் மீது அருள் அற்றவனாய்விட்டான். இவ்வாறு நினைத்து வானமாகிய பரந்த தனி யிடத்திலே மேகமுழக்கம் எனும் தன்மையால் வாய்விட்டுக் கூவியழுது மிக்க கண்ணீரை இடைவிடாது பெருக்கி அந்நீர் அவளுடைய கொங்கைகளாகிய மலைகளின் மேல் ஆற்று வெள்ளமாகப் பெருகு கின்றமை பாராய்'' என்று வருணித்த தோழி, ''இது நீ நினைக்கின்ற கார்காலமன்று'' என்று தலைவியைத் தேற்றினாள்.83

## கடவுள் தந்த மழை

தலைவர் குறித்துச் சென்ற காலம் வந்துள்ளது; அவர் வந்திலர் என ஆற்றாளாகிய தலைவியை நோக்கித் தோழி, ''சங்க வளையல் அணிந்த நங்காய்! அறியாமையுடைய இக்காந்தள்தாம் கருக்கொள்ளும் காலம் வந்துற்றமையால் கருக்கொண்டனவல்ல. அதனால் இது கார் காலமென்று கருதி நம் பெருமான் வந்திலரே என்று கவலையுறேல். இவை சூலுற்றமை எதனாலெனின் நம் சுற்றத்தார் மழை வேண்டித் தெய்வம் பராவினர் அல்லரோ! அதனால் மழை பெய்யலாயிற்று. மழை பெய்தமையால் இக்காந்தள்கள் கார்ப்பருவம் வந்துற்றதென்று கருதி அரும்பின காண். நம் தலைவன் கூறிச் சென்ற காலமன்றிது. அக் காலம் வரவே அவரும் ஒருதலையாக வருவர். அதுகாறும் ஆற்றி யிருந்திடுக'' என்கிறாள் தோழி.84

சீதேவியைப் பாராட்டிய நிலையில் பூதேவி படும் பாட்டைப் பாராய் என்று ஒரு மனக்காட்சியைத் தெரிவித்து ஆற்றுவித்தாள். இங்ஙனம் தோழி கூறுவதனை நாயகி நம்புவாளோவெனில் நம்பா விடினும் இவ்விதமாக ஒன்று உலகத்திலுண்டோவென்று ஆராய்ச்சி பிறந்து அதில் கருத்தைச் செலுத்தி ஆலோசித்து முடிவு செய்யுமளவில் நாயகன் வந்திடுவானென்று கருதித் தோழி இது கூறினள் எனலாம்.

## வைணவப் பெரியார்களின் விவாதம்

எம்பெருமானிடம் ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவி ஆகியோர் வேற்றுமையின்றிச் சேர்ந்து களித்திருப்பதும், பெரிய பிராட்டியார் பூமி

முதலாயினோரைத் தன் அகங்களாகவே நினைத்திருப்பதும் யாவரும் அறிந்திருக்க, இந்தப் பூமிதேவி புலம்புவதாகச் சொன்னதெங்ஙனமென்று வினா எழ, ஆளவந்தார், "வடிவிணையில்லா மலர்மகள் இந்நீர் நடுநடுக்கும்படி கடலில் கொண்டுபோவதோ படுக்கையாக நாமே கிடக்கச் செய்தே" என்றே பூமி புலம்புகின்றதாக அருளினார். அவருக்கு முன்னிருந்த முதலிகள்.

"ஸ்ரீதேவிக்குச் சந்தனம், மலர்போலேயிருந்து அவளது போகத்திற்கு உதவவில்லையென்று புலம்புவதாகக் கூறினார்" என்று கூறியருளினார். பட்டரோ, "இவ்வளவு எதற்கு? பூதேவி புலம்ப இடமில்லாமலிருக்கச் செய்தே பூதேவி புலம்பினாள் என்று பொருந்தாத தொன்றைச் சொன்னோமானால் நாயகி இதைக்கேட்டு, இதனைச் சிறிது ஆராய முயன்றால் அப்போது பிரிவாற்றாமையாலே ஏற்பட்ட துன்பம் சிறிது விலகும் என்பது தோழியின் கருத்து" என விளக்கம் கூறினாராம். மேலும், "இப்படிப் பொருந்தாத ஒன்றைச் சொன்னால் நாயகி இதைப் பொருந்தாதென்று விட்டு மறைக்காலமே இது என்று கொண்டால் என் செய்வதென்னில் அதுவும் ஆராய்ந்து தானே ஆக வேண்டும். எப்படியாவது இருந்தாலும் நாம் ஏதோ சொல்வதைக் கேட்கின்றவரையில் பெற்றுத்தாலும் போதுமென்று தோழி நினைந்தனள்" என்றார்.85 இப்பாடல் நம்மாழ்வாரின் கற்பனைச் சிகரம் எனலாம்.

இங்ஙனமே குறுந்தொகையில் பருவமல்லாத காலத்தே கொன்றை மலர் பூத்ததன் காரணம், வம்பாக மழைபொழிந்ததே, அதனைக் கார்காலம் என்று நினைத்துப் பூத்ததாகும்' என்கிறாள் தோழி.86

## வெறியாட்டு நின்றது

தலைவியின் நோயைத் தீர்க்கப் பல மருத்துவங்கள் செய்து பார்த்துப் பிறகு ஏதேனும் தெய்வக் குற்றமாயிருக்குமே என்று விசாரிக்குமளவில் குறிசொல்லும் கட்டுவிச்சி முதலானோர் சிறுதேவதையைப் பூசிக்க இது தீருமென்று குறி கூறவே, அன்னைமார்கள் அதனைப் பூசிக்க முயன்றனர். அப்போது பூசையை எதிர்பார்த்திருக்கும் ஒருவன்மேல் தேவதை ஆவேசிக்க வெறியாடுதல் ஏற்பட்டது. தலைவிக்கு இதில் சிறிதும் விருப்பமில்லாததால் அவள் கூடியவரை தடுத்தாள். ஆற்றலற்ற அவள் மொழிகள் தாயின் செவியில் ஏறவில்லை. அப்போது அந்தரங்கத்திற்குரிய தோழி, "அன்னைமீர்! நீங்கள் பெரியோர்கள்; நான் சிறியவள், என் வார்த்தையில் உங்களுக்கு மதிப்பில்லாமல் போய்

விடுமே என்றஞ்சுகிறேன். தலைவியின் நோயெல்லாம் தெய்வங்களுக்குள்ளே மிகப்பெரிய தெய்வமான திருமாலைப் பற்றியது. பிற தெய்வங்கள் தமக்குக் கிடைக்கும் பூசையைப் பெறுவதற்காகத் தம்மைச் சிலர் புகழ்ந்து பேசினாலும் தமக்கில்லாத பெருமையை அவர்கள் ஏறிட்டுச் சொன்னாலும் உண்மையாக இருப்பதாகவே அபிநயித்துப் பூசையைப் பெற்றுப் போவது வழக்கம். இந்த வெறியாட்டத்தைப் பார்த்து நம்பி விடாதீர்கள். முதலில் அவன் ஆடுவதையே நிறுத்து கிறேன் பாருங்கள்'' என்று கூறி, ''ஓ வேல! நிறுத்துகிறேன் உன் ஆட்டத்தை. எனக்கு எல்லாம் தெரியும்'' என்றாள். உடனே ஆவேசம் ஓய்ந்துவிட்டது. பிறகு அன்னைமாரை நோக்கி, அப்பெருந் தெய்வத்துக்குப் பொங்கலிடுவதோ, பலி கொடுப்பதோ எதுவும் வேண்டா. அவன் திருநாமத்தை ஓதினாலே எல்லாத் துன்பங்களும் நீங்கிவிடும் அதனால் வேறு தெய்வம் தொழுதலான குற்றமும் நீங்கும்; சொன்மாலை சூட்டலாம். அத்துடன் அவனளிக்கும் துழாய் மாலையையும் கொண்டு சூட்டலாம். அவனே கழிபெருந்தெய்வம். நோயும் அவன் காரணமாகவே வந்தது இவள் நோய்க்கு இதேதான் மருந்து'' என்று திருவிருத்தத் தோழி கூறினாள்.87

வெறியாடுதலுக்காகக் களன் இழைக்கின்ற வேலனைத் தோழி அணுகி, ''வேல! இங்கு நீ என்ன செய்கிறாய? அட கடவுளே! உன் செயல் மிக அழகாயிருக்கிறது எம்பெருமாட்டி நோய்க்குக் காரணம் அன்றொருநாள் அவள் புனலில் மூழ்கியபோது அதனின்று அவளைக் கரையேற்றி அவளுக்கு உயிர் தந்துதவிய ஒரு வள்ளல் பெருமானின் ஒளிமிக்க தோள்களேயாகும். செய்தி இங்ஙனமாக, நீ வெறியாடுதலால் யாது பயன்? வெறியாடினால் ஈண்டுக் கள்ளுண்ணல் உங்களுக்குப் பயனாகலாம். கள்ளுண்பாரை யான் தடுக்க மாட்டேன், வேண்டுமளவு உண்க; காரணம் காணாமல் நோய் தீர்க்க முயலும் நீ பேரறிவுடையை காண்!''என்று அசதியாடுகிறாள் திருக்கோவையார்த் தோழி.88

பிரிவாற்றாது மிகவருந்திய தலைமகளைச் செவிலித்தாயர் எதிர்ப்பட்டு, அவளது வடிவு வேறுபாட்டை நோக்கி. ''இவள் இங்ஙனம் மெலிதற்குக் காரணம் என்னோ'' என்று கவலைப்பட்டுக் கட்டுவிச்சியை அழைத்துக் குறிக்கட்டனர். அவளும் வந்து, தங்கள் குலமரபின்படி ஆராய்ந்து, இவள் பக்கலில் ஆவேசித்தது சிறுதேவதையே என்று கூறினாள். அதை நம்பி, வேலனென்கிற வெறியாட்டாளனை அழைப்பித்து அவனைக் கொண்டு முருகக் கடவுளின் ஆவேசத்திற்குப் பரிகாரமாக வெறியாடுவிக்க முயல அதனையறிந்து தலைமகள் தனக்கு

தலைமகனால் நேர்ந்த நோயைச் சம்பந்தமில்லாத பிறர் தீர்க்கத் தொடங்குதல் குறித்து மிக வருந்தித் தோழியை வேண்டிட அவளது துன்பத்தின் மெய்க்காரணத்தை அறிந்த தோழி அச்சமயத்திற் செவிலியரை நோக்கிச் சில கூறி வெறிவிலக்கித் தலைவியினது துன்பத்தின் உண்மைக் காரணத்தை உணர்த்துகிறது இப்பாடல்.

வெறியாடுங் களத்தில் இருந்த மதுவினை விதியுடையார் உண்ணட்டும் வெறியாட்டாளனும் அக்களத்தில் செல்லட்டும். அது வன்றிக் கட்டுவிச்சி இவள் கொண்ட நோய் முருகனால் வந்ததென்னக் கூறியதால் வெறியாட்டுப் பறையும் முழங்கட்டும். மலைச்சாரலில் ஆற்றில் தலைவி அமிழ்ந்தபோது வெள்ளநீரின் உட்புகுந்து தழுவி எடுத்ததாலும், நாங்கள் காக்கும் பூம்புனத்தில் புகுந்த உயர்ந்த கோட்டினையுடைய யானை எம்முயிரைக் கொல்லும்படி கிட்டியபோது. தலைவன் கையில் இருந்த நெடிய வேலினால் அதனைக் கொன்றதாலும் எம் உயிர் காத்தவன். தாய் தந்தையரிட்ட பெயரோடு பேய் கொண்டாள் என்று வேறு பெயருமிட்டு இக்கிடாவினுயிரை உண்ணும்படி வந்திருந்த இந்நோய் தீர்க்தும கழிபெருந் தெய்வத்தின் பெயரை இவள் பிழைக்கும்படி கூறுங்கள்''83 என்கிறாள்.

## களிறு வினாதல்

தலைவன் தன் கையிலே தழைகளை முறித்துக்கொண்டு தன் காதலைத் தலைவிக்கு அறிவிப்பதற்குப் போகும்போது ஆங்கோர் புனத்தில் தெய்வச்செயலால் நாயகியைக் கண்டு மகிழ்ந்து அவளுடன் பேசக் கருதினான். "இங்கோரியானை அம்பாலடிபட்டுப் போயிற்றா?'' என்று வினவினான். அப்போது தோழி தலைவியிடம் கூறுகிறாள்.

''நீவிர் வேட்டையாட வந்தவர் எனில் கையில் வில்லைக் காணோம்; தழையைப் பிடித்து நின்றீர். இப்படி வினோதமான நடத்தை இந்தப் பூமியில் இதுவரையில் எங்கும் காணவில்லை, இவர் வேட்டைக்கு வந்தவராயின் கையில் வில் இராதோ? நாணினைக் கை விரலால் தெறித்து ஒலி செய்ய மாட்டாரோ? கையில் நாண் தெறித்த தழும்பும் இல்லையே? ஆகையால் இது வம்பேயன்றி அம்பில்லை, இவருடைய வாய்மொழிக்கும் செயலுக்கும் யாதொரு பொருத்தமும் காணோம் பொருத்தப்படாத இச்சொல் செயல்கள் ஈண்டியாம் கண்டதில்லை. கையில் தழைக்கும் வேட்டைக்கும் என்ன சம்பந்தம்?

இப்படிப்பட்ட வம்பு வினாக்களுக்கு மறுமொழி கூறவோ எம்மை எங்கள் பெரியோர் இங்கே புனங்காக்க வைத்திட்டது'' என்று பரிகாசந் தோன்றக் கூறினாள்.90

''என் அம்பால் அடிபட்ட ஒரு கலைமான் இங்கு ஓடி வந்ததா?'' என்று தலைவன் வினவியதும் தோழி அவனை நன்றாகக் கவனிக்கிறாள். அவன் கையில் வில்லுமில்லை; அம்புமில்லை; கையுறையாகக் கொடுக்கும் பூந்தழைதான் இருந்தது. ஆளைப் பார்த்தால் வேட்டையாட வந்தவன்போல் தெரியவில்லை. தோழியிடம் அவன் வாய் பேசியதே தவிர அவன் பார்வை முழுவதும் தலைவியிடமே சென்று கொண்டிருந்தது. தோழிக்குச் சிரிப்பு வந்துவிட்டது; பேசலுற்றாள். ''ஐயா! நீர் வேட்டையாடுவது மிகவும் நன்றாயிருக்கிறது. நானும் வேட்டையாடுபவர்களைப் பார்த்திருக்கிறேன். இந்தக்கயிலைமலையில் எங்கள் தந்தைமாரும் அண்ணன்மாரும் வில்வேட்டை யாடுவதுண்டு அவர்கள் ஓர் அம்பை எய்தால் அது மலைபோன்ற யானையின் உடலையும் துளைத்து அது விழுந்த மண்ணையும் துளைத்துவிடும். ஆனால் நீர் எய்ததாகச் சொல்லும் அம்போ ஒரு கலைமான்மேல் பட்டது உடனே அந்த மான் சாகவில்லை. பின் வேகமாகவும் ஓடிவிட்டது. அது உம் கண்ணிலிருந்து மறைந்ததால் தப்பிப் பிழைத்தும்விட்டது, உமது வில்லை என்னென்று சொல்வது? அது கொலை செய்வதற்கு அஞ்சாத கொடிய வில்லே போலும்? ஆகா! உமது வேட்டைத் திறமையே திறமை. மெச்சினேன் உமது வீரத்தை. நீரே உயர்ந்த உண்மையான வில்வீரர்'' என்று சொல்லிக்கொண்டே விழுந்துவிழுந்து விலாவிறச் சிரித்திட்டாள், திருக்கோவையார்த் தோழி.91

''வில்லை உடன்வந்தவர்களிடம் கொடுத்துவிட்டுக் கண்ணன் குவலயாபீடம் என்ற கம்சனது யானையைக் கொன்றவண்ணம் உம்மைப் பார்த்தால் களிறு வேட்டையாடுகிறவராகவும் கூறமுடியவில்லையே!'' என்று கேலி செய்தாள் தோழி. ''நீ இங்கு வந்தது எதற்கு'' என்று வினவ, 'வேட்டைக்கு'' என்றான். ஆயின், ''வில் இல்லாவிடினும் அம்பாவது உண்டோ?'' என்ன, ''அம்பு யானைமீது தைத்துவிட யானை ஓடிவிட்டது'' என்றான்; ''இங்ஙனமான புனைந்துரையா தலைவன் கூறுவது?'' என்றாள் தோழி.

இவள் குறிஞ்சி நிலத்துத் தலைவியாதலாலும், தழையையும் கண்ணியையும் கையுறையாகக் கொண்டுகொடுத்துக் காணல் இவனது குலமுறைமையாதலாலும், தான் கொண்டு செல்லும் தழையை அவர்கள் ஏற்றுக் கொள்வாராயின் அது தன்னை ஏற்றுக் கொள்வதற்கு அறிகுறி

யாகுமென்று தலைவன் நினைத்திருப்பதனாலும் இவன் தழையைக் கொண்டு சென்றான். தழையுடன் கொம்பைக் கொணர்ந்தது தழையுடன் சேர்ந்து கொம்பே மங்களமென்றும், அங்ஙனமே வரணா யிருப்பவன் பெண்ணைக் காணவருவது மரபென்றும் தழையுடன் வந்தால் பெண் திழைத்து விளங்குவாள் என்பதைத் தெரிவித்தற்காக என்றும் சொல்ல வேண்டும்.

எம்பெருமானுடைய உருவம், குலம் ஆகியவற்றில் ஈடுபட்டு அவனிடம் பெருங்காதல் கொண்டு உலக வாழ்க்கையில் ஈடுபடுத்த விரும்பும் தாய் தந்தை முதலானோரின் பேச்சுக்களுக்குப் பதில் கொடுக்காது இவ்வுலகைக் காப்பதற்காகத் திருமால் இங்கு வந்தா னென்றும் ஆழ்வார் இதனால் அறிவிக்கிறார்.

தலைவன் தலைவியையும் தோழியையும் பார்த்து, "ஒளி பொருந்திய வளையலையும், துவண்டு அசைகின்ற மெல்லிய சாயலையும் குளிர்ச்சி பொருந்திய கண்களையுமுடைய இளைய மகளிரே! நான் துரத்திவந்த ஆனையைக் காணோம. அது இவ் வழியாக வரக்கண்டதுண்டோ? என்று எங்களைக் கேட்டான்" என்று குறிஞ்சிப்பாட்டில் வருகிறது.92

திருக்கோவையார்த் தோழி நகையாடுவது நம்மை மிகவும் சிரிக்க வைக்கிறது. தலைவியின் தந்தை தமையன்மாரின் வீரம் வல் வில் ஓரியின் வீரம்தான். யானையொன்றை வீழ்த்துவதற்குப் புலி யொன்று சமயம் நோக்கியிருந்தது வல்வில் ஓரி அம்பெய்ய அஃது அவ்யானையை வீழ்த்திப் புலியின் வாயில் தைத்து ஊடுருவிச் சென்று வழியில் நின்ற கலைமானை மடித்து, அண்மையிலிருந்த காட்டுப் பன்றியை வீழ்த்தி, அதன் அயலிலிருந்த புற்றிற் கிடந்த உடும்பின் உடலில் தைப்புண்டு வீழ்ந்தது.93

கர்ணனைக் கொல்லாமலிருந்த அருச்சுனனின் காண்டீபத்தைத் தருமர் குறைகூறுவது போலத் தோழியும் தலைவனின் வில்லை இழித்துக் கூறுகிறாள். அம்பிகாபதி கோவையில், "தலைவன் தழை கொண்டு யானையை எய்ய, யானை மான் ஆகியது; மான் பின்னர் முயலாகியது; இப்படியாஇவர் அம்பு ஆவது? இவரை ஒப்பார் யார்?" என்று நகையாடுகின்றாள் தோழி.94

## கூடலிழைக்கும் குறி

தலைவன் எப்போது வந்து தன்னைக் கூடுவானோ என்று சகுனம் பார்ப்பதற்காக அவள் கூடலிழைக்க, அக்கூடல் கடலலை

யினால் அழிந்துவிட இந்தக்கடல் நம் தலைவன் வரவையறிய வொட்டு கின்ற தில்லையென்று அதன்மேல் கோபித்து அதனைக் காலாலே உதைத்து விட்டுப் பின்னும், ''நீவிர் அணிந்த திருத்துழாய் மாலையைத் தான் அணிய வேண்டுமென்று நின்றவிடத்தில் நில்லாமல் துடிக்கிற இவள் சம்பந்தமாக நீவிர் என்ன செய்யப் போகிறீரோ தெரியவில்லை'' என்கிறாள் திருவிருத்தத் தோழி 95

தலைவி கூடல் குறிக்குத் தெய்வமான மன்மதனை நினைந்து, "கூடல்தெய்வமான மன்மதனே! இக்கடற்கரைக் குன்றினின்றும் என்னை நீத்துச் சென்ற எம் தலைவன் மீண்டும் வருதற்கு அறிகுறியாக நான் இம்மணலில் கீறுகின்ற வட்டங்களை நான் பின்னர்ச் சுழிக் கணக்கைச் சொல்லி வருந்தாமல் நான் இடும் முதல்வட்டத்தில் இருமுனையும் சேருமாறு திருத்தி என்பால் விரைவில் அழைத்துத் தர வல்லமை பெற்றவன். எனவே அருள்புரிக!'' என்று வேண்டு கிறாள்.96

கூடலிழைத்தல் என்பது நாயகனைப் பிரிந்த நாயகி கூடல் தெய்வத்தை (மன்மதனை) வாழ்த்தி மணலில் வட்டமாக ஒருகோடு கீறி அதனுள் சுழி சுழியாகச் சுற்றும் சுழித்து இரண்டிரண்டாகக் கணக் கிட்டு அக்கணக்கு இரட்டைப்பட்டால் பிரிந்த தலைவர் வந்து கூடுவர் என்றும், ஒற்றைப்பட்டால் வந்து கூடார் என்றும் குறிபார்த்தலாம்.

கண்களை மூடி விரலால் சுழியாகக் கீறி அவ்வட்டங்களில் கூடாத சுழிகளை எண்ணி அத்துணை நாளும் தலைவர் வாராமலிருப்பர் என்று கருதுதலாகும். கூடிய சுழி எத்தனை எண்களுள்ளதோ அத்தனை நாளில் தலைவர் வருவர் என்றும் கொள்வர்.

கண்களை மூடிக்கொண்டு தரையில் வட்டமாக ஒரு கோடு கீறிவிட்டுப் பின்பு கண்திறந்து பார்த்து அது தொடங்கியவிடத்தில் தவறாக வந்து கூடியிருக்குமாயின் பிரிந்த தலைவன் தன்னைவந்து கூடுவான் என்றும், அங்ஙனம் தொடங்கிய விடத்தில் வந்து கூடாமல் விலகியிருக்குமாயின் தலைவன் வந்து கூடமாட்டான் என்றும் குறி பார்த்தல் என்பர் சிலர்.

''நாயகன் வருமளவும் ஆறியிருக்க வொண்ணாமையினாலே கூடல் இழைக்கத் தொடங்கினாள். அது தப்பினபடியைக் கண்டு நாயகனைக் கண்டால் தான் கோபிக்குமாப் போலக் கூடலோடே கோபிக்கின்றாள். கூடலிழைக்கப் புக்கவாறே கடலானது அலை களாகிய கைகளினாலே அழிக்கப்புக அதனோடே சீறா நின்றாள்''97 என்பர் பெரியவாச்சான் பிள்ளை.

கழிகள் கூடாதேயொழியின் வருந்துதல் இயல்பாகலின், "ஆழி திருத்திச் சுழிக்கணக்கு ஒதி நையாமல் நான் முதலிலிடும் கூடலையே கூடும்படி செய்து அவருள்ளத்தையும் திருத்தித் தந்தருள்க" என மன்மதனை வேண்டுகிறாள் திருக்கோவையார்த் தலைவி.

திருவிருத்தத்திலே தோழி, தலைவியின் நிலைமை கண்டு தலைவி இழைக்கும் கூடற்குறி கடலலையினால் அழிபட, அதனைக் கோபித்துக் காலால் எட்டி உதைத்துவிட்டுத் தலைவன் அணிந்த திருத்துழாய் மாலை பெற வேண்டுமென்று துடிக்கிறாள். எனவே (தலைவர்) நீவிர் அருள்புரிய வேண்டும் என்கிறாள். ஆனால் திருக்கோவையாரிலோ த லை வி யே கூடலிழைக்கிறாள். மன்மதனிடம் கூடலின் இருமுனைகளும் இணையுமாறு செய்யவேண்டும் என்று வேண்டுகிறாள்.

## ஏறுதழுவுதல்

"வைகுந்தத்தில் நித்திய சூரிகள் உன்னைச் சிம்மாசனத்தில் ஏற்றிவைத்து நீராட்டி ஆடைகளை அணிவித்துத் தூபங்களைக்காட்டும் போது அப் புகையில் அவர்களுக்குக் காணாமல் ஒளிந்து ஓடிவந்து, திருவாய்ப்பாடியில் கோபிமார் கடைந்து திரட்டிவைத்த வெண்ணெயை அமுது செய்கைக்காகக் கண்ணனாக அவதாரம்செய்த நீ நப்பின்னைப் பிராட்டியை மணஞ்செய்யக் கோபர்களிட்ட ஏழெருதுகளுடன் பொருது அவற்றின் கொம்புகளில் அகப்படாதபடி அக்கொம்புகளின் நடுவே கூத்தாடினாற்போலே உலவினாய். இஃதென்ன ஆச்சர்யம்!" என்கிறாள் தோழி.98

"தலைவ! எம் சுற்றத்தார் எம்பெருமாட்டியின் பெதும்பைப் பருவத்துச் செவ்வி நோக்கி, அவளை ஆற்றலுடையான் ஒருவனுக்கு வாழ்க்கைத் துணைவியாக்குதல் பொருட்டு, அவள் நிமித்தமாக வளர்க்கப்பட்ட ஆனேற்றினைக் கொம்பு சீவி விடுத்தனர். இனி என்னாமோ அறிகிலேம்" என்கிறாள் திருக்கோவையார்த் தோழி.99

பரமபதத்திலே நித்திய சூரிகள் பரமபத நாதனை நீராட்டுகிறார்களாம். தூபம் காட்டும்போது புகையினால் திருமுக மண்டலம் மறைந்துவிடுகிறது. பிறகு தீபம் காட்டும்போது திருமுக மண்டலம் காட்சியளிக்கிறது. இந்தத் தூபத்திற்கும் தீபம் காட்டுவதற்கும் இடையில் மறைந்த வைகுந்தநாதன் எங்கே போய்விட்டான்? அந்த இடைக் காலத்தில் விண்ணிலிருந்தும் நழுவி மண்ணின் ஒரு மூலையில் வந்து,

கண்ணனாய்ப் பிறந்து வளர்ந்து, கண்ண அவதார லீலைகளை யெல்லாம் முடித்துக் கொண்டு, பரமபதத்தில் தீபாராதனை ஆகும் போது திருமுக மண்டலம் காட்டத் தயாராக உள்ளான் பரமபதநாதன்.

தேவமானத்தில் ஒருநாள் மனிதருக்கு ஒரு வருடம். வானமண்டலத்துக்குப் போய்விட்டால் 365 நாட்கள் ஓர் ஆண்டு எனும் உலகக் கணக்கு அங்கே ஒரு நாள் என்றாகிவிடும். இது இன்றைய கண்டு பிடிப்பு. அன்றே மக்களின் நாட்களுக்கு தேவர்களின் நாட்களுக்கும் இப்படி ஒரு கால விகிதத்தைக் கணக்கிட்டனர் முன்னோர் 100

அவதார காரியங்களில் பாரதப்போர் முடித்தது, பகவத்கீதையை உபதேசித்தது முதலியவற்றைக் குறிப்பிடாமல் வெண்ணெயைத் திரட்டியதையும், முரட்டுக்காளை மாடுகளின் கொம்புகளுக்கிடையே கூத்தாடி அவற்றையடக்கி அச்செயலுக்குப் பரிசாக நப்பின்னையை மணந்ததையும் குறிப்பிடுகிறார், நம்மாழ்வார். முன்னர் நப்பின்னையை மணத்தற்பொருட்டு ஏறுதழுவினன் என்பதனைக் கூறியதால், தோழி தலைவனை நோக்கி, ''இப்பொழுதும் இவளை மணத்தற்கு ஏறுதழுவி மணந்து கொள்வாயாக'' என்று குறிப்பாக ஏறுகோள் கூறி வரைவு கடாயினான்.

திருக்கோவையாரிலே தோழி, ''காளையின் கொம்பினைச் சீவி விட்டார்; உனக்கு ஏற்றது செய்க'' என்பதால் தலைவன் வாடினான். காரணம் ஏறு தழுவுதலில் வேறு ஒருவன் கூட அவ்வாறு தழுவித் தன் தலைவியை மணந்துவிடத் தகுமே என்பதுதான். அதனைத் தோழி கண்டு, ''அது சிவனருளால் வந்ததாதலின் அவ்வேறு நினக்கே வயப்படுதலின்றி மற்றொருவரால் குறுகுதற்கரியது; நீ அஞ்ச வேண்டா'' என்கிறாள்.

## அயலார் அறியின் என்னவாகும்

நாயகன் வரவைக் கண்டபோதே நாயகியினுடைய கண்கள் இரண்டும் இரண்டு மீன்போலப் பரந்து நீண்டு மதமதர்ப்புடன் சலியா நிற்க, அதைக் கண்ட நாயகன் தான் வந்த காரியத்தையும் மறந்து தோழியுடன் கூடிய நாயகியின் கண்ணழகிலீடுபட்டு ''உன் கண்கள் மீன்களோ? மற்று என்னவோ?'' என்று கேட்டான். அதையவர்கள் கேட்டு இவன் வார்த்தை உன்மத்தர் மொழியாயுள்ளதென்று கேலி செய்யத் தொடங்கினர். இவ்வளவில் அவன் தான் மறந்ததை நினைத்துக் கொண்டு ''இங்கோர் யானை போயிற்றா?'' என்று வினவினான். அவர்கள் இதைக்கேட்டு. ''முன்பின் சந்தர்ப்பமில்லாமல்

என்ன பேச்சுப் பேசுகிறீர்கள்?,, என்றனர். அவர்கள் அவ்வாறு எந்த வார்த்தையும் பே ச த் தோன்றாமல் மௌனமாயிருந்தான். அதற்கு அவர்கள், ''நீங்கள் இப்போது ஒன்றும் சொல்லத் தோன்றாமல் மௌனமாக நின்றுள்ளீர்கள். இதை அயலார் கேட்டால் என்ன செய் வார்கள்?" என்றார்கள்.

அதற்கவன், ''நீங்கள் செய்தது சரியோ?'' என்றான். திருவேங் கடமுடையானுடைய வடிவழகையே தாரகமாகக் கொண்டு விளைகி ன்ற இக்கொல்லையில் பயிர் காக்கிறோமென்று ஒரு காரணத்தை முன்னிட்டு இவ்வளவு காலம் உம்மை எதிர்பார்த்து இருந்தோம். அப் போதெல்லாம் நீவிர் வாராமற் போனீர். அக்காலத்தை யெல்லாம் வீணாக்கிவிட்டு இக்கொல்லை அறுவடை செய்யும் சமயத்தில் வந்தீர். இப்படி நீங்கள் எங்களை மறந்திருப்பது நன்றன்று'' என்கிறார்கள்.101

''தங்கையீர்! இம்மலைச்சாரலில் இவ்விடத்தே வண்டுகள் ஆர வாரிக்கும்படி மூன்றுவகை மதங்களையும் பொழிகின்ற கரிய மதயானை யொன்று வர நீவிர் கண்டதுண்டோ கூறுவீர்'' என்று தலைவன் வேண்டுகிறான்.102 திருக்கோவையாரில்.

திருவிருத்தப் பாட்டில் தோழி தலைவியிடம் பேசுகிறாள்; திருக் கோவையாரிலோ தலைவன், தலைவி - தோழியரிடம் பேசுகிறான். இரண்டிலுமே தலைவன் ஆனை வரக்கண்டதுண்டோ என்று வினா விடுக்கிறான். இந்தத் திருவிருத்தப்பாட்டு, அன்பு மிகுதி தோன்றும் விதமாக ஓராழ்ந்த பொருளும், அன்பை மறைத்துரைக்கும் விதமாக ஒரு பொருளும் தருகிறது. அவை வருமாறு;

ஆழ்ந்த பொருள் ; ''நும் கண்கள் கயலோ? என்று எங்கள் கண்ணழகில் ஈடுபட்டுப் பேசினீர்; உமது உவப்பான பேச்சில் மிகவும் ஆனந்தமடைந்தோம். அதற்கு மேலே யானையைப் பற்றியும் கேட்டீரே அது எதற்கு? எம் கண்ணழகிலீடுபட்டே வந்திருக்கிறீர் என்று நாங்கள் எண்ணி மகிழவொண்ணாமலும் 'வேறு வேட்கைக் காரியமாக வந்துள்ளார்போலும்' என்றெண்ணி வருந்தும்படியாகவும் களிறு வினவி நிற்பது தகுமோ? நமது அன்பை அயலோர் அறியினும் அறிக. அதனால் நம் குடி என்ன கெட்டுவிடப் போகிறது? வந்த காரியத்தைவிட்டுக் களிறு வினவுதல் ஒரு வார்த்தையோ? உமது வருகையை எதிர்பார்த்து நாங்கள் கொல்லை காத்தலென்று ஒரு காரணம் வைத்து நெடுநாளாகக் காத்திருக்க, நீவிர் இன்றளவும் வரவில்லையே! எம்மொடு கூட்டுறவு கொள்வதில் ஆசைகொள்ள வில்லையா?'' என்று தோழி கூறுகிறாள்.

இங்கு, 'வந்த வேலையை விடுத்துப் பந்தக்காலைப் பிடித்தான்' என்னும் பழமொழி தொனிக்கிறது. இப்பழமொழியையும் மேலெழுந்த வாரியாகப் பார்ப்பவருக்கு வந்த வேலையைச் செய்யாமல் ஒருவன் சோம்பி நிற்கின்ற நிலையையுணர்த்துவதாகவே தோன்றும். இப்பழமொழியை ஆழ்ந்து நோக்குவார்க்கு வேறோர் அருங்கருத்துப் புலப்படும். இங்கு வந்த வேலை என்பது மக்கள் உலகிற் பிறந்தது கடவுள் நெறிநின்று, தெய்வநிலையாகிய மேனிலையை அடைய வேண்டும் என்ற வேலையே. 'பந்தக்கால் பிடித்தல்' என்பது, பிறந்த பின் அவ்வேலையை விடுத்து உலகச் சார்பினையே பற்றிக்கொண்டு பாசபந்தத்தில் அழுந்திநின்று உலக மூவாசையால் வீணே உழலுதல் என்னும் கருத்தையுடையதாகும் 103

மேலெழுந்தவாரியான பொருள்; ''நீவிர் யானையைப் பற்றிக் கேட்க வந்தவராயின் அந்தக் கேள்வியோடு நில்லாமல் எமது கண்ணழகைப் பற்றியும் பேசுகின்றீர் பழக்கமில்லாதவர் பேசும் இவ் வார்த்தை அக்கம்பக்கத்தில் உள்ளவர் காதில் பட்டால் என்ன நினைப் பார்கள்? இவர்களுக்கு முன்னமே ஏதோ தொடர்புண்டு போலும்! என்று நினைத்துக் குடியைக் கெடுத்துவிடுவார்களே! இப்படிப்பட்ட சொல்லத்தகாத பேச்சை நிறுத்திவிடுவீர்''

புதியவராய் வந்த நீவிர், தினைக்கூட்டுப் பயிர்செய்பவர் போல் இங்கு எம்முடன் நீண்டநேரம் வீண்பேச்சுப் பேசி நிற்பது தகாது. நாங்கள் புனங்காப்பது நேற்று இன்று இல்லை. பல வருடங்களாகத் தினை முற்றினால் தினமும் புனங்காத்து வருகிறோம். இப்படிப் பேசும் புதுமையை முன் ஒருநாளும் நாங்கள்கண்டதில்லை. நெடுநாள் கூட்டுப் பழக்கம் உடையவர்போல நீவிர் இங்குப் பேசி நிற்பது தகாதுகாண்! விரைவிலே போய் வாருங்கள்!'' என்பதாகக் கூறுகிறாள் தோழி.

தோழி இங்ஙனமெல்லாம் சாமர்த்தியமாகப் பேசித் தலை மகளின் காதலைத் தலைமகனுக்குக் கூறுகிறாள். தோழியா கூறுகிறாள்? நம்மாழ்வார் அன்றோ அவள் கூற்றாகக் கூறுகிறார். பெண்யானையைக் கொண்டு (பார்வை விலங்கு) ஆண்யானையை அகப்படுத்துகிறாப் போலே தலைவியைக் கொண்டு தலைவன் தலைவி மேல் கொண்ட ஆசை எண்ணத்தை அவன் தாள் நினைக்கவும் வணங்கவும் செய்கிறாள் தோழி. இவளது புலமையை வியந்து பேசாமல் இருக்கவியலாது.

தன் காதலியோடு பேசக் கருதும் தலைவன், 'தண்ணீர் வேட்கையாக உள்ளது; குடிக்கத் தண்ணீர் தாருங்கள்' என்றும், 'வெற்றிலை பாக்கு உள்ளது' சிறிது சுண்ணாம்பு வேண்டும்' என்றும் பொய்க் காரணம் கூறிக் காதலி வீட்டிற்குச் சென்று கேட்டுச் சில வார்த்தைகள் பேசவும் அவள் கருத்தறிந்து கொள்ளவும் இடம் பெறுதல் உலகவழக்கு 'சுடர்த்தொடீஇ கேளாய்' எனும் கலித்தொகைப் பாட்டில் 'உண்ணும் நீர் வேட்டேன்' என்று தலைவன் வந்து கேட்டலைப் பற்றித் தலைவி கூறுவதைக் காணகூடும்.104

தலைவன் தான் பேசுதற்கு வாய்ப்பாகச் சிலவற்றை வினவத் தொடங்கினாலும் நாயகியின்கண்ணழகிலே ஏற்கெனவே ஈடுபட்டவனாகையாலும் இப்போதும் அக்கண்ணழகு பரவசமாக்குகிறபடியாலும், அதனைக் கொண்டாடுகிற முகத்தால் தன் ஆற்றாமையைத் தெரிவிக்கும் வார்த்தைகளும் இவன் வாயினின்று வந்துவிட்டன. 'இவை கண்களோ? கயல்களோ?' என்றாற்போலச் சில வார்த்தைகளும் சொல்லிவிட்டான் இவற்றால் அவனது கருத்தைக் குறிப்பாலறிந்த தோழி, அவனது ஆசையை மறுப்பதாகப் பிறர் நினைக்கும்படியாகப் பேசித் தலைவியின் ஆற்றாமையை இப்பாடலில் குறிப்பால் உணர்த்துகிறாள்.

திருக்கோவையாரில் 'மும்மதம் உமிழ்மத யானை' என்று ஆண் யானையைச் சொல்லியதனால் தலைவன் காமமிக்க தன்னையே கருதிக் கூறியதாகக் கொள்ளலாம்.

'பெண்களே! மழை சொரிவது போன்ற மதத்தினையும் தழைத்த செவியினையும், துளையுடைய துதிக்கையினையும், குழிந்த கண்களையும், பெரிய கால்களையும், வளைந்த தந்தங்களையும் உடைய யானையானது வண்டின் கூட்டமும் பறவைகளும் என்னம்பும் தொடரவும் வாய்விட்டலறிச் சிவந்த மாணிக்கங்கள் கிடந்த நும்முடைய பசிய புனத்தினிடத்தே வந்ததுண்டோ? விரும்பிச் சொல்வீராக'' என்று கல்லாடத் தலைவன், தலைவி - தோழியரை நோக்கி வினவுகிறான் 105

## (ஈ) தாய்க்கூற்று

### முன்னுரை

தலைவியின் செவிலித்தாயே தோழியின் தாயாவாள். செவிலியின் சிறப்பைக் போற்றும் முறையில்.

"ஆய்பெருஞ் சிறப்பின் அருமறை கிளத்தலின்
தாயெனப் படுவோள செவிலி யாகும்" 106

என்பர் தொல்காப்பியர். அகப்பொருட் பாத்திரங்களில் உறவுமுறையால் சிறக்கும் பாத்திரம் செவிலியே எனலாம். செவிலியின் பண்பு நலனை யறியும்போது தோழியின் பண்பு நலனும் நன்கு விளங்குமாதலின் செவிலியைக் குறித்து ஈண்டு விளக்குதல் பொருத்தமுடையது- ஒரு குடும்பத்தில் பிறந்த இரண்டு தலைமுறையினர் தலைமக்கள் வாழ்வில் பெரும்பங்குகொண்டு அவர்களுக்காகத் தொண்டாற்றுஞ் சிறப்பைப் பெறுகின்றனர்; அவர்களே தோழியும் செவிலியுமாவர்.

தலைவி குழந்தைப் பருவத்தில் அவள் உடலைப் பேணி வளர்த்து வருபவள் செவிலி. தலைவியின் இளமைப் பருவத்தில் அவள் உள்ளத்தைப் போற்றிக் காப்பவள் தோழி.

செவிலியும் நற்றாயும் சேர்ந்து இடம்பெறல் அகப்பாடல்களில் அருகியே காணப்படுகிறது. நற்றாயே செவிலியைத் தாய் என்று குறிப்பிடும் நற்றிணைப் பாடல் நம் கருத்தைக் கவர்வதாயுள்ளது. தலைவியின் இளமைக்காலத்து விளையாடல்களையும் பொறுப்புணர் வையும் எடுத்துக் கூறி, அவள் செய்வினைத் திறத்தையும் நற்றாய் குறிப்பிடுகிறாள்.

"யானும் தாயும் மடுப்பத் தேனொடு
தீம்பால் உண்ணாள்" 107

'யானும் தாயும்' என்னும் தொடருக்கு 'யானும் செவிலித்தாயும்' என்று பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் உரை எழுதுகிறார். நற்றாயே செவிலித்தாயைத் 'தாய்' எனப் போற்றுதலைக் காண்கிறோம். செவிலியை 'யாய்' என்று குறிப்பிடும் முறையும் கலித்தொகை 115ஆம் பாடலில் காணப்படுகிறது.

## தலைவனுடன் சென்ற தலைவி

"இவளுக்காக நான் அநேக நோன்புகள் நோற்றுப் பெற்றேன். இவளோ மகிழ்ச்சியுடன் தானே தன் இடையிலே கையை வைத்தாலும் மலையை வைத்தாற் போலப் பொறாத இடையுடையவள். இடை உண்டோ இல்லையோ என்ற சந்தேகம் தீரக் கையால் தொட்டுப் பார்க்கவும் பற்றாத இடையுடையவள். மேலும் அவள் இளமான்

போன்றவள். இப்படிப்பட்ட கட்டழகி இப்போது நடந்து போன பாலை நிலத்தின் கொடுமை எப்படிப்பட்டது தெரியுமா? அவள், இட்டடி நோக எடுத்த அடி கொப்புளிக்க, இம்சையே தொழிலாகக் கொண்டு திரியும் பாவிகளின் அறைபறைகள் ஒலிக்கின்ற ஆரவாரமுடையது. அக்காடு சூரியகிரணங்களால் காய்ந்து கிடக்கும். அங்கே அநேகக் கொடிய மிருகங்களைக்கொல்லவும்,போகிறவர்களை வழிபறித்தலுக்கும் வேடர்கள் விரைந்தோடி வந்து வில்லை வளைத்துககொண்டு அம்புங் கையுமாகப் பயங்கரமாய்ச் சஞ்சரிப்பார்கள் அவர்கள் பறையொலியைக் கேட்டு இவளென்ன செய்யப் போகிறாளோ தெரியவில்லை. இவற்றிற் கெல்லாம் என் பாபமே மூலகாரணமாய் உள்ளது''108 என்கிறாள் நற்றாய்.

''அந்தோ! என் மகள் யாழோசையினியல்பு போலும் மெல்லிய மொழியுடையவள். பேதை மொழியால் இனிமை செய்து தன் செயலால் இன்னாமை செய்யும் வன்மனப் பேதையாயினளே! முற்பட ஈன்று புறந்தந்த என்னையும் நினைக்கவில்லை. முதலில என்னைப் பிரிந்தாள். பின் தன் ஆருயிர்த் தோழியையும் பிரிந்தாள். மற்று, எம் பகைவர் புன்முறுவல் பூப்பப் பிறன்மகன் ஒருவனைப் பின்தொடர்ந்து இம்மூதூர் கலங்கும்படி கடத்தற்கரிய பாலை யருநெறியில் போயினள். அவள் வாழ்க! நான் இனி என் செய்தாற்றுவேன்?'' என்று வருந்துகிறாள் திருக்கோவையாரில் வரும் செவிலித்தாய்.109

தலைவியின் இடை மிக்வும் சிறியது என்பதைக் குறிப்பதற்காகக் கையால் தொட்டுப் பார்க்கவும் முடியாத நிலை எனக்கூறி, இடையின் சிறிய தன்மையை நம்மாழ்வார் கூறுகிறார். வள்ளுவர்,110 கம்பர்111 முதலானோரும் இடைச்சிறுமை குறித்துப் பாடியுள்ளனர்.

பகைமைக்காகவும் வேறொரு பயனுக்காகவுமே யல்லாமல் உடலினது துடிப்புக்காணும் பொருட்டாகவும் கொல்லுதல் இந்த எயினர்களது தொழிலாகும், அவர்கள் ஒரேயடியாகச்சாவக்கொல்லாமல் குற்றுயிர் குறையுயிராகக் கிடந்து நெடுநாள் துடிக்கும்படி கொல்லுதல் தொழிலுடையவர்கள். பகைவரை அல்லது விலங்கினைக் கொல்ல முன்னமே வில்லை வளைத்து நாணேற்றி அம்பு தொடுத்துக் கையில் தயாராகவைத்து எய்ய இலக்குத் தேடிக்கொண்டிருப்பார்கள் ''இவர்கள்

வாழும் பாலை நிலத்தைக் கடக்கத் துணிந்து தலைவனுடன் உடன் போக்கில் போய்விட்டாளே; என்னோடு படுக்கையில் படுத்திருந்த என் அருமை மகள்" என்று எண்ணி வருந்துகிறாள் நற்றாய்.

இங்ஙனமே திருமங்கையாழ்வாரும் பாடுகின்றார். பரகால நாயகி தாயாருடன் கண்ணுறங்கிக் கொண்டிருக்கிற பொழுது அவளை யாருமறியாமல் தன்னுடன் அழைத்துக்கொண்டு போகத் துணிந்து வயலாலி மணவாளன், தலைவியின் தாயார் சிறிது கண்ணுறங்கின போது, அங்ஙனமே அவளைக்கொண்டு சென்று விட்டான். உடனே, துணுக்கென்று கண்விழித்துக்கொண்ட தாயார்படுக்கையைத் தடவிப் பார்க்கின்றாள். தன் மகள் வயலாலி மணவாளனைக் குறித்து வாய் வெருவின படியை அறிந்தவளாதலின் அப்பெருமானே இவளைக் கொண்டு போயிருக்க வேண்டும் என்று நினைத்து எழுந்து பார்க்கிறாள் அங்ஙனமே அவன் தன்மகள் கையைப் பிடித்தழைத்துக் கொண்டு போவதைக் கண்ணாலே கண்டு வாய்விட்டுப் பேசுவதாக அமைகின்றது திருமங்கையாழ்வார் பாடல்.112

இதுபற்றிப் பக்தர்களிடையே ஒரு கதை வழங்கி வருகிறது. வயலாலி மணவாளன் பரகால நாயகியைக் கவர்ந்துசென்றது மறை வாகவா? பலருமறியவா? என்னும் வினா எழுகிறது. அவர்களிடையே மகளைத் தாய் அணைத்துக்கொண்டு கிடக்கையில் எம்பெருமான் தனியாக வந்து யாருமறியா வண்ணம் கவர்ந்து சென்றதாகப் பிள்ளை அமுதனார் என்பவர் உரைத்தார். அதனைக் கேட்ட பராசர பட்டர், "அங்ஙனம் வேண்டா, பலரும் கண்டு கொண்டிருக்கையில் தீவட்டிக் கள்ளர் கொள்ளை கொண்டு போகுமாப் போலே கொண்டு சென்றதாக நிர்வகிப்பது எளிது" என்றருளிச் செய்தார்.113

ஒருசமயம் ஆளவந்தார் குழுவில் 'உண்ணுஞ் சோறு'114 என்னும் திருவாய்மொழியிலும், மேற்கண்ட திருமங்கையாழ்வார் திருமொழியிலும் ஆராய்ச்சி நடைபெற்றது. இந்த இருவருள் எந்த மகளுக்காகத் தாய் அதிகம் கவலைப்பட வேண்டும்? என்பதாக விவாதம். முதலிகள், "பரகால நாயகி தனித்துச் செல்லவில்லை; நெடுமால் துணையாய்ப் போன பூங்கொடியாள் என்கையாலே

தலைவனாகின்ற துணைவனுடன் சென்றிருக்கிறாள் ஆகையால் அவளைப் பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை, பராங்குச நாயகி அப்படித் துணையுடன் செல்லாமல் துணைவன் பால் தனியாகச் சென்றாள் ஆகையால் அவளைப்பற்றிக் கவலைப்பட வேண்டியுள்ளது'' என்றார்.

இதனைக் கேட்ட ஆளவந்தார், ''இப்படிச் சொல்லலாகாது. பராங்குச நாயகிதனியே சென்றாளாகிலும் தான் நினைத்த இடத்திற்குச் சென்று சேர வேண்டும் எனும் அவாவினால் எப்படியாவது விரைவிற் சென்று சேர்ந்துவிடுவாள் வழியில் தங்கி அபாயங்களுக்குத் தன்னை 'உட்படுத்திக் கொள்வதற்கு காரணமில்லை. ஆனது பற்றியே, திண்ணம் என் இளமான் புகும்ஊர் திருக்கோளூரே' 115 என ஐய மின்றிச் சொல்லப்பட்டது அங்கு. ஆகையால் அவளைப் பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை.

பரகால நாயகியும் அப்படித் தனியே சென்றிருப்பாளேயானால் அவளும் தனக்கு உத்தேசமான திருவாலியிலே சென்று சேர்ந்தே தீருவாள். 'திண்ணம் என் இளமான் புகும்ஊர் திருவாலியே' என்று தாயும் உறுதியாகக் கூறியிருப்பாள். அவளைப் பற்றியும் கவலைப்பட வேண்டாதிருக்கும் அங்ஙனமன்றியே தம்பதிகளாய்ச் செல்லுகையால் நாயகனுடைய வடிவழகில் ஈடுபட்டு நாயகி பைத்தியம் பிடித்தும் நாயகி யின் வடிவழகில் ஈடுபட்டு நாயகன் பைத்தியம் பிடித்தும், இப்படி இரு வரும் பித்தம தலைக்கேறிப் போகக் கூடுமாகையால் உத்தேசமான திருவாலியில் சென்று சேர்வர் என உறுதியாகச் சொல்வதற்கில்லை. திருவாலியில் சென்று சேர்வார்களோ அன்றியே ஒருவர்க்கொருவர் பைத்தியம் பிடித்தவர்களாய் இலங்கையின் இராவணாதியர் போன்ற விரோதிகளின் இருப்பிடத்திற்குப் போய்ச் சேருவார்களோ? என்று ஐயுற்றுக் கவலைப்பட வேண்டியுள்ளது. இது தோன்றவே, 'அணியாலி புகுவர் கொலோ!' என்று ஐயப்படவே சொல்லப் பட்டிருப் பதைக் காண்மின்'' என்றருளிச் செய்தனராம்.116

இங்ஙனமே, பராங்குச நாயகியைக் கண்ணன் உடன்போக்கில் அழைத்துச் சென்றுவிட்டானே! இவர்கள் ஊர்ப் போய்ச் சேருவார் களோ? அல்லது எயினர் தம் கண்களில் பட்டு.........'1 என்று திரு விருத்தத்தில் தாயார் எண்ணாதும் எண்ணிப் புலம்புகிறாள்.

''கண்ணுள் பாவை போன்று காத்த என்னையும் இழந்து, கிளி மைனா போன்றவை அளித்த இன்பத்தையும் இழந்து சென்றனளே என்மகள். அந்தப் பாலை நிலம் வேட்டான்கள் கூவ, காளி முன்னே

கூளிகள் வேண்டச் சுடலையில் பிணங்கள் வேவச், சுழல்காற்று நெருப்பை முகந்து எங்குந் தெறிக்க வுள்ளன. அத்தகைய பாலை நிலத்தில் ஓர் ஏதிலனது அன்பை மேற்கொண்டு செல்லத் துணிந் தனளே, இனி நான் எங்ஙனம் ஆற்றுவேன்?'' என்கிறாள் கல்லாட நற்றாய்.117

## தலைவி மிகவும் இளையள்

நாயகன் கண்டு மோகிக்கும்படியான முலைகளின் சின்னங்களும் காணவில்லை. மயிரும் கொண்டை முடிக்கும்படி வளரவில்லை. புடவையுடுக்கவும் அறியவில்லை. தந்தை தாய் கற்பிக்கும் வார்த்தை யையும் குழறாமல் நேரே நன்கு உச்சரிப்புடன் சொல்லவு மறியாள். கடல்சூழ்ந்த பூமியெல்லாம் இவள் கண்ணுக்கொப்பாகாதபடி பரந்த கண்களினால் வெட்கமறியாமல் தந்தையோ டொப்பாக நாயகனையும் பாராநின்றாள். இப்படிப்பட்ட இளமைப் பருவத்திலும் கூட எம்பெரு மான் வாசம் பண்ணுகிற திருவேங்கடமலையையே எப்போதும் பேசிக் கொண்டிருக்கிறாள். ஆகையால் இப்போதிவள் பகவான் நாமத்தைக் கூறுவது ஓராச்சரியமன்று; தன்னாறாகத் தோன்றியுள்ளது'' எனகிறாள் செவிலி 118

''அன்பருடைய உருகுதலைடைந்த உள்ளத்தின்கண்ணும் அம்பலத்தின்கண்ணும் இரண்டிடத்தும் ஒப்ப ஒளிபெருகுதலை யடைந்து நின்றவனது பெருந்துறைக்கண் இருப்பவளாகிய அருமை யான குதலைச்சின்மழலை மொழியாளான எம்தலைவிக்குத் தேனார்ந்த நறுநாற்றம் பொருந்திய குழல் முடிக்கப்படவில்லை; முலைகள் தோன்றா; ஐயனே! நீ சொல்லுகின்ற அது யாதாம்? சிறிது மியை புடைத்தன்று'' என்கிறாள் திருக்கோவையார்த் தோழி.119

மயிரும் சேர்த்து முடிக்கும்படி கூடவில்லை. சிற்றாடையை உடுக்குந்தன்மை யறிந்து நன்றாக உடுக்கவுமாட்டாள். தட்டுத் தடங்க லின்றிப் பேசப் பழகின பருவமிலாமையாலே பேச்சுக் குழறும். இங்ஙனம் தலைவி மங்கைப்பருவத்தை அடைந்திருந்தும் பேதைப்பருவத்தை உடையவளாகச் செவிலி கூறியது தலைவிமேல் கொண்ட அன்பு மிகுதியைக் காட்டுவதாகும்.

பெரியாழ்வார் பாசுரமும்,120 திவ்வியகவி பிள்ளைப் பெருமாளை யங்கா பாசுரமும்121 ''நம் மகள் தான் தலைவனுடன் ஓடிவிட்டாளே'' என்பது போன்ற ஓர் ஆதங்கத்தைத் தோற்றுவிக்கிறது. திருக்கோவை

யாரில் வரும் தோழியின் பாடல் தலைவியின் இளமையைப் பற்றி, தலைவனுக்குக் கூறுவதாக உள்ளது. திருவிருத்தப் பாட்டு செவிலியினுடையதாகும். இரண்டுமே தலைவியின் இளமைச் செவ்வியைக் குறித்தனவாகும். திருக்கோவையார்த் தலைவி இளமையுடையவள்; பால் பற்றிய எண்ணமே அறியாதவள். "அவளுக்கு நீ கூறும் கருத்துப் புரியாதது'' என்கிறாள்.

கூழை முடியிற் சேராமையும், முலை பொடியாமையும் குதலைச் சின்மழலை மொழியுடைமையும் பேதைப்பருவத்து மகளிர்க்கியல்பு. இதனை,

''முலைமுகஞ் செய்தன முள்ளெயி றிலங்கின
தலைமுடி சான்ற . . . பேதை யல்லை''122

எனவரும் அகநானூற்றால் அறியலாம்.

## முடிவுரை

திருவிருத்தத்தில் தலைவி கூற்றுக்கு (54 பாடல்கள்) முதலிடமும் தோழி கூற்றுக்கு (26 பாடல்கள்) இரண்டாமிடமும், தலைவன் கூற்றுக்கு மூன்றாமிடமும் தரப்பட்டுள்ளன.

திருக்கோவையாரில் தோழி கூற்றுக்கு (166 பாடல்கள்) முதலிடமும், தலைவன் கூற்றுக்கு (102 பாடல்கள்) இரண்டாமிடமும், தலைவி கூற்றுக்கு (63 பாடல்கள்) மூன்றாமிடமும் தரப்பட்டுள்ளன.

இரு நூல்களிலும் பிறர் கூற்றுக்கு மிகுந்த சிறப்பினை அளிக்கவில்லை.

இருவருடைய பாடல்களும் அகப்பொருள் இலக்கிய நயம் மிகுந்தனவாகக் காணப்படுகின்றன.

கண் முதலான உறுப்புகளின் வருணனை, தலைவியும் தோழியும் தலைவனைக் கண்டபோது பேசாதிருக்கும் தன்மை, தலைவன் தன் ஊர்ச் (திருவெஃகா, புலியூர்) சிறப்புரைத்தல், தலைவியைக் காண அவள் ஊர்க்கினிதே விரைதல், வண்டுகளை நோக்கிப் பேசித் தலைவியின் நலம்பாராட்டல் இடித்துரைத்த பாங்களிடம் தலைவியின் எழிலை எடுத்துரைத்தல், வருணனைகளில் திருமால்-சிவன் ஆகியோரைத் தொடர்புபடுத்தல், ஊர் வினாதல் முதலானவற்றின் அடிப்படையில் திருவிருத்தத்திலும் திருக்கோவையாரிலும் அமைந்த பாடல்கள் வியக்கத்தக்க ஒப்புமையுடையனவாக விளங்குகின்றன. கல்லாடப் பாடல்களும் இவற்றோடு ஒப்பிடத்தக்கன.

தலைவன் கூற்றாக அமைந்த இப்பாடல்களின் வழி இருவரும் பழந்தமிழ் மரபைப் பெரிதும் போற்றி, இறையுணர்வோடு புதுமைக் கருத்துடையனவாகத் தம் எண்ணங்களை வெளிப்படுத்தி யுள்ளனர் என்பது தெளிவாகும்.

தலைவி கூற்றாக வரும் பாடல்களைப் புனைவதில் நம்மாழ்வார் பெரிதும் விருப்பம் கொண்டிருந்தார்; ஆனால் மாணிக்கவாசகரோ அகப்பொருள் நோக்கொன்றையே 'அடிப்படையாகக் கொண்டு தம் பாடல்களில் அனைவருக்கும் அவரவர்க்கேற்ற கிளவிகளில் கூற்று களை அமைத்துக்கொண்டார்.

தலைவன் பின் சென்ற நெஞ்சு பற்றியும், அருள்புரியாத தலைவனைக் கருதி ஆற்றாது வருந்துவது பற்றியும், தலைவன் சென்ற தேர்ச்சுவட்டினை அழிக்காதிருக்கும்படி அலைகடலை வேண்டுவது பற்றியும் தனித்தனியே இருவர் பாடிய பாடல்களையும் ஒப்பிட்டு நோக்கினால் ஒப்புமைக் கருத்துகள் இருத்தலைக் காண முடிகிறது.

அன்னத்தைத் தூது விடும் தலைவியரைப் பற்றி இரு நூல் களும் தத்தம் போக்கில் பல அரிய கருத்துகளை எடுத்து விளக்கிப் பாடுகின்றன. ஒருத்தி ஆண் அன்னத்தையும் மற்றொருத்தி பெண் அன்னத்தையும் தூது விடுக்கின்றனர்,

கடலை நோக்கியும், மாலைப் பொழுதினைக் குறித்தும் இவர்கள் பாடிய பாடல்கள் அவ்வத் தலைவியரின் தனிமைத் துயரினை நன்கு எடுத்துரைப்பனவாக அமைந்துள்ளன.

அறத்தொடு நிற்றல் துறையிலமைந்த பாடல்களில் இறை வனைப் பற்றிய குறிப்புகள் பொருத்தமாக அமைந்துள்ள நிலையைக் காண்கிறோம்.

சங்க இலக்கியத்தைப் போலத் திருக்கோவையாரிலும் தோழி கூற்றாக அமைந்த பாடல்கள் மிகுதி.

அகப்பொருள் இலக்கியத்தில் தோழி இன்றியமையாத ஓரிடத்தைப் பெற்றவள் ஆவாள்.

தலைவனைப் பிரிந்த தலைவி நிலை, பருவங்கண்டு புலம்பிய தலைவியை ஆற்றுவித்தல். வெறி விலக்கல், களிறு வினாதல், கூட விழைத்தல், ஏறுதழுவுதல், தலைவன் சந்திப்பை ஊரார் அறிந்தால்

என்னவாகும் என அஞ்சுதல் முதலான பொருள்களில் அமைந்துள்ள திருவிருத்தப் பாடல்களும், அவற்றிற்கிணையான திருக்கோவையார்ப் பாடல்களும் தோழியின் சொல்லாற்றலை விளக்குவனவாக உள்ளன.

இரு நூல்களிலும் தாய்க்கூற்றாக அமைந்த பாடல்கள் சிலவே. இவையனைத்தும் சிறப்பாக விளங்குபவை. உடன்போக்காகச் சென்ற தலைவிக்காகப் பரிந்து, பாலை நிலக்கொடுமையை எண்ணிச் செவிலி வருந்துவதாக வரும் பாடல்கள் உருக்க மிகுந்தவை.

இங்ஙனம தலைவி கூற்று, தலைவன் கூற்று, தோழி கூற்று, தாய்க்கூற்று எனவரும் படல்கள் அகப்பொருள் கருத்துகளைத் தெளிவுபட எடுத்துரைப்பதோடு, இறைஞானப் பொருள் கொண்டன வாகவும் விளங்குகின்றன.

பேராசிரியர், பராசர பட்டர், ஆளவந்தார், பெரிய வாச்சான் பிள்ளை முதலானோரின் நுட்ப உரைகள் இப்பாடல்களில் உள்ள அரும் பெருங் கருத்துகளை ஆய்ந்து உரைக்கின்றன.

அகப்பொருள் கூற்றுநிலைகளை நம்மாழ்வாரும், மாணிக்க வாசகரும் தத்தமக்கு உரிய வகையில் சிறப்பாகவும் பொருத்தமாகவும் கையாண்டிருக்கின்றனர் எனலாம்.

# அகப்பொருள் கூற்றுநிலைகள்

## குறிப்புக்கள்

1. மு. வரதராசன் 'திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம்'' பாரி நிலையக், சென்னை, ப. 60.

2. ''நடாவிய அம்பும் முரிந்த சிலைகளும் போகவிட்டுக்,
கடாவின கொண்டொல்கும் வல்லிய தேனும் அசுரர்மங்கக்
கடாவிய வேகப் பறவையின் பாகன் மதனசெங்கோல்
நடாவிய கூற்றங்கண் டீர், உயிர் காமின்கள் ஞாலத்துள்ளே''
—திருவி. 2483

3. ''நீங்களும் பொற்கழற் சிற்றம் பலவர் நெடுவிசும்பும்
வாங்கிருந் தெண்கடல் வையமு மெய்தினும் யான்மறவேன்
தீங்கரும் பும்மமிழ் துஞ்செழுந் தேனும் பொதிந்துசெப்புங்
கோங்கரும் புந்தொலைத் தென்னையு மாட்கொண்ட
கொங்கைகளே'' —திருக். 46.

4. கந்தரலங்காரம். பா. 40.

5. புறம், பா. 182.

6. தொல், பொருள். அகத்திணையியல் நூ 39.

7. திருக். 288.

8. "மாயோன் வடதிரு வேங்கட நாட, வல் லிக்கொடிகாள்!
நோயோ வுரைக்கிலும் கேட்கின்றி லீருரை யீா, நுமது
வாயோ அதுவன்றி வல்வினை யேனும் கிளியுமெள்கும்
ஆயோ அடும்தொண்டையோ அறை யோவி தறிவரிதே"
— திருவி. 2487.

9. "இரத முடைய நடமாட் டுடையவ ரெம்முடைய
வரத முடைய வணிதில்லை யன்னவ ரிப்புனத்தார்
விரத முடையர் விருந்தொடு பேச்சின்மை மீட்டதன்றேல்
சரத முடையர் மணிவாய் திறக்கிற் சலக்கென்பவே" –திருக்.57.

10. "நானிலம் வாய்க்கொண்டு நன்னீர் அறமென்று கோதுகொண்ட
வேனிலஞ் செல்வன் சுவைத்துமிழ் பாலை, கடந்தபொன்னே !
கானிலந் தோய்ந்துவிண் ணோர்தொழும் கண்ணன்வெஃகாவுது
அம்பூந்
தேனியஞ் சோலையப் பாலதுஎப் பாலைக்கும் சேமத்ததே"
— திருவி. 2503

11. "மின்போல் கொடிநெடு வானக் கடலுட் டிரைவிரிப்பப்
பொன்போல் புரிசை வடவரை காட்டப் பொலிபுலியூர்
மன்போற் பிறையணி மாளிகை சூலத்த வாய்மடவாய்
நின்போ னடையன் னந்துன்னி முன்றோன்று நன்னீணகரே"
திருக். 222

12. பெரும்பாணாற்றுப்படை, அடிகள். 372-373.

13. "ஆடவர்க ளெவ்வா றகன்றொழிவார் வெஃகாவும்
பாடகமும் ஊரகமும் பஞ்சரமா – நீடியமால்
நின்றா னிருந்தான் கிடந்தான் இதுவன்றோ
மன்றார் மதிற்கச்சி மாண்பு"
— தண்டியலங்காரம், கழகம், சென்னை, 1948, ப. 140.

14. "ஒண்ணுதல் மாமை ஒளிபய வாமை விரைந்துநந்தேர்
நண்ணுதல் வேண்டும் வலவ ! கடாநின்று தேன்நவின்ற
விண்முதல் நாயகன் நீள்முடி வெண்முத்த வாசிகைத்தாய்
மண்முதல் சேர்வுற்று அருவிசெய் யாதிற்கும் மாமலைக்கே"
— திருவி. 2527

15. "சிறப்பிற் றிகழ்ந்தவன் சிற்றம் பலஞ்சென்று சேர்ந்தவர்தம்
பிறப்பிற் றுனைந்து பெருகுக தேர்பிறங் கும்மொளியார்
திறப்பொற் புரிசை மறுகினிற் றுன்னி மடநடைப்புள்
துறப்பிற் றுயின்று முற்றத் திரைதேரு மெழினகர்க்கே"
— திருக் 328

16. 'நளவெண்பா, கலிநீங்கு காண்டம், பா. 364.

17. "வண்டுக ளோ! வம்பின் நீர்ப்பூ நீலப்பூ மரத்தி லொண்பூ
உண்டுக ளித்துழல் வீர்க்கொன் றுரைக்கியம் ஏனமொன்றாய்
மண்துக ளாடிவை குந்தமன் னாள்குழல் வாய்விரைபோல்
விண்டுகள் வாரும் மலருள வோநும் வியலிடத்தே ?"
திருவி. 2532.

18. "கூம்பலங் கைத்தலத் தன்பரென் பூடுரு கக்குனிக்கும்
பாம்பலங் காரப் பரன்தில்லை யம்பலம் பாடலரின்
தேம்பலஞ் சிற்றிடை யீங்கிவ ளிங்கனி வாய்கமழும்
ஆம்பலம் போதுள வோவளி வோவளி காணும் மகன்பணையே"
— திருக். 11

19, குறுந்தொகை, பா. 2.

20, குறுந்தொகை, பா. 300.

21. தொல். பொருள். உவமையியல், நூ. 1255.

22. கல்லாடம் 34.

23. "புலக்குண் டலப்புண்ட ரீகத்த போர்க்கெண்டை வல்லி
யொன்றால்
விலக்குண் டுலாகின்று வேல்விழிக் கின்றன, கண்ணன்கையால்
மலக்குண் டமுதம் சுரந்த மறிகடல் போன்றவற்றால்
கலக்குண்ட நான்றுகண் டார், எம்மை யாரும் கழறலரே"
— திருவி. 2534.

24. "சேணிற் பொலிசெம்பொன் மாளிகைத் தில்லைச்சிற் றம்பலத்து
மாணிக்கக் கூத்தன் வடவான் கயிலை மயிலைமன் னும்

பூணிற் பொலிகொங்கை யாவியையோவியப் பொற்கொழுந்தைக்
காணிற் கழறிலை மென்றோட் கரும்பினையே" — திருக் 23.

25. அண்ணங்கராசாரியார், திருவிருத்தம் திவ்யார்த்ததீபிகை ப.117.

26. கம்பராமாயணம், பால காண்டம், மிதிலைக்காட்சிப் படலம்.பா.4

27. நளவெண்பா, சுயம்வர காண்டம், பா. 151,

28. கம்பராமாயணம், பாலகாண்டம், கோலங்காண் படலம், பா. 3.

29. திருக் 46.

30. "காவியும் நீலமும் வேலும் கயலும் பலபலவென்று
ஆவியின் தன்மை அளவல்ல பாரிப்பு அசுரர்ச்செற்ற
மாவியம் புள்வல்ல மாதவன் கோவிந்தன் வேங்கடம்சேர்
தூவியம் பேடையன் னாள், கண் களாய துணைமலரே"
— திருவி. 2544

31. "ஈசற் கியான்வைத்த வன்பி னகன்றவன் வாங்கியவெம்
பாசத் திற்கா ரென்றவன் றில்லையின் னொளி போன்றவன்றோள்
பூசத் திருந் றெனகவருத் தாங்கவன் பூங்கழல்யாம்
பேசத் திருவார்த் தையற் பெருநீளம் பெருங்கண்களே"
— திருக் 109.

32. "உலர்கின்ற கெண்டை ஒளியம்புஎம் ஆவியை ஊடுருவக்
குலாகின்ற வெஞ்சிலை வாண்முகத் தீர், குனி சங்கிடறிப்
புலாகின்ற வேலைப் புணரியம் பள்ளியம் மானடியார்
நிலாகின்ற வைகுந்த மோவைய மோநும் நிலையிடமே'
— திருவி.2552

33. "ஒருங்கட மூவெயி லொழ்றைக் கணைகொள்சிற் றம்பலவன்
கருங்கட மூன்றுகு நால்வாய்க கரியுரியுரித் தோன்கறிலை
இருங்கட மூடும் பொழிலெழிற் கொம்பரன் னீர்களின்னே
வருங்கடம் மூர்பகர்ந் தாற்பழி யோவிங்கு வாழ்பவர்க்கே"
திருக். 58

35. குறிஞ்சிப்பாட்டு, அடிகள் 139-145.

36. ''குழற்கோ வலர்மடப் பாவையும் மண்மக ளும்திருவும்
நிழல்போல் வனர்கண்டு நிற்குங்கொல் மீளுங்கொல்
தண்ணந்துழாய்
அழல்போ லடும்சக்க ரத்தண்ணல் விண்ணோர் தொழக்கடவும்
தழல்போல் சினத்தஅப் புள்ளின்பின் போன தனிநெஞ்சமே''
—திருவி. 2480

37. ''ஏர்ப்பின்னை தோண்முன் மணந்தவ னேத்தவெறி திகழுஞ்
சீர்ப்பொன்னை வென்ற செறிகழலோன் றில்லைச்
சூழ்பொழில்வாய்க்
கார்ப்புன்னை பொன்னவிழ் முத்த மணலிற் கலந்தகன்றார்
தேர்ப்பின்னைச் சென்றவென் னெஞ்சென் கொலாமின்று
செய்கின்றதே''
—திருக். 273.

38. திருவரங்கக் கலம்பகம், பா.24.

39. திருவாய்மொழி, 3467.

40. கோயிலொழுகு, முதற்பாகம், ப.25.

41. புறப்பொருள் வெண்பா மாலை, பா.237.

42. கல்லாடம் 80.

43. பேர்கின் றதுமணி மாமை பிறங்கியள் ளல்பயலை
ஊர்கின் றதுகங்குல் ஊழிக ளேஇதெல் லாமினவே
ஈர்கின்ற சக்கரத் தெம்பெரு மான்கண்ணன் தண்ணந்துழாய்
சார்கின்ற நன்னெஞ்சி னார்தந்து போன தனிவளமே''
—திருவி, 2489

44. அருந்தும் விடமணி யாமணி கண்டன்மற் றண்டர்க்கெல்லா
மருந்து மமிர்தமு மாகுமுன் னோன்றில்லை வாழ்த்தும்வள்ளல்
திருந்துங் கடநெறி செல்லுமிவ் வாறு சிதைக்குமென்றால்
வருந்தும் மடநெஞ்ச மேயென்ன யாமினி வாழ்வகையே''
— திருக் 272

45. ''தலியும் நரகனை வீட்டிற்றும் வாணன்திண் தோள்துணித்த
வலியும் பெருமையும் யான்சொல்லும் நீர்த்தல்ல மைவரைபோல்
பொலியும் உருவல் பிரானார் புனைபூந் துழாய்மலர்க்கே
மெலியும் மடநெஞ்சி னார்தந்து போயின வேதனையே!''
—திருவி. 2555.

46. ''மன்செய்த முன்னாண் மொழிவழி யேயன்ன வாய்மைகண்டு
மென்செய்த நெஞ்சு நிறையு நில்லாவென தின்னுயிரும்
பொன்செய்த மேனியன் தில்லை யுறாரிற் பொறையரிதா
முன்செய்த தீங்குகொல் காலத்து நீர்மைகொன் மொய்குழலே''
—திருக்.278

47 ஔவையார், 'கொன்றை வேந்தன்', 16.
48, திருமழிசைப் பிரான். திருச்சந்த விருத்தம், 804.
49. திருமங்கையாழ்வார், பெரியதிருமொழி' 1854.
50 பிள்ளைப்பெருமாளையங்கார், திருவரங்கக் கலம்பகம், 39
51. குறுந்தொகை 361.
52. கல்லாடம் 68.
53. ''இருள்விரிந் தாலன்ன மாநீர்த் திரைகொண்டு வாழியரோ
இருள்பிரிந் தாரன்பர் தேர்வழி தூரல், அரவணைமேல்
இருள்விரி நீலக் கருநா யிறுசுடர் கால்வதுபோல்
இருள்விரி சோதிப் பெருமா னுறையு மெறிகடலே''
— திருவி 2494

54. ''உள்ளு முருகியு ரோமஞ் சிலிர்ப்ப வுடையவனாட்
கொள்ளு மவரிலோர் கூட்டந்தந் தான்குனிக் கும்புலியூர்
விள்ளும் பரிசுசென் றார்வியன் றேர்வழி தூ ரல்கண்டாய்
புள்ளுந் திரையும் பொரச்சங்க மார்க்கும் பொருகடலே''
— திருக். 185

55. மு. வரதராசன், 'பழந்தமிழிலக்கியத்தில் இயற்கை', ப.567 இல் தரப்பட்டுள்ள மேற்கோள்.

56. ''இன்னன்ன தூதெம்மை ஆளற்றப் பட்டிரந் தாளிவளென்று
அன்னன்ன சொல்லாப் பெடையொடும் போய்வரும் நீலமுண்ட
மின்னின்ன மேனிப் பெருமா னுலகில்பெண் தூ துசெல்லா
அன்னன்ன நீர்மைகொ லோகுடிச் சீர்மையி லன்னங்களே''
—திருவி. 2506.

57. வீரராகவாசார்யன், திருவிருத்த உரை, ப 54.
58. ''மூவல்தழீஇயத் திருமுத லோன்தில்லைச் செல்வன்முந்நீர்
நாவ றழீஇயவித் நாநிலந் துஞ்சு நயந்தவின்பச்
சேவ றழீஇச்சென்று தான்து ஞ்சும் யான்றுயி லாச்செயிரெங்
காவ றழீஇயவற் கோதா தளியக் களியன்னமே''—திருக். 191.

59. கு. தாமோதரன், 'ஆழ்வார் திருவுள்ளம்', ப 89.

60. கல்லாடம் 41.

61. "மலைகொண்டு மத்தா அரவால் சுழற்றிய மாயப்பிரான்
அலைகண்டு கொண்ட அமுதம்கொள் ளாது கடல்பரதர்
விலைகொண்டு தந்தசங் கம இவை வேரித் துழாய்துணையாத்
துலைகொண்டு தாயம் கிளர்ந்துகொள் வானொத்
தழைக்கின்றதே" —திருவி. 2528

62. "பாணிகர் வண்டினம் பாடப் பைம்பொன் றரு வெண்கிழிதஞ்
சேணிகர் காவின்வழங்கும் புன்னத்துறைச் சேர்ப்பர்திங்கள்
வாணிகர் வெள்வளை கொண்டகன் றார்திறம் வாய்திறவாய்
பூணிகர் வாளர வன்புலி யூர்சுற்றும் போர்க்கடலே"
—திருக் 183.

63. "திங்களம் பிள்ளை புலம்பத்தன் செங்கோ லரசுபட்ட
செங்களம் பற்றிநின் றெள்குபுன் மாலைதென் பாலிலங்கை
வெங்களம் செய்தநம் விண்ணோர் பிரானார் துழாய்துணையா
நங்களை மாமைகொள் வான்வந்து தோன்றி நலிகின்றதே"
— திருவி.2554

64. "பகலோன் கரத்தனன் காப்பவர் சேயர்பற் றற்றவர்க்குப்
புகலோன் புகுதர்க்குப் போக்கரி யோனெவ ரும்புகலத்
தகலோன் பயிறிக் லைப் பைம்பொழிற் சேக்கைக ணோக்கினவால்
அகலோங் கிருங்கழி வாய்க்கொழு மீனுண்ட வன்னங்களே"
—திருக்.188.

65. பிள்ளைப் பெருமாளையங்கார், திருவரங்கக் கலம்பகம், பா.34.

66. கல்லாடம், பாடல் 69.

67. "கருங்குறி வெண்ணெய் தொடுவுண்ட கள்வனை வையமுற்றும்
ஒருங்குற வுண்ட பெருவயற் றாளனை மாவலிமாட்டு
இருங்குறள் ஆகி இசையவோர் மூவடி வேண்டிச் சென்ற
பெருங்கிறி யானையல் லால்அடி யேன்நெஞ்சம் பேணலதே"
திருவி.2568.

68. "வண்டலுந் தேமெங்கண் வந்தொரு தோன்றல் வரிவளையீர்
உண்டலுற் றேமென்று நின்றதோர் போழ்துடை யான்புலியூர்க்
கொண்டலுற் றேறுங் கடல்வர வெம்முயிர் கொண்டுதந்து
கண்டலுற் றோர்நின்ற சேரிச்சென் றானொர் கழலவனே"
— திருக். 290

69. கல்லாடம், பா.9.

70 ஈ. கோ. பாஸ்கரதாஸ், 'அகப்பொருள் பாடல்களில் தோழி', ப.1

71. தொல். பொருள். நூ 123.

72. தொல்.பொருள். குழந்தையுரை, ப.57.

73. தொல். பொருள். நூ.42.

74. அகம்.12.

75. திருவி. 2479.

76. திருக். 310

77. திருவி பி.ப. அண்ணங்கராசாரியார் உரை. ப.10.

78. மே.நூ.

79. கல்லாடம் 73.

80. ''ஞாலம் பனிப்பச் செறித்துநன் னீரிட்டுக் கால்சிதைந்து
நீலவல் லேறு பொரா நின்ற வான மிதுதிருமால்
கோலம் சுமந்து விரிந்தார் கொடுமை குழறுதண்பூங்
காலங்கொ லோவறியேன்வினை யாட்டியேன் காண்கின்றவே''
திருவி. 2484.

81. ''தெளிதரற் கார்எனச் சீரனஞ் சிற்றம் பலத்தடியேன்
களிதரக் கார்மிடற் றோடை மாடக்கண் ணார்முழவந்
துளிதரற் காரென வார்த்தன வார்ப்பத்தொக் குன்குழல்போன்
றளிதரக் காந்தளும் பாந்தளைப் பாரித் தலர்ந்தனவே''
— திருக். 324.

82. திருக்குறள் 292.

83 அழைக்கும் கருங்கடல் வெண்திரைக் கைகொண்டு போய்
அலர்வாய்
மழைக்கண் மடந்தை அரவணை யேறமண் மாதர்விண்வாய்
அழைத்துப் புலம்பி முலைமலை மேல்நின்றும் ஆறுகளாய்
மழைக்கண்ண நீர்திரு மால்கொடி யானென்று வர்கின்றதே''
— திருவி. 2529.

84. ''கருந்தினை யோம்பக் கடவுட் பராவி நமர்களிப்பச்
சொரிந்தன கொண்மூச் சுரந்ததன் பேரரு ளாற்றொழும்பிற்
பரிந்தெனை யாண்ட சிற்றம்பலத் தான்பரங் குன்றிற்றுன்றி
விரிந்தன காந்தள் வெருவரல் காரென வெள்வளையே''
— திருக். 279.

85. திருவிருத்தம், பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானம், பக். 293—294.

86. குறுந்தொகை 66.

87. "சின்மொழி நோயோ கழிபெருந் தெய்வம்இந் நோயினதென்
றின்மொழி கேட்கு மினத்தெய்வ மன்றிது வேலநில்நீ
என்மொழி கேண்மினென் அம்மனை மீர்உல கேழுமுண்டான்
சொன்மொழி மாலையந் தண்ணந் துழாய்கொண்டு சூட்டுமினே"
— திருவி. 2497.

88 "விதியுடை யாருண்க வெறிவி லக்கல மம்பலத்துப்
பதியுடை யான்பரங் குன்றினிற் பாய்புனல் யாமொழுகக்
கதியுடை யான்கதிர்த் தோணிற்க வேறு கருதுநின்னின்
மதியுடை தெய்வமேயில்லை கொல்லினி வையகத்தே"
— திருக். 292.

89. கல்லாடம் 16.

90. "கொம்பார் தழைகை சிறுநா ணெறிவிலம் வேட்டை கொண்டாட்
டம்பார் களிறு வினவுவ தையர்புள் ளூரும்கள்வர்
தம்பா ரகத்தென்று மாடா தனதம்மில் கூடாதன
வம்பார் வினாச்சொல்ல வோஎம்மை வைத்ததிவ் வான்புனத்தே"
— திருவி. 2499

91. "சிலையொன்று வாணுதல் பங்கன் சிற்றம்பல வன்கயிலை
மலையொன்று மாமுகத் தெம்மைய ரெய்கணை மண்குளிக்குங்
கலையொன்று வெங்கணை யோடு கடுகிட்ட தென்னிற்
கெட்டேன்
கொலையொன்று திண்ணிய வாறையர் கையிற்
கொடுஞ்சிலையே" — திருக். 101.

92. குறிஞ்சிப்பாட்டு, அடிகள் 135-142.

93. புறம் 152.

94. அம்பிகாபதி கோவை பா. 92.

95. "சிதைக்கின்ற தாழியென் றாழியைச் சீறிதன் சீறடியால்
உதைக்கின்ற நாயகந் தன்னொடும் மாலே உனதுதண் தார்
ததைக்கின்ற தண்ணந் துழாயணி வானது வேமனமாய்ப்
பதைக்கின்ற மாதின் திறத்துஅறி யேன்செயற் பாலதுவே"
— திருவி. 2511.

96. "ஆழி திருத்தும் புலியூரு டையா னருளினளித்
தாழி திருத்து மணற்குன்றி னீத்தகன் றார்வருகென்
றாழி திருத்திச் சுழிக்கணக் கோதி நையாமலைய
வாழி திருத்தித் தரக்கிற்றி யோவுள்ளம் வள்ளலையே"
— திருக் 186.

97. திருவிருத்தம், பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானம்,
ப. 210.
முத்ராக்ஷர சாலை, சென்னை 1905

98. "சூட்டுநன் மாலைகள் தூயன வேந்தி, விண் ணோர்கள்நன்னீர்
ஆட்டியந் தூபம் தராநிற்க வேயங்கு, ஓர் மாலையினால்
ஈட்டிய வெண்ணெய் தொடுவுண்ணப் போந்திமி லேற்றுவன்கூன்
கோட்டிடை யாடினை கூத்து, அட லாயர்தம் கொம்பினுக்கே"
— திருவி. 2498.

99. "படையார் கருங்கண்ணி வண்ணப் பயோதரப் பாரமுநுண்
இடையார் மெலிவுங்கண் டண்டர்க ளீர்முல்லை வேலியெம்மூர்
விடையார் மருப்புத் திருத்திவிட் டார்வியன் றென்புலியூர்
உடையார் கடவி வருவது போலு முருவினதே" — திருக் 1[illegible]6.

100. ஞானபூமி, ஜனவரி 1982, ப.5.

101. "கயலோ நுமகண்கள் என்று களிறு வினவிநிற்றீர்
அயலோர் அறியிலு மீதென்ன வார்த்தை கடல்கவர்ந்த
புயலோ டுலாம்கொண்டல் வண்ணம் புனவேங் கடத்தெம்மொடும்
பயலோ விலீர், கொல்லைக் காக்கின்ற நாளும் பல பலவே"
—திருவி.2492.

102. "இருங்களி யாயின் றியானிறு மாப்ப வின் பாம்பணிவோர்
மருங்களி யாவன லாடவல் லோன்றில்லை யான்மலையீங்
கொருங்களி யார்ப்ப வுமிழ்மும் மதத்திரு கோட்டொருநீள்
சுருங்களி யார்மத யானையுண் டோவரக் கண்டதுவே"
- திருக்.52.

103. பா. பச்சையப்பன், 'சுவர்க்க நீக்கம்', செ. வேங்கடராம
செட்டியார் முன்னுரை, ப.3.

104. கலித்தொகை, குறிஞ்சிக்கலி, பா.15.

105. கல்லாடம். பா.32

106. தொல். பொருள். நூ.152.

107. நற்றிணை, பா 179.

108. "கொடுங்கால் சிலையர் நிரைகோ ளுழவர் கொலையில்வெய்ய
கடுங்காய் இளைஞர் துடிபடும் கல்வைத்து அருவினையேன்
நெடுங்கால மும்கண்ணன் னீண்மலர்ப் பாதம் பரவிப்பெற்ற
தொடுங்கா லொசியு மிடை, இள மான்சென்ற சூழ்கடமே"
திருவி.2514.

109. "யாழியன் மென்மொழி வன்மனப் பேதையோ ரேபிதிலன்
தோழியை நீத்தென்னை முன்னே துறந்துதுன் னார்
கண்முன்னே
வாழியிம் மூதூர் மறுகசென் றானன்று மால்வணங்க
வாழிதந் தானம் பலம்பணி யாரி னருஞ்சுரமே"
—திருக்.230.

110. குறள் 1115.

111. கம்பராமயணம், அயோத்தியா காண்டம், கங்கைப்படலம்1.

112. "கள்வன்கொல் யானறியேன் கரியானொரு காளைவந்து
வள்ளிமருங் குலென்றன் மடமானினைப் போதவென்று
வெள்ளிவளைக் கைப்பற்றப் பெற்றதாயரை விட்டகன்று
அள்ளலம் பூங்கழனி யணியாலி புகுவர்கொலோ"
—பெரிய திருமொழி 1208.

113. ந. சுப்புரெட்டியார், 'வைணவ உரைவளம்', ப.129.

114. மே. நூ. ப.129.

115. திருவாய்மொழி 3293.

116. ந சுப்புரெட்டியார், 'வைணவ உரைவளம்', ப 409.

117. கல்லாடம்.7.

118. "முலையோ முழுமுற்றும் போந்தில மொய்பூங் குழல்குறிய
கலையோ அரையில்லை நாவோ குழறும் கடலமண்ணெல்லாம்
விலையோ எனமிளி ருங்கண் ணிவள்பர மே, பெருமான்
மலையோ திருவேங் கடமென்று கற்கின்ற வாசகமே"
—திருவி 2537.

119. "உருகு தலைச்சென்ற வுள்ளத் தும்பலத் தும்மொளியே
பெருகு தலைச்சென்று நின்றோன் பெருந்துறைப் பிள்ளைக்
கள்ளார்
முருகு தலைச்சென்ற கூழை முடியா முலைபொடியா
ஒருகு தலைச்சின் மழலைக்கென் னோகவைய வோதுவதே'

—திருக்.104.

120. "வாயில் பல்லு மெழுந்தில மயிறும் முடிகூ டிற்றில,
சாய்வி லாத குறுந்தலைச் சிலபிள் ளைகளோ டிணங்கி
தீயி ணக்கிணங் காடிவந் திவள் தன்னன்ன செம்மை சொல்லி,
மாயன் மாமணி வண்ணன் மேலிவள் மாலுறு கின்றாளே"

— பெரியாழ்வார் திருமொழி 287.

121. "முறைகொண்ட பால்மணம்வாய் மாறிற்றில்லை அம் மொய்
குழலோ
அலைகொண்ட தின்னம் என்கை அணையே அலை ஆழிவற்றச்
சிலைகொண்ட செங்கை அரங்கேசர் கொண்ட தேசமெல்லாம்
விலைகொண்ட வாள்விழியாள் சென்றவாறு எங்ஙன் வெஞ்சுரமே

— திருவரங்கக் கலம்பகம், பா.82.

122. அகம். பா.7.

## "புன்னைப் பூச்சூடி இளமந்திகள் நாணுமால்"

## இயல்—நான்கு

# இலக்கிய உத்திகள்

## 1. பாத்திரப் படைப்பும் நாடகப் பாங்கும்

### முன்னுரை

அகத்திணைக் காட்சிகளை முதன்முதலாக நாடகமாக அமைத்துக் கோவை நூல்களுக்கும் அகப்பொருள் இலக்கணங்களுக்கும் புதுவழி காட்டியவர் திருவள்ளுவர். காமத்துப்பால் ஓர் அழகிய காதல் நாடகமாக அமைந்து இன்பமூட்டுகிறது. கோவை நூலைப் பின்பற்றி அகப்பொருள் இலக்கணமும் நாடகப் போக்கில் அமைந்தது.1

இயலும் இசையுஞ் சேர்ந்து கதையைத் தழுவி வருங்கூத்தே நாடகம். நாடகத்திற்கு இன்றியமையாதது அவிநயம். எடுத்துக் கொள்ளும் பாத்திரத்திற்கு ஏற்ற உணர்ச்சியுள்ள நடிப்பே நாடகத்தின் உயிர்நிலை. நடிக்கின்றவர் தம்மை மறந்து தாம் தாங்கி நிற்கும் வேட வுருவை மனத்திற்கொண்டு அதற்கு ஏற்றவாறு தம்மைத் திரித்துக் கொண்டு நடித்தாலன்றி நாடகம் நயமானது என்று கூற முடியாது. இதன் உண்மையை,

> "நாடகத்தால் உன்னடியார்போல் நடித்து நான்நடுவே
> வீடகத்தே புகுந்திடுவான் மிகப்பெரிதும் விரைகின்றேன்"2

என்று மாணிக்கவாசகர் கூறியதாலும் அறியலாம். அக்காலத்தில் முறுவல், சயந்தம், குணநூல், செயிற்றியம், மதிவாணர் நாடகத் தமிழ் நூல், கூத்தநூல் எனும் நாடக நூல்கள் வழங்கின. சிலப்பதிகாரத் தினுள் ஆய்ச்சியர் குரவை, குன்றக்குரவை என இரண்டு கூத்துக்கள் பேசப்படுகின்றன.3

குதித்து ஆடுவதே கூத்து. செல்வத்தின் நிலையாமைக்கு உவமையாகக் கூத்தாடும் அவைக்களத்துள்ள கூட்டம் கலைந்து போதலை வள்ளுவர் கூறுகிறார்.

> "கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
> போக்கும் அதுவிளிந் தற்று"4

என்பது குறள்.

> "பாடல் ஓர்த்தும் நாடகம் நயந்தும்
> வெண்ணிலவின் பயன் துய்த்தும்
> கண் அடைஇய கடைக்கங்குலான்"5

என்று பட்டினப்பாலை கூறுகிறது.

சங்ககால மக்கள் பாடலைக் கேட்டும், நாடகத்தை விரும்பிப் பார்த்தும் வெள்ளிய நிலவின் பயனை அனுபவித்து உறங்கினார்கள். மாங்குடி மருதனார் எனும் புலவர், திருவிழாக்களில் கூத்து ஆடிமுடித்த வயிரியர் துயில்கொள்ளும் நள்ளிரவைப் பற்றிக் கூறும்போது,

> "விழவின் ஆடும் வயிரியர் மடிய...
> பானாட் கொண்ட கங்குல்"6

என்கிறார்.

நடிகராக வேண்டுமானால் மெய்ப்பாடுகள் தோன்ற நடிக்கத் தெரியவேண்டும்.

> ''கைபிசையா வாய்மடியாக் கண்சிவவா வெய்துயிரா
> மெய்குலையா வேரா வெகுண்டெழுந்தான் வெய்யபோர்த்
> தார்வேய்ந்த தோளான் மகளைத் தருகென்று
> போர்வேந்தன் தூதிசைத்த போது''7

என்றவாறு கோபத்தைக் காட்டக் கருதுவோர் மெய்ப்பாடுகளைத் தோற்றுவிக்க வேண்டும்.

நாடகத்திற்கு அடிப்படையாய் வேண்டப்படுவன ஒவ்வோர் உணர்ச்சிக்கும் உரிய மெய்ப்பாடாகும். பழங்காலத்தில் பேச்சின்றி வெறும் அவிநயத்தோடும் கூத்து நின்றதுண்டு அக்கூத்துக்களை 'மெய்க்கூத்து' என்றனர். உடம்பைப் பலவகையில் வளைக்கின்ற அளவிலும் உயர்ச்சிகளுக்கு ஏற்ப மெய்ப்பாடு தோன்றும்படி நடிக்கின்ற அளவிலும் இக்கூத்துக்கள் இருந்தன. இடைக்காலத்தில் அவிநயத்தோடு பாட்டொலியும் கூடிற்று. சில உரையாடல்களும் சேர்ந்தன. ஆனால் இந்த உரையாடல்கள் இடத்திற்கு ஏற்றவாறு நடிப்போராலேயே சேர்க்கப்பட்டு வந்தன.

## கற்பனைப் பெருக்கு

ஓரிடத்தில் காதலரிருவர் களவினை மேற்கொண்டிருத்தலைப் புலவன் கண்டிருப்பான்; பிறிதோரிடத்தில் உடன்போக்குச் செல்லும் இருவரைச் சந்தித்திருப்பான். மற்றுமோரிடத்தில் பொருள்வயிற்பிரிந்த தலைவனை எண்ணித் தனிமையில் தவிக்கும் பெண்ணொருத்தியைப் பார்த்திருப்பான். இவையெல்லாம் புலவன் வெவ்வேறு இடங்களில் வெவ்வேறு குடும்பங்களில் நேரில் கண்டறிந்த உண்மைகள் ஆகும்.

தினைப்புனத்தில் காதலர் ஒருவரை ஒருவர் கண்டனர்; தம்முள் இதயம் மாறிப்புக்கு உறவு கொண்டனர் தினைப்புனம் காக்கும் பணி முடிந்தது தலைவி இற்செறிக்கப்பட்டாள். அவளைக் காணத் துடித்தான் தலைவன்; விரும்பியவாறு விரும்பியபோது சந்திக்க இயலவில்லை இருவரும் எங்காவது போய்விட முடிவு செய்தனர். புறப்பட்டுப் போயினர். எங்கோ ஓர் ஊரிலிருந்து இல்லறம் நிகழ்த்தினர். இருந்த பொருள் செலவழிந்த நிலையில் புதிய பொருள் தேடத் தலைவன் புறப்பட்டான். தலைவி, பிரிதலை எண்ணி வருந்தினாள்; அழுதாள். தலைவன் அப்போதைக்குப் பயணத்தை நிறுத்தினான். அவளை ஆற்றுவித்தான்; பின்னர்ப் புறப்பட்டுப்

போயினான். கார்காலத்தில் திரும்பி வருவதாகக் கூறிய அவன் வரவை எதிர்நோக்கி அவள் காத்துக் கிடந்தாள். இங்ஙனம் துண்டு துண்டான பார்வைகளை ஓரிடத்தில் திரட்டித் தருவது என்பதே நாடக வழக்கு.

இருவர் மூவராக உரையாடுதல் போல அமைப்பது நாடக வழக்கின் உயிர்ப்பண்பு கலித்தொகை, பரிபாடல் என்னும் இரு நூல்களுள்ளும் பல பாடல்கள் இத்தகைய உரையாடல்களாகவே உள்ளன. தலைவன், தலைவி, தோழி, பரத்தை, கண்டோர், காதற்பரத்தையர், காமக்கிழத்தி ஆகியோரிடையே நிகழும் உரையாடலாக இப்பாக்கள் அமைக்கப் பட்டுள்ளன. இச்சிறப்புக் கருதியே தொல்காப்பியர்,

> ''நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
> பாடல் சான்ற புலநெறி வழக்கம்
> கலியே பரிபாட்டு ஆயிரு பாவினும்
> உரிய தாகும் என்மனார் புலவர்''8

என்றார்.

## பாத்திரங்கள்

காதலையும் வீரத்தையும் கூறும் இலக்கியங்களில் மானிடப் பாத்திரங்கள் மிகமிகத் தேவை என்பது உண்மை. வெறும் பாத்திரங் களை மட்டும் அறிமுகப்படுத்துவதால் இலக்கியம் சுவைபெற முடியாது. பாத்திரப்படைப்பும் இலக்கியத்தின் வெற்றிக்குத் தலையாய பங்கு எடுத்துக் கொள்கிறது. பழந்தமிழ் இலக்கிய மரபிற்கு ஏற்பப் பாத்திரங் களும் பாத்திரப் படைப்பும் எவ்வாறு அமைதல் வேண்டும் என்பது இலக்கண நூல்களில் வரையறுக்கப்பட்டுள்ளது.

பாத்திரங்களைப்பற்றிக் கூறாது, நிகழ்ச்சிகளில் எவர் என்ன பேசவேண்டும் என்று கூறுகிறார். தொல்காப்பியர்; அவ்வாறு பேசப் படும் 'கூற்று'களுக்கு வரையறை உண்டு. தொல்காப்பியத்தில் பல இடங்களில் பாத்திரங்கள் பேசுவதற்குப் பொருத்தமான இடங்கள் சுட்டப்படுகின்றன. எந்தப் பாத்திரம் எந்த அளவிற்குப் பேச வேண்டும் என்ற வரையறையும் தொல்காப்பியத்தில் விதிக்கப்பட்டு உள்ளது. பழந்தமிழ் இலக்கியத்திற்கே உரிய இச்சிறப்பான அமைப்பை அக்கால இலக்கிய உத்தி எனக் கூறலாம்.9

## களவியல் பாத்திரங்கள்

தலைவன், தலைவி, தோழி, செவிலி, பார்ப்பார், பாங்கன் ஆகியோர் களவில் கூற்றிற்குரியராவர்.

தலைவனே காப்பியத்தையும் நாடகத்தையும், நடத்திச் செல் பவன். பழந்தமிழ் இலக்கியத்தில் முல்லை முதலிய நிலத்தின் அடிப் படையில் ஐவகைத் தலைவர்கள் இருந்தனர். தொல்காப்பியர் தலைவனது வயதை வரையறுக்கவில்லை. ஆனால் அவன் வயது பதினாறு என அறியலாம், தலைவனுக்கு நற்குடிப்பிறப்பு, நற்பண்பு, ஆண்மை பருவம், தோற்றம், அன்பு, சான்றாண்மை, கருணை, அறிவு செல்வம் ஆகிய பத்துப் பண்புகள் இருக்க வேண்டும்; அவனுக்குக் காழ்ப்புணர்ச்சி, கொடுமை, செருக்கு, புறங்கூறல், கடுஞ்சொல், துணி வின்மை, மடி, குடிபிறப்புப் பற்றிய கர்வம், பிறன்பழி கூறல், ஏழ் மையை மறத்தல, பொருந்தாக் காமம் ஆகிய பண்புகள் இருத்தல் கூடாது.

தலைவியைச் சந்தித்த முதற் சந்திப்பிலேயே அவன் ஆழமான காதலை வளர்த்துக் கொள்கிறான். மானிடப் பண்புகள் அவளிடம் இருப்பதால் அவள் தேவதையல்லள்; மானிடப் பெண்ணே என்ற முடிவிற்கு வருகிறான். தன் காதலை நயன மொழியில் நவில்கிறான். மெல்ல அவள் மனத்தை அளக்கிறான்; அவள் தன்னை உண்மை யிலேயே காதலிக்கிறாள் என்ற முடிவிற்கு வருகிறான்.

இரண்டாம் நாள் சந்திப்பின்போது மெய்தொட்டுப் பயில்கிறான். இடையில் ஏற்படும் தற்காலிகப் பிரிவிற்கு வருந்துகிறான். தன் காதலுக்கு உதவுமாறு நண்பனை வேண்டுகிறான். தோழியிடம் கையுறை முதலியன தந்து தலைவியைச் சந்திப்பதற்கு வழிவகை செய்யுமாறு முறையிடுகிறான்.

அவள் காதலை ஏற்கவில்லையென்றால் மடலேறுவதாக அச்சுறுத்துகின்றான். இரவிலோ பகலிலோ தலைவியைச் சந்திக்க முயல்கிறான். குறித்த நேரத்தில் வரத் தவறும் போது அவளிடம் மன்னிப்பும் கேட்டுக் கொள்கிறான். தன் வரவைத் தலைவிக்குத் தெரிவிக்கச் சங்கேதக் குறிப்புகளைச் செய்கிறான். அவளைச் சந்திக்க வியலாதபோது மிகவும் வருந்துகிறான். தன் வரவை யுணர்த்தச் சில தடயங்களை விட்டுச் செல்கிறான்.

தனியிடத்தே அவளைச் சந்திப்பதில் பெருமிடர்கள் அவனுக்கு நேரிடினும் அவற்றில் மகிழ்ச்சியே காண்கிறான். அவளை விரைவில் திருமணம் புரியவேண்டும் என்ற பொறுப்புணர்வை உணர்ந்திருந் தாலும் தனியே அவளைச் சந்திப்பதை நீடிக்க விரும்புகிறான்; அவன் வரும் வழியிலுள்ள ஆபத்துகளைப் பற்றிக் கவலை கொள்வதில்லை.

தலைவியின் பெற்றோருக்கு அவர்கள் காதல் தெரிந்துவிட்டது என்று அறிந்து, தான் அவளை மணப்பதற்கு விருப்பமுடையவன் என்னும் செய்தியை அவள் பெற்றோருக்கு அனுப்புகிறான் அவர்களின் அனுமதி கிடைத்தால் சமயச் சடங்குகளோடு மணம்செய்து கொள்கிறான்

இல்லையெனில் தோழியின் உதவியால் அவளுடன் உடன் போக்குச் செல்ல முடிவு செய்கிறான்

பாலை வழியில் அவளை அழைத்துச் செல்கிறான்; பல இன் மொழிகளைக் கூறிச் சுரத்தி அவள்படும இன்னல்களை மறக்குமாறு செய்கிறான். தலைவியை அழைத்துச் சென்று தம் ஊரில் மணமுடித்துக் கொள்கிறான்.

இத்தகைய தலைவனையே திருவிருக்கத்திலும், திருக்கோவை யாரிலும் காண்கிறோம்.

## தலைவி

தமிழ்மரபின்படி இவள் பன்னிரு வயதினள். முதற் சந்திப்பி லேயே அவள் ஆழமாக அவனைக் காதலிக்கிறாள். அவள் நாணம் மிக்கவள்; ஆகவே தன் உணர்ச்சிகளை வரம்பு மீறிப் போகாமல் கட்டுப்படுத்திக் கொள்கிறாள். அடுத்த சந்திப்பின்போது அவன் தொடுவதை மெல்ல மறுக்கிறாள். அவன் அன்பையும உணர்வையும் மதித்து உடன்படுகிறாள். அவள் உடலுறுப்புகள் வழித் தன் மன உணர் வினை வெளிப்படுத்துகிறாள். எல்லா வகையிலும் தலைவனுக்கு ஏற்றவள் ஆகிறாள்; அவனைப் போலவே அவளும் பத்துப் பண்புகளைப் பெற்றிருக்கிறாள். நாணம் மிக்கு இருப்பதால் தன் உணர்ச்சிகளைத் தோழியின் மூலம் அவனுக்கு எடுத்துக் கூறுகிறாள். தனியே சந்திப் பதற்குரிய இடத்தைச் சுட்டுகிறாள். தன் காதலனின் விருப்பத்திற்கு இணங்குவதே தன் கடமை என்றறிந்து அதன்படி செயல் படுகிறாள்.

இடையூறுகளை அவன் எடுத்து கூறும்போது, பொறுமையோடு கேட்டு, காதலுக்காக அவனை ஏற்றுக்கொள்ளத் தயாராகிறாள். அவன் காணாதவாறு அவள் அவனைப் பார்க்கிறாள் தன் புன்னகை மூலம் தன் உணர்வுகளைப் புலப்படுத்துகிறாள் அவனோடு இருக்கும் போது அவள் தடுமாறுகிறாள், வெட்கத்தினால் செயலற்றுப் போகிறாள்;

அவனைச் சந்திக்கும்போது பெருமகிழ்ச்சியில் தன்னை மறந்த நிலையில் இருக்கிறாள். சிறிய இடைவெளி உடையதாயினும் அவன் பிரிவை அவளால் தாங்க முடியவில்லை.

வீட்டில் காவல் மிகுந்தபோது அவனைச் சந்திக்கும் வாய்ப்பைத் தேடுகிறாள். அனைவரும் உறங்கியபின் மெல்ல எழுந்து அவனைச் சந்திக்க வருகிறாள். சங்கேதக் குறிகளில் சந்தேகம் ஏற்பட்டு அதனால் சில நேரங்களில் அவள் ஏமாறுதல் உண்டு.

அவன் பிரிவைத் தாங்காது தனக்கு ஏற்பட்டிருக்கும் துன்பத்தை எடுத்துக் கூறுகிறாள்.

காவல் கடுமையாக இருப்பதால் கனவில் அவனைக் கண்டு மகிழ்ச்சியுறுகிறாள். அவனது பிரிவினால் உணவும் கொள்வதில்லை. வேலனிடம் அழைத்துச் சென்று அவள் நோய்க்குரிய காரணத்தைப் பெற்றோர் கேட்கும்போதும் உண்மையை அவள் வெளியிடுவதில்லை. தலைவன் மட லேறுகிறான் என்பதறிந்து மிக்க கவலை கொள்கிறாள். அவன் காலம் தாழ்த்தி வந்தால் மிக்க வேதனையுறுகிறாள்.

திருமணம் குறித்துத் தன் பெற்றோரிடம் பேசுமாறு அவனுக்கு அறிவுறுத்துகிறாள் தன் பெற்றோர் அவனுக்கே தன்னை மணமுடிக்க மறுத்தால் அவன் அழைக்கும் எந்த இடத்திற்கும் உடன் செல்ல முடிவு செய்கிறாள். மிகவும் எச்சரிக்கையோடு தன் வாழ்வில் உண்டாகப் போகும் நன்மை தீமைகளைப் பற்றித் தோழியிடம் கலந்து ஆலோசிக்கிறாள். அவள் உடலில் ஏற்பட்டுள்ள மாற்றங்கள் அவளது காதலைப் பெற்றோருக்குத் தெரியப்படுத்தி விடுகின்றன.

பிரிவின் போது உடல் நிறம் மாறுகிறாள்; இளைக்கிறாள்; உணர்ச்சியற்ற மனநிலை அடைகிறாள். உறக்கத்தில் தன் மனநிலையைத் தன்னையறியாமலேயே வெளிப்படுத்தி விடுகிறாள். செவிலித் தாய் தொடுக்கும் வினாக்களுக்குத் தந்திரமாகப் பதிலளிக்கிறாள்.

## தோழி

காதல் நாடகத்தில் தோழி மிகவும் இன்றியமையாத பாத்திரம். தலைவியைக் குழந்தைப்பருவம் முதல் வளர்க்கும் செவிலியின் மகள் தான் தோழி. தலைவி தோழியிடம் சில நேரங்களில் ஆலோசனை கேட்கிறாள். முதலில் தலைவியின் காதலைப் பற்றி அறியாத அவள் பின் தன் அறிவுக் கூர்மையால் புரிந்து கொள்கிறாள்.

காதலன் அவள் உதவியை நாடும்போதும், தலைவியின் உளப் பாங்கைப் புரிந்துகொள்கின்ற போதும், தலைவியை அவன் சந்திக்க வருகின்ற போதும் ஆக இந்த மூன்று நிலைகளில் தோழி தலைவியின் காதலை அறிந்துகொள்கிறாள். இருவரும் ஒருவர் மீது ஒருவர் அன்பு பாராட்டுகின்றனர் என்ற நிலைமையை அறிந்த பிறகுதான் அவள் தலைவனுக்கு உதவிசெய்ய முடிவு செய்கிறாள். தலைவனைச் சந்திக்கும் பொழுதெல்லாம் அவள் தலைவியுடன் இருக்கிறாள்.

தலைவியின் மனம், தோற்றம், நடத்தை, உணவு, மறதி நடை, செயல்கள் மூலம் அவள் தலைவனோடு தொடர்பு கொண்டிருக் கிறாள் என்று புரிந்து கொள்கிறாள். குழப்பத்தை உண்டாக்கும் வினாக்களை எழுப்பி அவள் மனத்தை அறிகிறாள். தலைவன் யாரு மறியாமல் தலைவியைச் சந்திப்பதைத் தோழி விரும்பவில்லை தலைவனே வந்து தன் துன்பத்தைக் கூறினாலும் யாதும் அறியாதவள் போல் நடிக்கிறாள். திருமணம் செய்துகொள்ளத் தலைவியின் பெற்றோரைச் சந்திக்குமாறு அறிவுறுத்தி அவனை அனுப்பிவிடுகிறாள்.

தலைவனுக்கு உதவ அவள் முடிவெடுக்கிறாள். ஆனால் உறவி னர்களின் தடையைப் பற்றி மிகக் கவலை கொள்கிறாள் குறித்த இடத்தில் தலைவன் வரவில்லை என்றாலோ, தாமதமாக வந்தாலோ தலைவி அவன்வரவிற்காகக் காத்திருந்து அடைந்த துயரத்தைத் தோழி விவரிக்கிறாள். தலைவனிடமும் தலைவியிடமும் அவர்கள் காதல் பற்றிப் பேசத் தகுந்த நேரம் வரும்வரை காத்திருக்கிறாள்.

தலைவியிடமிருந்து செய்தியை எடுத்துக்கொண்டு போய்த் தலைவனிடம் கூறுவது அவள் கடமை.

தலைவியைப் பிரிந்து சிறிது காலம் செல்ல வேண்டுமென்று கூறு கின்றபோது அவனுக்கு அவள் அறிவுரை பகர்கின்றாள் தலைவியின் வாழ்க்கையோடு விளையாட வேண்டாவென்றும் அவனுக்குக் கூறுகிறாள். அவள் பேச்சிலே நம்பிக்கையற்றுத் தலைவி வருந்தும் போது ஆறுதல் கூறுகிறாள். காவல் கடுமையாக இருப்பதால் தனியிடத் தில் யாரும் அறியாவண்ணம் தலைவியைச் சந்திப்பது அரிது என்று அவனிடம் கூறுகிறாள். தலைவனின் குடிப்பிறப்பு, பெருந்தன்மை முதலியன பற்றி அவனுக்கு நினைவுகூரச் செய்து விரைவில் திருமணம் செய்ய வேண்டுகிறாள். இருவரும் உடன்போக்கில் செல்வது எவ்வளவு கடினம் என்பது பற்றி அறிவுரை கூறுகிறாள்.

நற்றாயும் செவிலித்தாயும் கேட்டபோது அவர்கள் காதல் உலக வழக்கத்திற்கு மாறுபட்டதன்று என்று கூறுகிறாள். வேலனிடம் தலைவி அழைத்துச் செல்லப்படும்போது தோழி சாமர்த்தியமாகக் கூறி அவர்கள் காதலை வெளிப்படுத்துகின்றாள். பெற்றோர் தலைவியை அவனுக்கு மணம் முடித்துத்தர மறுத்தால், பாதுகாப்பான இடத்தில் தலைவியை அழைத்துச் செல்லுமாறு அறிவுறுத்துகிறாள் வேறு இடத்திற்குச் செல்ல எல்லா உதவிகளையும் செய்கிறாள். பெற்றோர் மணத்திற்கு ஒப்புதல் அளித்தால் இச்செய்தியைத் தோழியே சென்று தலைவனிடம் தெரிவிக்கின்றாள். வழியில் அவர்கள் சந்திக்க நேரும் இடங்களைப் பற்றி இருவருக்கும் கூறுகிறாள். தன் பெற்றோரறியாமல் தலைவி சென்று விட்டாளே என்று செவிலி அழும் போது, தோழி தன் தாய்க்கு ஆறுதல் கூறுகிறாள். தலைவனைப் பற்றிப் புகழ்ந்தோ, கேலி செய்தோ பேசும் உரிமை தோழிக்குண்டு.

## செவிலித்தாய்

பெற்ற தாயைக் காட்டிலும் தலைவியிடம் நெருக்கம் உடையவள் செவிலி, குழந்தைப் பருவ முதல் உடனிருந்து ஊட்டி வளர்த்துப் பண்பாட்டினைக் கற்றுக் கொடுத்தவள் செவிலியே. வளர்ந்த பின்னும் தலைவி செவிலியுடனே உறங்குவாள். எனவே, தலைவனுடன் தலைவி உடன்போனாள் என்றறிந்து செவிலி அதிகமாக வருந்துகிறாள். பெற்றதை விட வளர்த்த பாசமே பெரிது என்பர். வழியில் அவளுக்குத் பாதுகாப்பும் பிற்கால வாழ்க்கை இன்பமாய் அமைய வேண்டுமென்ற கவலையும் செவிலிக்கு மிகுதி. தன் மகளைத் தலைவன் கொடுமைப் படுத்தக் கூடாது என்ற கவலை அவளுக்குண்டு. தன் மகளைப் போலவே தலைவியை அவள் கருதுகிறாள். தலைவியை நோய் தீர்க்க அவள் வேலனிடம் செல்கிறாள். தன்னைத் தேற்றிக்கொள்ளச் சகுனம் பார்க்கிறாள். தலைவியைத் தேடி வேறு ஊர்க்குப் செலலு மளவிற்குத் துணிகின்றாள்.

தலைவியிடம் மாற்றங்கள் இருப்பின் உன்னிப்பாகக் கவனிக்கிறாள். அதிக நட்புறவோடு தலைவியுடன் பழகும் உரிமை யுடையவள் இவள். தலைவனும் தலைவியும் சேர்ந்திருப்பதை அறிந்தால் கண்டிக்கிறாள். தலைவி வழக்கத்திற்கு மாறாகக் குழம்பி யிருந்தால் செவிலி அமைதியின்றித் தவிக்கிறாள். தலைவியுடன படுக்கும் உரிமைபெற்ற செவிலி, சிலநேரங்களில் தன் காதலைப் பற்றித் தலைவி தூக்கத்தில் உளறுவதைக் கொண்டு அவள் காதல் நடவடிக் கைகளை அறிந்து கொள்கிறாள். தலைவனோடு உடன்போக்குச்

தலைவியிடம் மாற்றங்கள் இருப்பின் உன்னிப்பாகக் கவனிக்கிறாள். அதிக நட்புறவோடு தலைவியுடன் பழகும் உரிமையுடையவள் இவள். தலைவனும் தலைவியும் சேர்ந்திருப்பதை அறிந்தால் கண்டிக்கிறாள். தலைவி வழக்கத்திற்கு மாறாகக் குழம்பியிருந்தால் செவிலி அமைதியின்றித் தவிக்கிறாள். தலைவியுடன் படுக்கும் உரிமைபெற்ற செவிலி, சில நேரங்களில் தன் காதலைப் பற்றித் தலைவி தூக்கத்தில் உளறுவதைக் கொண்டு, அவள் காதல் நடவடிக்கைகளை அறிந்து கொள்கிறாள் தலைவனோடு உடன்போக்குச் சென்றாள் என்பதற்காக வருந்தினாலும் அவள் தன் கற்பைக் காத்துக் கொண்டதற்காகப் பெருமையுறுகிறாள். தலைவனின் குடிப்பிறப்பு முதலியவற்றைத் தலைவியின் குடிப்பிறப்பு முதலியவற்றோடு ஒப்பிட்டு அவன் தகுந்தவன்தானா என ஆராய்கிறாள். செவிலிதான் தலைவியின் பெற்றோர்க்குத் தலைவியின் காதல் நிலைகளை அறிவிக்கிறாள்.

## பாங்கன்

தலைமக்கள் காதல் வாழ்வில் பெரும்பங்கு வகிக்கும் மற்றொரு பாத்திரம் பாங்கன். உரையாசிரியர்கள் கூற்றுப்படி பெரும்பாலும் இவன் ஓர் அந்தணனே. தலைவியிடம் செல்வதைப் பற்றி இவன் முதலில் ஊக்கமூட்ட வில்லை. ஓரிரண்டு முறை மட்டுமே இவன் தலைவனுக்கு உதவுகிறான். காதலர்கள் தனியிடத்தில் சந்திப்பதை ஒருபொழுதும் இவன் ஏற்றுக் கொள்வதில்லை. ஆனால் தலைவன் அவ்வாறு சந்திப்பதைத் தொடர்ந்தால் அமைதி யடைகிறான்.

## பார்ப்பார்

இவர்கள் களவொழுக்கத்தின்போது சிறு பாத்திரங்களாக வருவர். இவர்கள் கூட்டமாகச் செயல்படலாம். உடன்போகும் வழியில் சந்திக்கும் பயணிகளாக இவர்கள் இருப்பர். வழியில் வரவிருக்கும் ஆபத்துகளைப் பற்றித் தலைவனிடம் எடுத்துரைப்பர். பக்கத்தில் உள்ள ஊரில் தங்கிச் செல்லுமாறு அவர்களுக்கு அறிவுரை வழங்குவர். தேடிவரும் செவிலியைக் கண்டால் ஆறுதல் கூறி, வழியில் உள்ள இடர்களை எடுத்துச்சொல்லி வீடு திரும்புமாறு செய்வர். நீண்ட தூரத்தைக் காதலர்கள் கடந்து விட்டனரென்றும், அவர்களை அவள் கண்டுபிடிப்பது இயலாது என்றும் அறிவிப்பர்.

## திருக்கோவையாரில் ஒரு நாடகக் காட்சி

ஒருவரும் இல்லாத காடு. தலைவனும் தலைவியும் மட்டும் போயினர். அவன் ஓர் ஆணழகன்; அவளோ கட்டழகி. பெற்றோர்

கொடுக்க மறுத்ததால் அவர்களுக்குத் தெரியாமல் காதலனோடு அவன் ஊருக்குப் புறப்பட்டாள். வீட்டை அடைந்து விட வேண்டும் என்ற எண்ணம். வழியில் அந்தக் கொடுங் கானகத்தைக் கடக்க வேண்டியிருந்தது.

ஒருவர் மீது ஒருவருக்கு மயக்கம். அவன், அவள் செல்லும் போது வைத்த கண் வாங்காமல் அவள் அழகையெல்லாம ஆரப் பருகினான். முன்னழகைக் கண்டு மகிழ்ந்தவன் பின்னழகையும் ஒருவாறு பார்க்கலுற்றான். அந்த மயிலனையாளின் அன்ன நடை அவன் கண்களுக்குப் பெருவிருந்தாக அமைந்தது. அவளை அன்பு மிகுந்த சொற்களைக் கூறித் தழுவிய வண்ணம் நடத்திச் சென்றான்.

அவன் அடிக்கடி தன் தோளின் பின்னாகப் பார்வையைச் செலுத்தித் தன் பின்னழகைப் பார்ப்பது அவளுக்கு வெட்கமாக இருந்தது. அவளும் அவனழகைப் பார்த்தும் பாராமலும் மேகத்தைக் கண்ட மயிலெனக் களித்து நோக்கிக் கொண்டே நடந்து வருகிறாள் அவனது பின்தோற்றப் பொலிவையும் விரைந்து செல்லும் நடையழகையும் பருகும் வேட்கையால் அவளும் அவனுக்குச் சற்றுப் பின் வாங்கினாள். இருவரும் தாம் செய்வது இன்னதென்று உணராமலே அவ்வாறு பின்தங்கி நடக்கலாயினர்.

பொழுது மயங்கும் அந்தி வேளை; விரைவில் இருள்வந்து சூழ்ந்து விடும். அதற்குள் அருகிலுள்ள ஏதாவது ஓர் ஊர்போய்ச் சேர வேண்டும். ஆனால் அவர்களோ பின்வாங்கி நடப்பதில் போட்டி போட்டுக் கொண்டு நின்றனர். இவர்கள் எங்ஙனம் சுரத்தைக் கடக்கப் போகிறார்கள்!

நல்ல செழுமையான தாமரை மலரில் குடைந்து குடைந்து இனிய மதுவைக் குடித்த வண்டு கிறங்கி மயங்கிச் சுற்றிச் சுழன்று அம்மலரை விட்டுப் போகாமல் அதிலேயே ஆடிப்பாடி அயர்ந்து மயங்கி நிற்பது போன்ற நிலைதான் அவர்களின் நிலை. அவர்களின் கண்கள் வண்டுகள் ஆயின. ஒருவர்க்கொருவர் செந்தாமரை மலர்கள் ஆயினர். அவர்களின் அழகு அத்தாமரை மலர்களின் தேன் ஆயிற்று. வண்ணத் தாமரையைக் கண்டால் வண்டு மதுர ராகம்பாடிக் கொண்டு வருவதும், அதில் விழுவதும், பின் எழுவதும் ஆக இவ்வாறே மயங்கிக் கிடக்கும். அது போன்றமைந்தது அக்காதலர்களின் செயல்.

இவ்வாறு இணைந்து செல்லும் இவ்விருவரையும் சுரத்தில் கண்ட இருவர் பேசிக் கொள்கின்றனர் :

ஒருவர் : இதோ, போகின்ற நம்பியையும் நங்கையையும் கூர்ந்து நோக்குங்கள். நங்கை முன்னே செல்ல ஆடவன பின்னே அவன் அழகைப் பருகியபடியே செல்கிறான் இப்போது பாருங்கள்; நம்பி முன்னே செல்கிறான்; நங்கை அவன் பின்னே அவனது ஏறுபோன்ற பீடு நடையையும் தோளழகையும் கண்டு, களித்து நடக்கிறாள்.

மற்றவர் : ஆம்; நடையே ஒரு தனி அழகு! அவர்கள் இப்பாலை நிலத்தைக் கடந்துபோகும் கருத்துடையரல்லர்போலும்! தம்முள் ஒருவரை ஒருவர் கண்டு, அழகை மாந்தி மகிழவே இந்தப் பாலை நிலத்தைத் தேடி வந்திருக்கிறார்கள். இப்படியே சென்றால் புறப்பட்ட இடத்திற்கல்லவா சென்று சேர்வார்கள்?

முதலாமவர் : ஆம், அவர்கள் ஒருவரையொருவர் கண்டு மகிழ்வது ஒருபுறமிருக்க, அவர்கள் மாறிமாறிச் செல்லும் செலவையும், அவர்தம் பேரழகையும், அவர்களின் ஆனந்தத்தையும் காண்கிற நமக்கு ஒரு நாடகம் காண்பது போன்ற மகிழ்ச்சி மேலிடுகிறதே! இதைவிடச் சிறந்த நாடகக் காட்சி வேறு ஒன்று உலகத்திலுண்டோ? இஃது ஒரு நல்ல நாடகக் கூத்து!

> ''அன்பனைத் தஞ்சொல்லி பின்செல்லு மாடவ
> னிடவன்றன்
> பின்பனைத் தோளி வருமிப் பெருஞ்சுரஞ் செல்வதன்று
> பொன்பனைத் தன்ன விறையுறை தில்லைப்
> பொலிமலர்மேல்
> நன்பனைத் தண்ணற வுண்ணளி போன்றொளிர்
> நாடகமே''10

என்பது இந்நாடகத்தை உணர்த்தும் திருக்கோவையார்ப் பாடல். இதனோடு ஒத்த ஒரு பழம்பாடல் இத்தகையதொரு நாடகக் காட்சியாக அமைந்து வருகிறது. அது :

> ''காண்பா னவாவினால் காதலன் காதலிபின் நடவாநிற்ப
> நாண்பா லளாதலால் நன்னுதல் கேள்வன்பின் நடவாநிற்ப
> வாண்பான்மை குன்றா வயில்வே லவன்றனக்கும் அஞ்
> சொலாட்கும்
> பாண்பால வண்டினமும் பாட வருஞ்சுரமும்பதி
> போன்றதன்றே''11

என்பது.

இங்ஙனம் திருக்கோவையார்ப் பாடல்களும் திருவிருத்தப் பாடல்களும் பழந்தமிழ் மரபில் பாத்திரங்களைப் பெற்று விளங்குவதோடு, நாடகப் பாங்கு மிக்கனவாகவும் அமைந்து 'கற்பார்க்கு இன்பம் தருகின்றன.

# 2. உயிரினமும் பயிரினமும்

## அ. விலங்கினம்

உயிரினங்களுள் பல தலைவனுக்கும் தலைவிக்கும் உவமைகளாய் வருகின்றன. சிலவிடங்களில் அவற்றின் பண்புகளும் விளக்கப் படுகின்றன.

ஆளி என்பது புலியன்று; சிங்கமுமன்று. ஆளி என்னும் சொல் பிற்கால இலக்கிய ஆட்சிக்கு முரண்பட்ட வகையில் சிங்கத்தைக் குறிக்கிறது. பின்னைய இலக்கியங்களில் ஆளி என்ற சொல் சிங்க உடலும் ஆனைத் துதிக்கையும் கொண்டதாக வரும் புராணக் கதையின் விலங்கைக் குறிக்கிறது.12

சிங்கத்தைப் பற்றிய விளக்கம சங்க இலக்கியத்தில் கிடையாது. செவிவழிச் செய்தியாகவே அவர்கள் அறிந்திருந்தனர். ஆனால் ஆளியைப் பற்றி விளக்கமாகச் சங்கப் புலவர்கள் பாடியுள்ளனர். பிற்காலத்தில் ஆளியினுருவம் கோயிற் சிலைகளில் காணப்படுகிறது. இஃது உண்மையான விலங்கைக் காட்டாது; கலப்பான கற்பனை 'விலங்காக (Hybrid Animal) உள்ளது. இது நிகண்டுகளில் 'அத்தியாளி' என்று கூறப்படும்.13

> ''நனந்தலைக் கானத் தாளி யஞ்சி
> இளந்தலைத் தருஉம் எறும்கிளர் முன்பின்''14

என்பது ஆளி அஞ்சத்தக்க விலங்காகச் சுட்டிக் காட்டுகிறது.

இந்த ஆளியைக் கண்டு புலி அஞ்சி நடுங்குவதாகவும், புலி இரைக்காக அடித்துக் கொன்ற களிற்றியானையை ஆளி பறித்துச் செல்லும் என்றும் அகநானூறு கூறுகிறது:

> ''இடம்படுபு அறியா வலம்படு வேட்டத்து
> வாள்வரி நடுங்கப் புகல்வந்து ஆளி
> உயர்நுதல் யானைப் புகர்முகத் தொற்றி
> வெண்கோடு உய்க்கும் தண்கமழ் சோலை '15

ஆளி, யானையின் கொம்பைப் பிடுங்கிக் குருத்தைத் தின்னும் என்பதை

"ஆளி நன்மான் அணங்குடை யொருத்தல்
மீளி வேழத்து நெடுந்தகை புலம்ப
ஏந்தல் வெண்கோடு வாங்கிக் குருத்தருந்தும்"16

என்னும் பாடல் தெரிவிக்கிறது.

"அருவி ஆர்க்கும் பெருவரை அடுக்கத்து
ஆளி நன்மான் வேட்டெழு கோளுகிர்ப்
பூம்பொறி உழுவை தொலைச்சிய வைந்நுதி
ஏந்து வெண்கோட் டியானை வயக்களிறு இழுக்கும்
துன்னரு நனந்தலை என்னாய் நீயே"17

என்னும் பாடலும் ஆளியின் செயலை அறிவுறுத்துகிறது.

ஆளிகள் கூட்டங் கூட்டமாக மலையில் குறுக்காகத் திரிந்தபடி இருக்கும். இவ்வாளிகளுக்கு அஞ்சிய ஆனைகள் குகைக்குள் தங்கிக் கிடக்கும்.18

'வேழத்தின் வெண்மருப்பினைக் கீழ்த்து சிங்கம் குருத்தினை உண்ணுங்கால் முத்துக்கள் தந்தங்களினின்றும் உதிரும்' என்று திருஞான சம்பந்தர் பாடுகிறார்.19 இங்கு ஆளிக்குப் பதில் சிங்கத்தைக் கூறியுள்ளாரோ என்று எண்ணத் தோன்றுகிறது.

யானைகள் சிங்கத்திற்கும் யாளிக்கும் அஞ்சிக் கூட்டமாகவே இருக்கும்; இரை தேடிச் செல்லக்கூடப் பயப்படும்.

ஆளிகள் திரையாக வந்து இரவில் உணவுக்காக யானையைத் தேடுவது உண்டு. இவற்றை,

"ஆளி நிரைத்தட லானைக டேரு மிரவில்"20
"குழிகட் களிறு வெரீஇயரி யாளி குழீஇவழங்காக்
கழிகட் டிரவின்"21

என்னும் திருக்கோவையார்ப் பாடலடிகளால் உணரலாம்.

## சினப்புலி

புலியின் பெருமிதத்தைப் பற்றிச் சங்கப் புலவர்கள் கூறியதில் பெரிதளவு உண்மையுண்டு. அடர்ந்த காட்டில் புலியைப் போன்று எவரையும் மதியாது தானே அரசன் என்று கருதும் விலங்கு வேறு எதுவுமில்லை என்பதை விலங்குநூல் உணர்த்துகிறது. விலங்குகளுக்கு அரசு என்று கருதப்படும் சிங்கம் கூடப் புலியைப் போன்று பெருமிதமும் துணிவும் உடையதன்று என்பர்.22 புலி தாக்கினால் களிறும் அஞ்சும் என்பதனை,

> ''பரியது கூர்ங்கோட்ட தாயினும் யானை
> வெரூஉம் புலிதாக் குறின்''23

என்னும் குறளால் அறியலாம். யானை மிகவும் பலம் பொருந்திய விலங்காயினும் புலி அதனைத் தாக்குவதுண்டு. புலியைக் கண்டு யானை அஞ்சும் இயல்புடையது. ஆனால் தனக்கோ, தன் கன்று களுக்கோ புலி தீங்கு செய்வதைக் கண்டால் யானை தற்காப்புக்காகப் போரிடும். பெண்யானை கூடத் தும்பிக்கையால் புலியைத் தூக்கி எறிந்தோ, காலால் மிதித்தோ கொன்றுவிடும். ஆண்யானை தன் கொம்புகளால் குத்திப் புலியைக் கொல்லும்.24

புலியை வேடர்கள் கொன்று அதன் பல்லைத் தாலியாகச் செய்து தம் மாதர்களுக்கு வீரத்தின் அறிகுறியாக அணிந்தனர் என்பதை

> ''போதிற் பொலியுந் தொழிற்புலிப் பற்கூற் பொற்றொடியே''

25 என்னும் திருக்கோவையார்ப் பாடல் தெரிவிக்கிறது.

கொடிய வாயினையுடைய புலி காட்டுவழியே சென்ற தலைவனை நோக்கி வாய்பிளந்தது. தலைவனோ அதுகண்டு அஞ்சாது அதனைத் தன் வேலால் குத்திக் கொன்றான். இக்காட்சியை,

> ''தீவா யுழுவை கிழித்தந் தோசிறி தேபிழைப்பித்
> தாவா மணிவேல் பணிகொண்ட வாறின்றொ
> ராண்டகையே''26

என்று பாடுகிறது திருக்கோவையார். இது நடுங்க நாட்டம்.

## வெங்கரடி

கறையான் புற்றைக் கரடிகள் விரும்பித் தோண்டுவதையும் அழிப்பதையும் சங்க நூல்கள் கூறுகின்றன.

> ''நாளுலா எழுந்த கோள்வல் உளியம்
> ஓங்குசினை இருப்பைத் தீம்பழம் முனையின்
> புல்லளைப் புற்றின் பல்கிளைச் சிதலை''27

என்றும்,

''கூனல் எண்கின் குறுநடைத் தொழுதி
சிதலை செய்த செந்நிலைப் புற்றின்
மண்புனை நெடுங்கோடு உடைய வாங்கி
இரைநசைப் பரிக்கும் அரைநாட் கங்குல்''28

என்றும்,

''மின்மினி மொய்த்த முரவுவாய்ப் புற்றம்
பொன்னெறி ந்திரிற் சுடர வாங்கிக்
குரும்பி கெண்டும் பெருங்கை ஏற்றை' 29

என்றும் அகநானூறு கரடியைப் பற்றிப் பலவாறு குறிக்கிறது. அகம்149 247, 307 பாடல்களிலும், நற்றிணை 325, 336, பாடல்களிலும் கரடி புற்றாஞ்சோறு தின்னுதல் கூறப்பட்டுள்ளது. கரடிகள் கறையான் புற்றை உடைத்து அதற்குள்ளிருக்கும் இரையை உறிஞ்சி உண்ணும் என்று விலங்குநூலார் கூறுவர். 30 கரடிகளுக்கு மிகவும் விருப்பமான உணவு புற்றில் வாழும் கறையான்களும், இலுப்பை மரத்தின் பூக்களுமே ஆகும்.31

இக்கரடி பற்றித் திருக்கோவையார்

வஞ்சியி னெண்கு வளர்புற் றகழமல்கு மிருள்வாய்''32

என்று குறிப்பிடுகிறது. 'தனக்கு உணவு காரணமாகக் கரடியானது மிக்க புற்றை அகழும்படி செறிந்த இருள்' என்பது இதன் பொருள்.

## பன்றி

மிக்க சினமுற்ற போது பன்றி புலியோடு பொரும்.
''சிறுகட் பன்றி இரும்புலி பொரூஉம்''33 என்கிறது ஐங்குறுநூறு.

பன்றி வீரத்திற்குப் பெயர் போனது. தன் துணையையும் குட்டிகளையும் காத்துக் கொள்ள வல்லது. வேடர்கள் சிலர் ஒரு பன்றியைத் துரத்துகின்றனர். அவர்களின் வேட்டைநாய் பன்றியின் மீது பாய்கிறது. பன்றி அதனை வீழ்த்தி, வேடர்கள் தன்னை நெருங்கி வாராமற் காத்துத் தன் துணையோடும் குட்டிகளோடும் காட்டை நீத்து, மலைக்குகைக்குச் சென்று, அதன் வாயிலில் வேடர்கள் இங்கும் வருவார்களோ என்று எதிர்பார்த்து நிற்கிறது. வில்லில் தொடுத்த அம்பொடு வந்த வேடன் அதன் நிலைகண்டு தன் தலைவனைப் போல அது விளங்குகிறது என்று கருதி வியந்து அம்பு எய்யாது திரும்புகின்றான். இஃது அகநானூற்றுக் காட்சி.34

மாணிக்கவாசகர் வேட்டைக்குச் செல்பவர்களைக் குறிக்கும் போது, அவர்கள் யானை, பன்றி ஆகியவற்றை வேட்டையாடுபவா என்கிறார்.35

## யானை

ஆண்யானை பருவத்தை அடையும்போது மதம் உண்டாகிறது கண்ணிற்கும் வாயிற்கு மிடையிலுள்ள சில சுரப்பிகளிலிருந்து (glands) மதம் பொழியத் தொடங்குகிறது. மதநீர் பசுமையாகப் பிசின் போன்று இருக்கும்; கன்னத்தில் பாய்ந்து வாய்க்குள்ளும் வரும்.

''வாய்புகு கடாஅத்து''36

என்று சங்க நூல் இதனைக் குறிக்கிறது.

கண்ணயற பிறந்த கவுளிழி கடாஅத்து''37.

என்று பெருங்கதை என்னும் நூல் கன்னத்தில் இழிந்து வரும் மதநீரைப் பொருத்தமுறக் கூறுகிறது. யானை ஏன் மதம் பொழிகிறது என்பது இதுவரை தெளிவாகக் கண்டுபிடிக்க முடியவில்லை.

''வரிஞிமி றார்க்கும் வாய்புகு கடாஅத்துப்
பொறிநுதற் பொலிந்த வயக்களிற் றொருத்தல்
இரும்பிணர்த் தடக்கையின் ஏமுறத் தழுவக்
கடுஞ்சூல் மடப்பிடி நடுங்குஞ் சாரல்''33

என்று அகநானூறு கூறுகிறது. யானையின் மதம் நாறுவதாகவும், வண்டுகள் அந்த நாற்றத்தால் மொய்ப்பதாகவும் கூறியுள்ளது காணத் தக்கது. மாணிக்க வாசகரும் யானையின் மதநீரில் வண்டுகள் வந்து மொய்க்கும் என்கிறார்.

''ஒருங்களி யார்ப்ப வுமிழ்மும் மதத்திரு கோட்டொருநீள்
சுருங்களி யார்மத யானையுண் டோவரக் கண்டதுவே''39

என்பது திருக்கோவையார். மேலும் பல இடங்களில் யானையைப் பற்றிப் பாடிச் செல்கிறார் மாணிக்கவாசகர்.

சிங்கத்திற்கும் யாளிக்குமஞ்சி ஓரிடத்தே யானைகள் கூட்டமாகக் கூடிப் புறத்தே செல்லாது நிற்கும்.40 சிங்கம் ஆண்யானையைக் கொல்லாதபடி பெண்யானை இடையே சென்று நிற்கும்.41

யானையின் தந்தத்திலிருந்து விழுகின்ற முத்துக்களை மலை மகளிர் எடுத்துக்கொடுத்து அதற்கு ஈடாகக் கள்ளைப் பெறுவர்.42

யானையின் தசையை உண்ணவேண்டிப் பல சிங்கங்கள் இருளில் ஆங்காங்கே திரிந்து தேடிப்பார்க்கும்.43 யானையின் துதிக்கை பனைமரத்தைப் போன்றது.44 அதன் உருவமோ மலை போன்றது.45 யானை குத்துக்கோலைக் (அங்குசம்) கண்டவுடனே வெகுளும்.46 மூன்று மதங்களையும் இரண்டு தந்தங்களையும் உடையது நீண்ட கரிய யானை.47 யானையைப் பற்றிக் குறிப்பிடும் மாணிக்கவாசகர் அதற்கு மும்மதம் (கன்ன மதம், கபோல மதம், பீச மதம்), நால்வாய் (தொங்கும் துதிக்கை), சிறிய கண்கள், குறைந்த செவிகள், செவ்விய முகம் ஆகியன உண்டு என்கிறார்.48

வழியல்லா வழியில் சென்றதால் சேற்றில் அகப்பட்ட ஆண் யானையை மீட்பதற்குப் பெண்யானை மரத்தை முறித்துக் கொடுத்துப் பிளிறும். இதனை மாணிக்கவாசகர்,

"களிறுற்ற செல்லல் களைவயிற் பெண்மரங்
கைகளிற்பெயர்த்துப்
பிளிறுற்ற வானப் பெருவரை"49

என்று கூறுகிறார். 'பெண்யானை மரத்தை முறித்துக் கொடுத்துத் தான் பற்றி வலிக்கவும் வாராதபடியாலே' வருந்திப் பெருங்குரல் எடுத்து பிளிறும் என்னும் பழையவுரை ஈண்டு நினைத்து மகிழத்தக்கது.

குறவர் வாழும் இடத்திற்கு வேலியாக யானையின் எலும்புகள் நடப்பட்டு உள்ளன.50

திருக்கோவையாரில் மிகுதியான அளவிற்கு மாணிக்கவாசகரால் குறிக்கப் பெறுகின்ற உயிரினம் களிறு அல்லது யானை என்பது இங்குக் கருதத்தக்கது.

## சிங்கம்

சங்கப்புலவர்கள் சிங்கத்தைப் பற்றி யாதொரு செய்தியும் கூற வில்லை. ஏனெனில் சிங்கம் அடர்ந்த காடுகளில் காணப்படும் விலங்கன்று.51

மாணிக்கவாசகர் சிங்கத்தைப் பற்றித் தம் பாடல்களில் குறிப்பிட்டு இருக்கிறார்.

"நாட்டம் புதைத்தன்ன நள்ளிருணாக நடுங்கச்சிங்கம்
வேட்டம் திரிசரி வாய்வருவான்சொல்லு மெல்லியலே"52

என்றும்,

"முழங்கா ரரிமுரண் வாரண வேட்டைசெய் மொய்யிருள்வாய்
வழங்கா வதரின்"53

என்றும் யானையை வேட்டையாடித் தின்பதற்காகச் சிங்கங்கள் இருளில் வழிபார்த்துத் திரியும் என்றும் கூறுகிறார் மாணிக்கவாசகர்.

## ஏறு

கன்யாசுல்கமாக விட்ட காளையை அடக்குபவர்க்கு முற்காலத்தில் கன்னியரைக் கொடுத்து மணம் செய்விப்பார்கள். கண்ணன் நப்பின்னையை மணம்புரிய அவருக்கெனக் கன்யாசுல்கமாக விட்டிருந்த அசுராவேசம் கொண்ட ஏழு எருதுகளை அடர்த்து நப்பின்னையை மணம் செய்து கொண்டான். கண்ணன் ஏற்றினை அடக்கிக் கோட்டிடையே நடனம் ஆடினான் என்கிறது ஆழ்வாரின் திருவிருத்தப் பாசுரம் 54

"கொல்லேற்றுக் கோடஞ்சு வானை மறுமையும்
புல்லாளே ஆய மகள்"55

என்கிறது கலித்தொகை.

தலைவியின் தமையன்மார் காளையினது கொம்புகளைச் சீவி விட்டிருக்கிறார்கள். தோழி இதனைக் கூறவும், தலைவன் காளையை வேறு எவரேனும் அடக்கி விடுவரோ என்று அஞ்சுகிறான். ஆனால் தோழி "அவ்வாறு நடவாது காளை இறைவனருளால் வந்தது. சிவனருள் பெற்ற நீ மட்டுமே அடக்க முடியும்" என்கிறாள். இதனை மாணிக்கவாசகரின்

"படையார் கருங்கண்ணி வண்ணப் பயோதரப் பாரமுநுண்
இடையார் மெலிவுங்கண் டண்டர்க ளீர்முல்லை
வேலியெம்மூர்
விடையார் மருப்புத் திருத்திவிட் டார்வியன் றென்புலியூர்
உடையார் கடவி வருவது போலு முருவினதே"56

என்னும் திருக்கோவையார்ப் பாடல் தெரிவிக்கிறது.

## மான்

தலைவி மடப்பம் உடைய மானின் விழி போன்ற விழியினைப் பெற்றுள்ளாள்.57

திருக்கோவையாரில் வரும் தலைவன், "என் கணையொன்றால் பெரிதும் புண்பட்டு வருந்தும், தலைவியின் கண்போன்று கண் பெற்ற, ஒரு கலைமான் இங்கு வந்ததுண்டோ?"58 என்று வினவுகிறான்.

## வானரம்

வானரங்கள் மந்திகளுக்கு மாம்பழத்தையும் பலாப்பழச் சுளை களையும தேனில் தோய்த்து அவற்றின் வாயில் கொடுத்து மிகவும் மகிழ்வதாகக் கூறுகிறார் மாணிக்கவாசகர்.

"பந்தியின் வாய்ப்பல வின்சுளை பைந்தே னொடுங்கடுவன்
மந்தியின் வாய்க்கொடுத் தோம்பும்"59

என்றும்,

"வான்தோய் பொழிலெழின் மாங்கனி மந்தியின் வாய்க்கடுவன்
தேன்தோய்த் தருத்தி மகிழ்வ கண்டாள்"60

என்றும் மாணிக்கவாசகர் பாடுகிறார். இதனை அடிபொற்றித் திரிகூட ராசப்பக் கவிராயர் தம் குற்றாலக் குறவஞ்சியில்,

"வானரங்கள் கனிகொடுந்து மந்தியொடு கொஞ்சும்
மந்திசிந்து கனிகளுக்கு வான்கவிகள் கெஞ்சும்"61

என்று கற்பனைநயம்படப் பாடுகின்றார்.

வாழைத் தோட்டம் ஒன்றன் நடுவே ஒரு பலாமரம். அதில் பலாப்பழங்கள் பழுத்துத் தொங்குகின்றன. அந்தப் பலாப் பழங்களி லிருந்து விழுகின்ற தேனை இளமந்திகள் பருகுகின்றன. அதன் சுவை மிகுதியால் அவ்விளமந்திகள் நிறையக் குடித்து விடுகின்றன. போதைக் களிப்புப் பொங்குகிறது. மந்திகள் தள்ளாடித் தள்ளாடிச் சோர்ந்து விழுகின்றன.62 மது குடித்த மனிதனின் நிலையை மந்திகள் பெறுகின்றன.

இன்னோரிடத்தில் வேறுவிதமான மயக்கம். மிளகுகொடி படர்ந் திருக்கிறது; அதிலிருந்து பச்சை மிளகைப் பின்விளைவு அறியாமல் மந்திகள் தின்று காரம் ஏறியதால் மயக்கம் கொண்டு தளர்ந்து விழ்கின்றன. இதனை,

"வளருங் கறியறி யாமந்தி தின்றுமம் மர்க்கிடமாய்த்
தளரும்"63

என்று பாடுகிறார் மாணிககவாசகர். பலாச்சுளையின் தேனை அதன் சுவை கருதி அறியாமல் உண்கின்றன மந்திகள்; ஆனால் மிளகு அழகாய்க் கொடியில் தோன்றியதால் அதில் மயங்கி அறியாமல் உண்கின்றன. மந்திகளின் மயக்கத்திற்குக் காரணம் அறியாமையே.

இளமந்திகள் சுரபுன்னை மாலையைச் சூடி. ஆண் குரங்குகள் தம்மைப் பார்க்கும்போது நாணுகின்றனவாம்.64 மந்திகள் புதிய ஒன்றை

அணிந்தபின் ஆண் குரங்குகள் அவற்றைக் காணும்போது தம்மை அடையாளம் காண்கின்றனவோ இல்லையோ என்று நாணம் கொள்கின்றன. தலைவன் தரும் கையுறையைத் தலைவியின் நாண் உரைத்து மறுக்கும் தோழி இவ்வியல்பு கூறி மறுக்கின்றாள்.

குரங்குகள் சிதறிக்கிடக்கும பாம்புமிழ்ந்த மாணிக்கங்களையும், கல்லிடைப் பிறந்த வைரங்களையும், கடலிடைப் பிறந்த முத்துக்களை யும் கையாலெடுத்துக் கீழே பந்தடிப்பது போல் வீணே அதன் அருமை அறியாமல் எறிந்து விடுகின்றன 65

மயிலின் முட்டையை ஓர் இளைய மந்தி எடுத்துப் பந்தாடி மகிழ்கின்றது.

"வந்தாய் பவரையில் லாமயின் முட்டை யிளையமந்தி
பந்தாடி ரும்பொழில்"

என்பது திருக்கோவையார்.

"உற்றதாராய்ந்து ஓம்புவாரில்லாத மயிலினது முட்டையால்
ஈன்ற வருத்தமறிறாத இளமந்தி, மயிலின் வருத்தமும்
முட்டையின் மென்மையும் பாராது பந்தாடுகின்றாற் போலக்
காதலரான் வினவப்படாத என் காமத்தை நீ
யிஃதுற்றறியாமையான் எனது வருத்தமும காமத்தினது
மென்மையும் பாராது, இவ்வாறுரைக்கின்றாயென
உள்ளுறை வகையாற் றோழியை நெருங்கி வன்புறை
யெதிரழிந்தவாறு கண்டு கொள்க"

என்று இதற்கு உரைவரைவர் பேராசிரியர்.

"கான மஞ்ஞை யறையீன் முட்டை
வெயிலாடு முசுவின் குருளை யுருட்டும்" 68.

என்று வரும் குறுந்தொகைப் பாடலடிகள் ஈண்டு ஒப்புநோக்கத் தக்கன.

குரங்குகள் வாழைத்தோட்டத்தில் புகுந்து வாழைக் கனிகளைப் பறித்துத் தின்று அதன் நிழலில் நிம்மதியாக உறங்குகின்றன. இதனை,

"எழுங்குலை வாழையின் கனி தின்றின மந்தியந் தண்,
செழுங்குலை வாழை நிழலிற் றுயில்" 69

என்று பாடுகிறார் மாணிக்கவாசகர்.

பசு வழிபாட்டிற்குரியது; புனிதமாகக் கருதப்படுவது. பாம்புக்குப் பால் வைத்தால் அது நஞ்சினையே தருகிறது; பசுவிற்கு நீர் வைத்தால் அது பாலாக மாறி மனிதஉயிரை வாழ வைக்கிறது. இத்தகைய பசுவை அக்காலத்தில் பாணர்கள் கொன்று இறைச்சியைத் தின்றனராம்.

"பொய்கொண்டு நிற்க லுற்றோபுலை ஆத்தின்னி
போந்ததுவே"70

என்று பாணனை மாணிக்கவாசகர் 'ஆத்தின்னி' என்றே பாடுகிறார்.

"கன்றுபெறு வல்சிப் பாணன்"71

என்று நற்றிணையும்,

"கன்று தின்னி புலையர்"72

என்று தஞ்சைவாணன் கோவையும் பாணனுடைய இவ்வியல்பைச் சுட்டிச் செல்கிறது.

## ஆ. புள்ளினம்

### அன்னம்

'அன்னம் மாலே மண்ணொடு கிளியே'73 என்னும் நன்னூல் சூத்திரத்தில் அன்னம் தலைமாணாக்கர்க்கு உவமையாக வருகிறது. 'பாலுண் குருகின் தெரிந்து'74 என்னும் நாலடியார்ச் செய்யுள் பாலையும் நீரையும் கலந்து வைத்தால் பாலைமட்டும் பருகவல்லது அன்னம் என்கிறது.

"தூவியம் பேடை யன்னாள்"75

என்பதால் சிறகுகளால் அழகு பெற்றது அன்னம் என்கிறார் நம்மாழ்வார். 'அனம் நடக்கும்'76 என்று பெண்ணின் நடையை அன்னத்திற்குரிய நடையோடு ஒப்புமைப் படுத்துகிறது திருக்கோவையார்.

அன்னங்கள் புன்னைமரத்தில் கூடு கட்டித் துயில்கொள்ளும் என்பதனை,

"பொன்னங் கலர்புன்னைச் சேக்கையின் வாய்ப்புலம்
புற்றுமுற்றும்
அன்னம் புலரு மளவுந் துயிலா தழுங்கினவே"77

என்னும் பாடலால் தெரிவிக்கிறார் மாணிக்கவாசகர்.

திருக்கோவையாரில் 'அன்னமோ டாய்தல்' என்னும் துறையில் அமைந்த பாடலில், பழனத்து அகன்றாமரை அன்னமே''78

என்று தலைவி தாமரையில் தங்கும் அன்னத்தை விளித்துப் பேசுவதாக பாடல் அமைத்துள்ளார் மாணிக்கவாசகர்.

"அஞ்சொல்இள மஞ்ஞையென அன்னமென''79

என்று சூர்ப்பநகையின் நடையைப் பற்றிக் கம்பர் வருணித்துள்ளமை ஈண்டு நினைக்கத்தக்கது.

## கருடன்

சகுனம் அறியத் துணை நிற்பது கருடன். அதனைப் பார்த்தாலும் நல்லது; அதன் குரல் கேட்டாலும் நல்லது. கருட தரிசனம் நன்மை பயக்கும் காலத்தைப் பஞ்சாங்கம் கூறும்.

கருடன் திருமாலின் வாகனமாக விளங்குவது; அது வட்டமிட்டுப் பறக்கும் இயல்புடையது. அதனால் திருவிருத்தம்,

"சாரிகைப் புள்ளர்''80

என்று திருமாலைப் பாடுகிறது.

கருடன் மிகுந்த கோபத்தையுடையது. திருவிருத்தம் கருடனின் இப்பண்பை,

"தழல்போல் சினத்த அப் புள்ளின்பின் போன தனிநெஞ்சமே''81

என்று குறிப்பிடுகிறது.

## மயில்

மயில் போலப் புடைபெயர்பவள் தலைவி என்கிறது திருக்கோவையார்.82

'மயில் மன்னு சாயல்'83 என்பதனால் பெண்ணின் சாயலுக்கு மயில் உவமையாக வருதலைக் காணலாம்.

மயில் பச்சோந்திக்குப் பயந்து ஒதுங்கி வெளியே புறபட்டுச் சென்று இரை கவராது. ஆனால் யானையைக் கொல்லவல்ல இராச நாகத்தையும் பிடித்துப் படத்தைக் கிழிக்கும் ஆற்றலுடையது.

"கோம்பிக் கொதுங்கிமே யாமஞ்ஞை குஞ்சரங் கோளிழைக்கும்
பாம்பைப் பிடித்துப் படங்கிழித் தாங்கு''84

என்பது திருக்கோவையார்.

விண்ணில் மேகங்களைக் கண்டால் மயில் தோகை விரித்து ஆடும். வேங்கைப் பொழிலில் துயில் கொள்ளும். மலர்கள் உள்ள இடங்களிலெல்லாம் மயிலினம் ஆடும்.85

## அன்றில்

பனைமரத்தின்கண் வாழும் இயல்பினது அன்றில். ஆணும் பெண்ணும் இணைந்தே வாழும் தன்மையுடையது. ஆண் அன்றில் பெண் அன்றிலோடு உறங்கும்போது கூட அலகோடு அலகு சேர்த்து வைத்துக் கொண்டுதான் உறங்கும் 83

கனத்த குரலையுடையதும் பிளந்த வாயினை யுடையதும் ஆகிய ஆண் அன்றில், மெலிவிய பெண் அன்றிலோடு பனைமரத்தில் விரும்பி வாழ்கிறது.85

## காக்கை

'காக்கை கரவா கரைந்துண்ணும்' என்கிறது குறள்.87
வெளியே சென்றவரை மீண்டு வரக் கரைய வேண்டும் என்று தாய் காக்கையை வேண்டுவாள் 88

''காக்கையே என் மகள் தன் காதலனோடு மீண்டு வருவதைக் குறிக்கும் வகையில் கரைந்திடுக. அவ்வாறு ஒலிப்பாயாயின் நீயும் நின் சுற்றமும் தினைத்துண்ண உணவு பொற்கலத்தில் படைப்பேன்''89
என்கிறாள் ஒரு தாய்.

காக்கை மூதேவியின் கொடியில் உள்ளது.90 அது சனிபக வானின் வாகனமாகவும் விளங்குவது.

காக்கை இரண்டு கண்களைப் பெற்றிருப்பினும் மணி யொன்றினால் மட்டுமே பார்க்கும்.91

> ''சித்திர கூடத்திருப்பச் சிறுகாக்கை முலைதீண்ட
> அத்திரமே கொண்டெறிய அனைத்துலகும் திரிந்தோடி
> வித்தகனே இராமாவோ நின்அபயம் என்றழைப்ப
> அத்திரமே அதன்கண்ணை அறுத்ததுமோர்
> அடையாளம்''92

என்னும் பெரியாழ்வாரின் பாடல் இந்திரன் மகன் செயந்தன் காக்கை யாக வந்து செய்த தீவினையையும், அதனாற் பெற்ற தண்டனையை யும் குறிக்கிறது. இதனையே கம்பர்,

> ''ஏக வாளி அவ்வித்திரன் செம்மல்மேல்
> போக வேவி யதுகண் பொடித்ததாள்

காக முற்றும் ஓர்கண்ணில் வாக்கிய
வேக வென்றியைத் தன்தலைமேற் கொள்வாள்''94
என்று பாடுகிறார். காக்கை யாமிசப் பலிச்சோறு உண்ணும்.94 குறி பார்க்கக் காக்கையைக் கூவி அழைப்பர் மக்கள்.95 வந்த காக்கைகளை எண்ணி இரண்டிரண்டாக வந்தால் எண்ணியது வெற்றி என்பர்.

## குயில்

குயிலின் குரல் மிகவும் இனிமையானது. குயில் போலச் சொற்களைப் பேசுபவள் தலைவி,

''குயிலெனப் பேசும்எம் குட்டன்''96
என்று தலைவியின் குரலினிமையைப் பாராட்டுகிறாள் செவிலி.

''குயில் மன்னு சொல்லி''97
என்று வேறோரிடத்தில் அவள் குரலினிமை பேசப்படுகிறது.

குயில்கள் தளிர் முதலியவற்றை இளவேனிற் காலத்தில் தின்று நாளுக்கு நாள் பருத்துக் கொழுப்பேறி நிறம் மிக்கனவாயின.

''கூழின் மலிமனம் போன்றிருளாநின்ற கோகிலமே''98
என்பர் மாணிக்கவாசகர்.

## சேவல்

முருகவேளுக்குக் கொடி சேவல்.99

பெட்டைக் கோழியையும் அதன் குஞ்சுகளையும் சேவலானது தன் சிறகு ஒன்றினால் ஒடுக்கிப் பனியினின்றும் அவற்றைப் பாது காக்கும் இயல்புடையது.100 அன்னச் சேவலும் இங்ஙனமே செய்யும்.

## வாவல் (வௌவால்)

வௌவால் விலங்கு நூற்படி பறக்கும் விலங்காகக் கருதப்படும். இது மற்ற பறவைகளைப் போல முட்டையிட்டு குஞ்சு பொரிப்பதில்லை. குட்டிகளைப் பாலூட்டி வளர்க்கிறது. வௌவால்கள் மாமரத்தின் பூவை விரும்பியுண்ணும். வேப்பம் பழத்தையும் இலுப்பைப் பழத்தையும் கூட அது விரும்பியுண்ணும் என்று சங்க நூல்கள் கூறுகின்றன.101

வௌவால் இரவில் இரைக்காகச் சென்று குறித்த திசையில் பறக்கும் இயல்புடையது. பகற்பொழுதில் பெரிய மரத்தில் தங்கும்.

"........சென்று இராத் திசைபோம்
பறவியல் வாவல் பகலுறை மாமரம் போலும்"[102]

என்று மாணிக்கவாசகர் வாவல் இரவுநேரத்தில் குறித்த திசையில் பறக்கும் இயல்புடையது என்று குறிப்பது சங்க நூல்களில் இல்லாத செய்தியாகும்.

## வண்டுகள்

பாணரை ஒக்கும் வண்டுகள் பாடத் தாதாகிய பசும்பொன் தருகின்ற போதாகிய வெண்கிழியைப் (சீலையை) பொழிலில் புன்னை கொடுக்கும்.[103]

"பாணிகர் வண்டினம் பாடப் பைம்பொன்றரு வெண்கிழிதம்
சேணிகர் காவின் வழங்கும் புன்னை"

என்பது அப்பாடல்.

"மல்லிகைப் போதின்வெண் சங்கம்வண் டூத"[104]

என்னும் பாடலில் மல்லிகைப் பூவினை வெண்சங்காகக் கொண்டு வண்டுகள் ஊதும் காட்சியைப் பாடுகிறார் மாணிக்கவாசகர். பெரியாழ்வாரும்,[105] புகழேந்தியாரும்[106] இதே கருத்தில் பாடல்கள் புனைந்துள்ளமை ஈண்டு நினைவிற் கொள்ளத்தக்கது.

வண்டின் கூட்டம் செந்தாமரையில் வாழும்; அதிலுள்ள தேனைப் பருகும்.[107] வண்டுகள் நீலமணி போன்றிருக்கும்.[108]

## இ) பிற உயிரினங்கள்

### நண்டு

நண்டு தன் பெடையின் வாயில் வண்டு போன்ற நாவற் பழத்தைக் கொடுக்கும்.

"...ஆங்கோ ரலவன்றன் சீர்ப்பெடையின்
வாய்வண்டனையதோர் நாவற் கனிநனி நல்கக்கண்டு"[109]

என்பது திருக்கோவையார்ப் பாடல்.

நற்றிணையில் வரும் பாடல் இங்கு ஒப்பிட்டு நோக்கத்தக்கது. அலைமோதும் கடற்கரையில் நாவற்பழங்கள் உதிர்ந்து கிடக்கின்றன. அவற்றைத் தன் இனம் என நினைத்து வண்டு மொய்க்கின்றது. வண்டினை நாவற் பழம் என நினைத்து நண்டு பற்றிக் கொள்கின்றது.

சிக்கிய வண்டு யாழோசை போல ஒலிக்கின்றது இந்த ஆரவாரத்திற் கிடையே நாரை இரை தேட வருகிறது நாரையைக் கண்ட நண்டு வண்டினை விட்டு ஓடுகிறது.110

## மீன்

நீருள்ள தடாகத்திலிருந்து மீன் ஒளிசெய்து நடனமாடினால் எப்படி யிருக்குமோ அப்படியிருக்கும் தலைவியின் கண்கள்.111 வரால் மீன் தெங்கின் பழத்தின் மீது மோதுதலால் அப்பழம் கீழே விழுகிறது. அதனால் வயலில் உள்ள தாமரை மலர்கள் கிழிபடுகின்றன.

" தூண்டி லெடுத்தவ ரால்தெங்கொ டெற்றப் பழம்விழுந்து
பாண்டி லெடுத்த பஃறாமரை கீழும் பழனங்களே"112

என்பது திருக்கோவையார்.

## பல்லி

வரப்போகும் நிகழ்ச்சியை முன்னரே உணர்ந்து புலப்படுத்தும் திறன் பல்லிக்கு உண்டு என்பது உலகத்தவர் நம்பிக்கையாகும். "உறுவது கூறும் சிறுசெந் நாவின் மணியோர்த்தன்ன தெண்குரல் கணிவாய்ப் பல்லி"113 என்பது அகநானூற்றுப்பாடல்.

'எழுத்தினை உச்சரிக்க மாட்டாத பல்லியின் சொல்லையும் பொருள் பொதிந்த சொல்லாகக் கொள்வர்"114 என்கிறார் நம்மாழ்வார்

'எழுத்தினை உச்சரிக்க மாட்டாத' என்பதில் எழுத்துக்கள் சேர்ந்தே சொல்லாகிறது என்பதும், 115 எழுத்து 'மொழி முதற் காரண மாம் அணுத்திரள் ஒலி' என்பதும்116 உணர்த்தப் படுகின்றன.

## ஈ) பயிரினம்

## வேங்கை

வேங்கை மரத்திற்கு அதன் சூழ்நிலையில் அதனைப் போன்றே காணப்பட்ட விலங்கின் நிறம், உருவம் ஆகிய அடிப்படையில் 'வேங்கை' எனக் காரணத்தோடு பெயரிடப்பட்டது. பொன் போலும் மலரையுடையது வேங்கை மரம். தினைப்புனத்தைக் கொய்க என்று பூவை உதிர்த்துச் சோதிடம் சொல்கிறது என்கிறாள் தோழி. இதனால் வேங்கையைக் 'கணி' என்பர்.

''போதிடங் கொண்டபொன் வேங்கை தினைப்புனங்
கொய்க வென்று
தாதிடங்கொண்டுபொன் வீசித்தன் கள்வாய் சொரியநின்று
சோதிடங் கொண்டி தெம்மைக் கெடுவித்தது
தூமொழியே"117

என்னும் திருக்கோவையார் வேங்கை மரத்தின் இயல்பை வெளிப் படுத்துகிறது.

''பொருளாகிய சிலேடையாலே பொன்னையுடைய வேங்கை
தாதிடங்கொண்டு பிறர்க்கடிமைப்படுத்தலைச் செய்து.
பொன்னையும் பிறர்க்குக் கொடுத்துத் தன் வாயாலே
கள் போக நின்று இன்னாளைக் கெடுக்கலாமென்று அறிவு
சொல்லி எம்மைக் கெடுத்ததன்றோ''118

என்று இதற்கு உரைவரைகிறார் பேராசிரியர்.

கற்பாறையின்மேல் விழுந்துள்ள வேங்கை மரத்தின் மலரைப் புலியென மருண்டு யானை அஞ்சும் என்பதனை,

''நறமனை வேங்கையின் பூப்பயில் பாறையை நாகநண்ணி
மறமனை வேங்கை யெனநனி யஞ்சும்''119

என்னும் திருக்கோவையார் தெரிவிக்கிறது.

புலியின் வரியும் பொறியும் சேர்ந்த உருவம்போல வேங்கைப் பூக்கள் கற்பாறையின் மீது விழுந்தவை இருப்பதாகவும், வேங்கை மரத்தின் தழையும் பூவும் புலிக்குட்டி போல இருப்பதாகவும், சங்க நூல்களில் பல பாடல்கள் கூறுவதைக் காணலாம்.

''கருங்கால் வேங்கை வீயுகு துறுகல்
இரும்புலிக் குருளையிற் றோன்றும் காட்டிடை''120

என்பது குறுந்தொகை.

அடர்ந்த காட்டில் மங்கிய ஒளியிலும், நிலவு வெளிச்சத்திலும் மஞ்சளான ஒள்ளிய வேங்கைப் பூக்கள் கரிய பாறையில் வீழ்ந்து கிடப்பது புலியின் தோல் போன்று இருப்பதாகக் கூறியது மிகவும் பொருத்தமான அரிய உவமையாகும். புலியின் தோல் மஞ்சள் நிற மானதும் கரிய வரிகளுடையதும் ஆகும்.121

கலித்தொகையில் யானை, வேங்கைப் புலியென்று கருதி, வேங்கையின் அடிமரத்தைப் பாய்ந்து தாக்கிக் கொம்பால் குத்திக் கொம்பை எடுக்க முடியாமல் ஆட்டி உழன்றதைச் சிவபெருமானின் கைலாய மலையை இராவணன் எடுக்க முயன்று, கை மாட்டிக்கொண்ட செய்தியை ஒப்பிட்டுக் கூறியது நினைந்து இன்புறத் தக்கது.122

'வேங்கையொடு வெறுத்து வரைவுகடாதல்' என்னும் துறையி லமைந்த பாடலில் வேங்கைமரம் 'கணி' என்றே குறிக்கப்படுகிறது.123

## கொன்றை

தலைவியின் செழுங்கூந்தல் கொன்றைக் கனியைப் போன்று கறுத்திருக்கும்.124

இங்குச் சிவபெருமான் உகக்கும் கொன்றையின் கனியைக் கூறுகிறார் மணிவாசகர். 'கண்ணிகார் நறுங்கொன்றை' சிவனுக்கு உரியது என்பது புறநானூறு.125

## மூங்கில்

மூங்கிலினைப் பெண்களின் தோள்களுக்கு எண்ணெய்ப் பசுமைக் காகவும், மினுமினுப்புக்காகவும் உவமை கூறுவர்.

"வேயின் மென்றோள்"126

என்பது திருக்கோவையார். இங்கு வேய்த்திரள் தலைவியினுடைய தோள்களுக்கஞ்சி உயிர்விடுவது போலப் பிளந்து மடிகின்றனவாம்.127

மூங்கில்கள் உயிர்விட்டுச் சிதறிய முத்துக்களைப் பெண்கள் எடுத்து மாலையாக்கி அழகு விளங்க அணிந்தனர்.128

"மூங்கிற் காடுகள் முதிர்ந்து முத்துக்களைச் சொரிகின்றன. அவற்றை அம்மலைவாணர் திரட்டி எடுத்துத் தங்கள் வீடுகளுக்கு முன் குவித்து வைக்கின்றனர். அவற்றை ஆடிக்கொண்டும் பாடிக் கொண்டும் அளந்து விற்கிறார்கள். "சேரவாரும் செகத்தீரே" என்று கூவிக்கூடி நுகர அழைக்கிறார்கள்126 என்பது திருஞானசம்பந்தர் தேவாரப் பாடலின் கருத்தாகும்.

## கோங்கு

தலைவியின் கொங்கை கோங்குமரத்தின்கண் உண்டாகிய பொலிந்த அரும்பை ஒக்கும் 180 ''குவளை கொங்கை குரும்பை'' என்பது மாணிக்கவாசகரின் தொடர்

## தோன்றி

தோன்றி மலர்கள் கார்காலத்தே மலர்வன. சிவபெருமான் கையில் உள்ள தீப்போல அம்மலர்கள் பூத்துக் காணப்படும்.

''போன்றுஇக் கடிமலர்க் கார்தரும் போர்தவன் கையனல்
போல்
தோன்றிக் கடிமலரும் பொய்ம்மையோ''181

என்பது திருக்கோவையார். 'கையனல்போல் தோன்றி' என்னும் தொடர் தோன்றியின் நிறத்தை உணர்த்துகிறது.

## அனிச்சம்

"மோப்பக் குழையும் அனிச்சம்"182

என்றும்,

"அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தாள்''183,

என்றும்,

''அனிச்சமும் அன்னத்தின் தூவியும்''184

என்றும்,

''நன்னீரை வாழி அனிச்சமே'' 185

என்றும் வள்ளுவர் அனிச்சமலர் பற்றிப் பலவாறு கூறி மகிழ்வர். இதனை 'நாக மல்லிகைப்பூ' என்றும் கூறுவர்.186

''அனிச்சத் திகழுமஞ் சீறடி''187

என்று திருக்கோவையார் அனிச்ச மலரைத் தலைவியின் பாதங்கள் அழகியதாகவும் சிறியதாகவும் இருத்தற்கு உவமையாக்குகிறது.

## தினை

குன்றவர்மகளிர் கிளி முதலியன தின்னாவண்ணம் தினைப்புனம் காப்பர்.188 யானை குறிஞ்சிப் பண்ணில் மனம் பறிகொடுத்துப் பசியும் அறியாது உறங்கிவிட்டது.189

# 3. யாப்பு, அணி அமைதிகள்

திருவிருத்தமும் திருக்கோவையாரும் கட்டளைக் கலித்துறை என்னும் பாவினத்தில் பாடப்பட்டுள்ளன. இந்நூல்கள் தோன்றிய காலத்தில் வடமொழியின் தொடர்பால அணியிலக்கணம் தமிழில் விரிவடைந்து விட்டது. தென்மொழியிலும் வடமொழியிலும் கற்பனை வளம்படப் பாடும் புலவர்கள் மலிந்தனர். இயற்கையின் எழில் நலங்களைக் கண்டு உள்ளதை உள்ளவாறே கவிதையில் அமைத்துக் காட்டும இசைப்புலவர்களுடைய பாடல்களுக்கும் பிற்காலத்துப் புலவர் பாடல்களுக்கும் உள்ள வேற்றுமைகளில் இது தலைமையானது. இல்பொருளுவமை, உயர்வுநவிற்சி, தற்குறிப்பேற்றம் முதலான அணிகளைப் புலவர் பெருமக்கள் மிகுதியாகத் தங்கள் செய்யுள்களிலே அமைக்கத் தொடங்கினர். இவர்கள் பாடுவதில் அமைந்த வருணனை கவிகளுக்கென்றே அமைந்த ஒரு கற்பனை உலகத்தைப்படிப்போருடைய அகக் கண்முன் தோற்றுவிக்கும் இயல்புடையது.

## கட்டளைக் கலித்துறை

கோவை நூல்கள் கட்டளைக் கலித்துறையில் பாடப்பெறுதல் வேண்டும் என்பது இலக்கணம்.

> "அடியடி தோறு மைஞ்சீ ராகி
> முதற்சீர் நான்கும் வெண்டளை பிழையாக்
> கடைஒரு சீரும் விளங்கா யாகி
> நேர்பதி னாறே நிரைபதி னேழென்
> றோதினர் கலித்துறை யோரடிக் கெழுத்தே"140

என்பதற்கேற்ப ஐஞ்சீரடி நான்காய் ஒவ்வோர் அடியிலும் முதற்சீர் நான்கும் வெண்டளை பிழையாமலிருக்க இறுதிச்சீர் கூவிளங்காய், கருவிளங்காய் என்பவற்றுள் ஒன்றனைப் பெற்று, முதற்சீரின் முதலசை நேராயின் ஓரடிக்கு எழுத்துப் பதினாறும், நிரையாயின் பதினேழும் உடையதாய் ஏகாரத்தான் முடிவது கட்டளைக் கலித்துறையாகும் இஃது எழுத்தளவைப் பெறுவதால் போந்த பெயர். கோவைக் கலித்துறை, திலகக் கலித்துறை என்பன இதன் வேறு பெயர்கள்.

அப்பர் திருவிருத்தமும், நம்மாழ்வார் திருவிருத்தமும் இக்கலித்துறையில் அமைந்தனவாதலால் இதற்கு 'விருத்தம்' எனும் பெயரும் உண்டு எனத் தெரிகிறது.

## திருவிருத்தத்தில் மாறுபாடு

திருவிருத்தத்தினுள் நம்மாழ்வார் சில பாடல்களை மேற்காட்டிய இலக்கணத்தினின்றும் மாறுபட எழுதியுள்ளார். எடுத்துக்காட்டாக,

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பாடல் | 1 | ... | விண்ணப்பமே | ... | தேமாங்கனி |
| ,, | 5 | ... | திறத்துக்கொலாம் | ... | புளிமாங்கனி |
| ,, | 6 | ... | அசுரர்தங்க | ... | புளிமாந்தண்பூ |
| ,, | 22 | ... | கூடாதன | ... | தேமாங்கனி |
| ,, | 39 | ... | நல்லோர்பிரான் | ... | தேமாங்கனி |

என வருகின்றன. இவ்வாறு ஐந்தாம் சீர் கூவிளங்காய், கருவிளங்காயாக வாராமல், தேமாங்கனி, புளிமாங்கனி, புளிமாந்தண்பூ முதலான சீர் வாய்பாடுகள் வந்தன. இங்ஙனமே மாணிக்கவாசகரின் திருக்கோவையாரிலும் சில இடங்கள் வந்துள்ளன.

திருக்கோவையாரில் புளிமாங்கனி, புளிமாந்தண்பூ ஆகிய ஐந்தாஞ் சீர்கள் வந்தமைக்குச் சில எடுத்துக்காட்டுகள் :

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பாடல் | 5 | ... | படைக்கண்களே | ... | புளிமாங்கனி |
| ,, | 7 | ... | அகப்பட்டதே | ... | ,, |
| ,, | 8 | ... | துணித் திங்களே | ... | ,, |
| ,, | 8 | ... | பொதியில்வெற்பில் | ... | புளிமாந்தண்பூ |
| ,, | 9 | ... | வளர்கின்றதே | ... | புளிமாங்கனி |

## கலிப்பா-கட்டளைக் கலித்துறை; விருத்தம்-விருத்தப்பாக்கள்

கட்டளைக் கலித்துறை என்னும் பாவும் தேவாரத்தில் 'திருவிருத்தம்' எனும் பெயரால் காணப்படுகிறது. இப்பாவானது பண்டைய கலிப்பா எனும் வகையினின்று தோன்றியதாயினும் கி.பி. மூன்றாம் நூற்றாண்டிற்கு முற்பட்ட பழைய செந்தமிழ் நூல்களில் இஃது ஒருசிறிதும் காணப்படவில்லை. முதல்முதலில் இது திருவாசகம் திருக்கோவையாரில் காணப்படுகிறது. இப்பா தேவாரத்தில் 'திருவிருத்தம்' என்னும் பெயரால் வழங்கப்பட்டிருத்தலை உற்று நோக்குமிடத்து இக்காலத்தில் மிகுதியாக வழங்கிவரும் விருத்தப் பாக்களெல்லாம் இதனின்றே பிறந்து பல திறமாய்ப் பெருகலாயின வென்பது புலனாம். இது பண்டைக் காலக் கலிப்பாவுக்கும் பிற்றைக்கால விருத்தப் பாவுக்கும் இனமாய் இடைப்பட்டதொரு காலத்தில் உண்டானதென்பது முன்னும் பின்னும் அதற்கு வழங்கிய பெயர்களை ஆராயுமுகத்தா

நன்கு உணரப்படும். மாணிக்கவாசகர் காலத்தே அதற்கு வழங்கிய பெயர்களை! ஆராயுமிடத்தே அதற்கு வழங்கிய கட்டளைக் கலித்துறை என்னும் பெயர் அது கலிப்பாவோடு இனமுடைத்தாதலைக் காட்டும்.

கலிப்பா பாடும் வழக்கம் பண்டைநாளில் மிக்கிருந்தது. பிற்றை நாளில் அருகிப் போயிற்று. விருத்தப்பா இயற்றும் வழக்கம் பண்டை நாளிற் சிறிதுநி லையாய்ப் பிற்றைநாளில் மிக்குப் பெருகுவதாயிற்று. இவ்விரண்டில் கலிப்பா வழககற்றுப் போயது கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் இறுதியிலேயாம். விருத்தப்பா வழக்கு மிகப் பெருக லானது கி.பி. ஆறாம் நூற்றாண்டு முதலேயாகும். இவ்விரண்டு வரம்புக்கும் இடைப்பட்ட கலிப்பாவோடு ஒட்டி, அதனிற்றோன்றிய கட்டளைக்கலித்துறையும், அதனோடு ஒட்டித்தோன்றிய விருத்தப்பா வகைகளும் ஒன்றன்பின் ஒன்றாய்த் தோன்றி உருப் பெறலாயின என்பது ஓர்ந்துணரப்படும.

## தாழிசை–தரவுகொச்சகம்

நம்மாழ்வார் இயற்றிய திருவிருத்தம் எனும் கட்டளைக் கலித் துறைப் பாடல்களுக்கு அப்பர் செய்த திருவிருத்தப் பாடல்கள் அரண் செய்கின்றன.

நச்சினார்க்கினியர் தொல்காப்பியச் செய்யுளியல் 'தரவின்றாகித் தாழிசை பெற்று' எனும் 149ஆம் சூத்திரத்தில் உரையில் திருவாய் மொழியை எடுத்துக்கூறி இதன் ஒவ்வொரு பதிகத்திலும் (ஒவ்வொரு திருவாய்மொழியிலும்) உள்ள பாக்கள் தாழிசைகள் என்றும், இவை நான்கடியின் மிகாமல் வந்தவை என்றும் கூறினார். ஒவ்வொரு பதிகப் பாக்களும் ஒருபொருள்மேல் அடுக்கி வந்தன என்றார். அவர் எழுத் தெண்ணி வகுக்கும் கட்டளைக் கலித்துறையைத் தரவுகொச்சகம் என்றார்.

எனவே, திருவாய்மொழிப் பாசுரங்களை எல்லாம் பிற்கால இலக்கண நூல்கொண்டு விருத்தப்பாக்கள் என்று கூறலாகாது என்பதும், திருவிருத்தப் பாசுரங்கள் எல்லாம் அவ்வாறே கட்டளைக் கலித்துறை என்று கூறுதலாகாது என்பதும், இவற்றைத் தொல்காப்பிய இலக்கணம் கொண்டு 'தாழிசைகள்' என்றும், 'தரவு கொச்சகம் என்றும் கூறுதல் வேண்டும் என்பதும் அறியப்படுகின்றன.141

## கிளவி–துறை–கொளு

கிளவித்தொகை என்பது அகப்பொருள் துறைகளின் தொகுதி எனும் பொருளினது. இது 'கிளவிக்கொத்து' எனவும் வழங்கப்படும். களவியல், இயற்கைப் புணர்ச்சி முதலாக வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிதல் ஈறாகப் பதினேழு கிளவித் தொகுதிகளை உடையது.

காதல் நிகழ்ச்சிகளை வரிசையான பல சந்தர்ப்பங்களாகப் பிரித்து, ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் அதைக் கண்ணுறும் அல்லது அனுபவிக்கும் ஒருவர் தமது எண்ணத்தை ஒரே செய்யுளில் வெளிப்படுத்துவது துறையாகும். இங்ஙனம் கோவை நூலில் நானூறு துறைகள் உள்ளன.

திருக்கோவையாரின் துறைகளுள் ஒவ்வொன்றிற்கும் உதாரண வாய்பாடுகள் உரையாசிரியர்களால் இயற்றப்பட்டுள்ளன. இவ்வாய்பாடுகளுக்குக் 'கொளு' என்பது பெயர். எடுத்துக்காட்டாகத் திருக்கோவையார்க் 'காட்சி'த் துறையில் ''மதிவாணுதல் வளர்வஞ்சியைக் கதிர்வேலவன் கண்ணுற்றது'' என்பது கொளுவாகும்.

## எதுகை–மோனை

திருக்கோவையார், திருவிருத்தம் ஆகிய இரு நூல்களிலும் எதுகை, மோனை முதலிய தொடையழகுகள் மிகவும் சிறப்பாக அமைந்துள்ளன.142

''உணர்ந்தார்க் குணர்வரியோன்......
புணர்ந்தாற் புணருந்தொறும்''148

என்றும்,

''யாழு மெழுதி யெழின்முத் தெழுதி''144

என்றும்,

''தெரியேம் உரையான் பிரியா வொருவனித் தேம்புனமே''145 என்றும் வருமிடங்கள் திருக்கோவையாரில் எதுகை சிறப்பாக அமைந்திருப்பதற்குச் சான்றுகளாம்.

''இசைமின்கள் தூதென் றிசைத்தா லிசையிலம் என்தலைமேல்
அசைமின்க ளென்றா லசையும் கொலாம்''146

என்னும் திருவிருத்தப் பாடலில் எதுகை நயமுற அமைந்திருக்கக் காண்கிறோம்.

## முரண்தொடை

திருக்கோவையார், திருவிருத்தம் ஆகிய இரண்டு நூல்களிலும் பல இடங்களில் முரண்தொடை சிறப்பாக அமைக்கப்பட்டுள்ளன.

> "கருங்குன்றம் வெண்ணிறக் கஞ்சுகம் ஏய்க்கும்" 147
> "செவ்வான் அடைந்தப சுங்கதிர் வெள்ளைச் சிறுபிறை" 148
> "சுருளார் கருங்குழல் வெண்ணகைச் செவ்வாய்த்
> துடியிடை" 149

என்று திருக்கோவையாரில் முரண்தொடை பொலிகிறது.

> "கருங்கடல் வெண்திரைக் கைக்கொண்டு போய்" 150

என்பன போல் திருவிருத்தத்தில் பல பாசுரங்களில் முரண்தொடை இடம் பெற்றுள்ளது.

## அந்தாதி

'அந்த முதலாத் தொடுப்ப தந்தாதி' 151 என்பர் அமிர்த சாகரர். அடிதோறும் இறுதிக்கண் நின்ற எழுத்தாலும், அசையாலும், சீரானும் அடியானும் மற்றையடிக்கு ஆதியாகத் தொடுப்பது அந்தாதித் தொடையாகும். கலம்பகப் பிரபந்தம் அந்தாதியில் அமைவதாகும்.

> "அடியுஞ் சீரும் அசையும் எழுத்தும்
> முடிவு முதலாச் செய்யுண் மொழியினஃது
> அந்தாதித் தொடையென் றறைதல வேண்டும்" 152

என்று அந்தாதிக்கு இலக்கணம் வகுப்பர்.

திருவிருத்தம் கட்டளைக் கலித்துறையில் அந்தாதியாக வருகிறது.

திருக்கோவையார் கட்டளைக் கலித்துறையில் வருகிறதேயன்றி அந்தாதித் தொடையிலில்லை. ஆயினும் திருக்கோவையாரே கட்டளைக் கலித்துறை யாப்பினைத் தமிழுலகிற்குத் தந்தது எனலாம்.

## அணி வகைகள்

அணி என்பது ஐந்திலக்கணங்களுள் ஒன்று. வடநூலார் இதனை 'அலங்கார சாஸ்திரம்' என்பர். தொல்காப்பியனார் உவமையணியென்ற ஒன்றைப் பற்றி மட்டுமே தொல்காப்பியப் பொருளதிகாரத்

தில் கூறினர். பிற்காலத்தில் தமிழில் அணிகள் பலவாக வகுக்கப் பட்டன. வைத்தியநாத தேசிகர் தம் இலக்கண விளக்கத்துள் உவமம் ஒன்றையே 24 வகையாகப் பிரித்து வேறு எட்டு அணிகள் சேர்த்து 32 அணிகளைக் கூறினார். தண்டியலங்காரம் அணிகளை 35 ஆக வகுக்கிறது. மாறனலங்காரமோ 64 அணிகளைக் கூறுகிறது. குவலையாநந்தம் என்னும் அணிநூல் 100 அணிகளைக் கூறுகிறது. சந்திராலோகம் என்னும் அணிநூலும் நூறு என்று உரைக்கிறது.

## உவமையணி

அணிகளுள் உவமையணி ஒப்பிலா அணியாகும். உவமையணியை ஆளும் தன்மையில் சங்க நூல்களுக்கும் பிற்காலத்து நூல்களுக்கும் பெரிய வேற்றுமை காணப்படுகிறது. சங்க நூல்களில் காணப்படும் உவமைகள் பெரும்பாலும் மிகைபடாமல் எடுத்துக்கொண்ட பொருளை இனிது மனத்தில் படும்படி விளங்கச் சொல்வன. ஆனால் பிற்காலத்துப் பாடல்களில் காணப்படும் உவமைகள் வரம்பிகந்து மிகை உயர்வு நவிற்சியாக அமைந்தவை.

நம்மாழ்வார், மாணிக்கவாசகர் உள்ளிட்ட கவிஞர்கள் அனைவரும் அமைத்திருக்கின்ற உவமைகள் பெரும்பாலும் அழகும் ஆழமும் உடை யனவாய் நவில்தொறும் நமக்கு இன்பந்தந்து மகிழ்விக்கின்றன.

> "கருத்திற்கு உயிர்நிலையாக விளங்கும் உவமைகளில்
> தேவைப்பட்ட இடங்களில் பொருத்திக் காட்டும்
> ஆற்றலைப் பெற்றிருந்தனர் புலவர்கள். அனுபவம்
> மட்டும் புலவர்களுக்கு இத்திறனைத் தாராது ஆழ்ந்த
> அனுபவத்தை உள்ளத்தில் உணர்வதன் பயனே புலவர்-
> களுக்கு இன்றியமையாதது"153

என்கிறார் ஐ.ஏ. ரிச்சர்ட்ஸ்.

திருக்கோவையாரில் தலைவியின் உறுப்புகளுக்கும் மற்றவற்றிற்கும் பல அழகிய உவமைகள் கூறப்பட்டுள்ளன.

தலைவியின் நடைக்கு அன்னமும் பிடியும் 24), சாயலுக்கு மயிலும் பாவையும் (19), நுதலுக்குப் பிறைமதியும் (10), சுரிகுழலுக்குப் புயலும் (35), கண்ணிற்கு மான்விழியும் (12,29), கன் துன்புறத்தற்கும் இணங்கிப் பின் துன்புறுத்தும் இயல்பிற்கும் பிணியும், மருந்தும், விடமும்

அயிலும், கணையும், கண்ணின் ஒளிக்கு வாளும், செவ்வாய்க்குக் கொவ்வைக் கனியும் (9) வளமும் (32) ஆம்பற்பூவும் (11), பல்லிற்கு வெண்முத்தும் (13), முகத்திற்குத் திங்களும் (16), பணிமொழிக்குக் கிள்ளையும் இனிமைக்குக் குயிலும் (30), தோளிற்கு மூங்கிலும் (310), இடைக்குத் துடியும் (21), மார்பிற்கு இணைச் செப்பும் (35), அல்குலுக்கு அரவமும் மாணிக்கவாசகரால் உவமைகளாகச் சொல்லப் பெற்றுள்ளன. பிற்கால நூல்களில் காணப்படும் இவ்வுவமைகளில் பல முதன் முதல் திருக்கோவையாரிலேதான் வந்துள்ளன.154

'வைவந்த வேலவர்' 154 அ என்னும் திருக்கோவையார்ப் பாடலில் அழகிய திருமிடற்றிலே இருளையுடைய சுவாமியினது பெரும்பற்றப் புலியூரை வாழ்த்தாதார் மனம்போலே பூமி முழுவதும் இருள் செறிந்தது என்று தோழி தலைவனிடம் விடுத்து உடன்போக்கிற்கு இதுதான் தக்க சமயம என்கிறாள்.

சிவனை வாழ்த்தாதார் மனம் அஞ்ஞான இருளில் மூழ்கியிருக்கும். அவர்கள் மனம் ஏதும் நினைத்து ஆக்க வேலை செய்யாமல் தூங்குவது போல உலக உயிர்கள் உறங்குகின்றன. மற்றும் உலக உயிர்களைக் காக்கச் சிவன் ஆலகால நஞ்சையுண்டு கண்டத்திலடக்கி திருநீல கண்டன் என்னும் பெயர் பெற்றான். அவனுக்குக் கழுத்திலேதான் இருள். இங்கோ உலக முழுவதும் இருள். அவனை வணங்காததால் அந்தக் கழுத்து இருள் கொஞ்சம் கொஞ்சமாகப் பரவிப் பெரிதாய் விட்டதோ என்று நினைக்கிறாள் தோழி. அதே நேரத்தில் சிவனை வாழ்த்தினால் ஞான ஒளி எங்கும் பரவும் என்றும் உய்த்துணர வைக்கிறார். உவமை தலைசிறந்து விளங்குகிறது.

திருக்கோவையாரில் வரும் உவமைகள் தெய்வத்தைப் பற்றியும் சிந்திக்க வைக்கின்றன.

> ''தலைவியின் கண்ணின் அகலம் ஈசற்குத் தலைவன் வைத்துள்ள அன்பின் அகலம் எவ்வளவோ அவ்வளவாகும். தலைவியின் கண்ணின் கறுப்புத் தலைவனிடம் இருந்து ஈசன் ஒழித்ததான பாசம் எவ்வளவு கறுப்போ அவ்வளவு கறுப்பாம்.
>
> கண்ணின் ஒளி ஈசன் வீற்றிருக்கும் தில்லையின் ஒளி எவ்வளவோ அவ்வளவாகும்.
>
> கண்ணின் ஒளி வெளுப்பு, சிவபிரான் தோளில் பூசியுள்ள திருநீற்று வெளுப்பு எவ்வளவோ அவ்வளவு வெளுப்பாகும்

கண்ணின் நீளம் பெருமானுடைய திருவடிப் பெருமையை அடியார்கள் பேசினால் எவ்வளவு பெருநீளமாகப் பேசுவார்களோ அவ்வளவு பெருநீளம்.

தலைவியின் இடை தில்லை அம்பலத்தைப் பாடாதவர்கள் போலத் தேய்ந்திருக்கும். தலைவியின் கொங்கை தில்லை அம்பலம் போல வளமுடையது''155

## கனவும் நனவும்

'தேவாசுரர் இறைஞ்சும்'156 தில்லையைச் சேராதவரைப் போல என்பது உவமை. சிற்றின்பத்தை மெய்யெனக் கருதி மறுமையின்பத்துக்குக் காரணமாகிய தில்லையைச் சேராமையால் இம்மையும் மறுமையும் இழந்து வருந்துவது போல நானும் கனவும் நனவும் பெற்றிலேன் என்று தலைவி வருந்துகிறாள்.

''தில்லை சேராதவர் கனவிலும் இன்பம் எய்திப் பெறார், விழிப்பு நிலையிலும் துன்பமே எய்துவர்'' என்று உவமை விளக்குகிறது

## கணவன் உடல், மனைவி உயிர்

'சீரியலாவியும் யாக்கையும்'157 என்னும் பாடலில் தோழி செவிலிக்குக் கூறும் போது, தலைவனும் தலைவியும் உடலும் உயிரும் போல் உள்ளனர் என்றும், அவர்கள் சந்தன மரமும் அதன்கண் இழைக்கப்பட்ட தேனும் போன்று உள்ளனர் என்றும் கூறுகிறாள். தலைவனுக்கு உடலும் சந்தனமரமும் உவமைகளாக உரைக்கப்படுகின்றன. தலைமகட்கு உயிரும் தேனும் உவமைகள் ஆகின்றன. தலைவன் உடல்; தலைவியோ உயிர் உடலை உயிர் இயக்குவது போன்று தலைவிதான் தலைவனை இயக்குகின்றாள். உயிரில்லா உடலை ஒரு நாளைக்குக் கூட வைத்திருக்க முடியாதது போன்று தலைவியை விட்டுத் தலைவன் ஒருநாள் கூடப் பிரிந்திருக்க மாட்டான். உயிர் உடலை மறவாமை போலத் தலைவி தலைவனை என்றும் மறப்பதில்லை.

தாமரையிலுள்ள தேன் சந்தனமரத்தின்கண் வண்டுகளால் கொணர்ந்து இழைக்கப்பட்டுழி, அம்மரத்தின நறுமணமும் அத்தேனின் நறுஞ்சுவையும் தம்முட் கலந்து பெருமை பெறுகின்றன சந்தனமரத்தை இடமாகப் பெற்ற தாமரைத்தேன் தூய்மையாலும் நறுமணத்தாலும் நிறத்தாலும் மிக்க சுவையாலும் மக்களால் விரும்பப் படுதல்போலத் தலைவி தலைவனால் விரும்பப்படுகிறாள்.

## திருவிருத்தத்தில் காணும் உவமைகள்

"இருள் விரிந்தாலன்ன மாநீர்"158 என்னும் பாடலில் திருமாலின் கரிய நிறம் உவமிக்கப்படுகிறது. "இருளை வெளியுமிழ்கின்ற நீல ரத்தினம் போன்ற கருமை நிறமுடைய சூரிய மண்டலமொன்று ஒளி வீசுவது போலக் கருமை நிறமுள்ள ஒளியையுடைய திருமால்" என்கிறார் நம்மாழ்வார். கம்பர் இதனை அடியொற்றி இராமனின் நிறத்திற்கு,

"வெய்யோ னொளிதன் மேனியின் விரிசோதியின் மறைய"159 என்று உவமை கூறுகிறார்.

திருமாலின் கண்களை வருணிக்கும் ஆழ்வார் பாடல் 'நீலத் தடவரை போல்'160 என்று தொடங்குகிறது. "நீலமணி மயமான பெரியதொரு மலையின் மேலுள்ள செந்தாமரைப் பூக்கள் பூத்திருக்கின்ற பொய்கை போல விளங்குகின்றவை எம்பெருமானின் கண்கள்" என்று பராங்குச நாயகி தன் தோழிக்குக் கூறுகிறாள்.

"செந்தாமரைக் கண்ணொடும் செங்கனி வாயினொடும்
சந்தார் தடந்தோளொடும் தாழ்தடக் கைகளோடும்

அந்தா ரகலத்தொடும் அஞ்சனக் குன்றமென்ன"161 என்று கம்பன் இராமனின் கண்களைச் 'செந்தாமரைக்கண்' என்று போற்றுவது காணலாம்.

எம்பெருமானுடைய கரிய பெரிய திருமேனிக்கு நீலத் தடவரையும் அவன் திருக்கண் மலர்களுக்குத் தாமரை பூத்த தடாகங்களும் உவமை ஆயின.

"கண்ணும்செந் தாமரை கையு மவைஅடி யோஅவையே"16 என்றபடி திருமாலின் கண்கள், கைகள், கால்கள் ஆகியன தாமரைப் பூக்கள் பூத்திருக்கின்ற தடாகத்தை நினைவூட்டுகின்றன.

பராங்குச நாயகி அந்தக்கண்களின் அழகில் ஈடுபட்டு 'வன்காற் றறைய'163 என்னும் பாசுரத்தில் தலைவன் தன்னை ஒருக்கணித்துக் கடைக்கணணால் பார்த்த பார்வையை உவமையால் விளக்குகின்றாள்.

பெருங்காற்று வீசுதலால் ஒரு பக்கமாகச் சாய்ந்து கிடந்து மலர்ந்த மெல்லிய நாளத்தையுடைய தடாகம் போல் தலைவனின் கண்கள் அழகுடன் பொலிகின்றனவாம்.

## கருக்காய் கடிப்பவர்

''இருக்கார் மொழியால்''164 என்னும் பாடலில் "கருக்காயைக் கடிப்பவர்போல் திருநாமச்சொல் கற்றனமே'' என்று தலைவி தோழிக்குக் கூறுகிறாள். பழம் கிடைக்காமையால் காயைத் தின்பவர் போலப் பூரண அநுபவம் கிடைக்காமையால் அதுவரையில் தரித்திருப்பதற்காக அவனது திருநாமங்களாகிய சொற்களைச் சொல்லுதல் செய்கின்றனர்.

வள்ளுவர் 'கனியிருப்பக் காய்கவர்ந் தற்று'' என்பர்.165 ''கனி யிருக்கக் காய்கவர்ந்த கள்வனேனே''166 என்பர் திருநாவுக்கரசர். புண்ணிய மூர்த்திகளான முனிவர்கள் வேத மந்திரங்களால் எப்போதும் எம்பெருமானைத் தவறாமல் அடைந்து அனுபவிப்பவர். "யான் அப்படிப் பட்ட நல்வினை யில்லாமையால் எனது ஆசையை அடக்க மாட்டாமல் எனது நற்பேறின்மையை நினைந்து நொந்து கொண்டு இனிய பழங்களை உண்டு வாழப்பெறாத ஏழையர் காய்களைக்கடித்துண்டு உயிர் வாழுமாப் போலே அவனது முழு அனுபவம் பெறாமையால் பெயரை மட்டும் உச்சரித்து உயிர் தரிக்கிறேன்'' என்கிறாள் தலைவி. திருவள்ளுவரும் திருநாவுக்கரசரும் 'கனியிருக்கக்காய் கவர்தலை'க் குறிப்பிடுகின்றனர்; நம்மாழ்வாரோ 'கனியின்மையின் கருக்காய் கடிப்பவர்போல்' என்று உவமை அமைத்திருப்பது எண்ணி மகிழத்தக்கது.

'கருக்காய் கடிப்பவர்போல்' என்ற உவமையால் திருநாமச்சொல் கற்பதனால் மட்டும் உண்டாகும் அதிருப்தி விளங்கும். கண்ணாலே கண்டு, கையாலே அணைத்து, மகிழ்ந்திருக்க ஆசைப்பட்டவர்க்குத் திருநாமச்சொல் கற்ற மாத்திரத்தால் என்ன நிறைவு உண்டாகும்? என்பது கருத்து.

இளங்காய் நன்றாக முதிர்ந்து நுகர்வாருக்கு மிகவும் இனிதாய் இருக்கின்ற கனி, பாகவத அனுபவத்தாலாகும் இனிய ஆனந்தத்திற்கு உவமையாகும். மிகவும் இளமையுடையதாய் நுகரும் செவ்விபதல்லாத காய் அவ்வளவு இனியதல்லாத பெயரை மாத்திரம் உச்சரித்தலுக்கு உவமை. காயினது முதிர்ச்சியே கனியாதல் போலப் பெயரை உச்சரித் தலின் பயன் அனுபவ ஆனந்தமாகும் என்பது இவ்வுவமையால் உய்த் துணரக் கிடக்கிறது.

## உருவக அணி

> "உவமையும் பொருளும் வேற்றுமை ஒழிவித்
> தொன்றென மாட்டினஃ துருவக மாகும்"167

என்பது தண்டியலங்காரம். உவமையாகின்ற பொருளையும், உவமிக்கப் படும் பொருளையும் வேறுபாடொழிவித்து ஒன்றென்பதோர் உள்ளுணர்வு தோன்ற ஒற்றுமை உண்டாக்கின் அஃது உருவகமென்னும் அணியாகும்.

திருக்கோவையாரில் 'புலவித் திரைபொர'168 என்னும் பாடலில் உருவக அணி சிறப்புச் செய்கிறது. தலைவன் பரத்தையிடம் செல்கிறான். ஊடலாகிய திரைகள் பலவும் வந்து மோதாநிற்பவும் தலைவன் அவள் சீறடி பணிதல் என்னும் ஒரு புணைபற்றிக் கலவிக் கடலுள் இறங்கி அவள் சேலையாகிய கயிற்றைப் பற்றிக் கடலில் மூழ்கி அவள் வெண்மைப் பற்களாகிய முத்துக்களினின்றொழுகும் உமிழ் நீராகிய தேனைப் பருகி, அவள் கொங்கையாகிய இன்பத் தீவுகளை எளிதாகச் சென்று எய்தலாயினான் என்கிறார்கள் அருகிருந்த மக்கள்.

இங்கு ஊடலைத் திரையாகவும், சீறடி பணிதல் புணையாகவும், கலவியைக் கடலாகவும், அவள் சேலையைக் கயிறாகவும், பற்களை முத்தாகவும், பல்லில் ஊறும் நீரைக் கள்ளாகவும், கொங்கைகளைத் தீவுகளாகவும் மாணிக்கவாசகர் உருவகஞ் செய்தமை நினைந்து. நினைந்து மகிழத்தக்கது.

'உப்பமைந்தற்றால்'169 ஊடல் என்பர் திருவள்ளுவர். ஆகையால் மாணிக்கவாசகர் திரைகளாக அளவாக உருவகித்தார். அளவு மீறித் திரை எழும்பினால் ஊர்களையும் நகர்களையும் அழித்தல் போன்று தலைவியையே அழித்துவிடும் என்பதையும் குறித்தார். கலவியின் எல்லை காண முடியாத தலைவனுக்கு எல்லை காண முடியாத கடலை உருவகித்தார். கடலுள் மூழ்கி முத்தெடுப்பவர் கயிறு பற்றி மூழ்குவாராதலின் ஈண்டுத் தலைவியின் ஆடையை அக் கயிறாக உருவகித்திருத்தல் சுவைத்து மகிழத்தக்கது.

> "காய்சின வேலன்ன மின்னியல்
> கண்ணின் வலைகலந்து
> வீசின போதுள்ள மீனிழந் தார்"170

என்னும் திருக்கோவையார்ப் பாடலிலும் உருவக அணி வந்துள்ளது.

ஒளியை உமிழும் கண்ணாகிய வலையை மகளிர் வீசிய போது அவ்வலையிலகப்பட்டமையால் தமது உள்ளமாகிய மீனை இழந்தார் ஆடவர். எனவே, அதனைப் பெறுதற்பொருட்டு மடலேறுவேன் என்கிறான் தலைவன். இங்குப் பெண்களின் கண்களை வலையாகவும் உள்ளத்தை மீனாகவும் உருவகித்துள்ளார் மாணிக்கவாசகர்.

## திருவிருத்தத்தில் உருவகம்

திருவிருத்தத்திலும் அழகிய உருவகங்கள் வந்து பாடல்களுக்கு அழகூட்டுகின்றன. ''பால்வாய்ப் பிறைப்பிள்ளை''171 என்னும் திருவிருத்தப் பாடலில் தலைவி மாலைக்காலத்தைப் பழித்துக் கூறும் போது உருவகம் வெளியாகிறது.

பால் போன்ற கிரணத்தை வெளியுமிழ்கின்ற தன்மையையுடைய அழகிய இளம்பிறைச் சந்திரனாகிற பால் மாறாத வாயையுடைய தனது இளங்குழந்தையைத் தனது ஒக்கலிலே வைத்துக்கொண்டு சூரியனாகிற கணவனையிழந்த மேற்குத் திசைப்பெண் வருந்தி அழுகிறாள். இங்குச் சந்திரனைக் குழந்தையாகவும் சூரியனைக் கணவனாகவும் மேற்குத் திசையைப் பெண்ணாகவும் உருவகித்திருத்தல் காணத்தக்கது.

'சிறு குழந்தையை விட்டுவிட்டுக் கணவன் முடிந்து போயினனே, என்று கதறி அழுவாளைப் போலே தலைவி அழுகின்ற காலம் போன்று இருக்குதாம் மாலைக்காலம்.

''திங்களம் பிள்ளை''172 என்னும் பாடலிலும் தலைவி மாலைப் பொழுதைப் பழிக்கிறாள். இதில் முன்னைய உருவகமே சிறு மாறுதலுடன் வருகிறது.

கணவன் போர்க்களத்திலே இறந்தான். மனைவி இதைக் கேட்டுத் தன் குழந்தையை வீட்டில் விட்டுவிட்டுக் குருதி பாய்ந்த களத்திற்குச் சென்று மார்பிலே காயமடைந்து உயிர் துறந்த கணவனைத் தழுவி. அங்கு நெடிதிருந்து, குழந்தையை நினைந்து நினைந்து, வீட்டிற்கும் செல்லமாட்டாமல், உயிரையும் விடமாட்டாமல் கலங்குகிறாள்

சூரியனுடைய சிவந்த கிரணங்களை அவனது செங்கோலாகவும் அவன் மறைந்ததனால செவ்வானம் வீரரின் உடலினின்று செங்குருதி பெருகி ஓடிய போர்க்களமாகவும், சூரியன் மறைவது கணவன் மறைவதாகவும் (இறத்தல்), மாலைப்பொழுது பெண்ணாகவும் உருவகித்திருத்தல் அவலச்சுவையை மிகுதிப்படுத்துகிறது.

## ஏகதேச உருவக அணி

"பால்வாய்ப் பிறைப்பிள்ளை"178 என்று தொடங்கும் திருவிருத்தப்பாடலில் ஏகதேச உருவக அணி அமைந்துள்ளது.

பிறையினிடத்துப் பிள்ளைத் தன்மையையும், மேற்குத் திக்கினிடத்துப் பெண் தன்மையையும் ஏற்றினதற்கேற்பச் சூரியனிடத்துத் தலைமகனது தன்மையை ஏற்றிக் கூறாமையால் இஃது ஏகதேச உருவக அணியாயிற்று.

## இல்பொருள் உவமையணி

இயல்பாக இல்லாத ஒன்றை உவமையாக்கிக் கூறுவது இவ்வணியாகும். "தூண்டா விளக்கனையாய்"174 என்னும் பாடலில் தூண்ட வேண்டாத விளக்கை ஒப்பாய் என்று உடன்போக்கில் சென்ற தலைவன் தலைவியருக்கு எதிரே வந்த வேறு தலைவன் தேடி வந்த செவிலியிடம் தன் மனைவியை நோக்கிக் கூறுகிறான். தூண்டாத விளக்கு உலகில் இல்லை. எனவே, அதனை உவமித்தது இல்பொருள் உவமையணியாயிற்று.

இது தண்டியலங்காரத்தில் அபூத உவமை என வழங்கும்.

"எரிகொள் செந்நாயிறு" 176 எனும் திருவிருத்தத்தில் வெப்பத்தைக் கொண்ட சிவந்த இரண்டு சூரியர்கள் ஒருங்கே உதயமலையில் தோன்றி விளங்கும் தன்மை போன்ற தன்மையுடைய எம் தலைவனுடைய கண்கள் என்று வருகிறது. இரண்டு சூரியர்கள் உலகில் இல்லாததால் இஃது இல்பொருள் உவமையணியாயிற்று.

## சிலேடையணி

"ஒருவகைச் சொற்றொடர் பலபொருட் பெற்றி
தெரிவுதர வருவது சிலேடை யாகும்"177

என்று சிலேடையணியினை விளக்கும் தண்டியலங்காரம்.

"அதுவே
செம்மொழி பிரிமொழி எனவிரு திறப்படும்"178

என்று அதன் இரு பிரிவுகளையும் எடுத்துரைக்கிறது.

"சங்கந்தரு முத்தி" எனும் திருக்கோவையார்ப் பாடலில் செம்மொழிச் சிலேடை வந்துள்ளது. இச்செய்யுள் சிவபெருமானுக்கும் கடலுக்கும் சிலேடையாகி வருகிறது.

"சங்கந் தருமுத் தியாம்பெற வானகழ் தானமுழும்
பொங்கும் புனற்கங்கை தாங்கிப் பொலிகலிப் பாறலவுந்

துங்க மலிதலைய யேந்தலி னேந்திழை தொல்லைப்பன்மா
வங்க மலிகலி நீர்தில்லை வானவ னேர்வருமே''179

என்பது திருக்கோவையார்ப் பாடல்.

சிவன் : அன்பு தருகின்ற முத்தியை, அன்பில்லாத நாமும் பெறும்படி ஆகாயத்தையும் கழித்துள்ளதான ஒரு திருவடியிலே பொருநதி மிக்க நீருடைத்தாகிய கங்கையையும் திருச்சடையிலே தரித்து, ஆரவாரத்தை உடைத்தாகிய பருந்து உலாவப்பட்ட பெருமை மிக்க தலையோட்டைத் தரித்தவன்.

கடல் : சங்குதரும் முத்துக்களை யாம் பெறுமாறு மிக்க உப்பங் கழிகளைத்தான் பொருந்தி மிக்க நன்னீரை உடைத்தாகிய கங்கை முதலாகிய ஆறுகளையும் தரித்து, மிக்க ஆரவாரத்தை உடைத்தாகிய படகுகள் உலாவப்பெற்ற பெருமை மிகுதலையும் தரித்தலால் வானவன் கடலை ஒப்பான்.

இவ்வாறு சிவபெருமானுக்கும் கடலுக்கும் பொருந்தி வருகிற செம்மொழிச் சிலேடையாக இப்பாடல் அமைந்துள்ள திறம் போற்றுதற் குரியது

''புயலோங்கலர் சடையேற்றவன்'' என்னும் பாடலில் இறுதியில் வரும்,

''கயலோங் கிருசிலை கொண்டுமன் கோபமும் காட்டிவரும்
செயலோங் கெயிலெரி செய்தபின் இன்றோர்
திருமுகமே''180

என்னும் அடிகளில் மன்னனது கடிதத்திற்கும, தலைவியின் முகத் திறகும் செம்மொழிச் சிலேடையும் பிரிமொழிச் சிலேடையும் வந்து உள்ளன.

மன்னன் கடிதம் : பகைமன்னனுடைய மதிலையும் அரண்மனை யையும் தீக்கிரையாக்கிய பின் மீன் இலச்சினையும் வில் இலச்சினையும் பொறித்து விடுத்த மன்னனுடைய கோபமும் அந்தக் கடிதத்தின்கண் காணப்படுகின்றன.

தலைவி முகம் : பாசறையில் இருந்த தலைவன் பகைவனுடைய மதிலைத் தீயிட்டுக் கொளுத்தியபின் இன்று திருவை யுடையதொரு முகம் கயல்போலும் கண்ணையும மிகப் பெரிய விற்போலும் புருவத் தையும் உடைத்தாய்த் தங்கிய இந்திரகோபம் போலும் வாயையும் காட்டி வருகின்றது.

மீன் இலச்சினையும் வில் இலச்சினையும் உள்ளது என்பதால் பாண்டிநாட்டு மன்னன் சேரநாட்டையும் வெற்றிகொண்டு ஆள்பவன் என்றும், இப்போது சோழநாட்டின் மீது படையெடுத்திருக்கிறான் என்றும் அறியலாம். பாண்டிய மன்னன் என்பது சிவபெருமான் சுந்தர பாண்டியனாக வந்து மதுரையைத் தலைநகராகக் கொண்டு பாண்டி நாட்டை ஆண்டமை வெளிப்படுகிறது. திரிபுர அரக்கர்களின் மூன்று மதில்களைக் கோபச் சிரிப்பினால் அழித்தமையும் குறிப்பால் விளங்குகிறது.

இங்குத் 'திருமுகம்' என்பதனைச் செம்மொழியாகக் கொண்டு கடிதத்தையும், 'திரு, முகம்' எனப் பிரித்துத் திருவையுடைய தலைவியது முகத்தையும் பொருளாகக் கொள்ள வேண்டும்.

## சொற்பின் வருநிலையணி

"முன்வரும் சொல்லும் பொருளும் பலவயின்
பின்வரு மென்னிற் பின்வரு நிலையே"181

என்பது தண்டியலங்காரம். இதற்கு எடுத்துக்காட்டாக விளங்குவது திருக்கோவையாரில் வரும் பின்வரும் பாடல் :

"நாகந் தொழவெழி லம்பல நண்ணி நடநவில்வோன்
நாக மிதுமதி யேமதி யேநவில் வேற்கையெங்கண்
நாகம் வரவெதிர் நாங்கொள்ளு நள்ளிருள் வாயநறவார்
நாக மலிபொழில் வாயெழில் வாய்த்தநின் நாயகமே."182

இதில் 'நாகம்' என்ற சொல் மீண்டும் மீண்டும் வெவ்வேறு பொருளில் வரக்காணலாம்.

முதலடி : நாகம் - பதஞ்சலியாகிய ஆதிசேடன்
இரண்டாமடி : நாகம் - நாகமரத்தின் பூ
மூன்றாமடி : நாகம் தலைவனை யானையாக உருவகித்தது
நான்காமடி : நாகம் - மலை

இவ்வாறு நாகம் என்று பன்முறை வந்து பாம்பு, பூ, யானை, மலை என்னும் வெவ்வேறு பொருள்களைத் தருவதால் இப்பாடல் சொற்பின் வருநிலையணி யாயிற்று.

## முரண் அணி

"மாறுபடு சொற்பொருள் மாறுபாட் டியற்கை
விளைவுதர வுரைப்பது விரோத மாகும்"183

என்று தண்டியலங்காரம் இவ்வணியை விளக்குகிறது.

"செந்திற மேனி வெண்ணீ றணிவோன்"184 என்னும் திருக்கோவையார்ப் பாடலில் செம்மை, வெள்ளை என வந்து சொல் முரண் இருந்தமையைக் காணலாம்.

"மொய்ம்மலர்க் காந்தளைப் பாந்தளென் றெண்ணித்தன்
னொண்டொளித்துக்
கைம்மலர்க்கண் புதைத்துப் பதைக்குமெல் லார்மயிலே"
185

என்னும் பாடலில் பாம்புக்கு மயிலஞ்சுவது என்பதால் பொருள்முரண் அணி வந்துள்ளது.

"சிறுகண் பெருங்கைத் திண்கோட்டுக் குழைசெவி"186
எனும் பாடலில் சிறுகண், பெருங்கை என்றும், திண்கோடு, குழைசெவி என்றும் சொல் முரண் தோன்றியவாறு காணலாம்.

"அழைகரும் கருங்கடல் வெண்திரைக் கைகொண்டு போய்
அலர்வாய்"187

என்னும் திருவிருத்தப் பாடலில் கருங்கடல் வெண்திரை எனச் சொல் முரண் இடம் பெற்றுள்ளது. அங்ஙனமே,

"உரியன வெண்முத்தும் பைம்பொன்னும்"188
என்னும் பாடலில் வெண்முத்தும் பைம்பொன்னும் என வெண்மை, பசுமை வந்து சொல் முரணணி அமையக் காணலாம்.

## வேற்றுப்பொருள் வைப்பணி

"முன்னொரு தொடங்கி மற்றது முடித்தற்குப்
பின்னொன்று பொருளை உலகறி பெற்றி
ஏற்றிவைத் துரைப்பது வேற்றுப்பொருள் வைப்பே"189

என்று இவ்வணியை விளக்குகிறது தண்டியலங்காரம்.

"பரிவுசெய் தாண்டமலத்து" என்னும் பாடலில் வரும்
"பிரிவுசெய் தாலரி தேகொள்கை பேயொடு மேனும் பெற்றி
இருவிசெய் தானி னிருந்தின்று காண் கிளிங்கிளியே"190

என்று வரும் அடிகளில் வேற்றுப் பொருள் வைப்பணி இடம்பெற்றுள்ளது.

'பேயொடு பழகினும் பிரிதலரிதே' எனும் உலகறி தன்மையின் பொருளைத் தினைக்கதிர் அரியப்பட்டு வறியதாக சொய்த தட்டையுடைய தாளிலேயிருந்து இளங்கிளிகள் அகலாது உறைகின்றன என்பதால் வேற்றுப்பொருள் வைப்பணி வந்துள்ளமையைக் காணலாம்.

## பரியாய அணி

> "கருதியது கிளவா தப்பொருள் தோன்றப்
> பிறிதொன் றுரைப்பது பரியா யமமே"191

என்று தண்டியலங்காரம பரியாய அணியை விளக்குகிறது.

> "கோடார் கரிகுரு மாமணி பூசலைக் கோபபழித்துத்
> தோடார்மதுமலர் நாகத்தை றாக்குநஞ் சூழபொழிற்கே"192

என்னும் திருக்கோவையார்ப் "பாடலடிகளில் பரியாய அணி இடம் பெற்றுள்ளது. ஆந்தறக்கியன்ற ஊசலை விழத்தி யானை நாகமரத்தைக் கோட்டாற் குத்தித் தள்ளுகிறது என்று தோழி நற்றாயின துயிலறிவதற்கு கூறுகின்றாள், இவ்வாறு கூறவும் தாய் ஏதும பதில சொலலாதிருப்பின் தாய் துயின்றாள் ,என்றறிந்து குறியிடத்துத் தலைவியைத் தோழி அழைத்துச் செல்வாள்.

கருதியதனைச் சொலலாது அந்தப்பொருள் தோன்ற வேறொன் றனைச் சொல்வது பரியாய அணியாகும். எனவே, தோழி 'துயின்றாயா?' என்று தாயைக் கேட்காமல் துயிலறிய வேறொன்றினைக் கூறியதால இது பரியாய அணியாயிற்று.

## வஞ்சப் புகழ்ச்சி அணி

ஒரு பொருளைப் புகழவது போலப் பழித்தலும அல்லது பழிப்பது போலப் புகழ்தலும் வஞசப புகழ்ச்சி அணியாகும.

> "புகழ்வது போலப பழித்திறம புனைதலும
> பழிப்பது போலப் புகழ்புலப் படுத்தலும்
> அவையு மன்னதென் றறைகுந ருளரே"193

என்று தண்டியலங்காரம இவ்வணியை விளக்குகிறது.

மதியே! நாஙகள புறப்பட்டுத் தலைவனைக் காணச் செல்ல வேணடிய சமயத்தில இருளை நீக்கி நீ செய்கின்ற முதன்மையான உதவி அறிவுடையதாயிருக்கிறது' என்கிறாள் தோழி. இதில் சந்திரனைப் புகழவது போலப பழிக்கும் வஞ்சப் புகழ்ச்சி அணி வநதிருக்கிறது.194

"பேர்கின்றது மாமைமை"195 என்னும் திருவிருததப் பாடலில மாமையிழந்தது முதலியவற்றை 'வளம்' என்றது புகழ்வது போலப் பழிக்கும் வஞ்சப் புகழ்ச்சி அணி. அங்ஙனமே "அன்னம் செல்வீரும்"

ஆனால் அந்த இடம் சூரியன் தன் வாயினால் முழுஞாலத்தையும் மென்று கோதாக உமிழ்ந்துவிடும் இடமே பாலையாகிறதாம். இதில் இயல்பாகச் சூரியனின் வெயிலாலும் மழையின்மையாலும் நேரும் பாலையைக் கவிஞன் தன் குறிப்பு ஏற்றி ஞாலத்தையும் சூரியன் மென்று உமிழ்ந்த கோதான கொடிய இடமே பாலை என்பதில் தற்குறிப்பேற்றவணி பொலிகின்றது.199

இது "ஞானிலம் வாய்க்கொண்டு" என்று தொடங்கும் திருவிருத்தச் செய்யுளாகும்.

"அழைக்கும் கருங்கடல்"200 என்றும் பாடலிலும் தற்குறிப் பேற்ற அணி பயின்றுள்ளது.

"கடல் மிக உயர்ந்த அலைகளை வீசுகிறது. உயர்ந்த அலைகளை |வீசும் நாள் பௌர்ணமி நாள் போலும். மலையிலுள்ள மலை முகட்டிலிருந்து வெள்ளம் பரவுகிறது. அன்று நல்ல மழை. கடலும் நிலமும் ஒன்றோ என்று தெரியுமாறு பெய்த நல்ல மழை. இதில் கவிஞர் தம் கற்பனையால் குறிப்பை ஏற்றி அழகிய பாடலைச் செய்துவிடுகிறார்"

கருங்கடலின் நடுவே ஆதிசேட சயனத்தில் திருமால் பள்ளி கொண்டிருக்கிறார். கடலில் பிறந்தவள் ஸ்ரீதேவி. எனவே, அவளைக் கடல் தன் திரைகளாகிய கைகளில் மெதுவாகப் பிடித்து அழைத்துச் சென்று ஆதிசேட சயனத்தில் பள்ளிகொள்ளும் திருமாலினிடம் கொண்டுபோய் விடுகிறதாம். திருமாலும் திருமகள் வந்தவுடனே அவளைக் கட்டித்தழுவிப் பூரித்துப் போகிறாராம். இதைக் கண்டு பூதேவியோ, "என் கண் முன்னாலேயே இப்படி செய்கிறாரே! திருவினிடத்திலே மிகவும் மோகமாகி எனக்குக் கொடுமை இழைக்கிறாரே திருமால்" என்று ஓவெனக் கூச்சலிட்டுத் [இடி, வெள்ளம் ஆகியவற்றின் பேரொலி] தன் கொங்கைகளாகிற மலைகளின் மேல் நீர் (தண்ணீர்) வழிய (வெள்ளமாகப் பெருக) அழுகின்றாளாம். மலைமேல் மழைபொழிய வெள்ளம் வருதலையும் கடல பொங்குதலையும் வைத்துக் கொண்டு கவிஞர் அருமையான தம் குறிப்பை ஏற்றிப் பாடுகிறார்.

## திரிபணி

இது சொல்லணியுள் ஒன்று. மற்றொன்று யமகம். முதற் சீரில் அடிதோறும் முதலெழுத்து மட்டும் வேறுபட்டு மற்றைய எழுத்துக்கள் ஒன்றுபட்டு வருவன திரிபின்பாற் படும். ஆனால் பொருளோ அடி தோறும் வேறுபடும். இதைச் சிலேடை என்றும் கூறலாம். யமகம், திரிபு

யிலிருக்கும் காளைகள் எழும்பிக் குதித்து ஆகாயத்திலேறிப் போர் புரிகின்றன இப்போரில் இரண்டு எருதுகளுமே மிகுந்த வலிமை பெற்றும், வெற்றி தோல்வி காண முடியாதவாறும் விளங்கின. அதனால் அவை நிலத்தில் சண்டையிட்டு அவ்விடம் போதாததால் வானத்தில் ஏறிச் சண்டையிட்டன.

''கடல் கொண்டெழுந்தது வானம்''205 என்னும் பாடலில் உயர்வு நவிற்சியணி வந்துள்ளது. உயர்ந்த கடலலை எழுவதைக் கடல் மேகத்தினிடம் கோபித்துக் கொண்டு தன்னிடமிருந்து எடுத்த நீரை மீட்டுக் கொள்ளச் சென்றதாம். (தற்குறிப்பேற்ற அணியுமாகும்)

'அலைகள் உயரமாக எழும்பின' என இயல்பாகச் சொல்லாமல் அவை, 'எம்மிடமிருந்தல்லவா நீரை எடுத்தீர்; அதனைக் கொடுக்கா விட்டால் சண்டையிடுவேன்' என்று மேகத்திடம் கோபித்து, உயர்ந்து சென்றன என்று உயர்வு நவிற்சியில் கூறுகிறார் கவிஞர்.

''விசும்பியங்கி நைகின்ற திங்கள் எய்ப்பாறும் பொழில்''206 என்னும் திருக்கோவையார்ப் பாடல் அடியிலும் இவ்வணி வந்துள்ளது. விசும்பில் இயங்குதலால் வருந்தும் சந்திரன் வானளாவிய திருமலை நகரப் பொழில்களில் தங்கி இளைப்பாறிச் செல்லுகின்றான் என்கிறார் மாணிக்கவாசகர்.

''வெற்பகச் சோலையின் வேய்வளர் தீச்சென்று விண்ணினின்ற
கற்பகச் சோலை கதுவுங்கல் நாடவிக் கவலதரே''207

என்னும் பாடலடிகளிலும் உயர்வு நவிற்சியணி காணப்படுகிறது. மலையின்கண் உள்ள சோலைகளில் மூங்கில்கள் ஒன்றோடொன்று உராய்ந்து தீப்பற்றின. அம்மூங்கில் காட்டில் வளர்ந்த தீ விண்ணில் உள்ள கற்பகச் சோலையைப் பற்றும் என்கிறார் மாணிக்கவாசகர்.

## உள்ளுறை உவமம்

அகப்பொருளில் மட்டுமே வருகின்ற உள்ளுறை உவமம், இறைச்சி ஆகியவற்றை நோக்குவோம்.

''உள்ளுறை உவமம் உய்த்துணர் வகைத்தாய்
புள்ளொடும் விலங்கொடும் பிறவொடும் புலப்படும்''208

என்று உள்ளுறை உவமம் விளக்கப்படுகிறது.

''எரியகைந் தன்ன தாமரைப்பூ பழனத்துப்
பொரியகைந் தன்ன பொங்குபல சிறுமீன்
வெறிகொள் பாசடை உணீஇயர் பைப்பயப்

பறைகடு முதுசிரல் அசைபுவந் திருக்கும்''209
எனனும் சங்கப்பாடற் பகுதியில் உள்ளுறை உவமம் உள்ளது

மீன் இருக்கும் இடத்துக்கு அண்மையில் முதுசிரல் அமர்ந் திருந்தது எனினும் அதற்கு மீன் கிடைக்கவில்லை. தொலைவில் உள்ள மரக்கிளையிலிருந்து வருகிற இளமையான சிரல் மீனை எடுத்துச் சென்றுவிடுகிறது. இளமை கழிந்த தலைவியால் தன் கணவனை அகப்படுத்த இயலவில்லை; ஒரில்லில் வாழும் நிலையிலிருந்தும் எங்கிருந்தோ வந்த எவளோ ஒரு பரத்தைக்கு இளமை காரணமாக அது முடிந்தது. இவ்வுள்ளுறை உவமையைப் பேசியவள் பரத்தை.

> ''அன்புடை நெஞ்சத் திவள்பே துறவம் பலத்தடியார்
> என்பிடை வந்தமிழ் தூறநின் றாடி யிருஞ்சுழியிற்
> றன்பெடை நையத் தகவழித் தன்னஞ் சலஞ்சலத்தின்
> வன்பெடை மேற்றுயி லும்வய லூரன் வரம்பிலனே''210

என்னும் திருக்கோவையார்ப் பாடலில் உள்ளுறை உவமம் அழகுற அமைக்கப்பட்டுள்ளது.

தனக்குரிய இடம் ஒன்றிருக்கவும் அதனை மறந்து தன் செல்வச் செழிப்பால் வேறெங்கோ சென்றுவிடுகிறான் தலைவன். அதனைக் கண்ட தலைவி கேட்குமாறு, அவள் தோழியர் முன்னிலைப் புறமொழியாகக் கூறுகின்றனர்.

அன்னப்பெடை மிக்க அழகினது; அதனைத் தவிக்க விட்டு விட்டு ஆண் அன்னம் சலஞ்சலச் சங்கினது பெடையின் மேல் படுத்து உறங்குகிறது.

அங்ஙனமே தலைவன் அழகிய மனைவியைத் தவிக்க விட்டுப் பரத்தையால் போகம் விரும்பிப் போகிறான். 'இரதி' போன்ற தன நாயகி இருக்கும்போதே அவன் விரும்பிய நாயகியும் பரத்தை) மிக எழிலாகவே விளங்கினாள்.

'வன்பெடைமேற் றுயிலும்' என்பதில் பரத்தையது வன்கண்மை விளங்கும். தன் பெடையெனத் தலைவியின் அன்பின் அருமை காட்டியும், வன்பெடையைப் பரத்தையர் அன்பின்மையைக் காட்டியும் நின்றன தொடர்கள். அன்புடைய தன் பெடை வருந்த அன்பில்லாததும் தன் மரபுக்குப் பொருந்தாததுமான சங்கின் பெடையுடனே அன்னந் துயில்கின்ற நாடன் ஆதலால் தன் நாயகி வருந்தத் தன்மாட்டு அன்பில்லாதாளும் தன் மரபுக்குப் பொருந்தாதவளுமாகிய

பரத்தையருடனே உறையும் தகுதியின்மையையும் கூறித் தலைமகனை பழித்தது உள்ளுறை உவமம் ஆயிற்று.

“மெய்வத்த கன்னியர்”211 என்னும் திருக்கோவையார்ப் பாடலில் “மாமதியின் அயல்வந்த ஆடரவு ஆடவைத்தோன்” என்னும் தொடரில் அரிய உள்ளுறைப் பொருள் அமைந்துள்ளது.

மதிக்குவமை தலைமகளும், அரவிற்குவமை தலைமகனும், ஈசனுக்குவமை தோழியும் என்றாக்கி அவ்வகைத்தாகிய பாம்பையும் மதியையும் தம்மிற் பகையறுத்துச் சிவபிரான் ஓரிடத்தே விளங்கச் செய்தாற்போல் என்னுடன் அவனுக்குண்டாகிய வெறுப்பைத் தீர்த்து விளங்க வைத்தல் தோழியாகிய நினக்குக் கடமையாகும் என தலைவன் தோழியை நோக்கிக் கூறுவது உள்ளுறை உவம இன்பத்தினை மிகுவிக்கிறது.

“அந்தியின் வாயெழில்”212 எனும் பாடலிலும் உள்ளுறை உவமம் வருகிறது. “மந்தி உயிர் வாழ்வதற்குக் காரணமாகியவற்றைக் கடுவன் தானே கொடுத்து மனமகிழ்வித்தற்போல அவள் உயிர் வாழ்வதற்குக் காரணமாகிய நின் வார்த்தைகளை நீயே கூறி அவளை மனமகிழ்விப்பாய்” என்று தோழி கூறுவதில் உள்ளுறை உவமம் வந்தது.

“தெள்ளி மயரி சநக முநதி”213 எனும் பாடலில் உள்ளுறை உவமம் வருகிறது

யாவருமறியா இந்த மலைக்கண் கட்டிய தேன் முதிர்ந்து கீழ் ஒழுகி அருவி போன்று எல்லாருங் காணத் திசை பரந்தாற்போலக் கரந்த காமம் தலைவியின் கொங்கை வேறுபாட்டால் புறத்தார்க்குப் புலனாய் வெளிப்பட நின்றதென உள்ளுறை உவமம் வந்துள்ளது.

## இறைச்சிப் பொருள்

“கருப்பொருட் பிறக்கும் இறைச்சிப் பொருளே”214. இறைச்சிப் பொருள் தெய்வ முதலாகிய பொருளின் கண்ணே தோன்றுவது.

“குராப்பயில் கூழை”215 எனும் திருக்கோவையார்ப் பாடலில் இறைச்சிப் பொருள் வந்துள்ளது இங்குக் “கராப்பயில் பூம்புனலூரன்” என்புழி நீருள் இறங்கியவுடனே ஆளைப் பிடித்திழுக்கும் முதலை போன்ற பரத்தையர் மிக்கிருக்கின்ற ஊர் என மருதநிலக் கருப்பொருள் (முதலை) புறத்தே இறைச்சி தோன்றிற்று.

"புயன்மன்னும் குன்றிற் பொருவே ழனைபாய்ந்துபொம்
மென்னிருள்வாய்
அயன்மன்னும் யானை துரந்தரி தேரு மதரகத்தே"216

எனும் திருக்கோவையார்ப் பாட்டில் மேகம் தங்கிய இக்குன்றில் செறிந்த இருளின் கண்ணே, சிங்கம், பக்கத்திலே தங்கும் யானையை ஓடச் செய்து பின்னர் வேறு விலங்குகளைத் தேடும் வழியகத்து என்ற பொருளில், 'நான் இப்பொழுது அணுகி வந்த எம் தலைவனைக் கை கடக்கவிட்டு விடின் பின்னர் அவரை நாடி அடைதலும் கூடும் என்று பொருட் புறத்தே இறைச்சிப் பொருள் தோன்றியது.

"நறமனை வேங்கையின் பூப்பயில் பாறையை நாகநண்ணி
மறமனை வேங்கையென நனி அஞ்சும்"217

எனும் திருக்கோவையார்ப் பாடலில் இறைச்சிப் பொருள் தோன்றியது.

கரிய கற்பாறையில் வேங்கைப் பூ உதிர்ந்து கிடத்தலின் அதனை யானை வேங்கை கிடப்பதாகக் கருதி அஞ்சும். ஒன்றனை ஒன்றாகக் கருதும் நாடனாதலால் தெய்வத்திற்குரிய பூக்களைச் சூடாத எம்மைச் சூடுவோம் என்று நேர்ந்தாய். ஏனெனில் தூய்மையான் அச்சப் படாத தனையும், அஞ்சா நிலமாகலான் எங்குலத்திற் கேலாத அணங்கவரை யாமணுகுதல் செல்லவேண்டுமோ என்பது பொருட் புறத்ததாகத் தோன்றிய இறைச்சியாம்.

"பாணிகர் வண்டினம்"218 என்ற பாடலில் "பூணிகர் வாளரவா" என்ற தொடரில் இறைச்சிப்பொருள் தோன்றியது. பூணை யொக்கும் ஒளியையுடைய அரவையணிந்தவன் என்பது "நல்லோர் போன்று காணப்படுகின்றாய். எனினும் மிகவும் தீமை செய்பவன் நீ" என்பது இறைச்சியாகப் பொருட்புறத்தே தோன்றியது. பாம்பு மேனிக்கு ஆபரணம் போன்று விளங்கினாலும் அது 'நஞ்சுடைமையை உடையது' என்ற பொருள் தோன்றியதால் தலைவன் மேனிக்கு நல்லவன் என்றும் உள்ளே (அகத்தை) கெட்ட குணமும் உடையவன் என்றும் தலைவி கூறுகிறாள்

## முடிவுரை

மாணிக்கவாசகரும் நம்மாழ்வாரும் தம நூல்களில் வரும் அகப் பொருள் தலைவன், தலைவி, தோழி, பாங்கி, பாங்கன், நற்றாய்

முதலான பாத்திரங்களைப் பழந்தமிழ் மரபிற்கேற்பச் சிறந்த முறையில் படைத்துள்ளனர்.

இருவருடைய பாடல்களும் பிரகிருதியான அளவிற்கு நாடகப்பாங்கு உடையனவாக விளங்குகின்றன.

ஆளி, புலி, கரடி, யானை, சிங்கம், ஏறு, மான், வானரம், பசு ஆகிய விலங்குகளை இவர்கள் பாடல்களில் விளக்கிக் கூறக் காண்கிறோம். பாடலின் நிகழ்ச்சிப் பின்னணிக்கு ஏற்ற வகையில் இவற்றை ஆசிரியர்கள் பயன்படுத்திக் கொண்டு உள்ளனர்.

அன்னம், கருடன், மயில், அன்றில், காக்கை, குயில், சேவல், வௌவால், வண்டு ஆகிய பறப்பனவும், நண்டு, மீன், பல்லி முதலிய பிற உயிரினங்களும் ஆங்காங்கே குறிப்பிடப்பட்டுள்ளன.

வேங்கை, கொன்றை, மூங்கில், கோங்கு, தோன்றி, அனிச்சம், தினை ஆகிய பயிரினங்கள் இவர்கள் பாடல்களில் குறிப்பிடப் பெற்று உள்ளன.

திருவிருத்தமும் திருக்கோவையாரும் கட்டளைக் கலித்துறையில் பாடப்பட்டுள்ளன இரு நூல்களிலும் ஐந்தாம் சீர் விளங்காய்ச்சீர் ஆக இல்லாமல் விளங்கனியாகவோ, தண்பூவாகவோ அமைந்த சில பாடல்களைக் காண்கிறோம்.

கட்டளைக் கலித்துறை, தாழிசைகள் அல்லது தரவு கொச்சகம் என்னும் பெயர்களில் அக்காலத்தில் வழங்கப்பட்டிருக்க வேண்டும்.

திருக்கோவையாரில் துறைகள் ஒவ்வொன்றற்கும் உதாரண வாய்பாடுகள் உரையாசிரியர்களால் இயற்றப்பட்டுள்ளன. இவை 'கொளு' எனப்படும்.

எதுகை, மோனை, முரண், அந்தாதி முதலான தொடை யழகுகளை இருவர் நூல்களிலும் காண்கிறோம்.

நம்மாழ்வாரும் மாணிக்கவாசகரும் உவமையணியினை மிகச் சிறப்பாகக் கையாண்டிருக்கிறார்கள்.

உருவக அணி, ஏகதேச உருவக அணி, சிலேடையணி, சொற் பின் வருநிலையணி, முரண் அணி, வேற்றுப்பொருள் வைப்பணி, பரியாய அணி. வஞ்சப் புகழ்ச்சி அணி, தற்குறிப்பேற்ற அணி, திரி பணி, உயர்வு நவிற்சி அணி, உள்ளுறை உவமம், இறைச்சி முதலிய

அணிவகைகள் திருவிருத்தத்திலும் திருக்கோவையாரிலும் சிறந்த முறையில் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன.

நம்மாழ்வாரும் மாணிக்கவாசகரும் தம் நூல்களில் இலக்கிய உத்திகள் அனைத்தையும் உள்கொளத்தக்க வகையில் மிகச் சிறப்பாக அமைத்துள்ளனர் எனலாம்.

# இலக்கிய உத்திகள்

## குறிப்புக்கள்

1. மு.வை. அரவிந்தன், 'திருக்குறளும் சங்க இலக்கியமும்', ப.72.
2. அ. சிதம்பரநாதன், 'முன்பனிக்காலம்' புத்தக நிலையம், திருச்சி, 1961. ப.92.
3. சிலம்பு, ஆய்ச்சியர் குரவை, ப.397.
4. குறள் 332.
5. பட்டினப்பாலை. அடிகள் 113-115.
6. மதுரைக்காஞ்சி, அடிகள் 628-632.
7. தண்டியலங்காரம், உதாரணச் செய்யுள், ப 145.
8. தொல். பொருள். அகத்திணையியல், நூ. 1002.
9. கோ. சுந்தரமூர்த்தி, 'பண்டைத் தமிழ் இலக்கியக் கொள்கைகள் தி.ரா. தாமோதரன் (தொ-ர்), சர்வோதய இலக்கியப்பண்ணை, மதுரை, 1979, ப.59.
10. திருக். 219.
11. பொ.வே. சோமசுந்தரனார் (உ-ர்). 'திருக்கோவையார்'. கழகம், சென்னை, 1971, ப.352.
12. பி.எல். சாமி, 'சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம்'. கழகம். சென்னை. 1970, ப.370
13. மு வரதராசன், 'பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை', ப.398.
14. அகம் 73.
15. ,, 252.
16. ,, 331.
17. நற்றிணை 206
18. திருக். 253.

19. சொ. சிங்காரவேலன், 'திருஞானசம்பந்தர் வரலாற்றாராய்ச்சியும் தேவாரத் திறனாய்வும்', ப.3.
20. திருக். 151.
21. ,, 255.
22. பி.எல். சாமி, 'சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம்'' ப. 24
23. குறள் 599.
24. அகம் 251.
25. திருக். 239.
26. ,, 72.
27. அகம் 81.
28. ,, 112.
29. ,, 72.
30. பி.எல். சாமி, 'சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம்', பக்.201, 202
31. மே.நூ. ப.203
32. திருக். 264.
33. ஐங்குறுநூறு 266.
34. அகம் 248.
35. திருக். 251.
36. அகம். 78, புறம், 93.
37. பெருங்கதை, இலாவாண காண்டம், 12, மாசன மகிழ்ந்தது. அடி 142, (1971) கழகம்
38. அகம் 78.
39. திருக். 52.
40. ,, 255.
41. ,, 254.
42. ,, 265.
43. , 253.
44. ,, 154.
45. ,, 100.
46. ,, 111.
47. திருக்கோவையார் 52

48. திருக்கோவையார் 313.

49. ,, 254.

50. ,, 251.

51. பி.எல். சாமி, 'சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம்', ப.329

52. திருக். 156, 157.

53. ,, 253.

54. திருவி. 2498.

55. கலித்தொகை, முல்லைக்கலி, 103/63-64.

56. திருக். 136.

57. ,, 29, 274.

58. ,, 53.

59. ,, 99.

60. ,, 257.

61. திருக்குற்றாலக் குறவஞ்சி, பா 54.

62. திருக். 262.

63. ,, 193.

64. ,, 95.

65. திருவி. 2561.

66. திருக். 276.

67. திருக். 276.

68. குறுந்தொகை 38.

69. திருக், 250.

70. ,, 386.

71. நற்றிணை 310, அடி 9.

72. தஞ்சைவாணன் கோவை, பா 393.

73. நன்னூல், பாயிரம், நூ.87.

74. நாலடியார் 135.

75. திருவி, 2543.

76. திருக். 36, 78.

77. ,, 172.

78. ,, 184

79. கம்பராமாயணம், சூர்ப்பநகைப்படலம், பாடல் 31.

80. திருவி. 2496.

81. ,, 2480.

82. திருக் 224.

83. ,, 851.

84 ,, 21.

85. ,, 847, 154.

86. ,, 77.

87. குறள் 527.

88. திருக். 235.

89. ,, ,,

90. ,, ,,

91. ,, 71.

92. பெரியாழ்வார் திருமொழி 328.

93. கம்பராமாயணம், சுந்தர காண்டம், காட்சிப் படலம், 28.

94. திருக். 235.

95. ,, ,,

96. திருககோவையார் 285, 30, 36.

97. ,, 224.

98. ,, 351.

99. ,, 285.

100. ,, 318.

101. பி.எல். சாமி, 'சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம்', பக்.442-448.

102. திருக். 375.

103. ,, 193.

104. ,, 364.

105. பெரியாழ்வார் திருமொழி 353/3-4.

106. நளவெண்பா 97.
107. திருக். 66.
108. ,, 184.
109. ,, 84.
110. நற்றிணை 35.
111. திருவி. 2479.
112. திருக். 249.
113. அகம். 151.
114. திருவி. 2525.
115. நன்னூல், நூற்பா 127.
116. மே. நூ. ,, 57.
117. திருக். 138.
118. ,, 138, பேராசிரியர் உரை.
119. திருக். 96.
120. குறுந்தொகை 47.
121. பி.எல். சாமி, 'சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம்', பக்.262-263.
122. கலித்தொகை, பா.28.
123. திருக். 141.
124. ,, 108.
125. புறம், கடவுள் வாழ்த்து.
126. திருக், 282.
127. ,, 119, 120.
128. ,, 130.
129. திருஞானசம்பந்தர் தேவாரப் பதிகம் 69. பாடல் 9
130. திருக், 13, 26, 46.
131. திருக். 325.
132. குறள் 90.
133. ,, 1115.
134 ,, 1120.
135. ,, 1119.

136. திருக்குறள், சொற்பொருள் அகரவரிசை, கழகம், சென்னை, ப. 16.

137. திருக். 211.

138. ,, 140, 142.

139. குறிஞ்சிப்பாட்டு, அடிகள் 35-37.

140. யாப்பருங்கலக் காரிகை, கழகம், சென்னை, 1944, ப. 208.

141. பு. ரா. புருஷோத்தம நாயுடு, கட்டுரைக் கதம்பம்', பக். 52-53

142. கீழ்வரும் பாடல்களில் எதுகை மோனை நலங்கள் சிறந்து விளங்குகின்றன.

திருக். 64,75,79,87,97,104,131,134.144,256 முதலியன.

திருவி. 2507, 2554 முதலியன.

143. திருக். 9,

144. ,, 79.

145. ,, 83.

146. திருவி. 2508

147. திருக். 15

148. ,, 67.

149. ,, 73.

150. திருவி. 2529.

151. யாப்பருங்கலக் காரிகை, செய்யுளியல், நூ. 17.

152. மே. நூ., நூ. 47.

153. மு. வரதராசனார், 'பழந்தமிழிலக்கியத்தில் இயற்கை', ப. 534.

154. கா. சுப்பிரமணிய பிள்ளை; 'மணிவாசகப் பெருமான் வரலாறு', ப. 94.

155. திருக். 212.

156. ,, 109.

156–அ ,, 355.

157. ,, 301.

158. திருவி. 2494.

159. கம்பராமாயணம், அயோத்தியா காண்டம், கங்கைப்படலம் 1.

160. திருவி. 2516

161. கம்பராமாயணம், ஆரணிய காண்டம், மாரீசன் வதைப்படலம், 149.

162. திருவி. 2520.

163. ,, 2519.

164. ,, 2541.

165. குறள். 100.

166. திருநாவுக்கரசர் தேவாரம். ஆரூர் பாடல் 1.

167. கண்டியலங்காரம், நூ. 36.

168 திருக். 365.

169. குறள் 1302.

170. திருக். 74.

171. திருவி. 2512.

172. ,, 2554.

173. ,, 2512.

174. திருக். 244.

175. கண்டியலங்காரம், நூ. 32. ப. 50.

176. திருவி. 2559.

177. கண்டியலங்காரம், நூ. 76.

178. மே.நூ , நூ.77.

179. திருக். 85.

180. ,, 327,

181. கண்டியலங்காரம். நூ. 42.

182. திருக். 171

183. கண்டியலங்காரம், நூ. 82.

184 திருக். 69.

185. ,, 283.

186. ,, 313.

187. திருவி. 2529.

188. ,, 2488.

189. கண்டியலங்காரம், நூ. 47.

190. திருக். 144.

191. தண்டியலங்காரம். நூ. 72.

192. திருக். 161.

193. தண்டியலங்காரம், நூ. 66.

194. திருக். 171.

195. திருவி. 2489.

196. ,, 2507.

197. திருக். 86.

198. திருவி. 2496.

199. திருவி. 2503.

200. ,, 2529.

201. ,, 2532.

202. ராய. சொக்கலிங்கம், 'காவேரி' அழகு பதிப்பகம், காரைக்குடி 1967, பக். 54, 55.

203. மு. வரதராசனார், 'பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை,' ப.163.

204. திருவி. 2484.

205. ,, 2495.

206. திருக். 223.

207. ,, 168.

208. நம்பியகப்பொருள், நூ. 238.

209. அகம். 166.

210. திருக். 377.

211. ,, 381.

212. ,, 99.

213. ,, 128

214. நம்பியகப்பொருள், நூ. 240.

215. திருக். 362.

216. ,, 395.

217. ,, 96.

218. திருக். 184.

## "ஐந்திணை யுறுப்பில் நாற்பொருள் பயக்கும் காமஞ் சான்ற ஞானப் பனுவல்"

### இயல் - ஐந்து

# மெய்ப்பொருள் கூறுகள்

திருக்கோவையார், திருவிருத்தம் ஆகிய இரண்டு நூல்களும் மெய்ப்பொருளியல் கருத்துக்களை ஆங்காங்கே எடுத்துச் சொல்கின்றன.

"பைந்தமிழ் நவின்ற செந்நாப் புலவன்
ஐந்திணை யுறுப்பில் நாற்பொருள் பயக்கும்
காமஞ் சான்ற ஞானப் பனுவற்கு"[1]

என்று குமரகுருபர சுவாமிகள் தம் சிதம்பர மும்மணிக் கோவையில் திருக்கோவையாரை ஒரு ஞானப் பனுவல் என்று கூறியிருப்பது அதன் பெருமையை உணர்த்துகிறது.

திருக்கோவையார் அகப்பொருட் கோவை நூலே ஆயினும் அதுவே ஒரு பேரின்பச் சார்பான நூலாகவும் விளங்குகிறது. இந் நூற்குப் பாட்டுடைத்தலைவன் திருச்சிற்றம்பலத்து நடராசப் பெருமான் கிளவித்தலைவன் சிலம்பன் என்றும் வெற்பன் என்றும் பல பெயர்களில வழங்கப்படுவான்.

"பக்தி முக்திக்கு உவமை பெற்றும், பேரின்பத்துக்கு
உவமை சிற்றின்பம் என வைத்து உடம்பையுடைய
போகிகள் பாலுற்ற சிற்றின்பம் அடங்கத் தன் பேரின்பமாக,
பேரின்பமான பிரமக்கிழத்தியோடு ஓரின்பமான அன்பே
சிவமாய், அருளே காரணமாக. சுத்தாவத்தையே
நிலமாக, நாயகி பரம்பொருளாக, நாயகன் பக்கு-
வான்மாவாக, தோழி திருவருளாக, தோழன் ஆன்ம
போதமாக, நற்றாய் பரையாக, திரோதாயி
செவிலித்தாயாக, மேலும் நாயகன் கூற்றெல்லாம்
நாயகி கூற்றாகவும், நாயகி கூற்றெல்லாம் நாயகன்
கூற்றாகவும் நிகழ்ந்து வரும். நாயகியைச்
சிற்றம்பலம்போல வருணிக்கையால் நாயகி
பரம்பொருளாயிற்று பெறுவான் நாயகனும்,
பேறு நாயகியுமாக இரசமும் நாவும்போல் இருந்த
வாறும், கொத்தும் நறையும், கருப்பொருளும்

உரிப்பொருளும் இடமும் எல்லாம் அருளின்பம் எனக் கொள்க"2

என்று திருக்கோவையாரின் பேரின்பச் சார்பான முறைமையைச் சீர்காழித் தாண்டவராயர் விளக்குகின்றார்.

''ஆரணங் காணென்பர் அந்தணர்
யோகியர் ஆகமத்தின்
காரணங் காணென்பர் காமுகர்
காமநன் னூலதென் பர்
ஏரணங் காணென்பர் எண்ணர்
எழுத்தென்பர் இன்புலவோர்
சீ ர ணங் காயசிற் றம்பலக்
கோவையைச் செப்பிடினே''3

என்று திருக்கோவையாரின் நூற்சிறப்பு இயம்புகிறது. இதன் பொருள் ''அந்தணர் இதனை வேதம் என்பர்'' சிவ யோகியர் ஆகமம் என்பர்; காமுகர் இன்ப நூல் என்பர்; தருக்கநூலார் எ ண் ணூ ல் என்பர்; தமிழ்ப் புலவர் இலக்கண நூல் என்பர்; மக்கள் இதனைத் திருச்சிற்றம் பலக் கோவையார் என்பர்'' என்பதாம்,

'துகளறு போதம்' என்னும் சைவ சித்தாந்த ஞானநூலின் பொருளையொட்டித் திருக்கோவையார் செல்கிறது என்று 'திருக் கோவையாருண்மை' என்னும் நூலின் ஆசிரியர் கருதுவர்.41

எனவே, திருக்கோவையார் மெய்ப்பொருள் கூறுகளைத் தன்ன கத்தே கொண்டது என்பது தெளிவாகிறது.

இதுபோலவே நம்மாழ்வாரின் திருவிருத்தமும் வைணவ மெய்ப் பொருளை உட்கொண்டிருக்கிறது.

'... எம்பெருமானும் பெரிய திருவடிமீது எழுந்தருளி, சேவை சாதித்து ஆழ்வாருக்கு மயர்வற மதிநல மருள, ஆழ்வாரும் அநுபவித்து, அவ்வநுபவ ஜநித ப்ரீதி உள்ளடங்காமல் ருக் யஜுஸ் அதர்வண வேதஸாரார்த் தத்தை முறையே திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி என்கிற திவ்யப் பிரபந்தங்களினும், ஸாம வேத ஸாரார்த்தத்தைச் சரமப்ரபந்தமான, திருவாய் மொழி திவ்யப் பிரபந்தத்தாலும் அருளிச்செய்து ..'5

என்று நம்மாழ்வார் வரலாறு பற்றிக் கூறப்படும் செய்தியால் திரு விருத்தம் 'ருக்' வேத ஸாரமாகவே விளங்குவதை அறியலாம்.

எனவே, திருக்கோவையாரும் திருவிருத்தமும் சிறந்த மெய்ப் பொருள் நூல்கள் என்பதில் ஐயமில்லை.

## இறைவன்

நாராயணன் என்று துதிக்கப்படும் விட்டுணுவே வைணவ சமயத்தின் பரம்பொருளாகும். நாராயணன் உலகையும் ஆன்மாக்களையும் அவற்றில் வியாபித்து இயக்குகின்றான்; உடலை ஆன்மா இயக்குவது போல ஆன்மாவைக் கடவுள் உள்ளிருந்து இயக்குகின்றான். ஆன்மாவிற்கு உடல் எப்படியோ அப்படிக் கடவுளுக்கு ஆன்மா உடல் ஆகிறது. ஆன்மா மட்டுமன்று; உலகமும் அவனுக்குச் சரீரமாகும். உள்ளது ஒன்றுதான் என்று கூறும் உபநிடதக் கருத்துக்கு விளக்கம் என்னவென்றால், 'சுதந்திரமுள்ள பொருள் ஒன்றுதான்; அது தான் திருமாலாகிய பரம்பொருள்' என்று கூறுவர். ஆன்மாவினுள்ளே அந்தர்யாமியாய் இருக்கும் திருமாலும் பரம்பொருளும் ஒன்றே என்று 'தத்துவமசி' என்னும் மகாவாக்கியத்திற்குப் பொருள் சொல்லப்படுகிறது. ஆன்மாக்களுக்கு வேறானவன், அந்தர்யாமியாயிருந்து ஆன்மாக்களையும் உலகங்களையும் இயக்குகின்றான். ஆன்மா, உலகம் ஆகியவற்றிற்கும் கடவுளுக்கும் உள்ள தொடர்பு வேறுபட்டவையானாலும் பிரிக்க முடியாதவை. அதனை 'அப்ருதக்சித்தி' என்று கூறுவர். பிரிக்க முடியாதவையாக இருந்தாலும் ஆன்மாவின் இன்ப துன்பங்கள் அவனை அணுகுவதில்லை; பாதிப்பதில்லை; கருணையே வடிவாய் அமைந்தவன்; வைகுண்டத்திலிருப்பவன்; கோயில்களிலுள்ள அர்ச்சாவதாரமாகிய சிலைகளில் இருந்துகொண்டே சிறப்பாகப் பக்தர்களைக் காக்கிறான் என்பன போன்ற கருத்துக்களையுடையது வைணவம்.6

ஆன்மாக்கள் பல; கடவுளுக்கு ஆன்மாக்கள் வேறானவை; நித்தியமானவை. எப்பொழுதும் முத்தி நிலையிலுள்ளவை என்றும், பக்த நிலையிலிருந்து முத்தி நிலைக்குச் சென்றவை என்றும், பத்த நிலையிலிருப்பவை என்றும் ஆன்மாக்கள் மூன்று வகையாக இருக்கின்றன என்பது வைணவர்களின் கோட்பாடு.7

உலகம் காணப்படுகின்ற உள்பொருள். அது திருமாலின் திருமேனி. காரணமாகிய கடவுளும் உண்மை; காரியமாகிய உலகமும் உண்மை. இராமாநுசர் பேதம், அபேதம், பேதாபேதம் என்று மூன்றையும் சொல்லிக் கடவுளுக்கும் ஆன்மாவிற்கும் உள்ள தொடர்பினை விளக்கியிருக்கிறார். இராமாநுசருடைய இக்கொள்கை வைணவக் கருத்தேயானாலும், சைவ சித்தாந்திகள் இறைவன் ஆன்மாக்களோடு ஒன்றாயும், வேறாயும், உடனாயும் உளன் என்பதோடு ஒப்பிடத் தக்கது.8

தத்துவத்தை விடச் சமயத்திற்கும் பக்திக்கும் வைணவம் சிறப்புத் தரும் அதுவும் எல்லார்க்கும் பொதுவும் எளிமையுமாகிய சரணாகதி என்னும் பிரபத்தியைப் பெரிதாகப் பேசும். முற்றும் தன்னைக் கடவுளிடம் ஒப்படைத்தலே சரணாகதியாகும். கன்மமும் ஞானமும் பக்திக்குத் துணையாகும்; அறியாமையும் கன்மங்களுமே பிறவிக்குக் காரணம்; பல பிறவிகள் உண்டு; திருமாலின் பேரருளினால் பிறப்பு நீங்கி அவன் வைகும் சீவைகுண்டத்தை ஆன்மா அடைவதே வீடுபேறாகும்.

வைணவம் இந்தியா முழுமையும் பரவியிருக்கும் மிகப்பழைய சமயம் ஆகும். தமிழ்நாட்டில் வழிபடுகின்ற திருமாலாகிய விட்டுணுவே பரம்பொருளாவான். விட்டுணு என்றால் எங்கும் நிறைந்தவன் என்று பொருள். வடக்கே பத்திரிநாத்திலிருந்து தெற்கே சீரங்கம் வரை பல்வேறு பெயர்களிலும் வடிவங்களிலும் வழிபடப்படுகின்றான் மறத்தை அழித்து அறத்தை மேலோங்கச் செய்யும் அவதாரத் தத்துவம் இச்சமயத்தில் சிறந்த இடம்பெறும. இவன் அலங்காரப் பிரியனாவான். ஆன்மாக்களுக்காகப் பரிந்து பேசி விட்டுணுவிடமிருந்து அருள் பெற்றுத்தருபவள் இலட்சுமிப்பிராட்டியே ஆவாள். அருள்பெறுவதற்குச் சிறந்த வழி பக்தி; சரணாகதியாகிய பிரபத்தியே எல்லோர்க்கும் எளிய வழியாகும். எட்டெழுத்து மந்திரமே இதற்கு உரியது. திருமண்ணும் துளசி மாலையும் வைணவச் சின்னங்களாகும்.

சைவ சமயம் இந்தியாவில் வரலாற்றுக் காலத்திற்கு முன்பிருந்தே பின்பற்றப்படும் மிகப்பெரிய சமயமாகும். இமயமலைப் பகுதி அமர் நாத்திலிருந்து தெற்கே இராமேசுவரம் வரை பரவியுள்ளது. இன்றும் வாழ்ந்து வருகின்ற சமயமாகும். காசுமீரத்தில் 'பிரத்தியபிஞ்ஞா' என்றும், தமிழ்நாட்டில் சித்தாந்த சைவம் என்றும் வழங்கப்படுகிறது. சைவ சமயத்திற்கு எல்லாம் வல்ல, எல்லாமறிந்த, எங்கும் நிறைந்த சிவனே பரம் பொருளாவான். சிவன் என்னும் சொல்லிற்கு 'மங்கலம்' என்றும், 'அருள்' என்றும் பொருள்.

ஆயிரக்கணக்கான கோயில்கள் இந்தியா முழுமையும் காணப் படுகின்றன. எல்லாக் கோயில்களிலும் அருவுருவமாகிய சிவலிங்கமே இடம்பெற்றிருக்கிறது சிவபெருமான் அபிடேகப் பிரியனாவான். சிவாகமங்களில் கூறப்படுகின்ற சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நான்கும் ஆன்மா இறைவனை நோக்கிச் செல்வதற்குரிய படி நிலைகளாகும். ஆன்மா தூய்மையடைவதற்கும வீடுபேறு அடையத் தகுதியடைவதற்கும் ஞான குருவால் தீட்சை கொடுப்பது இன்றியமை

யாததாகும். ஐந்தெழுத்து மந்திரம் இதற்கு உரியதாகும். திருநீறு. உருத்திராக்கம் ஆகிய இரண்டும் சைவ சமயத்தின் சின்னங்களாகும்.

பரம்பொருள் ஒருவன் உண்டு. அவ்வொருவன் சிவன்; ஆன்மாக்கள் பல; உலகம் படைக்கப்பட்டது; ஆணவம், கன்மம், மாயை ஆகிய மலங்கள் மூன்று. இறை வழிபாடுகளும் அடியவர் வழிபாடுகளும் இருகண்களென மதித்து மறவாது செய்தல் வேண்டும். புலால் உண்ணலாகாது; திருநீறு தரிக்க வேண்டும்; உருத்திராக்கம் அணிய வேண்டும்; ஐந்தெழுத்து மந்திரத்தை ஓதுதல் வேண்டும். கன்மங்களுக்கு ஏற்பப் பல பிறவிகள் உண்டு. குருவருளால் திருவருள் பெற்று வீடுபேறு அடைதல் வேண்டும். இவை சைவ நெறிகள் ஆகும்.

இங்ஙனம் சைவம், வைணவம் இரண்டும் இறைவன் தத்துவங்களை எங்கும் பரப்பின. ஆதிசங்கரர் ஞானமார்க்கமே சிறந்தது என்றருளி அத்துவிதத்தை நிறுவினார்; இராமாநுசர் கன்மம், பத்தி, பிரபத்தி ஆகியவற்றின் அடிப்படையில் விசிட்டாத்துவைதத்தை நிறுவினார். பின் வந்த மத்துவர் கன்மம், பத்தி ஆகியவற்றின் அடிப்படையில் துவைதம் என்னும் தத்துவத்தை விளக்கினார்.

மாணிக்கவாசகர் சிவனைச் 'செம்பொருள் துணிவு' என்று சொல்லி வணங்கியுள்ளார்.9 திருவள்ளுவர் சிறப்பென்னும் 'செம்பொருள்' என்பர்.10

திருவிருத்தம், திருக்கோவையார் எனும் நூல்களும் வேறு பிற பக்திப் பனுவல்களும் அகப்பொருள் இலக்கணம் அமையப் பாடப்பட்டிருந்தாலும் அனைத்தும் வீடு பேறு பெற வைப்பனவாகும்.

> ''அகப்பொருள் தமிழுக்கு உயர்நிலையாகும். இறையனார்
> அகப்பொருள் உரையே அதன் உண்மையை அறிவது
> ஆண்டவனுக்கன்றி மற்றையோருக்கு அரிது எனப்
> புலப்படுத்துகிறது.

என்று தெ.பொ. மீனாட்சிசுந்தரனார் கூறுவது இங்கு நினைவு கூரத்தக்கது.

பராங்குச நாயகியாகிய நம்மாழ்வாரும், மணிவாசக நாயகியாகிய மாணிக்கவாசகரும் தலைமகள் வார்த்தை, தாய் வார்த்தை, தோழி வார்த்தைகளால் தூது விடுதல், இரங்குதல், வெறிவிலக்குதல், காலமயக்கு, நலம் பாராட்டல், உருவெளிப்பாடு முதலிய பல அகப்பொருள் இலக்கணத் துறைகளைப் பாடியிருப்பினும் இவை உள்ளுறை பொருள் ஆகப் பேரின்பத்தைக் குறிக்கும்.

"அன்பினைப் பெருக்கி யரனடி யளித்தலால்
அன்பு நூலென மெய்யன்பின ரறையவும்"[12]

என்பர் தாண்டவராய சுவாமிகள். இதனால் திருக்கோவையார் அன்பு நூல், மெய்ப்பொருள் நூல் என்பது விளங்கும்.

"சேமநல் வீடும் பொருளும் தருமமும் சீரியநற்
காமமும் எனநிவை நான்கென்பர்"[13]

என்னும் இராமாநுச நூற்றந்தாதியில் 'சீரிய நற்காமம்' என்று சொல்லப் படுகிறது. இதன் வியாக்கியானத்தில், "சாஸ்திரங்களிலே சிலாகிக்கப் பட்டதாய்ப் போக்யமாய் விஹிதமாய் ஸ்வயம் புருஷார்த்தமான காமம்" என்பதனைக் கூறக் காணலாம்.

இங்கு இன்பமென்றது, "காதலிருவர் கருத்தொருமித்து ஆதரவு பட்டதே இன்பம்" எனப்படுகிற உலக வாழ்க்கைச் சிற்றின்பத்தை அன்று; "நான்கினும் கண்ணனுக்கே ஆமது காமம் அறம் பொருள் வீடிதற்கென்றுரைத்தான் வாமனன் சீலன் இராமானுசன் இந்தமண் மிசையே' என்றபடி எம்பெருமானைச் சேர வேண்டுமென்று அவன் பக்கலிலே உண்டாகின்ற விருப்பத்தையே கூறியது" எனல் வேண்டும்

"கோவிந்தா, எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்றன்னோடு உற்றோமே யாவோம் உனக்கே நாமாட் செய்வோம் மற்றை நங் காமங்கள் மாற்று"[14] என்பது ஆண்டாள் வாக்கு. இங்கும் 'காமம்' என்று கூறுதல் நினைக்கத்தக்கது. உலக நாயகனுடைய சேர்க்கையை விரும்புகின்ற பேரின்பக் காதல் வேதாந்த நிர்ணயித்தின்படி அன்பைச் செலுத்த வேண்டிய இடத்தில் அன்பைச் செலுத்தியதாதலால் சிற்றின்பக் காதல் போலன்றி எல்லாப் பாப நீக்கத்திற்கும் வீடு பேற்றிற்கும் இவ்வகப்பொருள் நூல்கள் காரணமாகின்றன.

பரமாத்மாவினது தலைமையும் சீவாத்மாவினது அடிமையும், சீவாத்மா பரமாத்மாவுக்கே உரியதாயிருக்கையும், புருடோத்தமனாகிய எம்பெருமானது பேராண்மைக்கு முன் உலகமுழுவதும் பெண்தன்மைய தாதலும், ஜீவாத்மாவினது சுவாதந்திரியமின்மையும் பாரதந்திரியமும், தாம் எம்பெருமானது சேர்க்கையால் இன்பத்தையும் பிரிவினால் துன்பத்தையும் அடைதலும், அவனையே தம் கரணங்கள் எல்லா வற்றாலும் அனுபவித்து ஆனந்தித்தலும் முதலிய காரணங்களால் ஆழ்வார் தம்மைத் தலைமகளாகவும் எம்பெருமானைத் தலைமக னாகவும் கொண்டு அருளிச்செய்த இன்பச்சுவை மிக்க பாடல்கள் இவை.

## சிற்றின்பமும் பேரின்பமும்

"ஆனந்த வெள்ளத்து அழுந்துமஓர் ஆருயிர்"14-அ என்னும் திருக்கோவையார்ப் பாடல் செவிலித்தாய் நற்றாயிடம் கூறுவதாக அமைந்தது.

நம் தலைவனும் தலைவியும் காமவின்பம் நுகர்வதற்கு ஒருவனை கூறின், ஒருயிரானது தானக்கெப்திய காதலின்பமாகிய வெள்ளத்திடை மூழ்கித் திளைத்தற்கு ஓருடம்பு போதியதாகாமையால் இரண்டுடம்பு கொண்டு அவ்வின்பத்திடை மூழ்கித் திளைப்பதனையே ஒத்திருக்கும் என்பேன். அதுவேயுமன்றி அம்பலத்தைச் சேர்ந்த இன்ப வெள்ளத்தைச் செய்யும், ஒலிக்கும் கழலையுடைத்தாகிய திருவடியை யுடையவனது அருளைப் பெற்றவர் இன்பம் துய்த்தல போல இவ்வின்ப வெள்ளமும் ஒரு காலத்தும் குறைவுபடாமல் பெருக்கிக் கொண்டே போகும். மற்றும் இந்த அழகிய இன்பநலமும் முதிர்ச்சியுறாது.

ஒருயிர் இன்பத்தைக் கொள்ள இரண்டுடம்பு கொண்டு திளைக்கிறதாம். சிற்றின்பத்தில் ஒருயிர், தலைவி தலைவனுக்கும இணைந்த ஒருயிர்; தலைவி தலைவனாகிய இரண்டு உடமபு. அங்ஙனமே பேரின்பத்தில், சிவனும் பக்தனும ஓருயிர்; சிவன் ஒரு கூறு; உயிருடைய பக்தன் ஒரு கூறு ஆக இரண்டு உடமபு. சிற்றின்பத்திற்கும் பேரின்பத்திற்கும உள்ள இவ்வொப்புமைக்கருத்து ஆழ்ந்து சிந்தித்தற்குரியது.

## பக்தியால் அனுபவித்தல்

பக்தியால் எம்பெருமானை அனுபவித்தல் பலவகைப் பட்டிருக்கும அவனுடைய திருநாமங்களைச் சொல்லி அநுபவித்தல, வடிவழகை வருணித்து அவன் உகந்தருளின திவ்விய தேசங்களின் வளங்களைப் பேசி யனுபவித்தல, அங்கே அபிமானமுள்ள வைணவர் களின் பெருமையைப பேசிய நுபவித்தல் முதலான பல வகைகளாகும்.

ஆழ்வார் தாமான தன்மையை விட்டுப் பிராட்டிமாருடைய தன்மையை ஏறிட்டுக்கொண்டு வேற்று வாயாலே பேசி அனுபவித் தலும் உண்டு. இப்படி அனுபவிக்குந் திறத்திலே தாய்ப் பாசுரம், தோழி பாசுரம், தலைவி பாசுரம் என்று மூன்று பிரிவுகள் உண்டு. இந்த நிலையிலே ஆழ்வார்க்குப் பராங்குசர் எனும் ஆண்பெயர் நீங்கிப் பராங்குச நாயகி எனும் பெண்பெயர் வழங்கப்படுகிறது. தாய் கூறுவது போலவும், தோழி சொல்வது போலவும், தலைமகள் உரைப்பது

போலவும் பாசுரங்கள் வெளிவந்தாலும் பாசுரம் பேசுகிறவர் ஆழ்வாரே யாவார்.

> "நல்லார் நவில்குரு கூர்நகரான் திருமால்திருப்பேர்
> வல்லார் அடிக்கண்ணி சூடிய மாறன்விண் ணப்பஞ்செய்த
> சொல்லார் தொடையலிந் நூறும்"15

என்று ஆழ்வார் தலைக்கட்டுதலைக் காணலாம்.

ஓர் ஆறானது பல வாய்க்கால்களாகப் பெருகும்போது பல பெயர்கள் இருந்தாலும், அவற்றுக்குப் பிரதானமான பெயர் ஒன்றேயாக விருக்குமாறு போலும் மேற்சொன்ன மூன்று நிலைமைகளாகச் சொல் மாலை வழிந்து புறப்பட்டாலும் ஆழ்வார் பாசுரமாகவே தலைக்கட்டும். எம்பெருமானுக்கும் நமக்கும் நவவித சம்பந்தங்கள் 'அஷ்டாட்சர மகாமந்திர'த்தில் கூறுவதாக உள்ளது. அவற்றுள் 'பதிபத்நீ பாவ சம்பந்தம்' என்பது நான்காவதாகும்.

> "கண்டாரி கழ்வனவே காதலன்றான் செய்திடினும்
> கொண்டானை யல்லால றியாக்கு லமகள்போல்"16

எனும் குலசேகராழ்வார் வாக்கின்படி, 'பதிபத்நீ பாவ சம்பந்தத்தைக் காட்டிநிற்கும், எம்பெருமானின் தேவியர்களான சீதேவி, பூதேவி, நீளாதேவியரின் நிலையை ஆழ்வார் அடைகின்றார். ஆனது பற்றியே திருவாய்மொழியில்,

> "பின்னை கொல்நில மாம களகொல்
> திருமாமகள்கொல் பிறந்திட்டாள்"17

என்று தோழி பாசுரம் உள்ளது. பெரிய திருமொழியிலும்,

"காவியங் கண்ணி யெண்ணில் கடிமாமலர்ப் பாவை யொப்பாள்"18 என்று தாய்ப்பாசுரம் உள்ளது. இவற்றால் ஆழ்வார் எய்தும் பெண்மை சாமான்யமான பெண்மையன்று. திருமாலின் மூன்று தேவியருள் ஒருவராகும் சிறப்புடைத்தாயிற்று.

தாயாருடைய பார்வையாலே மகளாகிறாள்; நாயகனுடைய பார்வையாலே நாயகியாகிறாள். மகளுக்குத் தாயாரொருத்தி இருப்பதும் நாளடைவில் தோழிமார் ஏற்படுவதும் இயல்பு. ஆகவே, பெண்பாவனையில் ஒருபோது தாய்ப்பேச்சும், ஒருபோது மகள்பேச்சும் ஒருபோது தோழியின் பேச்சும் நிகழ்கின்றன. பக்தியே சிருங்கார வகையில் மலர்வதால் இத்தகைய பேச்சுக்கள் பக்தி நூல்களுக்குச் சுவையூட்டுகின்றன ஆழ்வார்களின் முறுகிய பக்தி நிலையை உணர்த்துவதற்கேற்ற ஓர் இலக்கிய மரபே இஃது எனக்கொள்ளலாம்.19

## இறைக் காமமும் உலகியற் காமமும்

தண்டகாரண்யத்தில் வாழ்ந்த முனிவர்கள் இராமபிரான் அழகில் ஈடுபட்டுப் பெண்மையை விரும்பி மற்றொரு பிறப்பில் ஆயர் மங்கையராகப் பிறந்து கண்ணனைக் கூடினர் எனும் ஐதிகமுண்டு. ஆழ்வார்கள் அப்படியின்றியே அப்போதே பெண்மையை யடைந்து இறைவனை அநுபவிக்கக் காதலிக்கின்றனர். இங்கு ஆழ்வார் சிருங்கார ரசத்தைக் கலந்து பாசுரங்கள் செய்து உலகினர்க்குத் தருவது உடல் நலமைக்காக மருந்தைத் தேனிற் குழைத்துக் கொடுப்பதைப் போன்றதாகும். இராமாநுச நூற்றந்தாதியில் 'கண்ணனுக்கே ஆமது காமம்'[20] எனக் கூறியது இதற்கடிப்படையாகும்.

இவர்களிடத்தில் சில சமயம் ஞானம் தலைதூக்கி நிற்கும். சில சமயம் பிரேமம் (காதல்) மீதூர்ந்து நிற்கும். இந்த இரண்டு நிலைகள் இருக்கும்பொழுதும் அவர்கள் பாசுரங்கள் அருளியுள்ளனர். இதனை 'ஞானத்தில் தம் பேச்சு; பிரேமத்தில் பெண்பேச்சு' என்று ஆசாரிய இருதயம் குறிப்பிடும்.[21] அஃதாவது ஞான நிலையில் இருக்கும்பொழுது அவர்கள் தாமான தன்மையிலே நின்று பேசுவர்; பிரேம நிலையில் இருக்கும்போது பெண்தன்மையை அடைந்து வேற்றுவாயாலே பெண் பேச்சாகப் பேசுவர்.

எம்பெருமான் மீது இவர்கள் கொள்ளும் காமம் 'பகவத் விஷய காமம்' எனப்படும். மாதர்மீது கொள்ளும் காமத்தினின்று இது வேறுபட்டது. ஆனாலும் காதலுக்குக் கூறப்பெறும் அகப்பொருள் துறைகள் இந்தப் பகவத் விஷய காமத்திற்கும் கூறப்பெறும் சிற்றின்ப அனுபவத்திற்குக் கொங்கை முதலியன சாதனமாயிருப்பது போலப் பகவத் விஷயானுபவத்திற்குப் பரபத்தி, பரஞானம், பிரபத்தி ஆகிய மூன்றும் இன்றியமையாதனவாக இருப்பதால் அவையே கொங்கை முதலாகிய சொற்களால் பக்திப் பாசுரங்களில் கூறப்பெறுகின்றன என்று சமயச் சான்றோர் கருதுவர்.

தம்மைத் தாயாக, தலைவியாக, தோழியாக எண்ணிப்பாடும் மூன்று நிலைகளையும் மூன்று பிரஞ்ஞாவஸ்தைகள் (அறிவுநிலை) என்று குறிப்பர். 'கடவுண்மாட்டு மானிடப்பெண்டிர் நயந்த பக்கம்' எனப்புறப்பொருள் வெண்பா மாலை புகலும்.[22] தொல்காப்பியத்தில்

> "காமப் பகுதி கடவுளும் வரையார்
> ஏனோர் பாங்கிலும் என்மனார் புலவர்"[23]

என்று வரும் புறத்திணையியல் நூற்பாவின் விரிவாகவே இவ்வகைத் துறைப்பாடல்களின் கருத்துக் கமழக் காணலாம். இறைவனைத்

தலைவனாகக் கொண்டு மக்களும் தேவரும் ஆகிய உயிர்கள் அன்பினாற் காதலுற்று வாழும் ஒழுக்கமே தொல்காப்பியரால் அறிவுறுத்தப்பட்டதாகும்.

## மெய்ப்பொருள் நோக்கில் தோழி, தாய், தலைமகள் :

### *தோழி*

தோழியானவள் தலைவனையும் தலைவியையும் இணைக்கிச் சேர்ப்பவள். திருமந்திரத்தில் முதற்சொல்லான பிரணவத்தால் இறைவனோடு ஆன்மாவுக்குச் சொல்லப்பட்ட வேறொன்றிற்கு உரிய தல்லாத அடிமைத்தன்மை முதலான சம்பந்தத்தை அறிதலே அவனோடு சேர்தலுக்கு ஏது. ஆகையால் அந்தச் சம்பந்த ஞானம் என்கிற அறிவுநிலை தோழி என்று சொல்லப்படுகிறது. இவள் வெறி விலக்கியும் ஆசையறுத்தும் அறத்தொடு நின்றும் செயல்புரிவாள்.

### *தாய்*

தாயானவள் பெண்பிள்ளையைப் பெற்று வளர்ப்பவள். பின் அப்பெண் பருவமடைந்து தலைவனிடம் கொண்ட அளவற்ற ஈடு பாட்டால் அவனிருக்கும் இடத்திற்குப் போகவேண்டுமென்று பதறு மளவிலும் அவன் தானே வரக் கண்டிருந்தாலொழியப் படிகடந்து போதல் குலமரபுக்கு ஏற்றதன்று என்று கூறித் தடுத்து நிறுத்துபவள் 'சித்தோபாயம்' என்கின்ற இறைவனையே உபாயமாகப் பற்றினவர்க்கு அடையப்படு பொருளின் காலதாமதத்திற்குக் காரணம் இல்லாமையால் விரைவாகப் பேற்றைப் பெறவேண்டும் என்ற பதற்றம் தோன்றும். பேற்றின் சிறப்பைக் கண்டறிந்து முறைப்படி-படிப் படியாக-அவனை அடைதல் வேண்டுமென்று இராமல் மிக்கு நடக்கின்ற அளவில் பிரபன்ன குலமரபுக்குச் சேராது, தலைமகனானவன் தானே வந்து ஆட்கொள்ளப் பார்த்திருக்க வேண்டும் என்று துப்பை அடக்கப் பார்க்கின்ற உபாயத் துணிவு ஆகிற அறிவுநிலையே தாயார் என்று பெயர் பெறும். இந்நிலையைத் திருமந்திரத்தின் நடுச்சொல் உணர்த்தும்.

### *தலைமகள்*

தலைமகளானவள் இயற்கையில் தலைவனைக் கூடி அவன் சிறப்புகளிலே ஈடுபட்டுக் குலமரபுகளையும் நோக்காது. 'அவனை அடைந்தல்லாது ஆற்றேன்' எனும் பதற்றத்தை உடையவள் ஆவாள். தலைவனும் சரண் அடையத் தகுந்தவனுமான இறைவனுக்குத்

திருமந்திரத்தின் கடைசிச்சொல்லால் சொல்லப்படுவதான அவன் இயல்பு வடிவு, குணம், செல்வங்களால் வந்த சிறப்பு இவற்றை எண்ணி, அவனை அநுபவித்தலில் தாமதத்தைப் பொறுக்க மாட்டாமையாலே, 'அவன் ஒருவனே உபாயமானவன்' என்கிற துணிவையும் மீறி, அவனை அடைந்து அநுபவித்தல்லது தரியாதபடி நடக்கிற பேற்றில் பதற்றம ஆகிற அறிவுநிலையை மகள் என்று பெயரிட்டு வழங்குவர்.

இறைவனைப் பற்றிப் பேசவேண்டிய இடத்தில் உலகியற் காமத்தை-காதலைப்-பற்றிப் பேசுவது சிறப்பாக இல்லையே என்று சிலர் தடையெழுப்பலாம். இதே தடையை நான்காம் திருவாய் மொழியின் தொடக்கத்தில் முதன் முதல் ஆழ்வார் பெண்தன்மையை அடைந்து பேசும் பாடல் வரும்போது ஈட்டின் ஆசிரியர் எழுப்பி, விடையையும் தருகிறார். "இது காமுகர் பேச்சன்று; இறைவன் கேட்கத்தக்கவன்; தியானம் செய்யத்தக்கவன்; பார்க்கத் தக்கவன் என்று பிரஹதாரண்ய உபநிடதம் கூறுவது போலக் கொள்ளப்படும் பகவத் காமம்; நல்வினை உள்ள ஒருவனே இப்பேறு பெறுகிறான்"[24] என்பது அவர் கூறும் விடை

## பேரின்பத் திறவுகோல்

மேன்மக்களாலும் புகழப்பட்டு மறுமைக்கும் உறுதி பயப்பது அகப்பொருள் காமம். இது நன்ஞானங் கற்று வீடுபெறுவேனென்ற முயற்சியை மூட்டும் காமம்; மற்றும் இக்காமம் கடுத்தின்னாதானை வெல்லக்கட்டிப் பூசிக் கடுவை (வேப்பிலையுருண்டை) உண்ணா வைப்பது போலவும், கலங்கற் சின்னீரை அறியாமல் உண்பவனை அறிவுடையான் ஒருவன் நல்லதொரு நீர் அருந்தாது, அந்நீர் பருகுவாய். இச்சேற்று நீர் பருகி என்செய்வாய்? என்று நன்னீர் காட்டி ஊட்டியது போலவும், சிறுமை மிக்க இன்பத்தினின்று பெருமை மிக்க இன்பத்திற்கு வழி பயிற்றினான். இது எளிமையினின்று அருமைக்குப் போதல் என்ற உணர்வின் உபாயத்தைப் பற்றியுள்ளது. காட்டப்பட்டவன் அந்த இன்பத்தை எப்படிப் பெறுவது என்று கேட்பான். இது வலிமையாலும், அழகாலும், பொருளாலும், மக்கள் தொகையாலும் பெறப்படுவதன்று; தவஞ்செய்வதால் பெறலாகும் என்பான்.

> "வேண்டிய வேண்டியாங் கெய்தலால் செய்தவம்
> ஈண்டு முயலப் படும்"[25]

என்று குறள் கூறுகிறது. எனவே, நானும் உடனே தவஞ்செய்து இதனைப் பெறுவேனென்று தன்னை உயர்த்திக்கொள்ளும் வேட்கையால் தவஞ்செய்வான். பின்னர்த் தவஞ்செய்வதால் வீட்டுப் பேறின்பம் கிடைக்கும். அதனால் பிறப்பு, பிணி, சாக்காடு, அவலக் கவலை ஆகியன நீங்கும் என்று பேரின்பத்தைப் பற்றிக் கூறக் கேட்கப் பட்டோர் சிற்றின்பத்தை விட்டு வீடுபேற்றின் கண்ணே அவாவி நின்று தவமும் ஞானமும் புரிந்து வீடுபெறுவானாம். இங்ஙனம் இறையனார் களவியலுரை கூறுகின்றது.26

## பேரின்ப நூல்கள்

இறையனார் அகப்பொருள் என்னும் இலக்கண நூலுட் கூறப் பெற்ற துறைகளனைத்தும் திருச்சிற்றம்பலக் கோவையாரில் அடங்கியுள்ளன. இக்கோவையாரின் உள்ளுறை பொருளை எடுத்து விளக்கும் 'திருச்சிற்றம்பலக் கோவையாருண்மை' எனும் பெருநூலொன்றைப் பிற்காலத்துப் பேரறிஞர் ஒருவர் அருளிச் செய்துள்ளார். இதனால்தான் திருக்கோவையாரைக் 'காமஞ்சான்ற ஞானப்பனுவல் 27 என்று குமரகுருபரர் குறிக்கின்றார். இந்நூலின் நானூறு பாடல்களிலும் பல இடங்களில் தெளிவாகவும் சில இடங்களில் மறைபொருளாகவும் பேரின்பப் பொருளைக் காணலாகும். இதற்கு உரையெழுதிய பேராசிரியர் "ஆகம நூல் வழியின் நுதலிய ஞானயோக நுண்பொருள்" என்றும் இத்திருக்கோவையாருள் கரந்து வைக்கப்பட்டுள்ளது. அப்பொருளை அறிந்து கூறுதல் எமக்கியலாது. ஆயினும் ஏனைய கோவை நூல்களில் போல யாம் உலக வழக்குப் பற்றிய உரை கூறுவாம்" என்று கூறுகிறார்.28 'ஞானயோக நுண் பொருள்' என்பது இறைவனையே குறிப்பதொன்றாகும். இதனால் பேராசிரியரே உள்ளுறை பொருளைக் கூற முடியவில்லை என்பதை ஒத்துக்கொள்கிறார் என்றால் அந்தப் பேரின்பப் பொருள் எத்தகைய செறிவுடையதாக இருத்தல் வேண்டும்.

திருக்கோவையாருள் சில பாடல்களும், திருவிருத்தத்தில் சில பாடல்களும் பேரின்பப் பொருளை உணர்த்தும பாங்கு இங்கு இனி எடுத்துக்காட்டப்பெறும்.

## பாடல் 1 திருக்கோவையார்

'தலைவன் தலைமகளைக் கண்ணுறுதல்' என்பது சிற்றின்பப் பொருளாய் அமைந்த பாடல் முதற்பாடல்.

குருவின் திருமேனி காண்டல் என்பது பேரின்பப் பொருள். குரு

என்றது தலைவியை; கண்டப் என்றது உயிராகிய தலைவன் கண்டது.

## பாடல் 2

'தலைவன் தலைவியை வியந்து ஐயமுறுதல்' என்பது அகப் பொருட் கருத்து.

திருமேனியை வியந்து ஐயமுறுதல் இதன் கருத்து. முதன் முதலாகக் கடவுட் காட்சி எய்திய உயிர் ஈன்று நல்லாசிரியனாகி எழுந்தருளியுள்ளது இறைவனோ, மக்களுள் ஒருவரோ என்று ஐயம் கொள்ளுதல் பேரின்பப் பொருள்.

## பாடல் 3

தெய்வமோ, அல்லளோ என்று தலைவியை ஐயுற்ற தலைவன் அவ்வையந் தீர்தற் கருவிகளாலாராய்ந்து தெய்வமல்லள், மகளே என்று துணிதல் என்பது அகப்பொருள்.

ஆசிரியன் கண்களிலே திருவருள் உண்மைகண்டு உயிர், இவன் இறைவனே என்று தெளிதல். இது பேரின்பப் பொருள்.

## பாடல் 4

தெய்வமோ, அல்லளோ என்னும் ஐயமுள்ள துணையும் தடை செய்யப்பட்டிருந்த தன்னெஞ்சம் துயர்நீங்கி, இனி இவளை யாம் காதலிக்கத் தடையில்லை என்று துணிந்து அவளை எய்தக் கருதுதல் நான்காம் பாடலின் அகப்பொருட் கருத்து.

இறைவன் இவ்வாறு நல்லாசிரியன் உருக்கொண்டு எளிவந்தமை யால் இனி, யாம் அவன் திருவடிப் பேறெய்துதல் தேற்றம் என உயிர் தேற்றமாகக் கருதி அவன் பாலன்பு கொள்ளுதல் என்பது இப் பாடலின் பேரின்பப் பொருளாகும்.

## பாடல் 5

தலைவியின் உள்ளக் கருத்தை அவள் கண்ணிற்கண்டு தலைவன் அறிந்துகொள்ளுதல் 'உட்கோள்' என்னும் அகப்பொருள் கருத்து.

தன்னிடத்தில் சிவத்திற்குக் கருணையுண்டென்று உயிர் என்னும் சீவாத்மா அறிந்தது பேரின்பப் பொருள்.

## பாடல் 36

பாங்கன் தலைவியின் அழகினை ஒல்லுந் துணையும் சொல்லிக்

காட்டத் தலைவன் 'அவளே என்னாருயிர்க் காதலி' என்று துணிந்து அவள் நிற்கும் பூம்பொழிலிற் சென்று புகுதல் இப்பாடலின் அகப் பொருட் செய்தி.

உயிரானது தற்போதங் கெடாநிற்பத் தனக்குப் பொலிவு தருகின்ற நல்லாசிரியனைக் காணச் செல்லுதல் என்பது இப்பாடலின் பேரின்பச் செய்தி.

## பாடல் 109

தலைவியின் உறுப்புக்களின் சிறப்பு எடுத்தோதிய தலைவன் அவள் கண்ணழகைத் தன் மனக்கண் முன் கொணர்ந்து ஆராமையில் அதனை விதந்தெடுத்து விரும்பிப் பாராட்டுதல் இப்பாடல் தரும் அகப் பொருள் கருத்து

சிவத்தின் திருநோக்கமே உயிரின்பால் இன்ப வுணர்ச்சியைத் தோற்றுவிப்பது என்றறிவித்தல்; உயிர் சிவத்தின் அருட்பார்வையைப் புகழ்தல் என்பது இப்பாடலின் பேரின்பக் கருத்து.

## பாடல் 115

தலைவன் தந்த தழையைத் தலைவி விருப்புடன் ஏற்றனள் என்று தோழி தலைவனுக்கு உரைத்தது அகப்பொருள் கருத்து.

தலைவன் பணி சிவத்துக்கு உவப்பென உயிருக்குத் திருவருள் உணர்த்தியது. நீ செருக்ககன்று என் வழிப்பட்டுச் செய்த பணியைச் சிவம் உவந்தேற்றது என்று அருள் உயிர்க்கு அறிவித்தல் இப்பாடலின் பேரின்பப் பொருளாகும்.

## பாடல் 138

தலைவன் மீண்டும் களவின்பமே காமுற்றுப் புனத்தயலே வந்து ஓரிடத்தே நிற்பவன் கேட்கும்பொருட்டுத் தோழி தலைவிக்குக்கூறுவாள் போன்று தினைக்கதிர் முதிர்ந்து விட்டமையால் நாம் இனி வந்து விளையாடுதற் கிடனில்லைகாண் என்று கூறுமாற்றால் வரைவு கடாதல் என்பது இதன் அகப்பொருள் செய்தி.

சிவம் உயிரின் பொருட்டுச் செய்யும் பணியைக் கைவிடுமாயின் உயிர் சிவானுபவம் உறாது அஃதாவது உயிர், சிவம் தன்பால் அருள் வைத்துத் தன்னை உயர்த்த முயல்வதனைக் குறிப்பால் உணர்ந்து அக்குறிப்பிற் கிசைய ஒழுகாவிடின், சிவம் அம்முயற்சியை விடும். விட்டபின், உயிர்க்கு உய்வில்லை என்று அருள் உயிர்க்குச் செவியறி வுறுத்தபடியாம்.

## பாடல் 225

இஃது அறத்தொடு நிற்றல்.

செவிலி தலைவியைக் காணாமல் தோழியை வினவியவழி, அவள் அப்பொழுது தான் செய்யவேண்டிய கடமையை அறத்தின்பால் நின்று செய்தல்.

சிவசக்தியாகிய அருளே சிவத்தை உயிர் அறியாவண்ணம் செய்யுமாயே மறைக்கும் மலமுமாகின்ற தன்மையைத் தெரிவித்தல். அஃதாவது சிவசக்தியானது முற்பட உயிரின் மலத்தோடொன்றி நின்று மலத்தைக் காரியப்படுத்தி, அது பக்குவமெய்தியவுடன் தானே அருட் சக்தியாகிய உயிரைச் சிவத்தோடு கூட்டுதலால் ஈண்டு அச்சக்தியின் இருவேறு நிலைகளைத் தோழியாகவும் செவிலியாகவும் உருவகப் படுத்தி உணர்த்துதல். இதற்கிடையே தோழி செவிலியின் மகள் என்று கூறப்படுதல் கருத்திற் கொள்ளத்தக்கது.

## பாடல் 395

மடல் நீடுதலால் தலைவன் ஆற்றானாக, அதுகண்ட தலைவி மடல் தீர்வாள் தன்நெஞ்சொடு கூறுதல் என்பது இப்பாடலின் அகப் பொருட் கருத்து.

உயிரினது கூட்டு நிலையில் சிவம் அதனொடு பிரிவின்றிக் கலந் திருத்தற் போன்றே அது வீடுபெற்ற நிலையிலும் அதனோடு பிரிவு இன்றி நிற்றல் பெத்த நிலையில் அவனேயாய் நின்றாற் போன்ற (உயிர்களேயாய்) முத்தி நிலையில் தானேயாய் (சிவமேயாய்) தோன்றாது நிற்றலை யுணர்த்தியவாறு.

> "அவனே தானே யாகிய அந்நெறி
> ஏக னாகி இறைபணி நிற்க
> மலமாயை தன்னொடு வல்வினை யின்றே"

என்னும் சிவஞானபோதம் பத்தாம் சூத்திரத்தால் இக்கருத்தினை உணரலாம்

## திருவிருத்தப் பாடல்களில் சிற்றின்பமும் பேரின்பமும்

## பாடல் 8

தலைவி கடலை நோக்கி உன் அலைகளால் தலைவன் சென்ற தேர்ச்சக்கரத்தின் சுவடுகளை அழிக்காதே எனல் இப்பாடலின் அகப் பொருட் கருத்து.

நம்மாழ்வார் திருமாலைப் பிரிந்து வருந்துகிற நிலையில் அவர் பக்கல் தமது மனத்தாசையை இடைவிடாது செலுத்தி, அதனாலேனும் ஒருவாறு ஆறியிருக்கலாமென்று நினைக்கும்போது அமமன அசையை இடையிற் குலையாதிருக்க வேண்டுமென்று சம்சாரமாகின்ற கடலை நோக்கிப் பிரார்த்தித்துக் கூறுதல் என்பது இதன் பேரின்பக் கருத்து

## பாடல் 21

தோழி வெறிவிலக்கு தலை அகப்பொருள் கருத்தாகக் கொண்டது இப்பாடல்.

நம்மாழ்வார் திருமால் திருவடிகளிலேயே சேர்ந்திருக்கப் பெறாது விரிந்து வருந்துகிற நிலையில அவ்விறைவனோடு நேரிலாவது இடையிட்டாவது சம்பந்தம் பெற்ற பொருள் யாதாயினும் ஒன்றை அவருடைய பிரசாதமாகப் பெற்று ஆறியிருக்கக் கருதி வேண்டுதலையும், அங்ஙனம் ஒன்றும் அவர்க்குக் கிடைத்திடாமையும் இறைவன் திருநாமத்தைச் சொல்லும்போதெல்லாம் அவர் பக்திப் பரவசராய், அழுது உடல்சோர்ந்து மனந்தளர்தலையும், இறைவன் எழுந்தருளியிருக்கிற திவ்விய தேசத்திற்கு விரைந்துசென்று சேர விரும்புதலையும் அன்பர்கள் பாராட்டி, 'இனி இவர்க்கு என் ஆகுமோ' என்று இரங்கிக் கூறுதல் இதன் பேரின்பப் பொருள்.

## பாடல் 29

தலைவி அன்னப் பறவையை வெறுத்துரைப்பது என்பது இப்பாடலின் அகப்பொருள் செய்தி.

ஆசாரியர்களே தூதராக ஈண்டுக் கருதப்படுகின்றனர். எம்பெருமானைச் சேரப்பெறாத ஆழ்வார் தம்முடைய ஆற்றாமையை ஒருவர் முகமாக அவனுக்கு அறிவிக்க நினைத்துத் தாம வேண்டிய விடத்திலும் ஒருவரும் தகுந்தவர் நேரிடாமல் அவரவர் தத்தம் காரியத்திலே ஊன்றியிருக்க, ஆழ்வார் வெறுத்துக் கூறுவது இப் பாடலின் பேரின்பக் கருத்து ஆகும்.

## பாடல் 31

தூதுபோகச் சொன்னவிடத்தும் போகாத மேகங்களைக் குறித்துத் தலைவி இரங்கிப் பேசுதல் என்னும் அகப்பொருள் செய்தி பற்றியது இப்பாடல்.

எம்பெருமான் பக்கல் ஆழ்ந்த நெஞ்சை மீட்கும்படி வேண்டப் பட்ட வரிகள். 'இவர் நெஞ்சை மீளச்செய்வது ஸர்வ சக்தனாலு

அவ்வெம்பெருமானுக்கும் அசாத்யமான தொன்றானால் நம்மாற் செய்யலாவதோ?'' என்று கைவிடப், பின்பு ஆழ்வார் திவ்யதேச யாத்ராபரராய்த் திருமலையை நோக்கிச் செல்லும் சிலரைக் கண்டு 'இவர் நம் குறையை எம்பெருமான் பக்கல் விண்ணப்பஞ் செய்து நம்மை அவனோடு சேர்ப்பதற்கு ஏற்ற புருஷகாரமாவார் என்று கருதின் அவர்களை ஆசாரியராக வரிக்க, அவர்கள் இவர்க்கு ஆசாரியராவதற்கு உடன்படாமையால், ''எம்பெருமான் தான் தொழுவார் காண்மின் என் தலைமேலாரே'' என்னும்படி இவர் நமது தலையின்மேல் திருவடிகளை வைப்பதும் புருஷார்த்தமாகும் என்று வேண்டுதல் என்பது இப்பாசுரத்தின் பேரின்பப் பொருள்.

## பாடல் 52

கார்காலத்தில் மீண்டு வருவேனென்று சொல்லிப் போன தலைவன் வாராமற் காலந் தாழ்க்க. அக்காலம் வந்ததும் நாயகி கலக்கமடைய 'இது தலைவன் கூறிய காலமன்று' என்று தோழி காலத்தை மயக்கி உரைத்து அவளது கலக்கத்தைத் தீர்ப்பது என்னும் அகப்பொருள் செப்தி கொண்டது இப்பாடல்.

பல்லுயிர்களுள் ஸ்ரீதேவி, பூதேவி தொடக்கமான அருகிலுள்ளார் எம்பெருமானை நித்தியானுபவம் பண்ணப் பெற்று வாழ, யான் இங்ஙனம் அவனைச் சேராது வருந்துவதே! என்று ஆற்றாமை விஞ்சிய ஆழ்வார்க்கு அன்பர் ஒரு காட்சி மூலமாக எம்பெருமானுடைய ஸ்வாதந்திரியத்தைத் தெரிவித்து ஆற்றுகல் இப்பாசுரத்தின் பேரின்பக் கருத்து ஆகும். எம்பெருமானை ஒரு நொடிப்பொழுதும் விட்டுப் பிரியாத தேவிமாரென்று சமமாகச் சொல்லப்படுகின்ற ஸ்ரீதேவி பூதேவிகளுள் ஒருத்தியைப் பிரிந்து ஒருத்தியைத் தழுவும்படியுள்ளது ஒரு காலத்தில் எம்பெருமானுடைய ஸ்வாதந்திரியம்; இப்படியிருக்க, நீர் அவனது காலவிளம்பத்துக்கு ஆறியிருத்தலே தகுதியென்று தேற்றுதல் இது. இப்பாட்டில் பூமிபிராட்டி சம்பந்தமாகக் குறித்த வரிகள் எம்பெருமானது ஸ்வாதந்திரியத்தை எடுத்துக்காட்டுதற்காகும்.

## பாடல் 60

தலைமகளின் இளமையை நோக்கிச் செவிலித்தாய் இரங்கிக் கூறுதல் என்னும் அகப்பொருள் கருத்துக் கொண்டது இப்பாடல்

ஆழ்வாருடைய ஆற்றாமையைக் கண்ட ஞானிகள் ''எம்பெருமானைச் சேரப் பெறுவதற்கு உபாயமான பக்தி முதலியன நிறையாமல் இருக்க, இவருக்கு உண்டாகிய விரைவு என்னோ'' என்று கூறுதல்

மார்பகம் என்று கூறியது எம்பெருமானைச் சேர்ந்து அனுபவித்தற்குத் துணையான பக்தி முதிர்ந்து பேற்றுக்குச் சாதனமான பரமபக்தியாகப் பரிணமித்ததில்லை. முடியழகில்லை என்பது தலையாலே வசப்படுத்துகிற பிராணாமம் முழுமையாகத் தோன்றவில்லை கலையோ அரை இல்லை என்பது அரையில் ஆடையை இறுகக் கட்டிக் கொண்டு தன்னை மறந்து பஜனை செய்யும் பாங்கில்லை. நாவோ குழறும் என்பது இடைவிடாது பகவான் பேரில் போற்றிப் பாடுவதுமில்லை கண்ணிளிரும் என்பது பொதுப்படப் பொருள்களின் உண்மையறியும் தத்துவ ஞானமொழிய அவ்வறிவை ஓரிடத்திலே ஒடுக்கிநிறுத்தும் தியான ரூபமான ஞானமில்லை கடல் மண்ணெல்லாம் விலையோ என என்பது ஆழ்வாரது ஞானத்தின் சிறப்பை விளக்கிற்று. பெருமான் மலையோ திருவேங்கடமென்று கற்கின்ற வாசகம் என்பது 'வெ வா தர்ள் வாய் வெருவி வேங்கடமே வேங்கடமே என்கின்றாளால' என்று மாப்போல அவனெழுந்தருளி நிற்கின்ற திருமலையாகிய போக இடத்தையே நினைந்து வாய் புலத்தலாகும்.

இந்தப் பேரின்ப ஞானக் கருத்துகளைத் தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கும் நம்மாழ்வாரின் திருவிருத்தப் பாடல்.

> "முலையோ முழுமுற்றும் போந்தில மொய்பூங் குழல்குறிய
> கலையோ அரையில்லை நாவோ குழறும் கடல்மண்ணெல்லாம்
> விலையோ எனமிளிருங்கண் ணிவள்பரமே! பெருமான்
> மலையோ திருவேங் கடமென்று கற்கின்ற வாசகமே?"29

## பாடல் 74

தலைவனது மாலையிற்பட்ட தென்றல் வரத் தலைவி மகிழ்ந்து கூறுதல். இது, தென்றல் வரவுகண்டு அதற்கு வருந்தத் தொடங்கிய தலைவியை நோக்கித் தோழி, 'இதனை நீ வெறுந் தென்றலென்று கருதாதே. அவனுடம்பிற்பட்டு வருகிறதுகாண் இது; இது அவன் வரவிற்கு அறிகுறி' என்று கூறிச் சோகந் தணிக்கிறதாகவும் கொள்வர். இது, பாசுரத்தின் அகப்பொருட் செய்தி.

எம்பெருமானைப் பிரிந்த நிலையில் ஆழ்வார் தாம் அவனது கருணை, ஐச்வர்யம். போக்யதை எனும் இக்குணங்களின் நடையாட்டத்தைக் கண்டு ஆறியிருக்கும் தன்மையைக் கூறுதல் தோழியின் கூற்றாகக் கருதின், "அவன் அடியார்களைக் காக்கும் பொருட்டுக் கடலிலே யோகநித்திரை கொண்டருள்வதும், பிரளய ஆபத்துக் காலத்தில் உலகத்தை வயிற்றில் வைத்து நோக்குவதும், கோவர்த்தன

கிரியைக் குடையாகப் பிடித்து ஆயர்பாடி மக்களைக் காத்தலுமாகிய குணங்களைச் சொல்லி அன்பர்கள் ஆழ்வாரை ஆற்றுதல்'' என்று பேரின்பப் பொருள் தோன்றக் காணலாம்.

## பாடல் 96

தலைவி வெறிவிலக்குவிக்க நினைத்தல் என்பது அகப்பொருள் செய்தி.

ஆழ்வார் எம்பெருமானை நோக்கி "ஒப்பற்ற பெருமானே! சர்வேச்வரனாகிய நீ ரஜோ குண, தமோ குணங்களால் மிக்கவர் கருமதியால் உன்பக்கல் வாராதொழியும்படி பலப்பல தெய்வங் களையும், பலப்பல மதக்கோட்பாடுகளையும், பலப்பல உபாசனை விதங்களையும் ஏற்படுத்தி அமைத்து வைத்தாய். உன்னை நேராக அடைந்து உய்வதற்கு இடையூறான அவ்வெளி வழிகளிலே யான் இறங்கி விலகாதபடி, அவற்றிற்கெல்லாம் மூலமான உனது ஸ்வரூபத்தை பறிந்து உன்னிடத்திலே அன்பை மிகுதியாகச் செய்வ தோடு பிறரும் அங்ஙனம் செய்யத் தூண்டுவேன்'' என்று இப் பாசுரத்தால் விண்ணப்பஞ் செய்கிறார் (ஆழ்வார் எம்பெருமான திருவுளத்தின்படி உலகத்தைச் சீர்திருத்தி நல்வழிப்படுத்த அவ தரித்தவர் ஆதலால் இங்ஙனம் தமது செய்கையைக் கூறுதல் தகும்).

இங்ஙனம் திருக்கோவையாரின் நானூறு பாடல்களும், திருவிருத்தத்தின் நூறு பாடல்களும் அகப்பொருள் கருத்துகளோடு கனிந்த ஞானங் கெழுமிய மெய்ப்பொருள் கருத்துகளையும் உள்ளுறை யாகப் பெற்றுப் பேரின்பப் பயனை விளைவிக்கின்றன.

திருக்கோவையாரிலுள்ள கிளவிக்கொத்துக்கள் அனைத்தும் பேரின்பப் பொருளில் கொள்ளப்பட்டு மனித இனத்துக்கு நலம் செய்கின்றன.

இயற்கைப் புணர்ச்சி என்பது சற்குரு தரிசனமாகக் கொள்ளப் படுகிறது பாங்கற் கூட்டம் ஆன்மபோதம்; இடத்தலைப் பாடு அன்பால ஆனந்தம் பெற்று அனுபவித்தல். மதியுடம்படுத்தல் அருள் சிவம் கலந்து உயிர் தரிசனம் செய்தலாகும். இருவருமுள்வழி அவன் வரவுணர்தல் என்பது சிவமுயிர் விரவிய தருமே விளைவியது. குறையுறவுணர்தல என்பது சிவமுயிர் கலத்தருள் பணியாற் காண்டல். நடுங்கநாட்டம் சிவமே கருணைபெறுமாறுள் நோக்கல் மடற்றிறம் உயிரின்புறவே அருளொடு உரைத்தல். குறைநயப்புக் கூறல்

உயிர்ப்பிரிவின் புக்கருள் புகன்றிடுதல். சேட்படை, கிடையா இன்பத் தருமை காட்டல், பகற்குறி என்பது இயற்கைபோல் சிவத்தோடியலுறவுக் கூட்டல்; இரவுக்குறி அருளே சிவத்தோடாக்கிய அருமை கருணை பலவுமெடுத்துக் காட்டல். ஒருவழித்தணத்தல் என்பது சிவனது கருணையருள் தெரிவித்தல். உடன்போக்கு அருளுயிர்க்கு அருமையறிவித்தல் அல்லது ஆனந்தத்தடை அழுந்துவித்தல். வரைவு முடுக்கம் சிவனது கருணை தெரியவுரைத்து இன்பம் பெற அருள் எடுத்தியம்புதல். வரைபொருட்பிரிதல் கருணையருள் திரோதை பரையின் புணர்தல். மணஞ்சிறப்புரைத்தல் உயிர் சிவமணம் பெற்று உண்மையாதல். ஓதற்பிரிவு பூரண இன்பத்திறம் பாராட்டல். காதற் பிரிவு இன்பத் திறத்தை எங்கும் காண்டல். பகை தணிவினைப் பிரிவு இன்பக் கனவன்றி வேறிலை உலகு என்றல் வேந்தற்கு உற்றுழிப் பிரிவு இன்பு ஆராமை அன்பே என்றல். பொருள்வயின் பிரிவு அறிவு பூரணமாகி இன்பமாதல். இங்ஙனம் அகப்பொருட் கிளவிகளுக்கு ஏற்றவகையில் அருளாளர்களின் ஞானப் பனுவல்களுக்கு மெய்ப் பொருள் கண்டு பேரின்ப நிலையினை உணர்தல் வேண்டும்.

## முடிவுரை

திருக்கோவையாரும் திருவிருத்தமும் சீரிய நற்காமஞ் சான்ற ஞானப் பனுவல்களாகும்.

சைவம், வைணவம் ஆகிய இருசமயங்களின் ஞானப் பிழிவுகளாக இவ்விரண்டு நூல்களும் இலங்குகின்றன.

ஒன்றற்குப் பாட்டுடைத்தலைவன் திருச்சிற்றம்பலத்து நடராசப் பெருமான்; மற்றதற்குப் பாம்பணையிற் பள்ளிகொள்ளும் பரமனே பாட்டுடைத்தலைவன்.

உலகில் வாழும் சீவாத்மாக்கள் அனைத்தும் பரமாத்மாவுக்கே உரிமையுடையன என்பதனை அகப்பொருள் வாயிலாக இவ் வருளாளர்கள் நன்கு தெரிவித்துள்ளனர்.

மாணிக்கவாசகர் குருவினைத் திருப்பெருந்துறையில் கண்டு உபதேசம் பெற்றதற்கொப்பத் திருக்கோவையார்ப் பாடல்களிலே குருதரிசனச் செய்தியைக் (பாடல்கள் 1,2,3,4,10 முதலியன) காண்கிறோம்.

திருவிருத்தத்தில் நம்மாழ்வாரை ஒத்த பாவலர்கள் (பாடல்கள் 16,28,31,59,60,65,81,87) கூறப்பெறுகின்றனர்.

திருக்கோவையார் சற்குருவை வியந்து கூறுகின்றது. திருவிருத்தமோ அடியார்களை வியந்து கூறுகின்றது. இருநூல்களும் குருவின்றி அடியாரில்லை; அடியாரின்றிக் குருவுமில்லை என்ற உண்மையைத் தெரிவிக்கின்றன.

சிற்றின்பமும் பேரின்பமும் ஆகிய இருபொருள்களையும் இந்நூல்களின் பாடல்கள் ஒருங்கிணைத்து உரைக்கும் திறம் ஆய்ந்தாய்ந்து மகிழ்தற்குரியது.

# மெய்ப்பொருள் கூறுகள்

## குறிப்புகள்

1. குமரகுருபரர் பிரபந்தங்கள், சிதம்பர மும்மணிக் கோவை, ப.23,
2. திருக்கோவையார், காசி மடம் பதிப்பு, திருப்பனந்தாள், 1972, பதிப்புரை, ப.5.
3. மே.நூ., நூற் சிறப்பு, ப. 2.
4. மே.நூ., ஆராய்ச்சியுரை, ப.11.
5. மயிலை மாதவதாசன் (ப-ர்), நாலாயிரத் திவ்விய பிரபந்தம் சென்னை, 1962, ஆழ்வார்கள் திவ்விய சரித்திரம், ப.28.
6. வி.மு. பழநி. 'சிவஞானபோதம் — ஓர் ஆய்வு,' ப.88.
7. மே.நூ., ப.39.
8. ,, ப. 39.
9. ,, ப. 40.
10. குறள் 358.
11. கு. தாமோதரன், 'ஆழ்வார்கள் திருவுள்ளம்', ப.68.
12. ஆறுமுக நாவலர் (ப-ர்), திருக்கோவையார்ப் பாயிரம், ப.7
13. இராமானுச நூற்றந்தாதி, 40,
14. திருப்பாவை 501.
15. திருக்கோவையார் 307.

15.அ. திருவிருத்தம் 2577.

16. பெருமாள் திருமொழி 689.
17. திருவாய்மொழி 3280.
18. பெரிய திருமொழி 1216.
19. பி.ப. அண்ணங்கராசாரியார், 'ஸ்ரீஇராமானுசன் தொண்ணூற்றிரண்டு உபந்நியாசங்கள்', ப.28.
20. இராமானுச நூற்றந்தாதி, 40.
21. ஸ்ரீமணவாள மாமுனிகள், 'ஆசார்ய இருதயம்', நூ. 118.
22. புறப்பொருள் வெண்பா மாலை, பாடாண் படலம் (49) நூ. 237.
23. தொல்காப்பியம், புறத்திணையியல், நூ.83.
24 கு தாமோதரன், ஆழ்வார்கள் திருவுள்ளம்', ப.65.
25. திருக்குறள் 265.
26. இறையனார் களவியலுரை, கழகம், சென்னை, 1953, ப.11.
27. மே நூ. ப.11
28. திருக்கோவையார், காசி மடம் பதிப்பு, பேராசிரியர் உரை பாயிரம், ப.5.
29. திருவிருத்தம் 2537.

—+✱+—

"வானத் தவர்க்குமல் லாதவர்க் கும்மற்றெல் லாயவர்க்கும்
ஞானப் பிரானையல் லாவில்லை நான்கண்ட நல்லதுவே"

## இயல்–ஆறு

# சமுதாய நிலை

சமுதாயம் என்பது மனித இனத்தின் கூட்டு அமைப்பு ஆகும். மனிதன் சமூகமாகச் சேர்ந்த வாழ்வில்லையென்றால் மனநிறைவு பெறுவதில்லை; ஏக்கம் கொள்கிறான். அதனால்தான் குற்றவாளிகளுக்குத் தண்டனை அளிக்கும்போது சிறையில் ஓரறையில் தனியே அடைத்துத் துன்புறுத்துகின்றனர்.

"கூட்டு வாழ்க்கை அல்லது மனித இன அமைப்புகளின்
மேம்பாடான வடிவம்"1

என்பதையே சமுதாயம் என்ற சொல் குறிக்கிறது.

நம்மாழ்வார், மாணிக்கவாசகர் ஆகிய இருவரும் ஏறக்தாழ ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர்கள். நம்மாழ்வார் புளியமரப் பொந்திலேயே பல்லாண்டுகள் தங்கியவர். ஆழ்வார்கள் பிறரைப் போன்று வெளியே பல தலங்களுக்கும் சென்று சுற்றித் தரிசித்துப் பாடவில்லை. பல தலங்களிலுமுள்ள பெருமான்கள் புளியமரத்தின் இலைசர்ந்து உட்கார்ந்து 'என்னைப்பாடு' 'என்னைப்பாடு' என்று பாடலைப் பெற்றதனால் நிரம்பச் சமுதாய நிலைகளமைந்த பாடல்கள் கிடைப்பது அரிதாயிற்று. மேலும் அகப்பொருள் பாடலாயுள்ள திருத் விருத்தம் நூறு பாடல்களே கொண்டது. எனவே குறுகிய வட்டத்திற்குள் பாடவேண்டிய நிலை அவருடையது.

திருக்கோவையார் பாடிய மாணிக்கவாசகரோ அரிமருத்தன பாண்டியனின் அமைச்சராக இருந்தவர். பின்னால் சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் இடங்களுக்கெல்லாம் சென்றவர்; பாடல்கள் பாடியவர்.

## நாடும் நகரமும்

குளிர்ந்த உயர்ந்த வேங்கடமலை மீது நின்று உயிர்களைக் காத்தருள்பவன் எம்பெருமான்.2 இவ்வேங்கடம் தமிழ்நாட்டின் வடவெல்லை.

வெஃகா எனும்பதி காஞ்சிபுரம் ஆடிசன்பேட்டை அரங்கசாமி குளத்திற்கருகிலுள்ளது. இங்கு எழுந்தருளியுள்ள பெருமான் பெயர் 'சொன்னவண்ணம் செய்த பெருமான்' என்பது இதனை ஆழ்வார்.

"கல்திலத் தோய்ந்துவின் மேனார்தொழும் கன்னன் வெஃகா"4

என்று பாடுகிறார். திருவெஃகாவிலிருக்கும் இறைவனைப் பெரும் பாணாற்றுப்படை சிறப்பித்துப் பாடுகிறது 5

அலைமோதுகின்ற காவிரிநீர் சூழ்ந்த திருவரங்கம் என்னும் பதி மிகவும் புகழ் வாய்ந்தது. இதனை.

"புன்தத்துமாமே பொருநீர்த் திருவரங்கா"6 என்று ஆழ்வார் பாடுகிறார்.

திருவேங்கடம் திருவெஃகா, திருவரங்கம் ஆகிய மூன்று நகரங்களை மட்டுமே நம்மாழ்வார் கூறியுள்ளார். இவற்றையும் அவர் விரிவாக வருணிக்கவில்லை.

வரகுணபாண்டியன் இமயமலையில் கயலமீன் இலச்சினை பொறித்தான்7. தில்லை வயல்களை யுடையது; வளம்பெருகியது.8 தில்லையின் அருகில் கடல் இருந்தது; கடலில் பெரியவாகிய கப்பல்கள் பல இயங்கின.9 தில்லையில் அகழியும் மதிலும் அமைந்திருந்தன10. பெரிய மாட மாளிகைகளில் சூலம்போன்ற ஓர் உறுப்பு நடப் பட்டிருந்தது.11 இளைஞர்கள் வேலைக் கையிற்கொண்டு இரவுப் பொழுதில் நகரைச் சுற்றிவருவர்.12 பறையினைக் கொட்டி நகர்வலம் வந்து காவல் புரிவர்.13 நகரில் மணமுரசு ஒலித்தல் செய்வதுண்டு.13

குளத்தில் தாமரை மலர்கள் நிரம்பியிருந்தன.14 ஊரின் நடுவே மக்கள் நீர் எடுப்பதற்கேற்றவாறு குடியிருப்புகளுக்கு அருகில் ஊருணி இருந்தது15.

## கல்வியும் தொழிலும்

கற்ற கல்வியின மேலும் கற்கநினைத்துப் படித்தனர் அக்கால மக்கள்.

> "சீரள வில்லாத் திகழ்தரு கல்விச்செம் பொன்வரையின்
> ஆரள வில்லா அளவு சென்றார்"16

என்கிறார் மாணிக்கவாசகர். இதற்கு,

> "செம்பொன் வரையென்றான், தூய்மையும்
> பெருமையும் கலங்காமையு முடைமையால்.
> கற்றதன் மேலும் கற்க நினைக்கின்றானாதலான்
> ஆரளவு இல்லா அளவு சென்றார் என்றான்.
> ஆரளவு; காதமும் புகையு முதலாயின"17

என்று பேராசிரியர் உரை வரைந்திருத்தல் இங்குக் கருதுதற்குரியது.

எல்லையில்லாத நன்மையைத் தருகின்ற கல்வியை நிரம்பக் கற்றவர் மட்டுமே பிறப்பாலுறும் நன்மையைப் பெற்றவர் ஆவர்.

> காதலுற்றார்நன்மை கல்விசெல் வீதரு மென்பதுகொண்டு
> ஓதலுற் றார்உற்று உணர்தலுற்றார்"18

என்று பாடுகிறார் மாணிக்கவாசகர்.

நான்மாடக் கூடலில் இருந்த தமிழ்ச்சங்கத்துள் அகமும் புறமும் ஆராயப்பட்டன.19 அங்கு இசைத்தமிழும் ஆராயப்பட்டது.

"பொன்பணைத் தன்ன இறையுறை தில்லைப் பொலிமலர்மேல்
நன்பணைத் தனைறவுண் அளி போன்றொளிர் நாடகமே"20

என்பதனால் மாணிக்கவாசகர் காலத்து நாடகக் கல்வியும் சிறந்து விளங்கிற்று எனலாம்.

"கண்டார்க்கு இன்பஞ் செய்தலின், நாடகம்
என்றார்"21

என்னும் பேராசிரியர் உரை ஈண்டு நினைத்து மகிழ்தற்குரியது.

குறிஞ்சி முதலான திணைகளுக்குரிய நிலங்களில் இடத்திற் கேற்ற தொழில்கள் மேற்கொள்ளப்பட்டு வந்தன.

குறிஞ்சி நிலப்பெண்கள் பரண் கட்டித் தினைப்புனம் காத்து நிற்பர். கிளி முதலிய பறவைகள் வந்து தானியக் கதிர்களைக் கவராதபடி அவற்றை வெருட்டுவதற்காக ஆயலிட்டுக் கவணால் கல் எறிந்து விரட்டுவர்.22

பாலைநில வழியிலுள்ளாருடைய கொடுமையைத் திருவிருத்தம் கூறுகிறது. விலங்கினைக் கண்டபின் வில்லை வளைத்து நாணேற்றி அம்பெடுத்து எய்யமாட்டார்கள் வில்லை வளைத்து நாணேற்றி அம்புங்கையுமாகவே இருப்பர். விலங்குகளைக் கண்டவுடன் அம்பெய்து கொல்வர். அவர்கள் பசுக்கொலைக்குப் பின்வாங்காதவர் பொருளுக் காகவும் பகைமைக்காகவும் வேறொரு பயனுக்காகவுமே அன்றித் துடிப்புக் காணும் பொருட்டாகவும் கொலவதுண்டு சாலக் கொல்லாதே குற்றுயிர் குறையுயிராகக் கிடந்து நெடுநாள் துடிக்கும்படி கொல்லுதல அவர்களது தொழிலாகும். பத்துக்காதம், இருபது காதம் கடந்துசென்றால் இம்சை செய்து பொருள் பறிக்கலாம் என்று யாரேனும் சொன்னால், அதில் தடையின்றி அவ்வளவு தொலைவும் விரைந்துசென்று மீளும்படியான வலிவான கால்களை யுடையவர்கள். என்றும் பறை முழக்கிக்கொண்டு திரிவார்கள்.23

"கொடுங்கால் சிலையர் நிரைகோளுழவர் கொலையில்வெய்ய
கடுங்கால இளைஞர் துடிபடும் கவ்வைத்து ... சூழ்கடமே"24

என்பது நம்மாழ்வாரின் திருவிருத்தம். இது பாலைநில மக்களின் கொடுமை மிக்க தொழிலை நன்கு இயம்புகிறது.

வேடர்கள் மானுக்குத் தொடுக்கும் கணையைத் தொடுக்காது விட்டனர். காரணம் மானின் நோக்கு, தங்கள் மனைவியரின் கண்கள் போன்று இருத்தலினாலாகும் என்று மாணிக்கவாசகர் வேடர் கொண்ட இரக்கத்தின் காரணத்தைத் தம் பாடலில் புலப்படுத்துகின்றார்.

"கானமர் குன்றர் செவியுற வாங்கு கணைதுணையா
மானமர் நோக்கியர் நோக்கென மான்நல் தொடைமடக்கும்"23
என்பது திருக்கோவையார். இது குன்றின்கண் இருக்கும் வேடுவர்கள் பற்றியது.

அந்தணர்கள் நான்மறையும் பயின்றனர் அவர்கள் சோதிடமும் கூறினர்.26 தூண்டிலை விழுங்கிய வரால் தென்னையோடு மோத, அதன் காய்கள் விழுந்து கிண்ணம் போலும் பூக்களை யுயர்த்திய பலவாகிய தாமரையைக் கிழிக்கும் வயல்கள் என்பதால் மக்கள் தூண்டிலையிட்டு மீன் பிடிப்பார்கள் என்னும் செய்தி கூறப்படுகிறது.

"தூண்டி லெடுத்தவ ரால்தெங்கோ டெற்றப் பழம்விழுந்து
பாண்டி லெடுத்தபஃறாமரை கீழும் பழனங்களே"27
என்னுமிது அழகிய மருதநிலக் காட்சி.

குடிமக்களைக் கொல்லாமலிருக்கவும், பயிர்களை நாசம் செய்யா மலிருக்கவும் வனத்திலிருக்கும் கொடிய விலங்குகளை அரசர் வேட்டையாடுவர்.28

"கார்த்தரங் கந்திரை தோணி சுறாக்கடன் மீனெறிவோர்"
என்பதனால் கடலில் தோணிகளிற் சென்று சுறாமீன்கள் முதலியவற்றைப் பிடித்தனர் என்பது பெறப்படும். இது நெய்தல் நிலத்தார் தொழிலைத் தெரிவிக்கிறது.

கூரிய ஊசிகள் செய்யும் கொல்லர் வாழும சேரிகளும் இருந்தன என்பதனை,

"வைகொண்ட ஊசிகொற் சேரி"30
என்னும் பாடல் அடியினால் அறியலாம்.

மலையின் தாழ்வரையில் தினைப்பயிரை வளர்ப்பார்கள்.37 அதற்குப் பரண்கட்டித் தங்கள் வீட்டுப் பெண்களைக் கிளி முதலிய பறவைகளை ஓப்புமாறு காவல் வைப்பர். தினையின் கதிர் 'கோடை வெப்பத்தாலழி'வும் அதைக்கண்ட வேடுவர்கள் மழை பெறக் கருதித் தெய்வத்தைப் பரவுவர்.32 குறிஞ்சி நில மக்கள் தேனையும் கிழங்கையும் உண்பர்.33 இரவில் குரவைக் கூத்தாடுவர்.34

சிறுவர்கள் கையில் கவணில் மாணிக்கத்தை வைத்து மலைத் தேனிறாலை நோக்கி எறிவர். இதனால் தேன் சிதறி இடிமுழக்க ஓசையுடன் வெள்ளப் பெருக்கெடுத்துக் குறவர் குடிசையைத் தள்ளிக் கொண்டு ஓடிவரும்.35

இவ்வாறு நானில மக்களின் தொழிலும் வளமும் வாழ்வும் இரு நூல்களாலும் எடுத்துரைக்கப்படுகின்றன.

## பழக்கவழக்கங்கள்

தலைவன், தலைவியை மணஞ்செய்யும் பொருட்டுப் பொருள் திரட்டிவர அவளைப் பிரிந்து செல்கிறான். தலைவன் குறித்த காலத்தில் வாராது போகவே தலைவி வருந்துகிறாள் அந்நிலையில் அவளது வடிவ வேறுபாட்டை நோக்கி, "இவள் இங்ஙனம் மெலிதற்குக் காரணம் என்னோ" என்று கவலைப்பட்டுக் கட்டுவிச்சியைக் குறி கேட்கின்றனர் அவள் தன் மரபின்படி ஆராய்ந்து, "இவளுக்கு முருகக் கடவுள் ஆவேசித்த தொழியப் பிறிதொன்றுமில்லை" என்று சொல்ல. அதுகேட்ட செவிலி உடனே வெறியாட்டாளனை அழைப்பித்து, அவனைக்கொண்டு ஆவேசமாடுவிக்கின்றனர் அப்போது தலைவி வருந்துகிறாள். அது சமயம் தோழி வெறியாடுதலுக்கு உண்மைக் காரணம் கூறித் திருத்துகிறாள். இங்ஙனம் 'வெறியாடுதல்' என்னும் வழக்கம் அக்காலத்திருந்தது 86

"விரத முடையர் விருந்தொடு பேச்சின்மை"87

என்றதனால் மக்கள் எதிர்கொள்ளத்தக்க விருந்தினரோடும் பேசாது விரதம் இருந்தனர் என்பதை அறிகின்றோம்.

கிளியை வீட்டில் வைத்து வளர்த்து, அதற்குப் பேச்சுக் கற்பித்தல் உண்டு.38 புலையர் பசுவைக் கொன்று தின்பர்.39 மயக்க முற்றோரைத் தண்ணீர் தெளித்துத் தெளிவுபெறச் செய்வது வழக்கம் 40

போரிலே இறந்த கணவனைப் பார்க்க மனைவி ஒக்கலையில் பால்மணம் மாறாத பச்சிளங் குழந்தையை வைத்துக்கொண்டு போர்க் களம் சென்று வருவாள்.41

பல்லியின் சொல்லுக்குப், பின்னால் நடைபெறும் நிகழ்ச்சியை முன்குறிக்கும சகுனமாகக் கொள்ளுதல் அக்காலத்தில் இருந்தது.42 பரதவர் சங்க வளையல்களைச் செய்து விலைக்கு விற்பர்.43

இல்லுறை தெய்வத்திற்கு மணமுடைய மலர்களைத் தூவி நெல்லுமிட்டு வணங்குவர்.44 இங்ஙனமே சிலப்பதிகாரத்திலும் மாலைக் காலத்தில் பெண்டிர்,

> "அகனக ரெல்லாம் அரும்பவிழ் முல்லை
> நிகர்மலர் நெல்லொடு தூஉய்"45

வழிபாடு இயற்றினர் என்று சொல்லப்படுகிறது.

மலைவாழ் மகளிர் களிற்றின் தந்தங்களிலிருந்து வீழ்ந்த முத்துக் களைக் கள்ளுக்கு விலையாகக் கொடுப்பர்.46 தெய்வமேறப் பெற்ற கட்டுவிச்சி முறத்தின்கண் பரப்பிய நெல்லைக் கூர்ந்து நோக்கித் தான் தன் மனக்கண்முன் தோன்றும தெய்வத் தோற்றங்களை விரலாற் சுட்டிக் காட்டுவாள்.47

பாசறையில் இருக்கும்போது பகைவேந்தன் சமாதானம் வேண்டித் திருமுகம் அனுப்புவான்.48

தான் விரும்பியவர், காகம் கரைந்தால் வருவார் என்று மக்கள் நம்பினர். தெய்வத்திற்குக் கொடுத்த நல்ல நிணத்தையுடைய பலியையும் காக்கைக்கு ஈந்தனர் 49

யானையின் எலும்புகொண்டு குறவர் வீடு அமைத்தனர்.50 கூந்தலுக்கு அகிற்புகை ஊட்டினர் 51 மகளிர் கண்ணிற்கு மை எழுதினர்.52 குழந்தைகளுக்கு இடையில் உடைமணி கட்டினர்.53

தலைவனுக்குப் பூப்பறிவுணர்த்தச் சிவந்த பூவும், சிவந்தபட்டும். சிவந்த சந்தனமும் அணிவது வழக்கம்.54

தழையைத் தன் காதலுக் கடையாளமாகத் தலைவன் தலைவிக்குத் தோழி மூலமாகக் கொடுப்பது வழக்கம். இவள் குறிஞ்சி நிலத்துத் தலைவியாதலாலும் தழையைக் கொண்டு கொடுத்துக் காணுதல் இவளது குலமுறைமை யாதலாலும் தான் கொண்டு சென்ற தழையைத் தோழியின் மூலமாகத் தலைவி ஏற்றுக் கொள்வாளாயின், அது தன்னை ஏற்றுக்கொள்வதற்கு அறிகுறியாகும் எனத் தலைவன் நினைந்திருப்பதால், இவன் தழையைக் கொண்டு செல்வது மரபு. மரக்கொம்பிலிருந்து பறிக்கப்பட்ட தழை வாட்டத்தோடு கூடி யிருத்தலால் நாயகியைக் கூடாமையால் தனக்கு உண்டாயிருக்கின்ற வாட்டத்தைக் குறிப்பிடுவதற்குக் கருவியாகவும் தழைகொண்டு தலைவன் செல்வான்.55

தழையை அரைத்து உடலிற் பூசுதல் அக்காலத்தில் இருந்தது 56 திருமணச் சடங்கில் ஏவலஞ்செய்து. அருந்ததி பார்த்தல் ஒரு பழக்கம்.57 போரில் வெற்றி அடைந்தவர் பகைவர் தந்த விருதுகளையும் திறைகளையும் கொண்டு வருவர்.58

மகளிர் மைனாக்களை வளர்த்தனர்.59 அவர்கள் புலிப்பல் தாலியும் அணிந்திருந்தனர்.60

தேர் அப்போதிருந்த வாகனம். தலைவன் தேர் ஏறிக் கடற்கரைப் பக்கம் போதலுண்டு 61 கொடியை உடைய தேர்களைப் பெற்றவர்கள் மறவர்.62 மணிகளையுடைய தலையாயதொரு நெடுந் தேரைச் செலுத்தினர் அக்கால வீரர்.63

தில்லை நகரில் நடராசப் பெருமானுக்கு விழாக்கள் நடைபெறும். பலவகை விளக்குகள் இரவையும் பகலாக்கும் மாணிக்கம் முதலான வற்றால் ஆன பல நிற மாலைகள் ஒளிவீசும்.64

## விளையாட்டுகள்

மலர் பறித்தல், பந்தடித்தல், சுனை நீராடுதல் முதலியன பெண்களின் விளையாட்டுக்கள் 65 மலையின் எதிரில் எதிரொலி கேட்ப மகளிர் கூவுதல் உண்டு.66 சந்தன மரங்களடர்ந்த சோலையில் மகளிர் பலர் சேர்ந்து பந்தாடினர்.67 சோலையில் புன்னை மரத்தில் கட்டியிருந்த ஊசலில் மகளிர் ஆடி மகிழ்ந்தனர்.68 சிறுமியர் சிற்றில் கட்டி விளையாடினர்.69 குழந்தைகள் சிறுதேர் உருட்டி விளை யாடினர்.70 சிலர் பொம்மை வைத்தும் பொழுது போக்கினர்.71 தலைவன் பரத்தையோடு புனலாடினான்.72

## மங்கலச் செயல்கள்

பூரண கும்பம் வைத்தல், முத்துமணித் தோரணம் தொங்க விடுதல், வாத்தியங்கள் முழங்குதல், மணமுரசு கொட்டுதல் முதலியன மங்கலச் செயல்களுக்குப் பயன்படுத்தப்பட்டன.73

## வணங்குந் துறைகள்

"வணங்குந் துறைகள் பலபல ஆக்கி மதிவிகற்பால்
பிணங்கும் சமயம் பலபல ஆக்கி அவையவைதோறு
அணங்கும் பலபல ஆக்கிநின் மூர்த்தி பரப்பிவைத்தாய்
இணங்குநின் னோரையில் லாய்நின்கண் வேட்கை
எழுவிப்பனே"74

என்கிறார் நம்மாழ்வார்.

இறைவனை வணங்குதற்குப் பலப்பல உள்ளன. அங்ஙனமே மதங்கள் பலப்பல உள்ளன. அந்த மதங்களில் சிறு தெய்வங்களைப் படைத்துத் தன் மூர்த்திகரமான தன்மையைப் பரப்பி வைத்துள்ளான். எல்லோரையும் ஆழ்வாரைப் போலவே அவன் பக்கலிலே ஆசையுடையவராகும்படி செய்தல் வேண்டும். இறைவன் அவர்களைப் புறக்கணித்தாலும் ஆழ்வார் அவர்களைத்திருத்தி, திருவடி பற்றும் விருப்பமுடையராக்குவேன் என்கிறார்.

> ''ஒன்றே பொருளெனின் வேறென்ப வேறெனின்
> அன்றென்ப ஆறு சமயத்தார்''75

என்றாற்போல ஆம் என்பதை அல்ல என்பதும், அல்ல என்பதை ஆம் என்பதுமாகச் சமயச் சண்டைகள் மதி விகற்பால் பிணக்கங் கொள்வதாய்த் தோன்றுகின்றன. இப்படிப்பட்ட பிணங்குகின்ற மதங்கள் பலவற்றையும் இறைவனே உண்டாக்கினான் என்கிறார் ஆழ்வார் ஒவ்வொரு மதத்திலும் அம்மனென்றும், பிடாரியென்றும், சாத்தனென்றும் பல்வேறு தெய்வங்களைக் கும்பிடுகிறார்கள், எனினும் பல தெய்வங்களை உள்ளடக்கிய திருமாலே 'கழிபெருந் தெய்வம்' என்னும் கருத்துடையவர் நம்மாழ்வார்.

## கடவுள் பற்றிய வேறு கொள்கைகள்

'வணங்கும் துறைகள்' என்று மேற்சுட்டிய திருவித்தக் கருத்தோடு நம்மாழ்வாரின் வேறு பிற சிந்தனைகளையும் இணைத்துக் காணுதல் வேண்டும்.

> ''அவாவறச் சூழ்அரியை அயனை அரனை அலற்றி
> அவாவற்று வீடுபெற்ற குருகூர்ச் சடகோபன்''76

என்பதிலிருந்து எல்லாக் கடவுளரும் ஒருவரே; பிரிந்து, இவ்வாறு நின்று அவரவர் கொள்கைக்கேற்ப அருளும் வடிவங்களே என்கிறார் ஆழ்வார்.

> ''ஒன்றெனப் பலவென அறிவரும் வடிவினுள் நின்ற
> நன்னெழில் நாரணன் நான்முகன் அரனென்னு மிவரை
> ஒன்றநும் மனத்துவைத் துள்ளிநும் மிருபசை யறுத்து
> நன்றென நலஞ்செய்வ தவனிடை நம்முடை நாளே''77

என்னும் பாடலில் மூவருள் யாரையேனும் மனத்தில் நிறுத்தி யாரை எண்ணி வணங்கினாலும் வணங்கலாம், பசையறுக்கலாம் என்கிறார்.

மும்மூர்த்திகளை மனத்தில் இருத்தினால் உணர்ந்து உணர்ந்து இருத்தினால் யாரேனும் ஒரு மூர்த்தியிடம் பக்தி ஏற்படும். வைண

வர்கள் நாரணனை என்று உணர்ந்தால், மற்ற இருவர் பாலுள்ள ஒட்டுதலைத் தவிர்ப்பர் சைவர் சிவனே என்று உணர்வதால் மற்ற இரு வரின் ஒட்டுதலைத் தவிர்ப்பர். 'ஒன்றைப் பிடித்தாலும் உறுதியாகப் பிடி' என்னும் கொள்கையை உணர்த்துகிறார் ஆழ்வார். கடவுள் ஒருவரே எனும் கொள்கையையும்இப்பாடல் வலியுறுத்துகிறது :

"உணர்ந்துணர்ந் திழிந்தகன் றுயர்ந்துரு வியந்தவிந் நிலைமை
உணர்ந்துணர்ந் துணரினும் இறைநிலை புணர்வரி துயிர்காள்
உணர்ந்துணர்ந் துரைத்துரைத் தரியய னரனென்னு மிவரை
உணர்ந்துணர்ந் துரைத்துரைத் திறைஞ்சுமின் மனப்பட்ட
தொன்றே"78

நம்மாழ்வாரின் இப்பாடல் திருவாய்மொழியிலுள்ளது. வேறு பல பாடல் களிலும் நம்மாழ்வார் மும்மூர்த்திகளைக் குறிப்பிடுவர்.

"கடிகமழ் கொன்றைச் சடையனே என்னும்"79
"பூந்தண் துழாய் முடியாய்புனை கொன்றையஞ் செஞ்
சடையாய்"80
"என்திருமார்பன் றனைஎன் மலைமகள் கூறன்றன்னை...
... எயில் மூன்றெரித்த
வென்று புலன்மதுரந் தவிசம் பாளியைக் காணேனோ' 81
"மாயோனை முக்கணம் மானை நான்முகனை யமர்ந்தேனே'82
"முனியே நான்முகனே முக்கண் அப்பா'83

என வரும நம்மாழ்வாரின் பாடல்கள் மும்மூர்த்திகளைப் பேதமின்றிக் கூறுதலைக் காணலாம.

மாணிக்கவாசகர் 'ஒருவன் என்னும் ஒருவன் காண்க'84 என்று மும்மூர்த்திகளையும் 'ஒருவனே' என்கிறார். நம்மாழ்வாரும் கண்ணபிரானைப் போற்றிப் பரவும் திருப்பாடலில், "ஒருவன் என்றேததி நின்ற தளிர்மதிச் சடையன் என்கோ" என்று குறிப் பிடுகின்றார்.85

## சமுதாயத் தொண்டு

திருவிருத்தத்தின் முதற்பாட்டிலும் இறுதிப்பாட்டிலும் விண்ணப்பம் என்ற சொல்வந்து நம்மாழ்வாரது பணியினை எடுத்துக் காட்டுகிறது. "அடியேன் செய் விண்ணப்பமே"86 என்றும் "மாறன் விண்ணப்பஞ் செய்த"87 என்றும் சொல்லுகின்றவர், பொய்ந்நின்ற ஞானம் முதலியவற்றை "யாமுறாமை செய்யவேண்டும்' 88 என்று பன்மையில் பேசுகிறார். தமக்கு மட்டும் ஒன்று வேண்டுமென்று

கேளாது தம்மைச் சார்ந்தவர் யாவர்க்குமாக வேண்டுகிறார். தண்ட காரண்ய முனிவர்கள் அசுரர்களின் கொடுமை தாளாமல் தம குறைபட்ட உடல்களைக் காட்டி, இராமனிடம் வேண்டியது போல மானிடத்தின் துயரங்களையும் அருள் செய்யாமையையும் எடுத்துக்காட்டி. இறைவனிடம் அவர்கள் குறைகளைக் களையுமாறு இப்பாடலில் வேண்டுகிறார் ஆழ்வார். "பிறர் துன்பங்கண்டு பொறாதவ ராகையாலே பிறர்க்காகத் தாம் மன்றாடுகிறார்"89 என்று எடுத்துக் காட்டுவர் பெரியவாச்சான் பிள்ளை.

ஸ்ரீதேசிகள் நமது அமிருதாசுவாதினியின் 28-ஆவது பாடலில் சடகோபன் அருளினால் தீவினை வழியொழுகாமல் காத்துப் பேரின்பத்தில் திளைக்கச் செய்கிறார் என்கிறார்.90

கிடாம்பியாச்சான் தாம் அருளிச்செய்த திருவிருத்தத்தின் தனியனில் ஆழ்வாரால் சமுதாயம் பெறும் பலனைக் குறிக்கின்றார்:

"கருவிருத் தக்குழி நீத்தபின் காமக் கடுங்குழிவீழ்ந்து
ஒருவிருத் தம்புக் குழலுறு வீர்உயி ரின்பொருள்கட்கு
ஒருவிருத் தம்புகு தாமல் குருகையர் கோனுரைத்த
திருவிருத் தத்தோ ரடிகற் றிரீர்திரு நாட்டகத்தே"91

கிடாம்பியாச்சான் இத்தனியன் மூலம் திருவிருத்தத்தின் ஓரடி பயில் வோர் பெறு பயனை எடுத்துரைக்கிறார்.

ஆழ்வாரும் காமக்குழியில் விழுந்தவரை எம்பெருமானிடம் சேர்க்கக் கருதியே நாயக-நாயகி பாவத்தை ஆதரித்துக் காதல் விருத்தத்தையே இத்திருவிருத்தத்தில் சேர்த்தருளினார். பெண் களுக்கு எம்பெருமானிடம் காதலை மூட்டத் தாம் நாயகி தன்மையில், அஃதாவது பராங்குச நாயகியாக நின்றார். கருவினின்று பிறந்தவர் காமக்குழியில் வீழ்ந்தால் பிறகு ஏறிவர இயலாதாகையாலே, ஆண்டாளைப் போல யாவரும் எம்பெருமானிடத்திலே சிறுவயதி லிருந்தே ஈடுபட வேண்டுமென்பது ஆழ்வார் திருவுள்ளம். ஆண்களும தங்களை நாயகியாக நினைத்துக்கொண்டு ஆழ்வாரைப் போல எம்பெருமானிடம் ஈடுபட்டால் கடுங்காமக் குழியில் வீழும்படி நேரிடாது.

"அருள்கொண் டாடு மடியவ ரின்புற
அருளி னான்அவ் வருமறை யின்பொருள்
அருள்கொண் டாயிர மின்தமிழ் பாடினான்
அருள்கண் டீரிவ் வுலகினில் மிக்கதே"92

என்று மதுரகவிகள் தம் குருநாதராகிய நம்மாழ்வார் மக்கள்பால் வைத்த அருளின் மிகுதியால் பாடிக்கொடுத்தது திருவாய்மொழி ஆயிரம் என்று பேசுகிறார்.

'அருள்மாறன்' என்பது நம்மாழ்வாருக்கு வழங்கும் திருநாமம். 'அருள்மாரி' என்பது திருமங்கையாழ்வாரைக் குறிக்கும். இவ்விருவரும் மற்ற ஆழ்வார்களும் இறைவனது அருளை நாடுமுழுவதும் பரவச் செய்தவர்கள். அருளிச் செயல்களை 'ஈரச்சொற்கள்' என்று சொல்வர் ஆசாரியர்கள். பகவானுடைய அன்பு நனைந்த உள்ளத்தினராய்ப் பாடிய பாசுரங்கள் என்று பொருள். அனைவருடைய உள்ளங்களையும் அன்புடையதாகச் செய்யும் பாடல்கள் என்றாலும் பொருந்தும்.

சமுதாயம் உய்வதற்காக நம்மாழ்வாரும் மாணிக்கவாசகரும் பல, அரிய செய்திகளைக் கூறியுள்ளனர். அவற்றுள் சில ஈண்டுக் குறிக்கப் படுகின்றன.

1. இந்திரன், பிரமன் முதலிய தேவர்கள் தாங்கள் பெரியவர்கள் என்ற அகங்காரத்தால் திருமாலை மறந்து நினைக்காவிட்டாலும் மற்றவர்களாவது நினைத்துய்யலாம்' அவர்களும் ஆதிமூலத்தை நினைக்காமல் கெட்டுப் போகிறார்களே' அந்தோ! இஃது என்ன விந்தை! நாளும் சூரியன் மறைந்த பிறகு உலக முழுவதும் நிறைந்து யாவருக்கும் துக்கத்தை உண்டாக்கி அவர்களில் ஞானச் செயல்களை அபகரித்துத் தீமை செய்கிற இரவானது, மறுநாள் சூரியனுதிக்கும் போது அவன் கிரணங்களுக்குப் பயந்து ஓடிப்போய் ஒளித்திருந்து. இங்ஙனம் பகலும் இரவுமாய் மாறி மாறி, 'நாளென ஒன்றுபோல் காட்டி உயிரீரும் வாள்' 92 அ என உள்ள தங்கள் வாழ்நாள் கழியும் விதத்தை யறிந்தும் மக்கள் அவ்வாயுள் வீணாய் போகாமல் செய்ய வேண்டும் அதற்கு விடியற் காலையிலெழுந்து ஐம்புலன்களையும் பொருள்களின் மேல் செலுத்தாமல் நல்ல ஞானமாகிய துறையிலே இறங்கி மூழ்கி பக்திப் பரவசத்தாலே கண்களை மூடிக்கொண்டு எம்பெருமானைத் தம் நாவினால் பெயர் கூறித் துதிக்க வேண்டும். அங்ஙனம் துதியாமல், அவன் கரிய திருமேனியை நினைப்பதும் செய்யாமல் கெடுகின்றனரே என்று பிறர் கெடுதலுக்குத் தான் வருந்துகிறார். 92ஆ

2. உலகத்தில் பலர் "வைகலும் வைகல் வரக்கண்டும் அஃதுணரார் வைகலும் வைகுதல் வைகுமென் றின்புறுவார்" 93 என்றபடி காலங்கழிப்பதை நினைக்காமல் வீணே பல பகலும் போக்கி, அதிலே இன்புறுகிறார்களே என்று கூறுகிறார் இங்ஙனம் சூரியன் தோற்றம் மறைவினைக் கருதாமல் உலகினர் களிப்பதே கருமமாயிருக்கிறார்களே

அன்றிப் பகவானைப் நினைப்பதில் செலுத்துவாரில்லையே'' என்று எண்ணி உலகினர்க்காக ஆழ்வார் மிகவும் கவலை கொள்கிறார் இது சமுதாயத்தை முன்னேற்றுவதற்காகச் செய்யும் தொண்டே யாகும்.

3. ''காலை வெய்யோற்குமுன்'' என்னும் திருவிருத்தப்பாடல்94 மனத்தோடு பொருந்தித் தியானித்தலின்றிச் சொல் மாத்திரத்தால் ஓதி உருவேற்றுதல் சிறப்பன்றாதலால் ''மாலை (திருமாலை) நன்னா விற் கொள்ளார்'' என்ற மாத்திரத்தோடு நில்லாமல் ''நினையார வன்மைப்படியே'' என்றும் அருளிச் செய்கிறார், 'நல்நா' என்றார் எம்பெருமானைத் துதிப்பதற்கென்றே அமைந்த நாக்கு என்பது பற்றி 'நாராயணா வென்னா நாவென்ன நாவே'' என்றார் இளங்கோவடிகளும்.95 ஆகவே உலகத்தீரே! நீங்கள் நாக்குத் தழும்பேறுமாறு மனத்தோடொப்பிப் பகவானைத் துதியுங்கள்; அதனால் நன்மையே விளையும்'' என்கிறார்.

4. தலைவி தனக்குத் தலைவனிடத்துள்ள அன்புறுதியைத் தோழிக்குச் சொல்லும்போது நம்மாழ்வார் தம் கொள்கையையும் அருளிச் செய்கிறார். உபதேசிக்கும் சொல் பொருள், இன்பங்களையே தஞ்சமாகக் கொண்ட சம்சாரிகளுக்கு ருசியை உண்டாக்காதாகையாலே பாறாங்கல்மேல் போட்ட விதை போன்று பயன்படாமல் போகும். ஆயினும் மகான்களும் சிலர் உண்டு. அவர்களுக்காகவும் சம்சாரிகளுக்காகவும் இப்போது ருசியாவிடினும் நாள் செல்லச்செல்ல ருசித்து உய்யும்வழி உண்டாகும் என்று நினைத்து அவர்கள் நன்மைக்காக ஆழ்வார் உபதேசிக்கிறார்.

''கடவுள் இப்பூமிக்கு வந்த சமயத்தில் மகாவராகமாக அவதாரம் செய்து பாதாளத்திலிறங்கிப் பூமியைத் தன் கோடுகளில் தாங்கிக் காப்பாற்றியவன். இவ்வுலகில் புண்ணியம் செய்து சுவர்க்கம் செல்லும் தேவர்களுக்கும் வரமளித்துக் காப்பவன் அவனே. பரமபதத்திலுள்ள நித்திய சூரிகளுக்கும் தன் திருமேனியை அனுபவிக்கக் கொடுத்து அவர்களைத் தாங்கச் செய்பவனும் அவனே. அவர்களுக்கும் கீழ்ப்பட்ட மனிதர், விலங்கு, பறவை போன்ற உயிர்கள் விரும்பும் பல பொருள்களை ஏற்படுத்தி உலகைப் பாதுகாப்பவனும் அவனே. அவனே வாலறிவன்; எல்லாம் வல்லவன். அவனையொழியச் சிற்றறிவினராய்க் குறைவலிமை உடையவராய்ப் பகவானை விரும்பாதவராய் உள்ளவர்கள் உலகைப் பாதுகாப்பவர்கள் ஆகார். இச்சொல்லை நான் வியப்பினாலாவது, உலகத்தை வஞ்சிக்க வேண்டுமென்றாவது ஆசாரியனாக வேண்டுமென்றாவது சொன்னேனில்லை. பகவான் கருணை

யால் அவன் அருள் வெள்ளம் கட்டுக்கடங்காமல் வெளியேறி வழிந்த சொல்லை உங்களுக்கு நான் கண்ட நன்மையான இச்சொல்லைக் கூறுகிறேன்; ஏற்றுப் பயனடையுங்கள்'' என்கிறார்.96

5. கடவுள் பக்தியில்லாத சமூகத்திற்கும் ஒன்று கூறுகிறார். ஒழிவில் காலமெல்லாம் எம்பெருமானை நினைக்காதவனாயினும் எந்தவிதமான ஆராதனையும் செய்யாதவனாயினும் புலன்களை அடக்க ஆற்றல் அற்றவனாயினும், அஞ்ஞானியாயினும், இரக்கமில்லாதவன ஆயினும், மனந்தளர்ந்து விட்டவனாயினும் 'எம்பெருமான் எங்கே?' என்று தேடும் எண்ணம் உதித்தாலே போதும், அல்லது அவனது திருவுருவைத் தன் கைகளால் தடவிப் பார்த்தாலே போதும். அவனுக்கு எம்பெருமான் அருள்புரிவான்'' என்கிறார் 97

6 திருக்கோவையார் இறுதிப்பாட்டில் தலைவன் (சிவபெருமான்) எத்தகையவன் என்பதைக் கூறும்போது அவன் வரையாது வழங்கும் வள்ளல் என்பதைக் கார், கற்பகம், சிந்தாமணி, சங்கநிதி, ஊருணி, ஊதியம் என்ற சொற்களால் விளக்குகிறார் மாணிக்கவாசகர். நண்பர்களுக்கும் பகைவர்களுக்கும் தப்பாது வினைப்பயனைக் கொடுத்தலின் ஊழோடு ஒத்திருப்பவன் தலைவன். அவன் சுற்றியுள்ள மக்களுக்கு அவர் வேண்டிய செய்தலின் ஊராரால் உண்ணப்படும் குடிநீர்க் குளத்தை யொப்பவன் என்கிறார்.98

எல்லாம் கொடுப்பவன்; வேண்டாதே உன் உளமறிந்து கொடுப்பவன் (கற்பகம்); நாம் நினைத்ததையெல்லாம் கொடுப்பவன் (சிந்தாமணி); வற்றாத நிதியினை வாரிவாரிக் கொடுப்பவன் (சங்கநிதி); சுற்றியுள்ள மக்களுக்கு அவர் வேண்டியன செய்பவன் (ஊருணி); வரையறை காட்டாது எல்லார்க்கும எல்லாச் செல்வங்களையும் கொடுப்பவன் (ஊதியம்) என்று சிவபெருமானை மாணிக்கவாசகர் கூறுகிறார். எனவே, ''சிவபெருமானை நினையுங்கள்; அவன் அருள் பெறுங்கள்; அதனால் உலகம் ஈடேறும்; உய்யும்'' என்று உலகினர்க்கு அறிவுறுத்தி ஒழுக்க நெறிகொள்ளச் செய்கிறார். உலகினர் பணத்திற்கு மயங்குவர்; அதனால் பணத்தை (ஊதியத்தை) இறுதியில மகுடமாக வைத்துள்ளார்.

7. தில்லைச் சிற்றம்பலத்தில் தங்குதலோடு நெஞ்சிலும் தங்குபவர் சிவபெருமான். அச்சிவபிரான் தலைச்சங்கம், இடைச்சங்கங்களில் தலைவராயிருந்தவர். கூடலின்கண் ஆராய்ந்த ஒள்ளிய இனிய தமிழின் துறைகளான அகம், புறம் ஆகிய பொருள்களில் நுழைந்தவர்.

ஏழிசையின் சூழலில் புக்கவர். இதிலிருந்து தமிழ்ச் சங்கத் தலைவரா யிருந்து தமிழை முன்னேற்றியவர். தமிழை முன்னேற்றினார் எனின் தமிழறிந்த மக்களை முன்னேற்றியவர் என்பது கருத்து இயற்றமிழை முன்னேற்றியதோடு மட்டுமல்லாது, இசைத்தமிழையும முன் னேற்றியவர் நடராசர். நாடகத்தமிழில் வல்லவராகவும் சிற்றம் பலத்தில் விளங்குபவர் அவர். முத்தமிழில் வித்தகன் சிவன் எனில் மிகையில்லை. இங்ஙனம் சிவனே வந்து தமிழ்த்தொண்டும் சமூகத் தொண்டும் ஆற்றினார் என்பதை மாணிக்கவாசகர் குறிக்கிறார்.59

## முடிவுரை

நம்மாழ்வார் திருவேங்கடம், திருவெஃகா, திருவரங்கம் ஆகிய மூன்று பதிகளையே பாடியிருக்கிறார். மாணிக்கவாசகர் தில்லையைப் பற்றியும், மதுரையைப் பற்றியும் பாடியுள்ளார். அவர் வரகுண பாண்டியனைப் பற்றியும் பாடியவராவார்.

அக்காலக்கூடலில் தமிழ் ஆராயப்பட்டது; இசையும் போற்றப்பட்டது.

தில்லையில் அன்று கடல் அருகில் இருந்தது; அங்குப் பெரிய கப்பல்கள் வந்து போகும் என்று அறிகிறாம.

இளைஞர் பறைகளை அடித்துக் கொண்டு, ஆயுதம் ஏந்தி வருவர்.

பரண்கட்டிக் குறவர் குலமகளிர் தினை காத்தனர். ஏதும் உண்ணாமலிருந்து விரதம் காத்தனர். அக்காலத்தில் எவரோடும் பேசாதிருந்தனர். இல்லுறை தெய்வத்திற்கு மணமுள்ள மலரையிட்டு நெல்லினையும் இட்டு வணங்கினர்.

வீரர்கள் புலியைக் கொன்று அதன் பற்களைப் பதித்துத் தாலி செய்தனர். பல்வேறு விழாக்கள் நகரங்களில் நடைபெற்றன

நம்மாழ்வாரும் மாணிக்கவாசகரும் ஒருவனே தேவன் என்றும் கருத்தினர். மக்களுக்குத் தாம் கண்ட இம்முடிவை எடுத்துக் கூறினர். மக்களின் ஒழுக்கத்தைப் பேணி, வாய்மைநெறி காத்துப் பக்திநெறி காட்டி உயர்வடையச் செய்வதற்கு இருவரும் தம் பாடல்களைப் பயன் படுத்தியுள்ளனர்.

—+✱+—

# சமுதாய நிலை

## குறிப்புக்கள்

1. நா. செயப்பிரகாச, 'சிலப்பதிகாரம் காட்டும் தமிழகச் சமுதாய நிலை', வான்மழைப் பதிப்பகம், சென்னை, 1978, மேற்கோள், ப.19.

2. திருவிருத்தம் 2486.
3. ,, 2487.
4. ,, 2508.
5. பெரும்பாணாற்றுப்படை, அடிகள் 371—392.
6. திருவிருத்தம் 2505
7. திருக்கோவையார் 327.
8. ,, 352.
9. ,, 85.
10. ,, 181.
11. ,, 222.
12. ,, 258.
13. ,, 297.
14. ,, 228.
15. ,, 400.
16. ,, 308.
17. ,, 308. உரை.
18. ,, 309.
19. ,, 20.
20. ,, 219.
21. ,, 219இன் உரை.
22. திருவிருத்தம், 2500. 2487
23. ,, 2514.
24. ,, 2514
25. திருக்கோவையார் 274.
26. ,, 239.
27. ,, 249.
28. ,, 60.
29. ,, 187.
30. ,, 386.
31. ,, 169.

32. திருக்கோவையார் 130.

33. ,, 127.

34. ,, 127.

35. ,, 252.

36. திருவிருத்தம் 2497.

37. திருக்கோவையார் 67.

38. ,, 231.

39. ,, 336.

40. ,, 332.

41. திருவிருத்தம் 2512.

42. ,, 2525.

43. ,, 2528

44. திருக்கோவையார் 348.

45. சிலப்பு, கனாத்திறமுரைத்த காதை, 1-2 அடிகள்

46. திருக்கோவையார் 263.

47 ,, 285.

48. ,, 327.

49. ,, 255.

50. ,, 251.

51. ,, 165.

52. ,, 165.

53. ,, 355

54. ,, 361.

55. திருவிருத்தம் 2499.

56. திருக்கோவையார் 115.

57. ,, 300.

58. ,, 330.

59. ,, 200.

60. ,, 289.

61. திருவிருத்தம் 2494.

62. திருக்கோவையார் 216.

63. திருக்கோவையார் 256.

64. ,, 175.

65. ,, 40.

66. ,, 62.

67. ,, 107.

68. ,, 117.

69. ,, 118.

70. ,, 3[illegible]5.

71. ,, 200.

72. ,, 371.

73. ,, 296.

74. திருவிருத்தம் 2573.

75. திருவள்ளுவ மாலை, கல்லாடர் பாடல், 9.

76. திருவாய்மொழி 37[illegible].

77. ,, 2703.

78. ,, 2702.

79. ,, 3357.

80. ,, 2394.

81. ,, 3399.

82. ,, 3489.

83. ,, 3766.

84. திருவாசகம், திருவண்டப்பகுதி, அடி 43.

85. திருவாய்மொழி 2937.

86 திருவிருத்தம் 2478.

87. ,, 2577.

88 ,, 2478.

89. ,, 2478, பெரியவாச்சான் பிள்ளை உரை.

90 ஸ்ரீதேசிகப் பிரபந்தம், அமிருதாஸ்வாதினி பாடல் 28, அது.

"அந்தமிலாப் பேரின்ப மருந்த வேற்றும்
அடியோமை யறிவுடனே யென்றும் காத்து
முந்தைவினை நிரைவழியே யொழுகா தெமை

முன்னிலையாந் தேசிகர் தம் முன்னே சேர்த்து
மந்திரமும் மந்திரத்தின் வழியுங் காட்டி
வழிப்படுத்தி வானேற்றி யடிமை கொள்ளத்
தந்தையென நின்றதனித் திருமால் தாளில்
தலைவைத்தோம் சடகோப னருளி னாலே ' என்பது.

91. கிடாம்பியாச்சான், திருவிருத்தத் தனியன், பா 1.

92. கண்ணிநுண் சிறுத்தாம்பு 944.

92.அ. குறள் 334

92.ஆ. திருவிருத்தம் 2570

93. நாலடியார் 34

94. திருவிருத்தம் 2570

95. சிலம்பு, ஆய்ச்சியர் குரவை, படர்க்கைப் பரவல், 3.

96. திருவிருத்தம் 2576

97. திருவாய்மொழி 2876

98. திருக்கோவையார் 400

99. திருக்கோவையார் 20

—+*+—

# முடிவுரை

## இயல்—ஏழு

தமிழகத்தில் சைவமும் வைணவமும் மிகவும் பழமை வாய்ந்த சமயங்களாகும். சூலம் கொண்ட பசுபதிவழிபாடு, ஆவின் வழிபாடு முதலியன சிந்து நதிக்கரை நாகரிகத்தின் அடிப்படையாக விளங்கின. வேதங்களில் சிவன் வழிபாடு, இலிங்க வழிபாடு முதலியன குறிக்கப் பெற்றுள்ளன. சங்க நூல்கள் ஆலமர் செல்வன், தாழ்சடை பொலிந்த அருந்தவத்தோன், முக்கட்செல்வன், மூவெயில் எரித்தவன், ஆல்கெழு கடவுள் எனும் பெயர்களைச் சுட்டுகின்றன. கொடுகொட்டி, பாண்டரங்கம், காபாலம், மூவிலைவேல், மழு, எரிதிகழ் கணிச்சி முதலியன பற்றிய குறிப்புகளும் சங்க நூல்களில் காணப்படுகின்றன.

முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என நால்வகையாகப் பகுத்து இவ்வுலகத்தை நானிலம் என்று வழங்கியபோதே திருமால் வழிபாடும் தோன்றியது. முல்லைநில மக்கள் திருமாலைப் போற்றி

வழிபட்டனர். பரிபாடலில் திருமாலைப் பற்றிய செய்திகள் மிகுதியாகக் காணப்படுகின்றன. புறநானூறு சிவன், திருமால், முருகன், பலராமன் ஆகிய கடவுளர்களையும், பெரும்பாணாற்றுப்படை திருமால் பள்ளி கொண்ட நிலையையும் சுட்டுகின்றன.

திருமால் வழிபாட்டில் சிறந்த பெரியோரைப் 'பாகவதர்' என்றும் 'ஆழ்வார்' என்றும் வழங்கினர். சிவனுக்கு அடிமைத் தொழில் புரிந்தோரை 'அடியார்' என்றும், 'நாயன்மார்' என்றும் அழைத்தனர்.

இத்தகைய பழைமையும் புகழும் மிக்க சைவமும் வைணவமும் களப்பிரர் ஆட்சிக் காலத்தில் செல்வாக்கிழந்து விளங்கின; பின்னர்ப் பல்லவர், சோழர் ஆட்சிக்காலங்களில் மீண்டும் தழைத்துச் செழித்தன. இந்தத் தருணத்தில்தான் ஆழ்வார்களும் தோன்றி இச்சமயங்களுக்குப் புத்துயிர் அளித்தனர்.

சமய குரவர்களை அடுத்துச் சந்தான குரவர்களும், பின் சேக்கிழார், தாயுமானவர், பட்டினத்தார், குமரகுருபரர், சிவப்பிரகாசர், திருப்போரூர்ச் சிதம்பர சுவாமிகள், வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள், பாம்பன் சுவாமிகள் முதலான பலரும் தோன்றிச் சைவ சமயத்தைப் பெரிதும் வளர்த்தனர்.

பன்னிரண்டு ஆழ்வார்களுக்குப் பிறகு ஆசாரியர்களான ஸ்ரீமந் நாதமுனிகள், ஆளவந்தார், இராமானுசர், கூரத்தாழ்வார், மணவாள மாமுனிகள், ஸ்ரீமத் நிகமாந்த மகாதேசிகன், பிள்ளை லோகாசாரியர், பெரியவாச்சான் பிள்ளை, நம்பிள்ளை, பட்டர் முதலானவர்கள் வைணவத்தைப் பாசுரங்கள் மூலமாகவும், உரை எழுதியும் பிரசாரஞ் செய்து பரவச் செய்தனர்.

இச்சமயங்களின் வளர்ச்சியிலும், திருமுறைகள், திவ்வியப் பிரபந்தம் ஆகியன தொகுக்கப் பெற்றிருப்பதிலும் பல பொதுத் தன்மைகள் உள்ளன. சில தற்செயலாக அமைந்தன; சில ஒன்றன் மீது மற்றதன் தாக்கத்தால் விளைந்தன.

பிரபந்தப் பாசுரங்களைப் பாடியவர்கள் பன்னிருவர்; பாடியவர்கள் இருபத்தறுவர் எனினும் சைவத் திருமுறைகளின் எண்ணிக்கை பன்னிரண்டு.

ஆழ்வார்களில் பேயாழ்வார் இருந்தது போல நாயன்மாரில் ஒரு பேயம்மையார் (காரைக்காலம்மையார்) உள்ளார். பிரபந்தத்தில் சேர

நாட்டு மன்னர் குலசேகரரின் பாடல்கள் உள்ளன; திருமுறைகளில் சேரமான் பெருமாள் நாயனாரின் பிரபந்தங்கள் இருக்கின்றன

பிரபந்தத்தில் இருப்பதுபோலத் திருமுறையிலும் ஒரே ஒரு பெண்கவிதான் இடம்பெற்றிருக்கிறார். திருப்பாவை, திருப்பள்ளி யெழுச்சி ஆகியவற்றிற்கு இணையாகச் சைவத்தில் திருவெம்பாவை, திருப்பள்ளியெழுச்சிகள் உள்ளன திருமங்கையாழ்வாரும மாணிக்க வாசகரும் திருச்சாழல் பாடியுள்ளனர்.

பிரபந்தத்தில் ஒரே ஒரு பதிகத்தைப் பாடிய மதுரகவி, திருப்பாணாழ்வாரைப் போலத் திருமுறைகளில் கண்டராதித்தரும், வேணாட்டடிகளும், சேதிராயரும் ஒவ்வொரு பாடலையே பாடி யிருக்கின்றனர். பெரியாழ்வார் திருப்பல்லாண்டு பாடியுள்ளார். அங்ஙனமே திருமுறையில் சேந்தனார் திருப்பல்லாண்டு பாடியுள்ளார்.

இரு தொகைகளிலும் பெரும்பாலான பாடல்கள் அந்தந்தச் சமயத்தைச் சார்ந்த தலமூர்த்திகளைப் பற்றியே பாடப்பட்டுள்ளன. பிற்காலத்தில் விசிட்டாத்துவதைத்தைத் தோற்றுவித்த இராமானுசரின் குருவாயிருந்த யாதவப் பிரகாசர் எவ்வாறு அவருக்குச் சீடரானாரோ, அவ்வாறே சைவ சித்தாந்தத்தை உருவாக்கிய மெய்கண்ட தேவருக்கு அவருடைய ஆசானாகிய அருணந்தி சிவாசாரியாரே சீடரானார்.

திவ்வியப் பிரபந்தத்துடன் இராமானுச நூற்றந்தாதியை வைணவப் பெரியார்கள் சேர்த்ததுபோல, அதே காலத்தில் திருமுறை யுடன் சேக்கிழாரின் திருத்தொண்டர் புராணத்தைச் சைவப் பெரியோர்கள் சேர்த்தனர்.

இன்னிசைப் பாடல்களைப் பாடுவதில் திருஞானசம்பந்தருக்கு ஒப்பாகப் பெரியாழ்வாரையும், திருநாவுக்கரசருக்கு ஈடாகத் திருமங்கையாழ்வாரையும், மாணிக்கவாசகருக்குச் சமமாக நம்மாழ் வாரையும் கருதலாம்.

ஆழ்வார்களும் நாயன்மார்களும் கி.பி. ஆறாம் நூற்றாண் டிலிருந்து பத்தாம் நூற்றாண்டு வரையிலுள்ள ஐந்நூறு ஆண்டுக் காலத்தில் இருந்தார்கள். ஆகையால், அவர்களின் பாடல்களின் அமைப்பிலும், ஓசைப்பண்பிலும், வாக்கின் மென்மையிலும், கற்பனை முறைகளிலும், சொல்லடைவிலும், கவிதை நடையிலும், தமிழிசைக் கூறுகளிலும் பொதுமை காணப்படுகிறது.

காதலால் கசிந்து கண்ணீர் மல்கி நாயன்மார்களும் ஆழ்வார் களும் பாடியனவே திவ்வியப் பிரபந்தமும் தேவாரத் திருமுறைகளும்

மாகும். இவர்கள் இறைவனையே கவிக்குரிய பொருளாகக் கொண்டனர். 'மானுடம் பாடமாட்டேன்' என்று மொழிகிறார் நம்மாழ்வார்.

மறுமை நோக்கி இம்மை இன்பங்களைத் துறந்து, நீர் பலவால் நிற்றல், நிலத்தசைதல், ஐந்தீ மத்தியில் நிற்றல் அமைதி நாடிக் காடும் மலையும் திரிந்தலைதது தவம் செய்தல் ஆகியவற்றிலும் பக்தியாகிய நிலையில் துதிபாடுவதே சாலச் சிறந்தது என ஆழ்வார்களும் நாயன்மார்களும் கருதினர். சமயப்பாக்களின் நோக்கம் ஆன்மாக்கள் இறைவனடிகளை படைந்து இன்புறுதலாகும்

பக்தி இலக்கியங்களில் மானிடக்காதல் தெய்வீகக் காதலாகக் காட்சி அளிக்கிறது திருக்கோவையாரிலும் திருவிருத்தத்திலும் அகப்பொருள் துறையமைந்த பாடல்களைக் கற்கும்போது அவை இன்பம் நல்குவதுடன், பண்டைய சங்க இலக்கியங்களில் மாணிக்க வாசகர், நம்மாழ்வார் ஆகியோருக்கு இருந்தபயிற்சியையும் தெற்றெனத் தெரிவிக்கின்றன.

திருக்குருகூரில காரியாருக்கும் உடையநங்கையார்க்கும் மகனாகத் தோன்றியவர் நம்மாழ்வார். பிறந்தவுடன் பேசாமலிருந்த குழந்தை பதினாறு ஆண்டுக்காலம் அங்கிருந்த புளியமரத்தின் பொந்தில் யோகத்திலிருந்தது. வடக்கே இருந்த மதுரகவிகள் அயோத்தியில் தெற்கிருந்துவந்த சோதியினைக் கண்டு, அதனைப் பின்பற்றிக் குருகூர் வந்து ஆழ்வாரைப் பேசவைத்து அவர்தம் சீடருமானார். திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி என்னும் தலைப்புகளில் ஆயிரத்திற்கு மேற்பட்ட பாடல்களைப் பாடினார் ஆழ்வார்.

நம்மாழ்வார் ஆழ்வார்கள் முறையிலும், ஆசார்யர்கள் முறையிலும் முதலாவதாக வைத்து எண்ணப்படுகிறார். இவரது காலம் எட்டாம் நூற்றாண்டின் இறுதியும், ஒன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியுமாகும். சடகோபராகிய ஆழ்வாரின் திருவடிகள் இருத்தலின் கோயில்களில் பக்தர்களுக்குச் 'சடாரி' வைக்கப்படுகிறது. அது நம் ஆணவம், அகந்தை ஆகியவற்றை அழிக்கும்.

மாணிக்கவாசகர் திருவாதவூரில் அந்தணர் குலத்தில் பிறந்து அரிமர்த்தன பாண்டியனின் அவையில் அமைச்சராய் விளங்கியவர். குதிரை வாங்கத் திருப்பெருந்துறை சென்று அரசன் கொடுத்த பொருளையெல்லாம் சிவப்பணிக்குச் செலவிட்டார். நரிகளைப் பரிகளாக்கியும், வையையாற்றில் வெள்ளம் பெருக்கோடச் செய்தும்

இறைவன், திருவிளையாடல்கள் புரிந்து மாணிக்கவாசகரின் பெருமையை அரசர்க்கும் ஏனையோர்க்கும் தெரிவித்தான். பின் அரசனிடம் விடை பெற்றுத் தலங்கள்தோறும் சென்று பாடல்கள் பாடினார். இலங்கை அரசனுடைய ஊமைப்பெண்ணைப் பேசவைத்து, அவள் வழியாகப் புத்த குருமார்களை வாதில் வென்றார். சிவபெருமானே ஓர் அந்தணராக உருக்கொண்டுவந்து திருவாசகத்தைக் கூறுமாறு கேட்டுப் பட்டோலையில் எழுதியதோடு, திருக்கோவையாரையும் பாடுமாறு கேட்டுக்கொண்டார். அவரது நூல்களைக் கொண்டுவந்து, பொருள் கூறுமாறு வேண்ட, மாணிக்கவாசகர் பொன்னம்பலம் சென்று, 'இவரே இதற்குப் பொருளாவார்' என்று கூறி நடராசப் பெருமானைக் காட்டி அவரிடம் ஒன்றிணைந்து விட்டார்.

மாணிக்கவாசகரின் காலம் கி பி ஒன்பதாம் நூற்றாண்டு. திருக்கோவையாரை எழுதியது சிவபாத்தியன் அன்று; சிவபரத்தியன் என்னும் மாணிக்கவாசகரே.

காதலுக்கு உள்ளமே நிலைக்களன் அகப்பொருளில் காட்சி, தெய்வப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பகற்கூட்டம், இரவுக்கூட்டம், அறத்தோடு நிற்றல், உடன்போக்கு முதலிய பிரிவுகள் உள்ளன. திருக்கோவையாரின் அகப்பொருள் துறைகள் அனைத்தையும் காண்கிறோம்

கோவைநூல்களுக்கு இலக்கண வரையறைகள் உண்டு. பாண்டிக் கோவையே பழமையான கோவை. பிற அகப்பொருள் கோவை நூல்களிலிருந்து உள்ளுறையால் வேறுபட்டது திருக்கோவையார்.

பக்தி இலக்கியத்தில் நாயக நாயகி பாவம் தொடர்ந்து வருவது. கோவைப்பாடல்களே இவ்வமைப்பிற்கு ஏது. பல்லவர் காலத்தில் பக்தியியக்கக் காலத்தில நாயக நாயகி பாவம் தோன்றியது. வியாக்கியானங்களில நாயக நாயகி பாவம் நன்கு விளக்கப்பட்டுள்ளது. தூய்மையான மானிடக் காதலே பக்தி இலக்கியத்தில் தெய்வக் காதலாகப் பரிணமிக்கிறது.

தலைவன், தலைவி, தோழி, செவிலி முதலானோரின் கூற்றுக்கள் அகப்பொருள் சுவையுடைய திரம்பி இவ்விரு நூல்களிலும் சிறந்து விளங்குகின்றன.

விலங்கினம், பறவையினம், பயிரினம் முதலியவை திருவிருத்தத்திலும் திருக்கோவையாரிலும் சிறந்த முறையில் பயன்படுத்தப்பட்டுள்ளன; அவற்றில் புதுமையான செய்திகள் கூறப்பட்டுள்ளன.

யாப்பில் அந்தாதியை நம்மாழ்வார் பின்பற்றியிருக்கிறார். இருவரும் எதுகை, மோனை முதலானவற்றைப் பொருத்தமுறக்

கொண்டுள்ளனர். சொல்லணியும் பொருளணியும் இவர்களின் பாடல்களில் இடம்பெற்றுள்ளன. பல்வகை அணிகளை இவர்கள் தம் பாடல்களில் அமைத்துப் பாடியுள்ளனர். உவமைஅணி, உருவக அணி, உயர்வு நவிற்சியணி, தற்குறிப்பேற்ற அணி முதலான அணிகள் இவர்களால் சிறப்படைந்துள்ளன. மாணிக்கவாசகர் உள்ளுறை உவமம், இறைச்சி, உவமையணி முதலானவற்றை நிரம்ப அமைத்துள்ளார். வேற்றுப்பொருள் வைப்பணி, சிலேடையணி, இல்பொருளுவமையணி, சொற்பின்வருநிலையணி, பரியாய அணி முதலியன திருக்கோவையார் பாடல்களுக்குச் சிறப்பினை நல்குகின்றன.

திருக்கோவையாரும் திருவிருத்தமும் சிறிய தத்துவ நூல்கள் ஆகும்; சீவாத்மா பரமாத்மாவுக்கே உரிமையுடையது; ஆழ்வார்களும் நாயன்மார்களும் பெண்தன்மையை அடைந்து இறைவனை அனுபவிக்கக் காதலிக்கின்றனர்; தாய்ப் பாசுரம், தோழி பாசுரம், தலைவி பாசுரம் என்று மூன்று பிரிவுகள் இவற்றில் குறிப்பிடத்தக்கவை. இந்த மூன்று நிலைகளிலும் பாடுவது மூன்று பிரக்ஞாவஸ்தைகள் அல்லது அறிவுநிலைகள். இறைநிலை பற்றிப் பேச வேண்டிய இடத்தில் உலகியல் காமம் பேசலாமா எனின், சிற்றின்பமே பேரின்பத்திற்குத் திறவுகோல் ஆகலான் அது முறையே ஆகும். திருக்கோவையாரும் திருவிருத்தமும் ஒருவகையில் சிற்றின்ப நூல் ஆகவும், பிறிதொரு வகையில் பேரின்ப நூலாகவும் விளங்குகின்றன.

அருள்நூல்கள் சமுதாயத்திற்கு விளைவிக்கும் பயன்கள் பல. அத்தகைய நூல்களை ஓதுவார் வையத்துள் வாழ்வாங்கு வாழ்வர். இறைவழி சமுதாய முன்னேற்றம் பெற நாயக நாயகி பாவம் உதவுகிறது. இறைவன் வேறொரு காரணம் பற்றித் தன் பெயரை உச்சரித்தாலும் வல்வழக்கிட்டு ஆட்கொள்ளும் இயல்புடையவன் என்றும், இறைவனுக்கு அடிமைத்தொழில் புரியும் தொண்டக்குலம் ஒன்று உள்ளது என்றும் ஆழ்வார் பேசுகிறார். இறைவன் எல்லா உயிர்களிடத்தும் தங்குவதால் மக்கள் தொண்டே மகேசன் தொண்டு ஆகும்.

இறைவனுக்குப் பரத்துவம், வியூகம், விபவம், அந்தர்யாமித்துவம் அர்ச்சை எனப்படும் ஐந்து நிலைகள் உள்ளன. நிலத்தடி நீர்போல அந்தர்யாமித்துவம்; ஆவரண நீர்போலே பரத்துவம்; பாற்கடல் போலே வியூகம், வெள்ளம் எடுத்தோடும் ஆறுபோலே விபவம்; ஆற்றிலே தங்கிய மடுக்கள் போலே அர்ச்சை. எனவே, முதல் நான்கு நிலைகளில் உள்ள எம்பெருமான்களைக் காட்டிலும் திருக்கோயில்களிலும் அடியவர்கள் திருமாளிகைகளிலும் எழுந்தருளியுள்ள அர்ச்சாவதாரமே பெரிதும் பயன்படக்கூடியது.

ஆழ்வார்கள் நாயன்மார்கள் ஆகியோரின் உள்ளத்தைக் கவர்ந்து கவிதைகள் பாடவைத்தது அர்ச்சை நிலையாகும். இறையன்பில் உயர்ந்த நிலை பிரபந்திநிலை எனப்படுவது. இது முற்றிலும் இறைவனின் திருத்தாள்களைச் சரணடைதல் ஆகும். ஆழ்வார்கள் இந்நெறியை வலியுறுத்திக் கூறுவதால் அவர்களைப் பிரபந்நர்கள் என்று வழங்குவர்,

சைவமும் வைணவமும் கடவுட் கொள்கையில் பெருத்த வேறுபாடுடையன அல்ல; சிவனும் திருமாலும் வேறானவர்கள் அல்லர்; பக்திநெறி சான்ற தொண்டக்குலம் என்னும் ஒரு சாதிதான் உள்ளது. பிற சாதி வேறுபாடுகள் களையப்பட வேண்டும் வடகலை, தென்கலை என வைணவத்தில் இரு பிரிவுகள் இராமானுசருக்குப் பின் வந்தவை தேசிகராலும் பிள்ளை லோகாசாரியாராலும் வழிநடத்திச் செல்லப் பெற்றவை இவை. இவர்களின் கொள்கைகள் முறையே சஹேதுகக் கொள்கை என்றும், நிஹேதுகக் கொள்கை என்றும் வழங்கப்படும். வடகலை, தென்கலைப் பூசல்கள் தேவையில்லாதவை.

## செய்ய வேண்டுவன

1. மாணவர்களுக்குச் சமயக் கல்வி இன்றியமையாத தாக்கப்பட வேண்டும்.

2. குழந்தைகளுக்கு இறைவன் பெயரையோ, இறைத் தொண்டர் பெயரையோ இடுதல் வேண்டும்.

3. நகரங்களுக்கும் தெருக்களுக்கும் இறைவன் திருப்பெயர்களையே வைத்தல் வேண்டும்.

4. அறக்கட்டளைகள் வைத்து ஆங்காங்கே சமயச் சொற்பொழிவுகளும் கதாகாலட்சேபங்களும் நிகழ்த்த வேண்டும்

5. சமய நூல்களை அச்சிட்டு இலவசமாகவோ, குறைந்த விலையிலோ வழங்க வேண்டும்.

6. மடாலயங்களும் பணமுடையோரும் குமரகுருபரன், தர்மசக்கரம் போன்ற சமய இதழ்களை நிறைந்த அளவில் குறைந்த விலையில் வெளியிட வேண்டும்.

7. கோயில்களில் தேவாரத் திருவாசகங்களும், நாலாயிரத் திவ்விய பிரபந்தமும் பாடப்பெறுதல் வேண்டும்.

8. கோயில்களில் அருச்சனை தமிழிலேயே நடைபெறுதல் வேண்டும்.

9. கோயில்களில் வாரந்தோறும் ஒருநாள் கூட்டுவழிபாடு (பஜனை) நிகழ்த்த வேண்டும்.

10. ஒவ்வொருவரும் வாரந்தோறும் ஐந்து காசுகள் சேமித்தும், நாள்தோறும் ஒரு பிடியரிசி ஒதுக்கியும் இறுதியில் சமயக் காணிக்கை யாக அளித்தல் வேண்டும். இதனைச் சமய வளர்ச்சிக்குப் பயன் படுத்தலாம்,

திருவிருத்தம் திருக்கோவையார் ஆகியவற்றின் ஒப்பாய்வு இரு நூல்களிலும் காணக்கிடக்கும் சிறப்புகளை நமக்குத் தெரிவிக்கிறது. நம்மாழ்வார், மாணிக்கவாசகர் பாடல்களின் நடை நம்மை நெகிழச் செய்கிறது. படித்து ஆழங்கால் படுகின்றோம்; இலக்கிய நயமுணர்ந்து இன்புறுகிறோம். இதனால் கடவுளைச் சிந்திக்கச் செயல்பட முடிகிறது

## ஒப்பாய்வுக் களங்கள்

திருவிருத்தம்-திருக்கோவையார் பற்றிய இவ்வாராய்ச்சியினை அடியொற்றி வேறு பிற தலைப்புகளிலும் ஆராய்வதற்குக் களங்கள் உள.

ஆண்டாளும் காரைக்காலம்மையாரும்
அருணகிரிநாதரும் துளசிதாசரும்
திருப்பாவையும் திருவெம்பாவையும்
சிவவாக்கியரும் வேமன்னாவும்
வைணவ-சைவத் தொண்டுநெறி

முதலான பல்வேறு தலைப்புகளில் இனி ஒப்பாய்வு நிகழ்த்தினால் அரும்பயன் விளையும்.



# சுருக்க விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம் | ... | அகநானூறு |
| கழகம் | ... | திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம். |
| குறள் | ... | திருக்குறள் |
| சிலம்பு | ... | சிலப்பதிகாரம் |
| திருக். | ... | திருக்கோவையார் |
| திருவி. | ... | திருவிருத்தம் |
| தொல். | ... | தொல்காப்பியம் |
| நா.தி.வி. | ... | நாலாயிரத் திவ்விய பிரபந்தம் |
| நூ. | ... | நூற்பா |
| ப. | ... | பக்கம் |
| பக். | ... | பக்கங்கள் |
| ப-ர். | ... | பதிப்பாசிரியர் |
| பா. | ... | பாடல் |
| புறம். | ... | புறநானூறு |
| பொருள் | ... | பொருளதிகாரம் |
| மே.நூ. | ... | மேற்குறிப்பிட்ட நூல் |
| மொ-ர் | ... | மொழிபெயர்ப்பாசிரியர் |

குறிப்பு : 1. திருவிருத்தம் உட்பட நாலாயிரத் திவ்விய பிரபந்தப் பாடல்கள் அனைத்தும் மயிலை மாதவதாசன் பதிப்பில் இருந்து எடுக்கப்பெற்றவை. நூல்களை அடுத்துள்ள எண்கள் தொடர் எண்கள். (எ) திருவி. 2499 என்பது மயிலை மாதவதாசன் பதிப்பில் திருவிருத்தம் பகுதியில் தொடர் எண்ணாக அமைந்த பாடல் 2490-ஐக் குறிக்கும்

2. சமயத் தொடர்பான் ஆய்வேடாதலால் தவிர்க்கவியலா வடசொற்கள் அப்படியே பயன்படுத்தப்பட்டுள்ளன.

பின்னிணைப்பு :

## திருவிருத்தம், நாலாயிரத் திவ்விய பிரபந்தப் பதிப்புகள்

(அச்சிட்ட கால வரிசைப்படி)

1. திருவிருத்தம், மாட பூசி ராமானுஜாசார்யரும், வி. முத்து கிருஷ்ணநாயுடு அவர்களும் பரிசோதித்தது. ஸ்ரீவைஷ்ணவ க்ரந்த முத்ராபக ஸபையாரால் சென்னைபட்டணம் முத்ராக்ஷரசாலையில் அச்சிடப்பட்டது. 1905

2. நாலாயிரத் திவ்விய பிரபந்தம், வைஷ்ணவ ஸம்பிரதாய புத்தகசாலை வெளியீடு. சே. கிருஷ்ணமாசார்யார் பதிப்பு, சென்னை-5 1908

3. நாலாயிரத் திவ்விய பிரபந்தம், இரங்கசாமி முதலியார் அண்டு சன்ஸ், பூமகள் விலாச அச்சுக்கூடம். சென்னை, ஸ்ரீ. உ. வே. அரசாணி பாலை ஸ்ரீநிவாச தாதாசாரியாரும் கோ. முத்துகிருஷ்ண நாயுடுவும் பரிசோதித்தது. 1939

4. நாலாயிரத் திவ்விய பிரபந்தம், எஸ். வையாபுரி பிள்ளை பதிப்பு, மர்ரே & கம்பெனி, சென்னை

| | |
|---|---|
| முதலாயிரம் | 1955 |
| பெரிய திருமொழி | 1956 |
| இயற்பா | 1956 |
| திருவாய்மொழி | 1956 |

5. திருவிருத்தம் திருவல்லிக்கேணி வைத்தமாநிதி முடும்பை சடகோப ராமானுஜாசாரியார் இயற்றிய உரையுடன் சென்னை மிமோரியல் அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது. 1959

6. நாலாயிரத் திவ்விய பிரபந்தம், மயிலை மாதவதாசன் பதிப்பு, மணலி லஷ்மண முதலியார் ஸ்பெசிபிக் எண்டோமெண்ட்ஸ், சென்னை. 1962

7. நாலாயிரத் திவ்விய பிரபந்தம், அண்ணங்கராசார்ய சுவாமிகள் பதிப்பு, சுந்திராந்த பிரகாசன சபா, சென்னை, 1967

8. நாலாயிரத் திவ்விய பிரபந்தம், கரப்பங்காடு, ஸ்ரீ கோபாலாசார்ய சுவாமிகள் பரிசோதித்தது. பி. இரத்தின நாயகர் சன்ஸ், சென்னை. 1968

9. திருவிருத்தம் திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, ஸ்ரீ உத்தமூர் வீரராகவாசார்யான் இயற்றிய ப்ரபந்தரக்ஷை என்னும் உரையுடன் 1971

10. நாலாயிரத் திவ்விய பிரபந்தம், வித்வான் கி. வேங்கடசாமி ரெட்டியார் பதிப்பு, திருவேங்கடத்தான் திருமன்றம் வெளியீடு, சென்னை. 1972/1981

11. திருவிருத்தம் அண்ணங்கராசார்ய சுவாமிகள் இயற்றிய திவ்யார்த்த தீபிகை உரையுடன் கூடியது, க்ரந்தமாலா அலுவலகம், காஞ்சிபுரம். 1976

12. திருவிருத்தம் பழைய உரைகளின் விளக்க ஆசிரியர் வித்வான் கி. வேங்கடசாமி ரெட்டியார் ஸ்ரீ ரங்கம் ஸ்ரீமத் ஆண்டவன் பெரியாச்ரமம் 1984

13. திருவிருத்தம் (தெலுங்கில்), ரா. கோதண்டராம ஐயங்கார் பதிப்பு, கீழ்த்திசைக் கலைக்கையெழுத்துப் பிரதி நூலகம், சென்னை-5. டி. 1057. 1905

14. திருவிருத்தம்,திருவாசிரியம், பெரிய திருவந்தாதி திருவாய்மொழி, ஸ்ரீ வேங்கடாசலபதி பதிப்பு, தூத்துக்குடி. ஆண்டு இல்லை

15. நாலாயிரத் திவ்விய பிரபந்தம், சக்ஸஸ் அச்சகம், சென்னை, ,,

## திருக்கோவையார்ப் பதிப்புகள்

1. திருக்கோவையார், பேராசிரியர் உரையைத் தழுவி எழுதப்பட்ட துறை விளக்கம் முதலியவற்றோடு கூடிய சுத்தப் பதிப்பு, லாங்மென்ஸ் க்ரீன் அண்டு கம்பெனி, சென்னை. 1917

2. திருக்கோவையார், யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலர் பதிப்பு, முத்தமிழ் விளக்க அச்சுக்கூடம், சென்னை. 1920

3. திருவாசகம், திருக்கோவையார், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, சைவ சித்தாந்த மகா சமாஜம், சென்னை, 1932

4. திருச்சிற்றம்பலக் கோவையாருண்மை, நானூறு பாடல்களுடன் சிற்றின்பப் பேரின்ப முறைத்தல், சுவாமிநாத பண்டிதர் பதிப்பு, சைவ வித்தியாநுபாலன யந்திர சாலையில் பதிப்பிக்கப்பட்டது, சென்னை. 1950

5. திருக்கோவையார் எனும் திருச்சிற்றம்பலக் கோவையார், (பழைய உரையுடன்). ரா விசுவநாதையர் பதிப்பு, தஞ்சை சரசுவதி மகால் வெளியீடு, தஞ்சாவூர். 1951

6. திருக்கோவையார் ஆறுமுக நாவலர் பதிப்பு, வித்தியாநுபாலன யந்திரசாலையில் அச்சிட்டது, சென்னை 1954

7. திருக்கோவையார் கழக வெளியீடு, சென்னை. 1970

8. திருக்கோவையார், திருப்பனந்தாள் காசிமடம் வெளியீடு, ஸ்ரீ வைகுண்டம் 1972

## அகப்பொருள் கூற்றுக்கள் :

| திருவிருத்தம் | விழுக்காடு | திருக்கோவையார் | விழுக்காடு |
|---|---|---|---|
| தலைவன் கூற்று | 14 % | தலைவன் கூற்று | 25.50 % |
| தலைவி கூற்று | 51 % | தலைவி கூற்று | 15.75 % |
| தோழி கூற்று | 26 % | தோழி கூற்று | 41.50 % |
| செவிலி கூற்று | 4 % | செவிலி கூற்று | 7.50 % |
| பாங்கன் கூற்று | 1 % | பாங்கன் கூற்று | 2.75 % |
| சமூக வாழ்த்து | 1 % | ஏனையோர் கூற்றுக்கள் | 7.00 % |
| | 100 | | 100 |

## திருக்கோவையாரில் ஏனையோர் கூற்றுப்பாடல்கள்

கண்டோர் கூற்று 7 பாடல்கள் பரத்தை கூற்று 2 பாடல்கள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| நற்றாய் கூற்று | 2 பாடல்கள் | | கட்டுவிச்சி கூற்று | 1 பாடல்கள் | |
| உழையர் ,, | 5 | ,, | செம்முது பெண்டிர் ,, | 1 | ,, |
| இளையர் ,, | 1 | ,, | இல்லோர் ,, | 2 | ,, |
| வாயிலவர் ,, | 3 | ,, | பரத்தைக்குப் பாங்காயினார்,, | 1 | ,, |
| ஏனைத் தோழியர் ,, | 1 | ,, | பாணன் ,, | 1 | ,, |
| | | | (7விழுக்காடு) | 28 | ,, |

## துணை நூற் பட்டியல்

### இலக்கிய இலக்கண நூல்கள்


அகநானூறு, கழகம், சென்னை, 1949

அம்பிகாபதி கோவை, அரிகரமையர் (ப—ர்). ஆரியப் பிரகாசினி அச்சுக்கூடம், திருநெல்வேலி, 1899

அஷ்ட பிரபந்தம், எஸ். ராஜம், சென்னை, 1957

ஆசார்ய ஹிருதயம்' க்ரந்தி மாலா ஆபீஸ், அண்ணங்கராசாரியர் (ப—ர்), காஞ்சிபுரம், 1971

,, பு. ரா. புருஷோத்தம நாயடு (ப-ர்), சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, 1965

ஆத்திசூடி - கொன்றை வேந்தன். கா. நமச்சிவாயர் (ப-ர்), தமிழ்க் கடல் ஆபீஸ், சென்னை. 1931

இலக்கணக் கொத்து, தி.வே. கோபாலையர் (ப-ர்), தஞ்சை சரசுவதி மகால் வெளியீடு, தஞ்சாவூர். 1973

இலக்கண விளக்கம் சி. வை. தாமோதரம் பிள்ளை (ப-ர்) வித்தியாநு பாலன யந்திர சாலை, சென்னை 1900

இறையனார் களவியலுரை, கழகம், சென்னை. 1953

உபதேச ரத்தின மாலை, உ. வே. திருமலைநல்லான் சக்கரவர்த்தி க்ருஷ்ணமாசார்ய சுவாமி, சே. முத்துகிருஷ்ண நாயுடு (ப-ர்), ஆர்பனேஜ் அச்சு யந்திரசாலை, சென்னை. 1907

தொடர்ச்சி

ஐங்குறுநூறு, எஸ். ராஜன் வெளியீடு, சென்னை. 1957

கந்தரலங்காரம், ஜெ. மு. குருநமசிவாயன் ஜெ. மு. சாமி, மதுரை. 1974

கம்பராமாயணம், வை. மு. கோ. பதிப்பு, ஸ்ரீ வைஷ்ணவ சம்பிரதாய புத்தகசாலை, சென்னை, 1928

கலித்தொகை, கழகம், சென்னை, 1949

கல்லாடம், மயிலேறும் பெருமாள் (ப-ர்), காஞ்சி இராமாநந்த யோகிகள் உரையுடன், சென்னை, 1957

குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு, உ. வே. சா. (ப-ர்), காசி மடம், திருப்பனந்தாள், 1961

குறுந்தொகை, கழகம், சென்னை, 1955

குற்றாலக் கோவை, ஏ. எஸ். முத்தையா முதலியார் (ப-ர்), திருவாங்கூர் பல்கலைக்கழகம், திருவனந்தபுரம், 1949

கோடீசுவரக் கோவை, உ., வே., சா. (ப-ர்), சென்னை, 1936

கோயிலொழுகு, முதற்பாகம், வி, என், ஹரிராவ் (ப-ர்), ராக்ஹவுஸ் பிரைவேட் லிட்., சென்னை, 1961

சடகோபரந்தாதி, வை.மு. சடகோபராமாநுசாசாரியார்-சே.கிருஷ்ணமாசார்யார் (ப-ர்), சென்னை, 1935

சிலப்பதிகாரம், கழகம், சென்னை, 1950

சிவஞான போதம், தமிழ்நாடு தெய்விகப்பேரவை, சென்னை, 1074

சிவப்பிரகாசர் பிரபந்தத் திரட்டு, சுவாமிநாத பண்டிதர் (ப-ர்), சைவ வித்தியாநுபாலன யந்திரசாலை, சென்னை, 1916

சுவர்க்க நீக்கம், பா. பச்சையப்பன் (ப-ர்), (மொ-ர்), தமிழ் நூல் நிலையம், வில்வாரணி, வ, ஆ., 1970

தஞ்சைவாணன் கோவை, மே. வீ. வேணுகோபால பிள்ளை, (ப-ர்), சென்னை, 1939

தண்டியலங்காரம், கழகம், சென்னை, 1947

தனிப்பாடல் திரட்டு, பூம்புகார் பிரசுரம், சென்னை, 1977

திருக்குறள், சக்தி காரியாலயம், சென்னை, 1957

திருக்குற்றாலக் குறவஞ்சி, கழகம், சென்னை, 1986

திருக்கை வழக்கம், வேலாயுத முதலியார் (ப-ர்), மெமோரியல் பிரஸ், சென்னை, 1886

திருக்கோவையார், கழகம், சென்னை. 1970

பட்டினத்துப் பிள்ளையார் பிரபந்தங்கள், கழகம், சென்னை, 1978

பத்துப்பாட்டு, கழகம், சென்னை, 1971

பரிபாடல், புலியூர்க்கேசிகன் பதிப்பு, அருணா பப்ளிகேஷன்ஸ், சென்னை, 1958

பன்னிரு பாட்டியல். கா. ர. கோவிந்தராச முதலியார், (ப-ர்), கழகம், சென்னை, 1970

பாரதியார் கவிதைகள், சக்தி காரியாலயம், சென்னை, 1957

புலவர் புராணம், பதிப்பு, கேசரி அச்சுக்கூடம், சென்னை, 1931

புறநானூறு, கழகம், சென்னை, 1947

புறப்பொருள் வெண்பா மாலை, ஆந்திரா பிரிண்டிங் ஹவுஸ், சென்னை, 1946

பெருங்கதை, கழகம், சென்னை, 1971

மணிமேகலை, கழகம், சென்னை, 1971

மனோன்மணீயம், கழகம், சென்னை, 1957

மாறனகப்பொருளும் திருப்பதிக் கோவையும், செந்தமிழ்ப்பிரசுரம், தமிழ்ச்சங்க முத்திராசாலை, மதுரை, ஆண்டு இல்லை

மாறனலங்காரம், செந்தமிழ்ப்பிரசுரம் நாராயணயங்கார் பதிப்பு, தமிழ்ச்சங்க முத்திராசாலை, மதுரை, 1915

மாறன் கோவை, வேணுகோபாலசாமி நாயுடு பதிப்பு, ஆர்பனேஜ் அச்சுக்கூடம், சென்னை, 1906

யாப்பருங்கலக் காரிகை கழகம், சென்னை, 1944

யாப்பருங்கல விருத்தி, கழகம், சென்னை, 1976

வீரசோழியம், கழகம், சென்னை, 1970

## திறனாய்வு நூல்கள்


அரவிந்தன், மு. வை., 'திருக்குறளும் சங்க இலக்கியமும்', மணிவாசகர் நூலகம், சிதம்பரம், 1977

அருணாசலம், மு., 'தமிழ் இலக்கிய வரலாறு', 13-ஆம் நூற்றாண்டு, காந்தி வித்தியாலயம், திருச்சிற்றம்பலம், 1970

அறவாணன், க. ப., 'அற்றைநாள் காதலும் வீரமும்', தமிழ்ப் பதிப்பகம், சென்னை, 1978

அனவரதவிநாயகம் பிள்ளை, எஸ்., தமிழ்ப்பெருமக்கள் வரலாறு: மாணிக்கவாசகர்-பட்டினத்துப் பிள்ளையார்', தி. லா. பிரிண்டிங் பிரஸ், சென்னை, 1935

ஆறுமுக முதலியார், சரவண, 'வள்ளுவர் வகுத்த வாழ்க்கை நெறி', சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை, 1971

இராசகோபாலன், டி. கே., 'ஆழ்வார்கள் வரலாறு', ஸ்டார் பிரசுரம், சென்னை, 1970

இராசமாணிக்கனார், மா., 'சைவ சமயம்', ஔவை நூலகம், சென்னை, 1958

இராசமாணிக்கனார், மா., 'கால ஆராய்ச்சி', ஔவை நூலகம், சென்னை, 1957

இராமசாமி, நா. சி., 'சடகோபனும் செழுந்தமிழும்', அகில உலக எழுத்தாளர் மன்றம், சென்னை, 1965

எதிராஜுலு நாயுடு, 'வைணவப் பூங்கா', பக்தன் காரியாலயம், சென்னை, 1963

கிருபானந்த வாரியார், 'வாரியார் விரிவுரை', வானதி பதிப்பகம். சென்னை, 1978

குன்றக்குடி அடிகளார், 'வாழ்க்கை விளக்கம்', கலைவாணி புத்தகாலயம்' சென்னை, 1972

சாமி, பி. எல்., 'சங்க இலக்கியத்தில் விலங்குகள் விளக்கம்', கழகம், சென்னை, 1970

சிங்காரவேலனார், சொ , 'திருஞானசம்பந்தர் வரலாற்றாராய்ச்சியும் தேவாரத் திறனாய்வும்', கழகம், சென்னை, 1909

சிதம்பரனார், துடிசைகிழார் அ.. 'ஐந்திணை அகநூல்', கலைமகள் அச்சுக்கூடம், கோவை. 1949

சிதம்பரநாதன் அ.. 'முனபனிக்காலம் முதலிய இலக்கியக்கட்டுரைகள்' புத்தக நிலையம், திருச்சி, 1951

சுந்தரமூர்த்தி, கோ., 'பண்டைத் தமிழிலக்கியக் கொள்கைகள்', தி. ரா. தாமோதரன் (மொ-ர்), சர்வோதய இலக்கியப் பண்ணை, மதுரை, 1979

சுப்பிரமணிய பிள்ளை, கா., 'குமரகுருபர அடிகள் வரலாறும் நூலாராய்ச்சியும்', கழகம், சென்னை, 1932

சுப்பிரமணிய பிள்ளை, 'மணிவாசகப் பெருமான் ',வரலாறு, கழகம்' சென்னை, 1974

சுப்பிரமணிய அய்யர், ஏ. வி., 'தமிழ் ஆராய்ச்சியின் வளர்ச்சி, பாரி நிலையம், சென்னை. 1977

சுப்பிரமணியன், ச. வே., - பெருமாள், ஏ. என்., 'தமிழிலக்கியக் கொள்கை-4', உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1979

சுப்பு ரெட்டியார். ந., 'சோழ நாட்டுத் திருப்பதிகள் - பாகம்-1.' ஆர். வாசுதேவன் வெளியீடு, சென்னை, 1981

,, 'சோழ நாட்டுத் திருப்பதிகள் - பாகம்-2.' ஆர். வாசுதேவன் வெளியீடு, சென்னை, 1981

,, 'வைணவ உரைவளம்', வேங்கடம் வெளியீடு, சென்னை, 1985

,, 'தம்பிரான் தோழர்', வேங்கடம் வெளியீடு, சென்னை, 1985

செங்கல்வராய பிள்ளை, வ. சு., 'திருக்கோவையார் ஒளிநெறி', கழகம், சென்னை, 1970

செயப்பிரகாசு, சிலப்பதிகாரம் காட்டும் தமிழகச் சமுதாய நிலை,
வான் மழைப் பதிப்பகம், சென்னை, 1978

சேதுப்பிள்ளை, ரா.,பி., 'திருவள்ளுவர் நூல்நயம்', கழகம்,
சென்னை, 1940

சேஷாத்திரி மணவாளன், காழியூர், 'திருமாலடியார்கள்', சுகந்தா
வெளியீடு, சென்னை, 1976

சொக்கலிங்கம், 'ராய', 'காவேரி', அமுத பதிப்பகம், காரைக்குடி.
1967

தாமோதரன், கு., 'ஆழ்வார் திருவுள்ளம்', பூங்கொடி பதிப்பகம்,
சென்னை, 1978

தேசிகன், ரா., ஸ்ரீ., 'கவிதைக்கலை', பாரதி தமிழ்ச்சங்கம்,
கல்கத்தா, 1967

திருமந்திரம், காசிமடப் பதிப்பு, திருப்பனந்தாள், 1976

திருவருட்பா, ஆ. பாலகிருஷ்ண பிள்ளை (ப-ர்), மயிலை, சென்னை,
1956-1957

திருவாசகம், பழநியப்பா பிரதர்ஸ், சென்னை, 1978

திருவாதவூரடிகள் புராணம், ஆறுமுக நாவலர் (ப-ர்), வித்தியாநு
பாலன யந்திரசாலை, சென்னை, 1957

திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம், உ.வே.சா. (ப-ர்).
சென்னை, 1972

திருவிருத்தம், பி. ப. அண்ணங்கராசாரியார் (ப-ர்). ஜி. எல். அச்சுக்
கூடம், சென்னை. 1976

தேவாரம், திராவிட புத்தக டிபோ, சென்னை, 1907

தொல்காப்பியம், புலியூர் கேசிகன் (ப-ர்). அருணா பப்ளிகேஷன்ஸ்,
சென்னை, 1961

,, பொருள், இளம்பூரணம், கழகம், சென்னை,
1969

,, பொருள், நச்சர், கழகம், சென்னை, 1947

நம்மாழ்வார் தாலாட்டு முதலியன, வெ. ந. சீனிவாசய்யங்கார் (ப-ர்),
திருஞானமுத்திரைப் பிரசுராலயம், ஆழ்வார்திரு
நகரி 1932

நம்பியகப்பொருள் விளக்கம், கழகம், சென்னை, 1947

நல்வழி, முல்லை முத்தையா பதிப்பு, பூம்புகார் பிரசுரம், சென்னை, 1979

நளவெண்பா, பாரி நிலையம், சென்னை, 1978

நற்றிணை, எஸ். ராஜம் பதிப்பு, சென்னை. 1957

நன்னூல், கல்யாணசுந்தரையர் பதிப்பு, கபீர் அச்சுக்கூடம், சென்னை, 1946

நாலடியார், கழகம், சென்னை, 1968

நாலாயிரத் திவ்விய பிரபந்தம், மயிலை மாதவதாசன் பதிப்பு, மணலி லக்ஷ்மண முதலியார் ஸ்பெசிக் எண்டோமண்ட்ஸ் வெளியீடு, சென்னை, 1962

நாகராசன், கரு., 'திவ்விய பிரபந்தத்தில் மனம்', உலக தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1982

பச்சையப்பன், பா., 'சுவர்க்க நீக்கம்', தமிழ்நூல் நிலையம், வில்வா ரணி, வ. ஆ., 1970

பரமசிவானந்தம், அ.மு., 'எல்லோரும் வாழவேண்டும்', தமிழ்க்கலை, சென்னை, 1962

பாஸ்கரதாஸ், ஈ. கோ., 'அகப்பொருளில் தோழி', திருமனை, கோவை, 1979

பாஸ்கர தொண்டைமான்' தொ. மு., 'அமர காதலர்', எஸ். ஆர், சுப்பிரமணிய பிள்ளை வெளியீடு, திருநெல்வேலி, 1961

புருஷோத்தம நாயடு, பு. ரா., 'கட்டுரைக் கதம்பம்', பாரி நிலையம், சென்னை, 1969

மகாதேவன், டி. எம். பி., 'மெய்யடியார்கள்', ஜெமினி பிரசுரம், சென்னை. 1959

மகாலிங்கம், நா., 'சைவ சித்தாந்தப் பெருமன்றம் வரவேற்புரை', கோவை, 1985

மறைமலையடிகள், 'மாணிக்கவாசகர் வரலாறும் காலமும்', கழகம், சென்னை, 1967

மீனாட்சிசுந்தரனார், தெ. பொ., வள்ளுவர் கண்ட நாடும் காமமும்', பழநியப்பா பிரதர்ஸ், சென்னை, 1957

வரதராசன், மு., 'திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம்', தாயக வெளியீடு, சென்னை. 1979

,, 'பழந்தமிழிலக்கியத்தில் இயற்கை', பாரி நிலையம், சென்னை, 1979

வையாபுரி பிள்ளை, எஸ்., 'இலக்கிய தீபம்', பாரி நிலையம், சென்னை, 1952

ஸ்ரீனிவாசன், பி. (பி.ஸ்ரீ), 'நம்மாழ்வாரும் மாணிக்கவாசகரும்', ஸ்டார் பிரசுரம், சென்னை, 1978

,, 'ஞானசிகரம்', கலைமகள் காரியாலயம், சென்னை, 1959

## நாள், வார, மாத, ஏடுகள்

பி. ப. அண்ணங்கராசாரியார் அவர்களின் 'ஸ்ரீ இராமானுசன்', தொண்ணூற்றிரண்டு உபத்தியாச மாலை, காஞ்சிபுரம், 1982

'சப்தகிரி', திருமலை திருப்பதி தேவஸ்தான வெளியீடு, டிசம்பர் 1983

'ஞானபூமி', ஆசிரியர். மணியன், சென்னை, இதயம்பப்ளிகேஷன்ஸ், ஜனவரி 1982, ஆகஸ்ட் 1982, அக். 1983, நவம்பர் 1984, ஜனவரி 1985, மார்ச் 1985, ஆகஸ்ட் 1985.

'தினமணி கதிர்', வார இதழ், சென்னை, 23—03—1986

'முனிமொழி' அரசு கீழ்த்திசைக் கலைக் கையெழுத்துப் பிரதி நூலகம், சென்னை, 1955

## ஆய்வேடுகள் (Ph. D.)

ஞானசுந்தரம், தெ., 'வைணவ உரைவளம்', சென்னைப் பல்கலைக் கழகம், 1980

பழனி, வி.மு., 'சிவஞான போதம்-ஓர் ஆய்வு', சென்னைப் பல்கலைக் கழகம், 1984

Indra Somasundaram (P.S. Indra). 'A Critical Study of Tiruvacakam', University of Madras, 1974

Michael Irudayam, S., 'A Critical Study of Tiruvaymaoli', University of Madras, 1973

Srinivasan. T., 'Spiritual Quest in Nammazhvar's Tiruvaymoli', University of Madras. 1980

Subbu Reddiar, N., 'Religion and Philosophy of Naalayiram with special reference to Nammalvar', Sri Venkateswara University, Tirupati, 1977

## Thesis (M. Litt.)

Natarajan D., 'Studies in Tirukkovaiyar', University of Madras, 1964

## Thesis (M. A.)

Hepzi Bai, A., 'Tirukkovaiyar - Oru Tiranayvu', Kerala University, Trivandrum, 1971

Venkatachalam, V. 'Nammalwar Patalkal Tiranayvu', Kerala University, Trivandrum, 1975

## English Books

Charles Eliot, Sir., Hinduism and Buddhism, Vol.II, Routledge and Kegan Paul, London, 1968

Freud, Sigmund., Introductory Lectures on psycho-analysis, Penguin 1975

Hirianna. A. The Essentials of Indian Philosophy, Londen, 1956

Ramanujachari, The Mysticism of Nammazhwar, Annamalai University Journal, 1970

Suddhananda Bharatiyar, Swami., Alwar Saints, Anbu Nilayam, Ramachandrapuram, Trichy, 1942

Vanmeeganathan, G., Manickavachagar, Sahitya Academy, New Delhi, 1976

